# டி.வி.எஸ்

ஸ்தாபனங்கள்




வாழ்த்துக்கள்

டி. வி. சுந்தரம் அய்யங்கார்
& ஸன்ஸ் லிட்.,
மதுரை, திருச்சி, திருநெல்வேலி,
புதுக்கோட்டை, சேலம், கோயமுத்தூர்.

மதராஸ் ஆட்டோ ஸர்வீஸ் லிட்.,
மதராஸ் - பெங்களூர்

சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் லிட்.,
புதுக்கோட்டை - மதராஸ்.

தி மதராஸ் மோட்டார்
இன்ஷ்யூரன்ஸ் கோ., லிட்.,
மதராஸ்-2.

சுந்தரம் மோட்டார்ஸ் லிட்.,
மதராஸ்-6.

ஸதர்ன் ரோட்வேஸ் லிட்.,
மதுரை.

சுந்தரம்ஸ் லிட்.,
மதுரை.

சுந்தரம் பைனான்ஸ் லிட்.,
மதராஸ்-2.

இந்தியா மோட்டார் பார்ட்ஸ் & ஆக்ஸஸரீஸ் லிட்.,
மதராஸ்-2.

TVSZ-86



YOUR *Trip*





AIR, SEA or RAIL, whatever be the mode of your travel, you will enjoy it better with your things neatly, safely packed in our leather suit-cases, travel-cases, wallets and hand-bags.



Quality, Craftsmanship and Durability always assured in all our products.



AUTHORISED *Flex* AGENTS



# *Durable*

## CHROME FACTORY

*Show rooms at:* 187, MOUNT ROAD, 175, BROADWAY & LUZ, MYLAPORE

MADRAS









தீபாவளி அன்று சென்னை மற்றும் தென்னாடெங்கும்
மகத்தான ஆரம்பம்

Elegant




# பொருளடக்கம்

○★○

# சொல் கிளியே!

1. செங்கனி வாயில் ஒரு
   வேய்ங்குழல் கொண்டிசைத்து
   தேனிசைதான் பொழிவோன்
   யார்? யார்? யார்? கிளியே!

2. செந்தாமரை முகத்தில்
   மந்தகாசம் புரிந்து
   திறையாய்க் கொள்வோன்
   யார்? யார்? யார்? கிளியே!

3. கண்ணன் என்றங்கேயொரு
   கள்வன் உளன் என்று
   கன்னியர் சொன்னதெல்லாம்
   மெய்தானோ கிளியே!

4. வெண்ணெய் திருடும்பிள்ளை
   என்னுளம் கவர்ந்ததென்ன
   கண்ணால் மொழிந்ததென்ன
   சொல்வாய் பைங்கிளியே!

5. தஞ்சம் எந்தனுக்கு அவன்
   திருவடி யன்றி வேறே
   தரணியில் இல்லையென்று
   சொல் சொல் சொல் கிளியே!



கல்கி

மணியம்.

# ஆலமரத்தின் அடியிலே!

ஊரை விட்டுத் தூர தேசம் போன மகன் தகப்பனைப் பார்க்க வேண்டுமானால் தன்னுடைய ஊரை நோக்கிச் செல்ல வேண்டும்; அல்லது தகப்பன் மகன் இருக்கும் ஊரை நோக்கிச் செல்ல வேண்டும்; அல்லது இருவரும் எதிர் நோக்கிச் சென்று மத்தியில் சீக்கிரமாகவே சந்திக்கலாம். வாழ்க்கை யாத்திரையும் இந்தத் தத்துவத்தில் அடங்கும்.

சுகங்கள் அடைவதற்காகப் பாடு படுகிறோம். இதுவே ஜீவ யாத்திரை. பாடுபட்டுப் பல வேறு சுகங்களை அடைவது ஒரு வழி; மனத்தை அமைதிப் படுத்தி சுகம் தானாகவே நம்மை வந்தடையும்படி செய்வது மற்றொரு வழி. இது மகனிருக்குமிடம் நோக்கித் தகப்பன் போவது போலாகும். ஓரளவு பாடுபட்டுச் சுகத்தைத் தேடுவதும், கூடவே மனத்தில் திருப்தி உணர்ச்சியை வளர்த்துக் கொண்டு சுகம் நம்மைத் தேடி வரும்படி செய்து கொண்டோமானால் நோக்கம் சீக்கிரம் பூர்த்தியாகும். இது மகனும் முன் சென்று, தகப்பனும் மகனைச் சேருவதற்குப் போவது போல் ஆகும்.

2

மனத்தில் திருப்தி உண்டாவதற்கும் வாழ்க்கையின் நோக்கம் பூரணமாவதற்கும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாகவே நம்முடைய பெரியோர்கள் வழிகளை உபதேசித்து வந்திருக்கிறார்கள். இதுவே நம்முடைய நாட்டில் ஆலமரம் போல் வளர்ந்து வேரூன்றி நிற்கும் தர்மம் அல்லது சமயம். இந்த ஆலமரத்தின் அடியிலேதான் வாழ்க்கைப் பிரயாணிகளாகிய நாம் தங்கி வருகிறோம். "இந்தப் பெரிய ஆலமரத்தை நட்டது யார்? வளர்த்தது யார்?" என்று கேட்கும் குழந்தைகளுக்கு 'அவர்கள்தான் ரிஷிகள்' என்று பதில் சொல்ல வேண்டும்.

நம்மைப் பெற்றது தகப்பன். அவரைப் பெற்றது பாட்டன். அதற்கு மேல் முப்பாட்டன். இப்படி முன்னூறு தலைமுறை பின் சென்றோமானால் நம்முடைய பாரத நாட்டு ரிஷிகளைக் காண்போம். ரிஷிகள் செய்த உபதேசத்துக்குப் பெயர் உபநிஷதம்.

அந்தக் காலத்தில் அச்சு கிடையாது. எழுதுவதும் நன்றாக உணர்ந்தவர்கள்தான் எழுதுவார்கள். ஆனபடியால் எழுதுவதும் மிகக் குறைவு. அநேகமாக உபதேசம் வாய்மொழியாகப் பக்கத்தில் உட்கார வைத்துச் சொன்னதுதான். அதை மாணவர்கள் உணர்ந்து நெட்டுருப் பண்ணி, தியானித்து, மற்றவர்களுக்கும் எடுத்துச் சொல்வார்கள். இதற்காக என்று உபதேசங்கள் சூத்திர உருவமாகவும், செய்யுள் வடிவமாகவும் இருந்து வந்தன.

3

மிகப் பிரசித்தி பெற்ற உபநிஷதம் ஈசோபநிஷதம் என்பது. இதை, முக்கியமாக முதல் இரண்டு மந்திரங்களை, காந்தி மகான் தம்முடைய பிரார்த்தனைக் கூட்டங்களில் பாடி வந்தார்.

"இந்த உலகத்தில் எல்லா உயிர்களிலும், எல்லாப் பொருள்களிலும் ஈசன் பரந்து நிற்கிறான். அவன் இல்லாத அணு இல்லை. அவனால் கொடுக்கப்பட்ட பொருள்களை வைத்து சுகம் அடைவாயாக. வேறு யாரேனும் அனுபவிக்கும் தனத்தைக் கண்டு ஆசைப்படாதே."

இது முதலாவது மந்திரம்.

"தொழில் செய்து வாழ்வதே இந்த உலகத்தில் செய்யக் கூடிய வாழ்க்கை. செய்து நூறு ஆண்டு வாழ்வாய். அது தவிர வேறு வழியில்லை. செயல்களின் பசை ஒட்டிக் கொள்ளாமல் மனிதன் தன் வாழ்நாளை முடிக்க வேண்டும்."

இது இரண்டாவது மந்திரம். இதையேதான் பகவத் கீதை பதினெட்டு அத்தியாயங்களிலும் விளக்கி உபதேசிக்கிறது.

"நம் மெய் வருத்திக் கைசெய்து உய்ம்மினோ!" என்று நம்மாழ்வார் பாடியதை ரிஷியும் இந்த உபநிஷத்தில் அந்தக் காலத்தில் பாடிவிட்டார். சிலர் நினைப்பார்கள் :

"உடலும் புலன்களும், புலன்களின் வழியே அடையும் விஷய அனுபவங்களுமே உண்மை; இதைத் தவிர்த்து உடலுக்குள் ஆன்மா என்ற வேறு ஒரு பொருள் உண்டு என்பது மெய்யல்ல" — இப்படி யார் எண்ணுகிறார்களோ அவர்கள் தங்கள் உயிரைத் தாங்களே தற்கொலை செய்து கொண்டவர்கள் ஆவார்கள். உயிரை இல்லையென்றால் அது கொலையேதான் ஆகும் அல்லவா? உயிர் இருக்கும்போதே இப்படித் தற்கொலை செய்து கொள்பவர்களுடைய வாழ்க்கை காரிருள் படர்ந்த வாழ்க்கையாய்ப் போகும். அவர்கள் இருட்டில் வழி தெரியாமல் தடுமாறிக் காட்டில் செல்வதுபோல் உலக வாழ்க்கையை நடத்த வேண்டியதாகும்.

ஆன்மா இல்லை யென்ற பின் வாழ்க்கைக்குத் திட்டமான நோக்கமாவது, இது நன்மை இது தீமை என்கிற உணர்ச்சியாவது இல்லாமல் போகும். எது கிழக்கு எது மேற்கு என்று தெரியாமல் ஜீவ யாத்திரை செய்ய வேண்டியதாகும். இதைவிட வேறு நரகம் வேண்டியதில்லை யல்லவா?

இதுவே ஈசோபநிஷத்தில் மூன்றாவது மந்திரம்.

இறந்த பின் நரகம் செல்வாய் என்று சொல்வது வழக்கம். உபநிஷத் மந்திரத்தில் ரிஷி சொல்வதாவது: "ஆன்மாவை மறுத்துத் தற்கொலை செய்து கொண்டால் இந்த உலக வாழ்க்கையே இருள் படர்ந்த நரகமாகும்.

"பிற ஜீவன்களில் எல்லாம் தன்னுடைய உயிரை ஒருவன் கண்டு அதாவது அந்த ஜீவன்களின் சுகமும் துக்கமும் தானே அனுபவிப்பதாக எண்ணி அந்த உணர்ச்சியுடன் ஒருவன் வாழ்க்கை நடத்தினால், அவனைப் பார்த்து யாருமே, எந்தப் பிராணியுமே பயமோ அல்லது வெறுப்போ கொள்வதற்கு இடமில்லை. எல்லா உயிர்களிலும் ஒருவன் ஈசனைக் கண்டானானால் பிறகு அவனுக்கு என்ன குறை இருக்க முடியும்? தன்னுடைய உணர்வில் மற்ற உயிர்கள் தன் உயிராகவே தீர்ந்து போய் விட்டால் அதன் மேல் மோகம் ஏது? துயரம் ஏது?" என்கிறார் ரிஷி.

இது அடுத்த இரண்டு மந்திரங்களின் உபதேசம்.

எல்லாம் தங்கத்தைப் போல் தகதக வென்று அழகுடன் தோற்றம் காட்டுகிறது. ஆனால் மெய்ப் பொருளோ பாத்திரத்துக்குள் மூடிக் கிடக்கிறது போல் கண்ணுக்குக் காண்பதில்லை. பாத்திரம் பிரகா



லிக்கும் பொன்மூடியினும் உள்ளே இருக்கும் பொருள் அதன் வழியாகப் புலப்படாது. “ஈசனே! இந்த ஒளிக் கற்றையை அடக்கி உள்ளே மறைந்து கிடக்கும் உண்மையை நான் காணும்படி செய்வாயாக” என்று பிரார்த்திக்கிறார் ரிஷி. “மோகத்தில் மூழ்கி வாழ்க்கையை நடத்துகிறோம். மெய்யறிவு தருவாயாக!” என்பது பிரார்த்தனை.

“இந்த உடலம் புகையும் சாம்பலுமாகப் போகும். அதற்குப் பின் நிலையாக நிற்பது நாம் செய்த செயல்களே. மனமே! இதை மறக்காதே! மறக்காதே!” என்று இரண்டு தரம் சொல்லி ரிஷி பிரார்த்தனை வடிவத்தில் உபதேசிக்கிறார்.

உடலை எரிக்கும் தீயைத் தியானித்துப் பிரார்த்திப்பது கடைசி மந்திரம்:

“அக்னியே! அனைத்தையும் நீ அறிவாய். எல்லா தர்மங்களையும் நீ கண்டிருக்கிறாய். நெறியல்லாத நெறியில் நான் செல்லாதபடி என்னைக் காப்பாயாக! உன்னை வணங்குகிறேன்!” என்பது இந்த ஈசோபநிஷத்துக் கடைசி மந்திரம்.




## சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

4

அனைத்திலும் ஈசன் இருப்பதைக் கண்ட முனிவர் அக்னி வளர்த்து அதை லிங்கமாக வைத்துப் பிரார்த்தனை செய்வதில் வியப்பு ஒன்றுமில்லை. இது நம்முடைய நாட்டுச் சம்பிரதாயம். சம்பிரதாயத்தை யொட்டிச் செய்யும் பூஜைகள் சிரமம் இல்லாமல் உண்மை உணர்ச்சி தரும்.

தீபாவளியில் விளக்கை ஏற்றுங்கள். அந்த விளக்கின் சுடரைத் துதியுங்கள். ‘சிறு நெறிகள் சேராமே நம்மைக் காத்தருள்வாய்!’ என்று தீபாவளி விளக்குக்கு அஞ்சலி செலுத்தித் துதியுங்கள்.

அனைத்திலும் ஈசன் இருப்பதை மறவாதீர்கள். திரியில் எண்ணெய் ஏறி ஈசனைப் பளிச்சென்று காட்டுவதாக உணர்ந்து பூஜை செய்யுங்கள்.



மக்கள் அனைவரும் ஒரு குலம் என்றும், மனித ஜாதியில் ஏற்றத் தாழ்வு கற்பிப்பது பொருளற்ற பேதம் என்றும், கலப்பு மணம் ஒன்றே ஜாதி உணர்ச்சி ஒழிய வழி என்றும் ஞானிகள் கண்டு சொல்லி யிருக்கிறார்கள். இலக்கிய மணியாகவும் பரம ரஸிகராகவும் விளங்கியதோடு, வாழ்வில் எல்லாருடனும் சரிசமானமாகப் பழகி எவ்வித பேதமுமின்றி தர்ம வாழ்வு வாழ்ந்து காட்டினார் தமிழ் முனிவர் டி. கே. சி. அவர்கள். 1953-ம் ஆண்டு அவர்கள் எழுதி அனுப்பிய இரண்டு விசேஷக் கட்டுரைகளில் ஒன்று அப்பொழுது பிரசுரமாயிற்று; மற்றொன்று இங்கே வெளியாகிறது. பேருணர்விலே ஒன்றிய ஒரு ஞானியின் பேச்சாகவே நிகழ்கிறது இந்தக் கட்டுரை. —ஆசிரியர்



# கபிலர் நாடகம்

**டி.கே.சி**

இமயமலையிலுள்ள எவரெஸ்ட் சிகரமானது நெடுநாளும் மக்களைக் கிட்ட வரவொட்டாமல வெருட்டி 'அடித்துக் கொண்டிருந்தது. இப்போது பிடிபட்ட மாதிரித்தான்.

வாஸ்தவந்தான், உலகத்திலேயே உயர்ந்த இடம் எவரெஸ்ட் சிகரம்; ஆனாலும் அது ஒரு காலத்தில் சமுத்திரத்துக்குக் கீழேயே இருந்தது. பூமியின் அடிப்படையை ஆராய்ந்துள்ள நிபுணர் சொல்லுவது இது.

ஆனால் இப்போது அதுதான் பூமியில் உயர்ந்த இடமாய் நிமிர்ந்து நிற்கிறது.

** ** **

**ம**க்களது சரித்திரத்திலும் அதுபோன்ற காரியம் ஒன்றை, மேலே, அதாவது சமீப காலத்துக்குக் கொண்டு வந்து, நாடகமாய் அமைக்கப் பார்க்கிறோம். மூவாயிர வருஷத்துக்கு முன்னுள்ள நிகழ்ச்சியை நாடகமாய் அமைப்பதில் ஒரு ரஸம்.

ஆரியர்கள் மேற்குப் பிரதேசத்திலிருந்து இந்தியாவுக்கு வந்தார்கள். இந்திய மக்களோடு கலக்க நேர்ந்தது. கலந்து ஒரு வகுப்பினர் ஆனார்கள். காலவடைவில் அந்த வகுப்பினர் தமிழ் நாட்டுக்கும் வந்தார்கள். அக்ரகாரங்கள் என்பதும் உண்டாயின. அக்ரகாரங்கள் என்று உண்டான போதிலும் சில வேளைகளில் சிக்கலான காரியங்கள் அவைகளில் ஏற்பட்டன.

** ** **

**நா**டகத்தைத் திருவாரூர் அக்ரகாரத்தில் அமைத்திருக்கிறது. அக்ரகாரத்தின் பிராமணர் ஒருவர் அனாதையான குழந்தையை எடுத்து அருமையாய் வளர்த்தார். அதற்குக் கல்வி புகட்டினார். பல சாஸ்திரங்களையும் கற்றவன் ஆய்விட்டான் பையன்.

அவனுக்கு உபநயனம் செய்ய ஏற்பாடு செய்தார் தந்தையார் (வளர்ப்புத் தந்தையார்). அக்ரகாரத்திலுள்ள பிராமணர்கள் எல்லாரையும் அழைத்தார். உபநயனத்துக்கு வேண்டிய சகல காரியங்களும் தயாராய் இருக்கின்றன. வந்த அக்ரகாரத்துக்காரர் "உபநயனம் செய்யக்கூடாது" என்று சொன்னார்கள். "பையன் பிராமண குலத்தைச் சேர்ந்தவன் அல்ல. அநுமிதேயம். உபநயனத்துக்கு அருகன் அல்ல" என்று ரொம்ப ரொம்ப வாதாடினார்கள்.

தந்தை பாடு கஷ்டமாய்ப் போய் விட்டது. சபையை கேட்கிறார். அப்போது பையன் வருகிறான். அவனுக்குக் **கபிலன்** என்று பெயர் இட்டிருந்தது. அக்ரகாரத்துக்காரர்களைப் பார்த்துப் பேசுகிறான்.

பேசுகிறதைக் கேட்கலாம்:

** ** **

"**பா**ர்ப்பன மாந்தரே! உலகத்தில் அனேக விஷயங்கள், நம்முடைய அறிவுக்கு எட்டாத விஷயங்கள். அவைகளைப் பற்றித் தர்க்கம் செய்து கொண்டே இருக்கலாம். எவ்வளவு தர்க்கம் செய்தாலும் விஷயம் விளங்குவதில்லை நமக்கு.

உயிர் வர்க்கம் தோன்றியபோது ஆண் முதலில் தோன்றியதா! பெண் முதலில் தோன்றியதா! அலி தான் தோன்றியதா முதலில்! இது விளங்காத காரியந்தான்.

அதுபோல கிழக்கிலிருந்து முதலில் வந்தது (காள்) சூரியனா? (கோள்) நக்ஷத்திரங்களா?



நான்முகன் படைத்த
நானாவகை உலகில்
ஆன்ற சிறப்பின்
அரும்பொருள் கூறுங்கால் :—
ஆண்முதிதோ பெண்முதிதோ
அன்றி அலிமுதிதோ
நான்முதிதோ கோள்முதிதோ

இதுபோலப் பல விஷயங்கள் நம்முடைய அறிவுக்கு எட்டாதவைகளாய் இருக்கின்றன. உண்மைதான்.

ஆனால் நம்முடைய அநுபவத்தோடு ஒட்டிய விஷயங்களில் வேண்டாத சந்தேகங்கள் ஏற்பட வேண்டாம். கண்கூடாய்க் காண்பதற்கு சாஸ்திரத்துக்குள் தலையை நுழைத்துக் கொண்டு கஷ்டப்படுவானேன். வேண்டியதில்லை.

நம்முடைய அநுபவத்தில் சிலவற்றைப் பார்க்கலாம்:

நமக்குள்ள வாழ்நாள் எல்லாம் குறுகிய நாள்தான். தூக்கத்தில் பாதி போய் விடும். இளமை அறியாமை இவைகளிலும் எவ்வளவோ போய் விடும். மிச்சம் இருப்பது ரொம்பக் குறைவு. அவற்றுள்,

துன்புறுநாளும் சிலவே
அதா அன்று
இன்புறுநாளும் சிலவே

ஆகவே செய்ய வேண்டிய காரியங்களை உடனேயே செய்ய எத்தனிக்க வேண்டும். ஒத்திப் போடுவது ஆபத்தான காரியம். எமன் எப்போது வருவான் என்று சொல்ல முடியாது.

எப்போ தாகினும்
கூற்றுவன் வருவான்

அப்போ தந்தக்
கூற்றுவன், தன்னைப்

போற்றவும் போகான்
பொருளொடும் போகான்

முகஸ்துதி செய்தாலும் போக மாட்டான். லஞ்சம் கொடுத்தாலும் போக மாட்டான்.

நல்லார் என்னான்
தீயார் என்னான்
நல்குரவு அறியான்

ஏழைப் பட்டவன் என்று தாக்ஷண்யம் கிடையாது.

உடல்கொடு போகான்
உயிர்கொடு போவான்

ஏதோ உயிர்போய்விட்டது, உடல் ஒன்று இருக்கத்தானே செய்கிறது. ஆதலால் நாம் என்ன செய்கிறோம். அந்த உடலைப் பாடாய்ப் படுத்துகிறோம். பிறகு அழுது கத்துகிற காரியம் வேறு. உயிரை இழந்து விட்டோமென்று கத்துகிறீர்கள்! அல்ல.

உயிர்இழந்து அழுதுமென்று
ஓதுவீர் ஆகில்
உயிரினை அன்றுங்காணீர்
இன்றுங் காணீர் :
உயிரினை இழந்த
உடலது தன்னைக்
களவு கொண்ட
கள்வனைப் போல
கையும் ஆர்த்துக்
காலும் ஆர்த்து
சமந் தீயை
எரிஎழ மூட்டி
பொடிபடச் சுட்டு

[ஆர்த்து - கட்டி; சமம்-மயானம்]

சுடுகாட்டுக்குப் போய் இப்படிச் சாம்பலாக்கி விட்டு,

புனலிடை மூழ்கிப்

போய்த் தமரோடும்
புந்திநைந்(து) அழுவது

சலமெனப் படுமோ
சதுரெனப் படுமோ

இப்படி யெல்லாம் செய்கிறதற்குத் துயரமா காரணம்! அல்லது வெறும் தமாஷாதானு (சதுர்).



மனுஷ காரியம் இப்படி முடிகிறது. சாம்பலோடு சாம்பலாய் மண்ணோடு மண்ணாய்ப் போகிற காரியம். கண் கூடாய்க் காண்கிற காரியம் தானே. இதை யெல்லாம் மறந்து விட்டு ஏதோ இறந்து போனவர்கள் பிதுர் லோகத்தில் இருப்பதாகக் கற்பனை செய்து கொண்டு வேண்டாத கிரியைகள் மந்திரங்கள் எல்லாம் செய்கிற காரியம் ஏமாளித்தனமே ஒழிய வேறில்லை. பார்ப்பனர்களே கொஞ்சம் கேளுங்கள்.

பார்ப்பன மாந்தர்காள்
பகர்வது கேண்மின்

இறந்தவராய் உமை
இல்லிடை இருந்தி

பாவனை மந்திரம்
பலபட உரைத்து

உமக்கவர் புத்திரர்
ஊட்டின போது

இறந்து போனவர்களுடைய பிள்ளைகள் சிராத்தம் கொடுக்கும்போது ஒரு வருஷமாய்ப் பட்டினி கிடந்த அந்தப் பிதுர்க்கள் மெலிந்து போய் சிராத்தத்திடை வந்து "எங்களுக்கு ஏதாவது கொடுங்கள்" என்று நிற்பதை யாராவது கண்டதுண்டா.

அடுபசியால் குழைந்து
ஆங்கவர் மீண்டு

கையேந்தி நிற்பது
கண்டதார் புகளீர்

அருந்திய உண்டியால்
ஆர்பசி கழிந்தது

சாப்பிட்டவர்களுக்கு வயிறு நிறைந்தது. வயிறு கொஞ்சமும் குறையவில்லை. அதனால் பிதுர்க்களுக்கு உண்டியில் யாதொருபாகமும் போகவில்லை என்றாய்விட்டது. இனி:

உலகம் எங்கும் மக்கள் இறக்கிறார்கள். அப்படி இறந்தவர்கள் பிதுர் லோகத்தில் இருக்கிறார்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். அந்தப் பிதுர்க்களுக்கும் சிராத்தம் கொடுக்க வேண்டியது தானே. அப்படி சிராத்தம் கொடுப்பதற்குப் பார்ப்பனர் இருந்து தீர வேண்டும். அப்படி இருப்பதாகத் தெரியவில்லை. ஜப்பானில் கிடையாது, சைனாவில் கிடையாது, மலேயாவில் கிடையாது, ஸிக்க தேசத்தில் கிடையாது, இங்கிலாந்து தேசத்திலும் கிடையாது.



ஒட்டியர் மிலேச்சர்
ஊணர் சிங்களர்

இட்டிடைச் சோநகர்
யவனர் சீனத்தர்

பற்பலர் நாட்டிலும்
பார்ப்பார் இலையால்

பிதுர்க்களுடைய உலகமோ பார்ப்பனர் இல்லாது தீரதென்ற அவசியமோ எல்லாம் வெறும் கற்பனை. இயற்கையில் அமைந்த காரியங்கள் அல்ல.

முற்படைப் பதனில்வே(று)
ஆகிய முறைமைபோல்

நால்வகைச் சாதிஇந்
நாட்டினில் நாட்டினீர்

அப்படியாக இயற்கையில் பேதப்பட்ட இனங்கள் அல்ல நால்வகைச் சாதி. ஆனால் இதர பிராணிகளுக்குள் பேதப்பட்ட இனங்கள் இருக்கின்றன. உதாரணமாக:—

காளை ஒன்று, எருமை ஒன்று. இவை வேறான இனங்கள். வேறானவை என்பதை எப்படித் தெரிகிறோம்.

பெற்றமும் எருமையும்
பிறப்பினில் வேறே

அவ்விரு சாதியில்
ஆண்பெண் மாறி

கலந்து கருப்பெறல்
கண்ட தில்லையால்

ஒருவகைச் சாதியாம்
மக்கட் பிறப்பினீர்

இருவகை யாகநீர்
இயம்பிய குலத்து

ஆண்பெண் மாறி
அணைதலும்; அணைந்தபின்

கருப்பொறை உயிர்ப்பதும்
காண்கின் றீரோ

பார்ப்பனரும் புலைச்சியரும் கலந்து குழந்தைகள் உண்டாகத் தானே செய்கிறது.

பூசுரர்ப் புணர்ந்து
புலைச்சியர் ஈன்ற

புத்திரர் ஆயினோர்
பூசுரர் அல்லரோ

பெற்றமும் எருமையும்
பேதமாய்த் தோன்றல்போல்

மாந்தரில் பேதமாம்
வடிவுளவர் கண்டுளார்;

வேற்றுமை யாவதும்
வெளிப்படல் இன்றே.

இத்தகைய பிள்ளைகள், உறவாடும் சமுதாயம் வளர்ப்பு இவைகள் காரணமாக எவ்வளவோ வேறுபட்டு விடும்.

வட நாட்டிலப் பார்ப்பனர்கள் கூட்டம் அதிகம். கல்வி பண்பாடு இவைகளில் உன்னத நிலையை அடைந்திருந்தார்கள். அப்படி சாஸ்திரங்களில் தேர்ந்த நிபுணர் ஒருவர் தமிழ் நாட்டுக்கு வந்தார். வந்தார், தமிழர்களோடு கலக்க நேர்ந்தது. அதில் ஒரு புலைச்சியை மணக்க நேர்ந்தது. பிள்ளைகளும் பிறந்தன. வந்த பார்ப்பனர் காரியம் வெகு வேடிக்கையாய்ப் போய் விட்டது. பார்ப்பனர் புலையரோடு புலையராய்ப் போய் விட்டார்.

ஆனால் வேறு சில பார்ப்பனரோ புலைச்சி இறந்த காரணமாகப் பிள்ளைகளைத் தங்கள் ஊருக்குக் (வட நாட்டிலுள்ள ஊருக்கு) கொண்டு போனார்கள். சகல சாஸ்திரங்களையும் சொல்லிக் கொடுத்தார்கள். புலைச்சி பெற்ற பிள்ளைகள் பிராம்மணோத்தமர்களாக ஆய்விட்டார்கள்.

வடதிசைப் பார்ப்பான்
தென்திசைக் கேகின்

நடையது கோணிப்
புலையன் ஆவான்;—



Kolynos
K

தென்திசைப் புலையன்
வடதிசைக் கேகின்
பழுதற ஓதிப்
பார்ப்பான் ஆவான்

இப்படி யெல்லாம் கலப்பு மணம் காரணமாகவே வட நாட்டில் வஸிஷ்டர், சக்தியர், பராசர், வியாசர் ஆகிய நால்வரும் பிறந்து மகான்கள் ஆனார்கள்.

இந் நால்வரும் :

வேதங்கள் ஓதி
மேன்மைப் பட்டு
மாதவராகி வயங்கினர்
அன்றே

அவர்கள் போலவே பகவர் என்ற முனிவருக்குக் கருரில் இருந்த ஆதி என்ற புலைச்சி மனைவியானாள்.

அருந்தவ மாமுனி
ஆம்பக வர்க்குக்
கருவூர்ப் பெரும்பதி
கட்பெரும் புலைச்சி
ஆதி வயிற்றினில்
அன்(று)அவ தரித்த
கான்முளை யாகிய
கபிலனும் யானே.

பகவர்க்கும் ஆதிக்கும் பிறந்த மகன் நான். என் பெயர் கபிலன்.

என்னுடன் பிறந்தவர்
எத்தனை பேரெனில்
ஆண்பால் மூவர்
பெண்பால் நால்வர்
யாம்வளர் திறம்சிறி(து)
இயம்பக் கேண்மின்

ஏழு பேருடைய வரலாறு:

ஊற்றுக் காடெனும்
ஊர்தனில் தங்கியே
வண்ணார் அகத்தில்
உப்பை வளர்ந்தனள் ;
காவிரிப்பூம் பட்டினத்தில்
கள்விலைஞர் சேரியில்
சான்றார் அகத்தினில்
உறுவை வளர்ந்தனள் ;
நரப்புக் கருவியோர்
நன்னெடுஞ் சேரியில்
பாணர் அகத்தில்
ஔவை வளர்ந்தனள் ;
குறவர் கோமான்
கொய்தினைப் புனஞ்சூழ்
வண்மலைச் சாரலில்
வள்ளி வளர்ந்தனள் ;
தொண்டை மண்டலத்தில்
வண்தமிழ் மயிலைப்
பறையர் இடத்தில்
வள்ளுவர் வளர்ந்தனர்
அரும்பார் சோலைக்
கரும்பார் வஞ்சி
அதிகன் இல்லிடை
அதிகமான் வளர்ந்தனன்

பாரூர்நீர் நாட்டு
ஆரூர் தன்னில்
அந்தணர் வளர்க்க
யான்வளர்ந் தேனே.

இந்த விதமாகப் புலைச்சி பெற்ற நாங்கள் வளர்ந்து வந்தோம்.

** ** **

இயற்கையில் புலையரென்றோ பார்ப்பனரென்றோ வித்தியாசம் கிடையாது. இதெல்லாம் கண் கூடாகக் காண்பது.

மாரிதான் சிலரை
வரைந்து பெய்யுமோ
காற்றும் சிலரை
நீக்கி வீசுமோ
மாநிலம் சுமக்க
மாட்டேன் என்னுமோ
கதிரோன் சிலரைக்
காயேன் என்னுமோ

பிறப்பினால் பேதம் ஏற்படாது. உண்மையில் குலம் என்பது ஒன்றே. நம்முடைய செய்தொழில் காரணமாகவே உயர்கிறோம், தாழ்கிறோம்.

குலமும் ஒன்றே
குடியும் ஒன்றே
இறப்பும் ஒன்றே
பிறப்பும் ஒன்றே
வழிபடு தெய்வமும்
ஒன்றே ; ஆதலால்
முன்னோர் உரைத்த
மொழி தவறாமல்
எந்நாள் ஆயினும்
இரப்பவர்க்கு இட்டு
நிலைபெற அறத்தின்
நிற்பதை அறிந்து
ஆணும் பெண்ணும்
அல்லதை உணர்ந்து
பேணி உரைப்பது
பிழையெனப் படாது :
சிறப்பும் சீலமும்
அல்லது
பிறப்பு நலந்தருமோ
பேதை யீரே.



திருவாரூர் அக்ரகாரத்தினர் முன்பு கபிலன் இப்படிப் பேசி முடித்தான். மறுத்துச் சொல்ல யாருக்கும் இயலவில்லை. உபநயனச் சடங்கு சிறப்பாய் நடந்தேறியது!

அழகான தமிழில் அழகான நாடகம்.

நாடகமாய் இருந்தாலும் காரண காரிய முறையில் சொல்லியிருக்கிற சில விஷயங்கள் வெகு அற்புதமாய் இருக்கின்றன. வேண்டாதபடி சாஸ்திரங்களைப் புரட்டுவது அவசியம் இல்லை, கெடுதல் என்று சொல்லி யிருக்கிறது. பெரிய விஷயம்.

சாவைப் பற்றியும் மக்கள் அது சம்பந்தமாகத் துயரப்படும் காரியத்தைப் பற்றியும் அற்புதமாய் வேடிக்கை பண்ணி யிருக்கிறது.

இளவேற்றுமையைக் குறிக்கக் காளையையும் எருமையையும் எடுத்துச் சொல்லுவது தற்கால சையன்ஸைச் சேர்ந்ததாய் இருக்கிறது. எத்தனையோ நூற்றாண்டுகள் ஆகியும் ஆசிரியர் தற்காலத்தவர்போல் பாடி யிருக்கிறார்!

# சமய
# மறுமலர்ச்சி



தமிழகம் தெய்வ மணம் கமழும் திருநாடு; இறைமணம் கமழும் இன்பத் திருநாடு; பண் நிறைந்த தமிழால் பரமனைப் பாடித் துதித்த திருநாடு. நெஞ்சு தொட்டு நிமலனை நினைப்பித்துப் பக்தி வளர்க்கும் கனிவு நிறைந்த மொழி நமது தமிழேயாம். கல்லெல்லாம் கலையாக்கி, கலை யெல்லாம் கடவுளாகக் கண்டவர்கள் தமிழர்கள். இதனாலன்றோ விண்ணளந்து காட்டி வினைமறைக்கும் திருக்கோயில்கள் பல அருமைத் தமிழகத்தை அணி செய்து நிற்கின்றன. 'ஞானத்திலும் – பரமோனத்திலும் மிக்க நாடு' என்று புதுமைக் கவிஞன் பாரதி புகழ் பாடி வாழ்த்துகின்றான்.

தமிழகத்தின் சமயநெறி காலத்தால் மூத்தநெறி; காலத்தொடு காலம் வண்ணம் பலகொண்டு வளர்ந்து வரும் பொது நெறி. சாதிகளைக் கடந்த நெறி; வீட்டில் வளர்ந்த நெறி; தமிழை வளர்த்துத் தமிழால் வளர்ந்த நெறி.

அன்பே சமயத்தின் அடித்தளம். அறம் பல வளர்த்து இன்பம் பெருக்குவதே சமயத்தின் குறிக்கோள்.

காலத்தின் கோலத்தால் சமயநிலை மாறுபட்டது. அன்பின் ஊற்றுக் கண்ணாகவும், அறம் பல வளர்த்து இன்பம் பெருக்கும் பண்ணையாகவும், தமிழ்த்தாயின் தண்ணளிமிக்க அருள் மணம் வீசும் பூஞ்சோலையாகவும் இருந்த சமய நெறி – வெறும் சம்பிரதாயச் சடங்குகளுக்குள்ளேயே அடை பட்டது. சமரச நெறியிலே சாதிச் சழக்குகளுந் தோன்றின. பைய சமயத் துறையிலே தளர்ச்சி தலைகாட்டலாயிற்று. தளர்ச்சியோடன்றி எதிர்ப்பு உணர்ச்சியும் தலைகாட்டத் தொடங்கியது. இந்த நெருக்கடியான கட்டத்தில் தமிழகம் மீண்டும் விழித்தெழுந்தது. இன்று எங்கும் சமயத்தின் பேச்சு. நாடு நகரமெல்லாம் சமயக் கூட்டங்கள் கூட்டப்பெறுகின்றன. பல்லாயிரக் கணக்கான மக்கள் கூடி நின்று பிரார்த்தனை செய்கின்றனர். சமய தத்து வங்களை ஆர்வத்தோடும் ஆவலோடும் கேட்கின்றனர். இன்று திருக் கோயில்களில் எல்லாம் ஒருங்குகூடி வாரவழிபாடும் கூட்டு வழிபாடும் செய்கின்றார்கள். மக்களிடையே சமய தத்துவங்களைப் பரப்பும் திருப் பணியில் ராஜாஜி முதலிய தலைவர்களும் பல ஊழியர்களும் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர். சமயத் துறையின் நிரந்தர ஊழியர் களாகிய சில மடாதிபதிகளும் மக்களிடையே தோன்றித் தீவிரமாகப் பிரசாரம் செய்கின்றனர். ஆங்காங்கு திருவெம்பாவை – திருப்பாவை மாநாடுகளும் திருவாசக மாநாடுகளும் கூட்டப் பெறுகின்றன. வாழ்வளிக்கும் வகை யொன்றாலேயே சமயம் காப்பாற்றப்படும் என்பதைத் தெளிவாகப் புரிந்து கொண்ட சமயத் தலைவர்கள், ஆங்காங்கு சமூக சேவைகளில் ஈடுபட்டிருப்பது குறிப்பிடத் தக்கது. சமயச் சார்பில் பள்ளிகளும், மாணவ – மாணவியர் இல்லங் களும், கல்லூரிகளும் திறக்கப்பட்டுள்ளன. இத் துறையில் அருநெறித் திருப்பணி மன்றத்தார் செய்யும் சேவை பெரு மக்களால் பாராட்டப்பட் டுள்ளது. சமுதாயத்தில் ஊறியிருந்த சாதி உணர்ச்சிகள் மறைந்தொழிந்து வருகின்றன. எங்குந் தாயுமானாருடைய வழியை ஒட்டி சமதர்ம வாழ்க்கை மலர வழி கோலப்பட்டு வருகிறது. நாடகத் துறையிலும் முன்னைப் பழங் காலத்தைப் போலவே பக்தி பாவ உணர்ச்சியை ஊட்டும் நாடகங்களை அரங்கேற்றுகின்றனர்.

சமுதாயத்தின் பண்பாட்டைக் காக்கும் பொறுப்பு வாய்ந்த தாய்மைக் குலம் இன்று சமய மறுமலர்ச்சிப் பணியில் தீவிரமாக ஈடுபட்டுள்ளதைக் குறிப்பிடத்தான் வேண்டியிருக்கிறது; தெய்வச் சாதி படைக்கும் திருக் கரங்கள் அல்லவோ? இன்றைய சமய மறுமலர்ச்சியில் மிக முக்கியமான தொன்று ஆலயத்தில் தமிழில் வழிபாடு. பச்சைப் பசுந்தமிழ்ப் பின் சென்ற பரந்தாமனும், தமிழ்ச் சுவைக்காகப் பரவையின் பால் தூது சென்ற சிவ பெருமானும், முத்தமிழால் வைதாரையும் வாழ வைக்கும் முருகனும் தமிழோசையைக் கேட்டு நீண்ட நாளாயிற்று. மீண்டு இந்த இருபதாம் நூற்றாண்டில் தமிழ்ச் சுவை அனுபவிக்கும் வாய்ப்பு அவர்களுக்குக் கிடைத்தது. இன்று தமிழ் நாட்டுக் கோயில்களில் தமிழ் அர்ச்சனை நடை பெறுகிறது. பொதுவாக இன்றையத் தமிழகத்தில் தேவையான சந்தர்ப் பத்தில் சமய மறுமலர்ச்சி உதயமாகிப் பிரகாசிக்க ஆரம்பித்துள்ளது. இந்த சமய மறுமலர்ச்சி உணர்ச்சி வளர்ந்து தழைத்து நீடு நின்று நிலவுக.

அருட்திரு
குன்றக்குடி அடிகளார்

# சர்வதேசக் கலைக் கண்காட்சி







ரகு



கல்கி தீபாவளி மலர் 1955










உலகத்தைப் பலரும் பல கோணங்களில் பார்த்துச் சித்திரிக்கிறார்கள்.

# அன்பே வேண்டும்!

"எங்களிடம் என்ன எதிர்பார்க்கிறீர்கள்!" இதுதான் பிரசித்தி பெற்ற அந்த மராத்தி இலக்கிய ஆசிரியர், விநோபாவைப் பார்த்துக் கேட்ட கேள்வி.

ஆம், விநோபா அடிகள் ஒரிஸ்ஸா ராஜ்யத்தில் ஓர் கிராமத்திலிருந்தபோது தேசத்தின் பல பகுதிகளிலிருந்தும் வந்திருந்த எழுத்தாளர் கோஷ்டியினர் அவரைப் பேட்டி கண்டனர். அவர்களில் ஒருவர் தான் மேற்கண்ட விதம் ஆரம்பித்தார்.

"எங்கள் கதைகள், நாவல்கள், கட்டுரைகள் இவைகளில் எல்லாம் 'சர்வோதயம்' 'பூதானம்' முதலிய வார்த்தைகளைத் தோன்றிய இடங்களில் எல்லாம் அள்ளித் தெளிக்க வேண்டும் என்கிறீர்களா! எங்களை என்ன செய்யச் சொல்கிறீர்கள்!" என்றார் அவர்.

இதைக் கேட்ட விநோபா அடிகளுக்கு ஒரே வியப்பாகப் போய்விட்டது.

இதற்குள் இன்னொரு மராத்தி ஆசிரியர் "பூதானத்துக்கு எங்களால் எப்படி நல்ல சேவை செய்ய முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்! அதையாவது சொல்லுவீர்களா!" என்று கேட்டார்.

விநோபா கண்களை மூடிக் கொண்டு ஒரு கணம் சிந்தனையில் ஆழ்ந்து விட்டார். பின்னர் அங்கு வந்திருந்த எழுத்தாளர்களுக்குத் தமது அன்பைத் தெரிவித்துக் கொண்டு பேச ஆரம்பித்தார்.

"துகாராம் ஒரு பாட்டுப் பாடி யிருக்கிறார். அதில் அவர் ஆண்டவனைப் பார்த்து, 'ஐயனே, உன் பெயரின் பெருமையை நீ அறிய மாட்டாய், நான் அறிவேன்' என்றார். அம்மாதிரி உங்கள் பெயரின் பெருமையை நீங்கள் அறிய மாட்டீர்கள், நான் அறிவேன். இலக்கியத்தின் பெருமையே பெருமை!

இலக்கியம்—சாஹித்யம்—என்ற வார்த்தையை என் உள்ளத்தில் ஆராய்ந்து பார்க்கும்போது 'அஹிம்சை' என்றே குறிப்பதாக எனக்குப் படுகிறது.

இலக்கியம் கடவுளின் அன்பைப் போன்றது. கடவுள் எந்தவிதமான பயனையும் எதிர்பாராமல், அன்பு செலுத்துகிறார். அம்மாதிரியே இலக்கியத்துக்கும் நோக்கம் ஒன்றும் கிடையாது. இலக்கியம் ஏதோ ஒரு இலட்சியத்தைச் சாதிக்க வேண்டும் என்பதற்காகத் தோன்றுவதில்லை. இலக்கிய சிருஷ்டிக்குத் தூண்டுகோல் வெளியில் இல்லை. அதனிடத்திலேயே இருக்கிறது. தோன்ற வேண்டும் என்று தானே சங்கல்பித்துக் கொள்ளுகிறது. உடனே இலக்கியம் உண்டாகிறது.

இலக்கியத்தைப் பற்றி நான் புரிந்து கொண்டிருப்பதின் முக்கியமான அம்சம் இதுதான். இலக்கியத்துக்குத் தான் உழைப்பை உவகையாக மாற்றும் சக்தியிருக்கிறது. உழைப்பின்றி ஒன்றையும் பெற முடியாதுதான். இலக்கியத்தில் தான் உவகையோடு உழைக்க முடிகிறது. கலைவாணியின் அருள் இலக்கியத்துக்குத் தான் இருக்கிறது.

ஒரு முறை எனக்குக் கடும் ஜுரம் வந்து விட்டது. ஓயாமல் புலம்பிக்கொண்டிருந்தேன். 'ராமா' 'கிருஷ்ணா' என்று ஆண்டவனின் ஆயிரம் பெயர்களையும் சொல்லி அழைத்தேன். இடையில் என்னை விட்டு எப்பொழுதோ பிரிந்து போன என் தாயாரையும் நினைத்துக் கொண்டு 'அம்மா! அம்மா!' என்று புலம்பினேன். அந்த நிலையிலும், எவ்வளவு அழைத்தாலும் வர முடியாத நிலையிலிருக்கும் என் தாயாரை ஏன் கூப்பிடுகிறேன், என்ற எண்ணம் மனத்தில் ஓடாமல் இல்லை. இருப்பினும் 'அம்மா' 'அம்மா' என்று மீண்டும் புலம்பினேன். அந்த வார்த்தையிலுள்ள மந்திர சக்தியை என்னவென்பேன்! அதைச் சொல்லச் சொல்ல மனத்தில் ஓர் அமைதி ஏற்பட்டு வந்தது.

ஆம்! இது கவிதைச் சுவை நிரம்பியுள்ள வார்த்தை. நமது மொழிகளில் இப்படிப்பட்ட வார்த்தைகள் எத்தனை இருக்கின்றன!

கவிஞரின் உலகம், கனவு உலகம். சிந்தனை முறை மிகவும் நுட்பமாக இருக்கும் கவிஞருக்கு. ஒரு தர்க்க ரீதியுமின்றித் திடீர் என்று சில முடிவுகள், கருத்துக்கள் தோன்றி விடுகின்றன. அவனுக் கென்னமோ விஷயங்கள் எளிதாகப் புரிகிறது. அதனால்தான் உபநிடதங்கள் அவனைப் புரட்சிப் பார்வை யுள்ளவன்—க்ராந்திதர்சி—என்று கூறுகிறது. சாதாரண மனிதக் கண்களுக்குப் புலப்படும் காட்சிகள் மிருகங்களுக்கும் புலப்படத்தான் செய்கின்றன. மிருகத்துக்குக் காரண காரியங்களின் மூலம் பகுத்தறியும் தன்மை கிடையாது. அது அறிவதெல்லாம் 'கண்டதே காட்சி' என்பதாக இருப்பவை தாம். 'காண்பவைகளைத்தான் நம்புவேன்' என்று வற்புறுத்துபவர்கள் மிருகத்தன்மை யுடையவர்கள். கவிஞனிடம் இத்தன்மை அறவே இல்லை. ஏனெனில் அவன் மொழி வாயிலாகக் கொடுக்கும் காட்சியில் நுட்பமான பல்வேறு புதிய காட்சிகளை நாம் காண முடிகிறது!"

இவ்வாறு விநோபாவின் சிந்தனை வெள்ளம் புரண்டு வருவதைக் கேட்டுக் கொண்டிருந்த அத்தனை இலக்கிய ஆசிரியர்களும் அப்படியே பிரமித்துப் போனார்கள்.




விநோபா தொடர்ந்தார்:

"நீங்கள் பூதான இயக்கத்துக்கு உதவ விரும்புவதாகக் கூறுகிறீர்கள். இலக்கிய கர்த்தா உதவத் தொடங்கினால் அவன் புரியும் உதவி மிக மிக நுட்பமாக இருக்கும். உதவி என்றால், பிறருக்குத் தெரியாத வகையில் செய்யப்படும் உதவிதான் சிறந்த உதவியாகும். இதுதான் கடவுள் வகிக்கும் பதவி. அவர் உதவுகிறார் என்றாலும் அது நமக்குத் தெரிவதில்லை. அவர் கைகளின்றியே கொடுக்கிறார்; கண்களின்றியே பார்க்கிறார். செவிகளின்றியே கேட்கிறார். பேனா இன்றியே எழுதுகிறார்.

ஆகவே இலக்கிய ஆசிரியர்களைத் தயவு செய்து உதவுங்கள் என்று கேட்கும் போது எங்களுடன் சேர்ந்து நில்லுங்கள் என்றுதான் கேட்டுக் கொள்கிறேன். எங்களுடைய மகாநாடுகளில் கலந்து கொள்ளுங்கள் என்றுதான் கூறுகிறேன்.

உலகம் எத்தனையோ பெரியோர்களை அறிந்திருக்கிறது. அவர்களை விட எத்தனையோ பெரியோர்களை உலகம் அறியாமலே இருந்திருக்கிறது. ஏனெனில் ஞானியின் நடத்தையும் போக்கும் உலகத்தினால் சுலபமாகப் புரிந்து கொள்ள முடியாது.

என் வேண்டுகோள் எல்லாம் எங்கள் அனுபவங்களை நீங்களும் ஒத்து உணரப் பாருங்கள் என்பதுதான். பின்னர் அந்த அனுபவத்தின் பயனாக நீங்கள் ஒரு நூல் எழுத முடியவில்லை, பூதான வேலையில் ஈடுபட முடியவில்லை என்றும் இது எங்களுக்குப் பெரு உதவியாக இருக்கும். 'எழுத முடியவில்லையே' 'இயக்கத்திலீடுபட முடியவில்லையே' என்ற எண்ணம் உங்கள் மனத்தில் எப்பொழுது மிருக்கும். அது எப்பொழுதும் உங்களை எங்கள் அண்மையிலேயே இருக்கச் செய்யும்."

இப்படி ஒரு மணி நேரம் சென்றது. விநோபா கடைசியில் ஒரு கதை சொல்லித் தம்முடைய அறவுரையை முடித்தார்.

"ஒரு சிஷ்யன் ஒரு குருவைத் தேடிச் சென்று, 'ஐயா நீங்கள் என்ன வித்தை உங்கள் சிஷ்யர்களுக்குக் கற்பிக்கிறீர்கள்!' என்று கேட்டான். குரு மௌனமாக இருந்தார். சிஷ்யன் மீண்டும் கேட்டான். குரு மீண்டும் மௌனம் சாதித்தார். மூன்றாம் முறை கேட்டான். அப்போதும் அவர் வாய் திறக்கவில்லை. சிஷ்யனுக்குக் கோபம் வந்து விட்டது. 'மூன்று முறை கேட்டேன்; அப்போதும் மௌனம் சாதிக்கிறீரே!' என்று கேட்டான். அதற்குக் குரு, 'மூன்று முறையும் எவ்வளவு நன்றாகப் பதில் சொல்ல முடியுமோ அவ்வளவு நன்றாகச் சொன்னேன். அப்படியும் உனக்குப் புரியவில்லை. வார்த்தைகளின் உதவியின்றிக் கூறியே உனக்குப் புரியாதபோது, வார்த்தையின் உதவி கொண்டு கூறினும் உனக்கு எங்கே புரியப் போகிறது!' என்றார். அம்மாதிரி நீங்களும் 'ஐயா, நாங்கள் ஒன்றும் எழுதாமலிருக்கும்போதே எங்களைப் புரிந்து கொள்ள முடியாதபோது எழுதினால் உங்களுக்கு எங்கே புரியப் போகிறது!' என்று நீங்கள் சொல்லலாம். அதனால் உங்களை எழுதச் சொல்லப் போவதில்லை. உங்களிடம் கேட்பது அன்பும் அனுதாபமும்தான். இதயத்தோடு இதயம் இணைய வேண்டும் என்பதுதான்" என்றார்.

இந்தச் சொற்கள் எனக்குக் கபீர்தாஸரின் பாடலை நினைவூட்டின.

'பெரிய பெரிய புஸ்தகங்களைப் படிப்பதனால் பண்டிதனாகி விடமுடியாது. 'அன்பு' என்னும் எளிய பாடத்தைப் படித்தவனே பெரிய பண்டிதனாவான்.'

பாரதவாசிகளாகிய நாம் இந்தப் பாடத்தைப் பயின்று புது சகாப்தத்தைச் சிருஷ்டிப்போம். புது உலகைப் படைப்போம்!




பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏர்வேஸ் கார்ப்பரேஷன்




சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பரிசோதித்து, செப்பனிட்டு டயர்களை புதுப்பிக்கிறது.
ரப்பர் உஷ்ணத்தில் உலராமல் இருக்க (செயற்கையில்) குளிர்ந்த அறைகளில்
பாதுகாக்கப்படுகிறது.

உழைப்பில் உயர்வுகாண சேவைசெய்து,
சிலவை குறைப்போம்

சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்,

முழுவட்ட மோல்டுகளுடன் புதுப்பிப்பவர்,

புதுக்கோட்டை— மதராஸ்.

TV82-67A/T14



# கடல் கடந்த கண்ணகி



இலங்கை தபால் மந்திரி திரு சு. நடேச பிள்ளை

சோழ மண்டலத்திலே கண்ணகி பிறந்தாள்; பாண்டி மண்டலத்திலே தன் வீரக் கற்பின் வெற்றியைக் காட்டினாள்; சேர மண்டலத்திலே கோவில் கொண்டருளினாள். இது சிலப்பதிகாரம் கூறும் சரித்திரம். சிலப்பதிகாரக் காவியம் இல்லாவிடில் இன்று கண்ணகியின் சரித்திரம் பொய்யாய் கனவாய்ப் போயிருக்கும். வடவேங்கடம் முதல் தென்குமரி வரையில் தமிழுலகத்தில் கண்ணகியின் பெயர் கொண்ட கோவில் ஒன்றையும் இன்று காணோம். சிலப்பதிகாரம் தான் கவியோவியமாக அமைந்துள்ள கண்ணகி கோவிலாக அங்கு இன்று விளங்குகிறது. ஆனால் ஈழ மண்டலமாகிய இலங்கையில் கண்ணகி கோவில்கள் பலவற்றைக் காண்கிறோம். இலங்கையில் தமிழர்கள் மாத்திரமன்றித் தமிழறியாத சிங்கள மக்களும் அவளைத் தெய்வமாக வழிபடுகிறார்கள். சிங்களவர்கள் கண்ணகியைப் பத்தினி தேவி யென்று வணங்குகிறார்கள்.

அவர்கள் புத்த பகவானை வழிபடும் இடங்களுக்கருகில் பத்தினி தேவாலயத்தையும் காணலாம். அவர்களுக்கிடையில் பத்தினி வழிபாடு பல நூற்றாண்டுகளாக வழங்கி வருகிறது. பத்தினி தேவியின் உண்மைச் சரித்திரத்தை அவர்கள் நன்கு அறியார்கள். ஆனால் அவள் வழிபாடு இந்தியாவினின்று வந்ததென்று அவர்களுடைய இதிகாசங்களி லொன்றாகிய "பூஜாவழி" என்ற நூல் கூறும். இந்த வழிபாடு எங்ஙனம் ஆரம்பித்தது என்பதை அந்நூல் கூறுமிடத்து, கஜபாகு என்ற மன்னன் சோழ நாட்டுக்குச் சென்று அங்கு பல வெற்றிகள் பெற்றுத் திரும்பும் போது கண்ணகியின் சிலம்பைக் கொண்டு வந்தானென்றும், அதன் பிறகு அவன் பல இடங்களிலும் கண்ணகிக்குக் கோவிலெடுப்பித்தானென்றும் விளங்குகின்றது. இந்நூல் 16-ம் நூற்றாண்டில் எழுதப்பட்டதென்று சரித்திராசிரியர்கள் கருதுகின்றனர். ஆனால் இது சிங்கள நாட்டில் பரம்பரையாக வழங்கி வந்த சரித்திரத்தைக் கூறுவதாகக் கொள்ளலாம். இதைக் கருதுமிடத்து, சிலப்பதிகாரம் 1800 வருடங்களுக்கு முன் கூறிய கண்ணகி சரித்திரத்தின் உண்மை தெளிவாகப் புலப்படுகின்றது. சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகள் கண்ணகி கோவிலெடுத்த சரிதத்தைச் சிலப்பதிகாரத்தில் மூன்றாவது பாகமாகிய வஞ்சிக் காண்டத்தில் விவரித்துள்ளார். அதில் கடல் சூழ் இலங்கை கஜபாகு மன்னனைப் பற்றி அவர் குறிப்பிடுகின்றார். கண்ணகி கோவில் சேர நாட்டில் பிரதிஷ்டையான காலத்தில் இவ்வைபவத்தைக் காண வந்த அரசர்களுள் கஜபாகு மன்னனும் ஒருவனாகும். அவனை இளங்கோவடிகள் நேரில் கண்டார். சிலப்பதிகாரத்தில் உரைபெறு கட்டுரையில் கஜபாகு மன்னன் இலங்கைக்குத் திரும்பிய போது அவன் கண்ணகி தேவிக்குக் கோவிலெடுத்தானென்றும் ஆண்டு தோறும் ஆடி மாதத்தில் அவளுக்குத் திருவிழா கொண்டாடச் செய்தான் என்றும் கூறப்படுகிறது.

இலங்கையில் சிங்கள மன்னர்கள் இருந்த காலத்தில் இத் திருவிழாவை அவர்கள் மிகச் சிறப்பாக அநுராதபுரம் முதலிய தங்கள் தலைநகரங்களில் கொண்டாடி வந்தார்கள். கடைசி இலங்கை மன்னர்கள் நாயக்க வம்சத்தினர் - அவர்கள் கண்டியைத் தலைநகரமாகக் கொண்டு ஆண்டு வந்தனர். அவர்கள் காலத்தினின்று இத்திருவிழா கண்டிப் பெரஹரா என அங்கு ஆண்டு தோறும் கொண்டாடப்பட்டு வருவதாயிற்று. அவர்களுக்குப் பிந்திய காலத்திலும் இவ்விழா ஆண்டுதோறும் கொண்டாடப்பட்டு வருகின்றது.

கண்ணகி வழிபாடு தமிழகத்தினின்று கடல்கடந்த விந்தையான சரித்திரம் இதுவாகும். பெரஹரா என்ற சிங்களச் சொல் "பிரஹாரம்" என்ற சொல்லின் சிதைவாகும். ஊர்வலமாகச் சுற்றி வரும் திருவிழா என்பது இதன் பொருள். முற்காலத்தில் பத்தினிதேவி விழாவாக இருந்த இத்திருவிழாவில் நாததெய்யோ, விஷ்ணு தெய்யோ, கதிர்காம தெய்யோ என்று தெய்வங்களுக்கும் இடம் கொடுத்தது. நாததெய்யோ என்பது சிவனைக் குறிக்கும். கதிர்காம தெய்யோ என்பது கதிர்காமக் கடவுளாகிய முருகனைக் குறிக்கும். இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன் சியாத்தினின்று இலங்கைக்கு வந்த சில புத்த குருக்களின் வேண்டுகோளின்படி அக் காலத்துக் கண்டி மன்னனும் இத்திருவிழாவில் புத்தருடைய தலதா என்கின்ற பல் சின்னப் பெட்டியின் புறப்பாடு முக்கியத்துவம் பெறுவதாயிற்று.

இக்காலத்தில் கண்டிப் பெரஹரா இலங்கையில் நடக்கும் ஒரு விமரிசையான திருவிழாவாகும். அதைப் பார்க்கும்போது பூர்விக மன்னர் காலத்தில் அது இன்னும் எவ்வளவு விமரிசையாக நடந்திருக்கும் என்பதைப் பற்றி ஒருவாறு ஊகித்துணரலாம். அலங்கரிக்கப்பட்ட நூற்றுக்கணக்கான யானைகள் இத்திருவிழாவில் கண்டி நகர் வீதிகளில் ஊர்வலமாக வருவதைப் பார்ப்பது கண்ணுக்குப் பெரு விருந்தாகும். இத்திருவிழாவில் பல சிங்களக் கூத்தினர் வரிசை





யாக நின்று ஆரவாரத்துடனும் வீராவேசத்துடனும் ஆடுவதைப் பார்க்கலாம். இக்கூத்துகளில் ஈடுபாடுள்ளவர்கள் யாவரும் ஆடவர்கள். இவற்றுள் சில உடுக்கைக் கூத்து என்றும் நையாண்டிக் கூத்து என்றும் தமிழ்ப் பெயர்களுடன் வழங்குகின்றன. இக்கூத்துகள் மிகப் பழமை வாய்ந்தனவாகும். சிலப்பதிகார உரையாசிரியர் செங்களக் கூத்தையும் குறிப்பிட்டுள்ளார். இத் திருவிழாவில் தீவத்திகளை இன்றும் உபயோகிக்கிறார்கள். புத்த பகவானின் பல் சின்னம் வைக்கப்பட்டுள்ள தலதா மாளிகா என்ற கோயிலிலிருந்து நாத தெய்யோ, விஷ்ணு தெய்யோ, கதிர்காம தெய்யோ, பத்தினி தெய்யோ என்ற தேவாலயங்களுக்கும் தலைமையதிகாரிகள் தங்கள் பாரம்பரியமான உடைகளுடன் பவனி வருவார்கள். இத் திருவிழாவைப் பார்ப்பதற்காக இலட்சக் கணக்கான மக்கள் கண்டியில் ஆடி மாதத்தில் வந்து சேருவார்கள். இத்திருவிழா சிலப்பதிகாரத்தில் கூறியபடி இன்றும் ஆடி மாதத்திலே அம்மாதத்துக்குரிய சிங்களப் பெயருடன் எஸல பெரஹரா என்று கொண்டாடப்பட்டு வருகிறது.

இன்றும் கண்ணகி கோவில்கள் இலங்கையின் பல பாகங்களிலும் உள்ளன. தமிழர்கள் வாழ்கின்ற கிழக்கு மாகாணத்தில் மட்டக்களப்பு என்ற பகுதியில் இப்போதும் அநேக கண்ணகி கோவில்களைக் காணலாம். அக்கோவில்களில் இத்திருவிழாக் காலத்தில் கண்ணகி சரித்திரத்தை ஆதாரமாகக் கொண்ட "வசந்தன்" என்ற பெயர் கொண்ட பாடல்களை மக்கள் பாடியாடிக் களிகூர்வார்கள். இப்பாடல்கள் நாட்டுப் பாடல்களாக வழங்கி வருகின்றன. இலங்கையின் வடபாகமாகிய யாழ்ப்பாணத்திலும் ஒரு காலத்தில் பல கண்ணகி அம்மன் கோவில்கள் இருந்தன. ஆனால் சென்ற நூற்றாண்டுகளுக் கிடையில் சில சைவப் பிரசாரகர்களின் முயற்சியால் இக்கோவில்கள் இராஜராஜேஸ்வரி அம்மன் கோவில்களாக மாற்றப்பட்டுள்ளன. கண்ணகியை இவர்கள் சைனத்தொடர்புள்ளவள் எனக் கருதிப் போலும் இம்மாற்றத்தைச் செய்தனர். ஆனால் இன்றும் ஒரு சில இடங்களில் கண்ணகி பெயரால் வழங்கும் கோவில்கள் யாழ்ப்பாணத்தில் இருக்கின்றன.

கண்ணகி வழிபாடு சோழ நாட்டில் மறைந்து போன காலத்திலும் அங்கு நிகழ்ந்த சரித்திர சம்பந்தமான ஒரு செய்தி குறிப்பிடத் தக்கதாகும். பதினோராவது நூற்றாண்டில் முதலாம் இராஜ ராஜ சோழன் இலங்கையில் ஐந்தாம் மகிந்தன் என்ற அரசனைத் தோற்கடித்து இலங்கையைத் தன் குடைக்கீழ்கொண்டு வந்தான். அக்காலத்தில் மகிந்தன் சிறை பிடிக்கப்பட்டு அவனும் அவனுடைய பட்ட மகிஷியும் தஞ்சைக்கு அனுப்பப்பட்டனர். இராஜ ராஜ சோழன் அவர்களை மிக மரியாதையாகப் பாதுகாத்து வந்தான். மகிந்தனுடைய பட்டமகிஷி பத்தினி தேவியை வழிபடுவதற்கு விரும்பியதை இராஜ ராஜ சோழன் அறிந்து அவள் விருப்பத்துக்காக ஓர் ஆலயத்தைக் கட்டுவித்து பத்தினி தேவி விழாவை நடத்தியதாகத் தெரிய வருகிறது. இக்கோயில் இராஜராஜ சோழன் தன் வெற்றிச் சின்னமாகக் கட்டிய தஞ்சை பிரகதீஸ்வரன் கோவிலுக்குச் சிறிது அப்பால் இப்போதும் செங்களாச்சி அம்மன் கோயில் என்ற பெயருடன் வழங்குகின்றது. சிங்கள நாச்சி என்பது செங்களாச்சி என்று திரிபு அடைந்தது. சிங்கள அரசியின் விருப்பத்தினால் கட்டப்பட்ட பத்தினி ஆலயமாகையால் அது இப்பெயரைப் பெற்றது. இப்போதும் ஆண்டு தோறும் செங்களாச்சி அம்மன் கோவில் திருவிழா தஞ்சையில் நடைபெற்று வருகிறது.

கண்ணகியின் பஞ்ச லோகச் சிலை ஒன்று இலங்கையில் கிழக்கு மாகாணத்தில் ஆங்கில ஆட்சியின் ஆரம்ப காலத்தில் கண்டெடுக்கப்பட்டு இப்போது லண்டன் நகரின் பிரிட்டிஷ் மியூசியத்தில் வைக்கப்பட்டுள்ளது. இச் சிலையைக் கலா விற்பன்னராகிய காலஞ் சென்ற ஆனந்தகுமாரசாமி வியந்து பாராட்டி எழுதியுள்ளார். இதுநாள் கலையறிஞர்கள் இக் காலத்திலும் கண்டு பாராட்டுதற்குரிய கண்ணகி சிலையாக விளங்குகின்றது.

கண்ணகி வழிபாடு கடல் கடந்து இலங்கையில் நிலைபெற்றது; கண்ணகியின் பிரசித்தமான உருவச் சிலையும் இலங்கையினின்று கடல் கடந்து இங்கிலாந்து சென்று உலகப் புகழ் பெற்று விட்டது!

## அட்டைப் படவிளக்கம்

# வழிகாட்டும் ஜோதி

பாரத நாடெங்கும் ஒரே தினத்தில் எல்லா மக்களும் ஒருமித்துப் புனிதமான முறையிலே கங்கா ஸ்நானம் செய்து, கோடி வஸ்திரம் தரித்து ஏக காலத்தில் குதூகலமாகக் கொண்டாடுகிற ஒரு பண்டிகை என்றால், அது தீபாவளிப் பண்டிகைதான்.

தீபமங்கள ஜோதியை வணங்கிப் பாப இருளைப் போக்கி இன்ப ஒளியை உலகிலே பரப்பிய விஷ்ணு மூர்த்தியை தியானித்து, பெண்மையின் வெற்றிக்கும் புகழுக்கும் நிரந்தரச் சான்றாக நிற்கும் சத்தியபாமை என்ற தெய்வக் குல விளக்கை வணங்கி, நாடும் மக்களும் நலம்பெற்று வாழப் பிரார்த்திக்கிறோம். இந்தப் புனிதமான தினத்தில் தமிழ் அன்னைக்கு நமது காணிக்கையாகச் செலுத்தும் இந்தத் தீபாவளி மலரின் அட்டைச் சித்திரத்திலே நமது ஓவியர் மணியம் வர்ணாலங்காரமான கோலத்திலே பக்திச் சுடரை ஏற்றுகிறார். ஆலயம் சூழ்ந்த திருநாடான நமது தமிழ்த்திருநாட்டையும், அறம் வளர்க்கும் பெண்மைக் கரத்திலே ஜோதிச் சுடரையும், பக்திப் பாடலின் கோஷத்தையும், காப்புக் கடவுளான விநாயக மூர்த்தியின் சந்நிதியோடு சித்திரித்திருக்கிறார் மணியம். வாணங்கள் வானத்திலே வர்ணங்களை உதிர்த்து வாழ்த்துகின்றன!

“இருளிலே என்னை ஏற்றி ஈசனைப் பணிச்சென்று காட்டுவதாக உணர்ந்து பூஜை செய்”யும்படி கூறுகிறார் நமது தலைவர் ராஜாஜி. குன்றுவிளக்கிலே ஏற்றிய தீபச் சுடர் நம் அனைவருடைய இதயக் குன்றிலும் ஏற்றிய பக்தி தீபமாக நின்று, அந்த நந்தா விளக்கின் ஒளியிலே அறப்பாதையில் முன்னேறுவோமாக!

வாழ்க பாரதம்! வாழ்க தமிழ்நாடு!






மதுரைக் கோயிலில் உள்ள கலியாணம் கமழும் ஒரு சிற்பம். மீனாட்சியம்மையைச் சோமசுந்தரப் பெருமானுக்குத் தாரை வார்த்துக் கொடுக்கிறார் மகாவிஷ்ணு. அம்மையின் முகத்தில் இருக்கும் நாணமும், திருமாலின் முகத்தில் உள்ள திருப்தியும் கல்லிலே கொண்டு வந்து காட்டி, கல்லுக்கு உயிர் ஊட்டிவிட்டான் சிற்பி. இந்தச் சிற்பத்தை நமது ஓவியர் மணியம் நேரில் பார்த்து வர்ண ஓவியமாகத் தீட்டியிருக்கிறார்.






**வண்ண மடல் 2-3**

கோனேரி ராஜபுரம் திருக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் 'நின்றாடும் திருக்கோல' நடராஜ மூர்த்தி. பஞ்சலோகத்தில் அமைந்த இந்தச் சிலையின் உயரம் எட்டு அடி. திருவாசியின் அமைப்பும், சிலையின் ஆகிருதியும் உலகிலேயே மிகப் பெரியவை.

நடராஜ விக்ரகத்துக்குப் பொருந்துகிற முறையில் சிவகாமியின் சிலை. மெல்லிய விரல்களின் அமைப்பும், தாமரை ஏந்திய கரத்தின் பாவமும் அபாரமான கலைத் திறமையோடு கூடியவை.

தாயும் தந்தைக்கும் அருகிலே விநாயகரும் சோமாஸ்கந்தமூர்த்தியும் இணை இல்லாக் காட்சி தருகிறார்கள்.

நமது ஓவியர் மணியம் கோனேரி ராஜபுரம் சென்று இந்தச் சிறந்த சிலைகளை முன்னிலையிலே ஓவியமாகச் செய்து வந்து, வண்ண படமாக வழங்கியிருக்கிறார்.





வண்ணை மடல் — 4. 

தஞ்சை ஜில்லாவில் உள்ள எத்தனையோ தெய்வச் சிலைகளில் மாயூரத்துக்கு அருகில் அதம்பாவூர் என்னும் கிராமத்தில் உள்ள ராமபிரான் திருவுருவச் சிலை அபூர்வமான கலைச் சிற்பம். லட்சுமண சீதா சமேதராய் சுக்ரீவனுக்குப் பட்டம் சூட்டும் திருக்கோலத்தில் காட்சி தருகிறான் ராமபிரான். வேறு எங்குமே இல்லாத ஓர் அதிசயத் திருக்கோலம். இந்தக் கருணை வடிவும் தயாமூர்த்தியின் சிலையையும் நமது ஓவியர் மணியம் நேரில் சென்று கலை மணம் கமழத் தீட்டியிருக்கிறார்.

# தனகோடியின் மனோரதம்

**கல்கி**

"போச்சு! கேஸ் போயிடுத்து! அரோஹரா!"

இந்த வார்த்தைகள் ஒவ்வொன்றும் வெசங்கரம் பிள்ளையின் செவியில் சுட்டு பாய்வது போல் பாய்ந்தன. ஐயோ! இதுதானா முடிவு!

வெசங்கரம் பிள்ளை அப்போது ஹைகோர்ட்டில் அவருடைய வெகுநாளைய வக்கீலான விநாயக சாஸ்திரியின் அறையில் உட்கார்ந்திருந்தார். அவருடைய அப்பீல் வழக்கில் அன்று தீர்ப்புச் சொல்லும் நாள். கோர்ட்டில் போய் உட்கார்ந்து தீர்ப்பை நேரில் கேட்கத் தைரியமில்லாமல், வக்கீலின் அறையிலேயே உட்கார்ந்திருந்தார். வக்கீல் குமாஸ்தா கிட்டுவய்யரைக் கேஸ் முடிந்தவுடனே வந்து தகவல் தெரிவிக்கும்படி கேட்டுக் கொண்டிருந்தார். பிற்பகல் மூன்றரை மணிக்குக் கிட்டுவய்யர் வந்து ஒரு கேஸ் கட்டை வைத்து விட்டு, இன்னொரு கேஸ் கட்டை எடுத்துக் கொண்டு ஓடினார். அந்த ஒரு விநாடி நேரத்தில் மேற்கூறிய மங்கள வார்த்தையை அவர் சொல்லி விட்டுப் போனார்.

அந்த வார்த்தை வெசங்கரம் பிள்ளையின் காதில் விழுந்ததும், அந்த அறையும், அதிலிருந்த நாற்காலி மேஜைகளும், அந்த ஹைகோர்ட் கட்டடம் முழுவதுமே இடம் பெயர்ந்து மேலும் கீழுமாகச் சுழன்றன. அதாவது வெசங்கரம் பிள்ளைக்கு அப்படித் தோன்றிற்று. நெற்றியை இரண்டு கைகளாலும் பிடித்துக் கொண்டார். "போச்சு! கேஸ் போயிடுத்து! அரோஹரா!"— இந்த வார்த்தைகளை, பழுக்கக் காய்ந்த சூட்டுக்கோலினால் அவர் தலையில் யாரோ எழுதுவது போலிருந்தது.

உட்கார்ந்திருக்க முடியவில்லை; இனிமேல் அங்கு உட்கார்ந்து என்ன பயன்! விநாயக சாஸ்திரி நல்லவர்தான். ஆனால் அவருக்கு ஏற்கனவே 'பீஸ்' பாக்கி ரொம்பக் கொடுக்கவேணும். கேஸ் மட்டும் ஜயித்திருந்தால், அதெல்லாம் லட்சியமில்லை. கைச் செலவுக்கு அவரிடமே பணம் வாங்கிக்கொண்டு போகலாம். அவரும் சந்தோஷமாகக் கொடுப்பார். இப்போது என்ன முகத்தைக் கொண்டு அவரிடம் கடன் கேட்பது! கடன் வாங்கினாலும் எப்படித் திருப்பிக் கொடுப்பது! ஏற்கனவே தொல்லையாகக் கடன் குழியில் விழுந்து விட்டது போதாதா!—இனிமேல் இங்கே உட்கார்ந்திருப்பதில் பிரயோஜனம் ஒன்றும் இல்லை. எழுந்து போக வேண்டியதுதான்.

வெசங்கரம் பிள்ளை தட்டுத் தடுமாறி எழுந்திருந்தார்; தள்ளாடிக்கொண்டே நடந்து ஹைகோர்ட் படிக்கட்டின் வழியாகக் கீழே இறங்கினார். சமுத்திரக் கரையை நோக்கி நடந்தார். துறைக் கரையின் ஓரமாகச் சென்று வழக்கமாக அவர் உட்காரும் மணல் மேட்டுக்கு அருகில் உட்கார்ந்தார்.

மேலே என்ன செய்வது! இடுப்பிலே செருகியிருந்த பையைக் கையிலெடுத்துப் பார்த்தார். பையில் நாலணா இருந்தது. மயிலாப்பூரிலிருந்து பஸ் சத்தமும் பொடிப் பட்டையும் போகப் பாக்கி ஒன்றரையணா மிச்சம். ஊருக்குப் போக ரயில் சார்ஜுக்குப் பணம் இல்லை. சாமான்கள் சில ஹோட்டலில் கிடந்தன. அவற்றை எடுக்கச் சென்றால், ஹோட்டல்காரனுக்கு இரண்டு நாள் சாப்பிட்ட பணம் கொடுக்க வேண்டுமே!

ஆனால், கேஸ் மட்டும் ஜயித்திருந்தாலோ! ஆகா! இப்படிக் கைக்கெட்டியது வாய்க்கு எட்டாமற் போகும் என்று யார் கண்டார்கள்! சீ! இதென்ன சர்க்கார்! இதென்ன கோர்ட்டு! இதென்ன நியாயம்!

இரண்டு வருஷத்துக்கு முன்பு வெசங்கரம் பிள்ளை இத்தகைய கதிக்குத் தயாராயிருந்தார். அவருடைய நாற்பது வேலி நிலத்தின்பேரில் கமார்



ஒரு லட்சம் ரூபாய் கடன் நின்றது. முப்பது வேலி நிலம் வரையில் கடன்காரர்களுக்கே சாஸனம் எழுதிக் கொடுத்துப் பெரும் பகுதி கடனைத் தீர்த்து விட்டார். பத்து வேலி நிலமும் அதன்மேல் 58,000 ரூபாய் கடனும் பாக்கி நின்றன. இந்தக் கடன்காரன் "இரண்டு வேலி நிலம் ஒதுக்கிக் கொடுத்து விடுகிறேன்; பாக்கியை சாஸனம் எழுதிக் கொடுத்து விடு" என்று கேட்டுக் கொண்டிருந்தான். சிவசங்கரம் பிள்ளையும் அநேகமாகச் சம்மதித்து விட்டார். அந்தச் சமயத்திலே வந்தது இந்த விவசாயக் கடன் நிவாரண மசோதா. "நல்ல வேளை; பிழைத்தோம்" என்று பிள்ளை சந்தோஷப்பட்டார். இதன்படி




அவர் 1600ரூபாய் தான் கடன்காரனுக்குப் பாக்கி கொடுக்க வேண்டியதாகும். ஏனெனில், பல வருஷங்களுக்கு முன்பு வாங்கிய ரூ. 10,000 கடனுக்கு நாளது வரை 18,400 ரூபாய் வட்டி மட்டும் செலுத்தி யிருந்தார் சிவசங்கரம் பிள்ளை.

கடன் மசோதா சட்டமாயிற்று. ரூ. 1600-க்குமேல் இன்னொரு 1600 சேர்த்து ரூ. 3200 கொடுப்பதற்கும் பிள்ளை தயாரா யிருந்தார். ஆனால் கடன் கொடுத்த மனுஷன் அதற்குச் சம்மதிக்க வில்லை. கோர்ட்டில் தாவா போட்டு விட்டான். தாவா போட்டபோது, "இதென்ன பைத்தியக்காரத்தனம்!" என்று அநேகம் பேர் சிரித்தார்கள். ஆனால் கோர்ட் ஜில்லா ஜட்ஜு தீர்ப்புச் சொன்ன போது தாங்கள் சிரித்தது எவ்வளவு முட்டாள்தனம் என்று உணர்ந்தார்கள்.

ஐ. சி. எஸ். காரர்களில் கொஞ்சம் கிறுக்குப் பிடித்தவர் களாகத் தோன்றுகிறவர்களை நீதி இலாகாவுக்கு அனுப்பி விடுவது என்றும் மரபு உண்டல்லவா! அத்தகைய ஐ. சி. எஸ். காரர் ஒருவர் அப்போது ஜில்லா ஜட்ஜா யிருந்தார். சகலரும் ஒருவிதம் சொன்னால் அதற்கு நேர்விரோதமாகச் சொல்லுவதில் திருப்தி யடைகிறவர் அவர். எனவே, அந்த விவசாயக் கடன் நிவாரணச் சட்டம் செல்லுபடியாகாதென்றும், சென்னைச் சட்டசபையோ அல்லது இந்திய சட்டசபையோ இம்மாதிரி ஒரு சட்டம் செய்வதற்கு லாயக்கற்றதென்றும், கவர்னர் கையெழுத்தும் வைஸ்ராய் கையெழுத்தும் இதற்குப் பிரயோஜனமில்லையென்றும், அரச சக்கரவர்த்தியே சொந்தமாய்க் கையெழுத் திட்டால்தான் இந்தச் சட்டம் செல்லுபடியாகு மென்றும், ஆகையால், பிரதிவாதி, வாதிக்கு முழுத் தொகையாகிய 18,000 ரூபாயுடன் செலவுத் தொகையும் சேர்த்துக் கொடுத்து விட வேண்டியதுதான் என்றும் தீர்ப்பளித்தார். சிவசங்கரம் பிள்ளைக்கு அப்போதே இடி விழுந்தது போல் ஆயிற்று. ஆனாலும், மேற்படி தீர்ப்பு சுத்தப் பைத்தியக் காரத் தீர்ப்பு என்றும், ஹைகோர்ட்டுக்கு அப்பீல் செய்தால் நிச்சயம் நியாயம் கிடைக்கு மென்றும் எல்லாரும் சொன்னார்கள். ஆகவே, சிவசங்கரம் பிள்ளை, வீட்டுக் குழந்தைகளின் கழுத்தில் போட்டிருந்த நகை நட்டுகளை யெல்லாம் விற்றுப் பணம் திரட்டி ஹைகோர்ட்டில் அப்பீல் செய்து கொண்டார். அதன் முடிவு இப்படிப் பேரிடியாகத் தலையில் விழும் என்று யார் கண்டார்கள்!

## 2

கடற்கரைச் சாலையில் மின்சார விளக்குகள் ஏற்றப் படும் வரையில் சிவசங்கரம் பிள்ளை ஜலக்கரை ஓரத்தி லேயே உட்கார்ந்திருந்தார். கடலில் விழுந்து உயிரை விட்டு விடலாமா என்ற எண்ணம் அவருக்கு அடிக்கடி உண்டாயிற்று. ஆனால் அகால மரணமடைகிறவர்களின் ஆவிகள் உலகத்திலேயே சுற்றிக் கொண்டிருக்கும், அவற்றுக்கு சாந்தி ஏற்படாது என்று அவர் சிறு பிராயத்தில் கேள்விப்பட்டிருந்தது அவருக்கு ஞாபகம் வந்தது. ஐயோ! கடவுளே! இயற்கையாகவே மரணம் வந்து விடக் கூடாதா! உலகத்தில் எத்தனை சின்னஞ் சிறு பிள்ளைகள் எல்லாம் செத்துப் போகிறார்கள்! ஐம்பத்தைந்து வய தானவனுக்குச் சாவு வரக் கூடாதா!

சிவசங்கரம் பிள்ளை கடைசியாக மனத்தைத் திடப் படுத்திக் கொண்டார். இனி இந்த உலகத்தில் வாழ்வது சிறிதும் பயனற்ற காரியம். எப்படியும் சாக வேண்டியது தான். எழுந்திருந்து கடலை நோக்கிச் சென்றார். சமுத்திர ராஜனே! இவ்வுலகில் நிராசைகளுக்கும் துன்பப்பட்டவர்க ளுக்கும் கடைசிப் புகலிடம் நீயே யல்லவா!

* * *

சிவசங்கரம் பிள்ளைக்குத் திடீரென்று அவருடைய குழந்தை குட்டிகளின் ஞாபகம் வந்தது. அவர்களைக் கடைசியாக ஒரு தடவை பார்க்காமலா உயிரை விடுவது! அதிலும் நாளை இராத்திரி தீபாவளியல்லவா! அப்பா புது வேஷ்டி, பாவாடைகளும், பட்டாசுக் கட்டுகளும் வாங்கிக் கொண்டு வருவார் என்று எதிர்பார்த்துக் கொண்டிருப் பார்களே! தீபாவளி யன்று தான் போவதற்குப் பதில் தாம் இறந்த செய்தி போய்ச் சேர்ந்தால்! — ஐயோ! குழந்தைகள் எப்படித் தவிப்பார்கள்! கையிலே தம்பிடி யில்லை, வாங்குவதற்கு. ஆனாலும் வெறுங் கையுடனாவது தீபாவளிக்கு ஊருக்குப் போய் விட வேண்டும். குழந்தை களை ஒரு தடவை பார்த்து விட்டு, பிறகு... உயிர் விடுவ தற்கு உலகத்தில் எத்தனையோ வழி இல்லையா!

சிவசங்கரம் பிள்ளை எழும்பூர் ஸ்டேஷனை நோக்கி நடக்க லானார். ஸ்டேஷன் போய்ச் சேர்ந்ததும், இடுப்பில் செருகி யிருந்த [illegible] ஒரு அணாவை எடுத்து ஒரு பிளாட் பாரம் டிக்கட் வாங்கிக் கொண்டார். இவர் உள்ளே போன சமயம் ரயில் புறப்படுவதற்குத் தயாராய் நின்று கொண் டிருந்தது. அதில் ஏறி உட்கார்ந்தார். ரயிலும் புறப்பட்டது. 'டக்' 'டக்' என்று ரயில் போய்க்கொண் டிருந்தபோது அவருடைய வாய் சிறு பிராயத்தில் வாசித்த ஒரு பாட்டின் அடியைத் திரும்பத் திரும்ப முணுமுணுத்துக் கொண்டிருந்தது. "ஆற்றில் மேடு மடுவும் போலாம் செல்வம்." ஆகா! தன்னுடைய பூர்வ நிலைமை என்ன! இப்போதைய நிலைமை என்ன! நாற்பது வேலி ஏகபோகமாக ஆண்டது ஒரு காலம்; ஹோட்டலில் சாப்பிட்ட பணம் கொடுக்க முடியாமல் ஓடுவது இன்னொரு காலம்; ரயிலில் இரண்டாம் வகுப்பில் ஜோராகப் பிரயாணம் செய்தது ஒரு காலம்; டிக்கட் இல்லாமல் மூன்றாம் வகுப்பில் ஏறி எப்போது டிக்கட் பரிசோதகன் வருவானோ என்று நெஞ்சு

படக் படக் என்று அடித்துக் கொள்ள உட்கார்ந்திருப்பது இன்னொரு காலம்!

அது வேகமாய்ப் போகும் ரயில். சின்ன ஸ்டேஷன்களில் நிற்காமல் போய்க் கொண்டிருந்தது. பிரயாணிகளில் சிலர் படுத்துத் தூங்கத் தொடங்கினார்கள். மற்றவர்கள் ஆடி விழுந்தார்கள். ஆனால், சிவசங்கரம் பிள்ளைக்கு மட்டும் தூக்கமே வரவில்லை. கண் கொட்டாமல் உட்கார்ந்திருந்தார்.

இரவு சுமார் இரண்டு மணி இருக்கலாம். அடுத்த வண்டியிலிருந்து தொத்தி வந்து ஒரு டிக்கட் பரிசோதகன் இந்த வண்டியில் ஏறினான். தூங்கினவர்களைத் தட்டி எழுப்பி டிக்கட்டுகளைப் பார்த்துக்கொண்டு வந்தான். சிவசங்கரம் பிள்ளையிடம் அவன் வந்தபோது, பிள்ளை ஒரு நிமிஷம் சும்மா இருந்தார். பிறகு, உடம்பு படபடக்க, நெஞ்சு விக்க, "டிக்கட், பர்ஸ் எல்லாம் பெட்டியில் இருந்தது. நான் தூங்கியபோது யாரோ பெட்டியை எடுத்துக் கொண்டு போய் விட்டார்கள்" என்றார். டிக்கட் பரிசோதகன் அவரை ஏற இறங்க நாலு தடவை பார்த்தான். அவர் சொல்வது நிஜமா, பொய்யா என்று அவனால் கண்டு பிடிக்க முடியவில்லை. அடுத்த ஸ்டேஷனில் வண்டி நின்றதும், அவன் பிள்ளையை ரயிலை விட்டு இறங்கச் சொன்னான். ஸ்டேஷன் மாஸ்டரிடம் கொண்டுபோய் நிறுத்தி, "இந்த மனுஷரிடம் டிக்கட் இல்லை. கேட்டால் ஏதோ கதை விடுகிறார். நீங்களே கேளுங்கள்" என்று சொல்லிவிட்டுப் போனான். ஸ்டேஷன் மாஸ்டருக்குத் தூக்கக் கலக்கம். "போய்த் தொலையுங்காணும்; இங்கு நின்று எழவு கொடுக்காதேயும்" என்றார். சிவசங்கரம் பிள்ளை ஸ்டேஷனிலிருந்து வெளியேறினார். அது என்ன ஸ்டேஷன் என்பதைக் கூட அவர் பார்க்கவில்லை. வெளியேறிச் சமீபத்தில் தெரிந்த ஊரை நோக்கிச் சென்றார். அந்த ஊர் ஏற்கனவே எப்போதோ பார்த்த ஞாபகமாயிருந்தது. ஆனால் எந்த ஊர் என்று ஞாபகம் வரவில்லை.

நேற்றுக் காலை பத்து மணிக்கு அவர் சாப்பிட்டது. பசியாலும் தூக்கமின்மையாலும் ரொம்பவும் களைத்துப் போயிருந்தார். ஆகவே, நடக்கும்போது கால்கள் தள்ளாடின. இப்போது அவர் ஒரு வீதி வழியாகப் போய்க் கொண்டிருந்தார். வீதியில் நடமாட்டம் கிடையாது. திடீரென்று தலை சுழன்றது; கண்ணை இருட்டிக் கொண்டு வந்தது. "சரி; எங்கேயோ பேர் தெரியாத ஊரில், நடுத்தெருவில் மூர்ச்சையாகி விழப்போகிறோம்" என்ற உணர்வு அவருக்கு உண்டாயிற்று. சட்டென்று ஒரு பக்கமாக நாலு அடி நடந்து, ஒரு வீட்டின் தெரு வாசற்படியில் உட்கார்ந்தார். அடுத்த கணத்தில் ஸ்மரணை இழந்தார்.

3

சிவசங்கரம் பிள்ளை கண்ணைத் திறந்தபோது, அவர் கண்ட காட்சியின் அதிசயம் அவரை மறுபடியும் மூர்ச்சையடையச் செய்வதாயிருந்தது. மல்லிகையின் மணமும், ஊதுவத்தி வாசனையும் அவருக்குப் புலனாயிற்று. நாலு பக்கமும் சுற்றிப் பார்த்தார். ஒரு சின்ன அறை. அதில் ஒரு அலங்காரக் கட்டில். அந்தக் கட்டில் மெத்தென்ற படுக்கையின்மேல் இவர் கிடந்தார். சுவரில் ஒரு மாடம் காணப்பட்டது. அதில் ஒரு சின்னப் புகைப் படம் மல்லிகை மலர் மாலையால் அலங்கரிக்கப்பட்டு விளங்கிற்று. எதிரில் குத்து விளக்கு பிரகாசமாய் எரிந்தது. அதன் வெளிச்சத்தில் அவர் அந்தப் புகைப் படத்தை உற்றுப் பார்த்தார். அவருக்குத் தூக்கி வாரிப் போட்டது. கட்டிலில் எழுந்து உட்கார்ந்து மறுபடியும் உற்றுப் பார்த்தார். சந்தேகமில்லை; அது அவருடைய புகைப் படந்தான்! முப்பத்தைந்து வருஷத்துக்கு முன்னால் எடுத்த படம். [illegible] அப்படி மங்கியிருக்கிறது. ஆனால், அதில் உள்ள தன்னுடைய தோற்றந்தான் என்ன வேடிக்கை! தலையில் கிராப்புக் குடுமி; அதன் மேல் குல்லா; காதில் வைரக் கடுக்கன். நெற்றியில் விபூதி, அதில் ஒரு சின்னச் சாந்துப் பொட்டு. பிறகு, ஷர்ட்டு, கோட்டு, [illegible]. அந்த வாலிபத் தோற்றத்துக்கும் இப்போதுள்ள கிழத் தோற்றத்துக்கும் எவ்வளவு வித்தியாசம்! ஒரு காலத்தில், தான் அப்படியிருந்ததாக இப்போது நம்பக்கூட முடியவில்லையே!

சிவசங்கரம்பிள்ளைக்கு அந்த நாளைய சம்பவங்கள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக ஞாபகம் வந்தன. நேற்று நடந்தவை போல் அவை அவ்வளவு தெளிவாக அவர் மனக் கண்முன் தோன்றின.

திருச்சினாப்பள்ளி செயின்ட் ஜோசப் காலேஜில் சிவசங்கரன் அப்போது படித்துக் கொண்டிருந்தான். அந்த வருஷம் எப். ஏ. பரீட்சைக்குப் போக வேண்டும். தன் ரூமை வைத்து, சமையற்காரன் சமைத்துப் போடச் சாப்பிட்டுக் கொண்டு படித்து வ



தான். பெரிய பணக்கார மிராசுதார் வீட்டுப் பிள்ளை; செலவைப் பற்றிக் கவலை என்ன!

அவ்வருஷம் ஆவணி மாதத்தில் அவனுக்குக் கல்யாணம் நிச்சயமாயிற்று. பெண்ணும் பெரிய இடத்துப் பெண். சிவசங்கரனுடைய தகப்பனார் பிரமாதமாகக் கல்யாணத்துக்கு ஏற்பாடுகள் செய்திருந்தார். சிவசங்கரனைக் கல்யாணத்துக்கு ஒரு வாரத்துக்கு முன்பே ஊருக்கு வந்து விடும்படி எழுதியிருந்தார். அவ்வாறே சிவசங்கரனும் புறப்பட்டுச் சென்றான்.

அவனுடைய கிராமம், ரயில்வே ஸ்டேஷனிலிருந்து, ஆறு மைல். நாலாவது மைலில் அரசலாற்றைக் கடக்க வேண்டும். அப்போது ஆற்றுக்குப் பாலம் கிடையாது. வெள்ளம் வரும் காலங்களில் படகில்தான் கடக்க வேண்டும். சிவசங்கரன் ஸ்டேஷனிலிருந்து வண்டி பிடித்துக்கொண்டு ஆற்றங்கரைக்கு வந்து சேர்ந்தான். ஆற்றில் வெள்ளம் அலைமோதிக்கொண்டு போயிற்று. அக்கரையில் அவன் வீட்டு வண்டி வந்து தயாராய்க் காத்துக்கொண்டிருந்ததும் தெரிந்தது. ஆனால், அப்போதுதான் படகு அக்கரையை நோக்கி ஆற்றில் பாதி தூரத்தில் போய்க் கொண்டிருந்தது. அது திரும்பி வருவதற்கு இன்னும் கால் மணி நேரமாவது ஆகும். சிவசங்கரன் ஆற்றங்கரை அரசமரத்தடியில் உட்கார்ந்தான்.



'கலகல' வென்று சிரிப்புச் சத்தத்தைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். அரச மரத்துக்கு அந்தண்டைப் பக்கத்தில் ஒரு பெண்ணும், அவள் தாயாரும் கட்டுச் சாதம் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். அந்தப் பெண் சாப்பிடும்போது, நடுநடுவே நதிக்கரைக் காக்கைகளுக்கும் சாதம் போட்டுக் கொண்டிருந்தாள். ஒரு பிடி சாதத்தை எடுத்து உயரத்தில் விட்டு எறிவாள். நாலைந்து காக்காய்கள் உடனே அதை நோக்கிப் பாயும். ஏதாவது ஒரு காக்கை அதைக் கவ்விக் கொள்ளும். அப்போது அந்தப் பெண் கலீரென்று சிரிப்பாள். சில சமயம் இரண்டு காக்கைகள் ஏக காலத்தில் அந்தப் பிடி சோற்றைக் கவ்வும். அப்போது இரண்டு மூக்குகளும் ஒன்றோடொன்று உராய்வது அந்தப் பெண்ணுக்கு மிகுந்த களிப்பை அளித்தது.

இதைச் சிவசங்கரன் பார்த்துக் கொண்டேயிருந்தான். நடுநடுவே அவனுக்கும் சிரிப்பு வந்தது. ஒரு தடவை அவன் சிரித்ததை அந்தப் பெண் பார்த்தாள். அப்புறம் ஒவ்வொரு தடவையும், சாதம் எறியும்போது, அவனைக் கடைக் கண்ணால் பார்த்துக் கொண்டே எறியத் தொடங்கினாள். அந்த வேடிக்கையில் சிவசங்கரனும் பூரணமாய் ஈடுபட்டு அனுபவித்தான்.

ஆற்றங்கரைக் காக்காய்களுக்குத் தைரியம் அதிகம் என்பது தெரியுமல்லவா? அந்தக் காக்காய்கள் வரவர அதிக தைரியம் கொண்டன. கடைசியில், அந்தப் பெண்ணின் கையிலுள்ள சாதத்தையே வந்து கொத்தின. அப்போது, "ஐயையோ!" என்று அந்தப் பெண் அலறினாள். அது விளையாட்டுக்கோ, நிஜமாகத்தானோ தெரியாது. ஆனால், சிவசங்கரன் குதித்து எழுந்து ஓடி, அந்தக் காக்காய்களை "ஹோஷ்" என்று ஓட்டினான்.

அந்தப் பெண் தன் தாயாரைப் பார்த்து, "இந்த ஐயா என்னைக் காகாசுரனிடமிருந்து காப்பாற்றினார்" என்றாள்.

அந்த வார்த்தைகள் சிவசங்கரனுக்கு அளவிலாத வியப்பையும் இன்பத்தையும் அளித்தன. காகாசுரன்! ஏது! இவள் ரொம்பப் படித்த பெண் போலல்லவா இருக்கிறது! யாராயிருக்கும்! எங்கிருந்து எங்கே போகிறாள்! கேட்டு வைப்போமா! ஆனால், ஏனோ தெரியாது, அவனுக்குப் பேச நாவெழவில்லை. இதற்குள் படகு வந்து சேர்ந்தது. பிரயாணிகள் இவர்கள் மூன்று பேர்தான். ஏறி உட்கார்ந்தார்கள்.

நதியில் படகு போகும்போது ஜலத்தைக் கிழித்துக் கொண்டு போகுமல்லவா? இந்தப் பெண் அந்த வேடிக்கையை ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தாள். தலையிலிருந்த ஜவந்திப் பூவை ஒவ்வொன்றாக எடுத்துப் படகின் முன் பக்கத்தில் போடுவாள். அது ஜலத்தோடு ஓடி வருவதைப் பார்க்க இன்னொரு பக்கத்துக்கு ஓடி வருவாள். இப்படி ஓடும்போது ஒரு தடவை அவளுடைய கால் தடுக்கி விழத் தெரிந்தாள். அப்போது, அவளையே ஆவலுடன் கவனித்துவந்த சிவசங்கரன் சடக்கென்று அவளுடைய கையைப் பிடித்துத் தாங்கி விட்டான். "அடி, தனகோடி! இது என்ன விஷமம்! இத்தனை நேரம் ஆற்றில் விழுந்திருப்பாயே!" என்றாள் அவள் தாயார்.

தனகோடியோ கலகலவென்று சிரித்தாள். "உங்களுக்கு நீந்தத் தெரியுமா?" என்று சிவசங்கரனைப் பார்த்துக் கேட்டாள். அவன் "தெரியும்" என்றதும், "அப்படியானால், அதற்குள் ஏன் என்னைப் பிடித்துக் கொண்டீர்கள்! ஆற்றில் விழுந்த பிறகு எடுத்திருக்கக் கூடாதா?" என்று கூறி மறுபடியும் சிரித்தாள்.

சிவசங்கரனுக்குத் தலை சுற்றியது. அவன் வாழ்நாளில் இது வரையும் அம்மாதிரி உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டது கிடையாது.

படகு அக்கரையை அடைந்தது. சிவசங்கரன் இறங்கித் தயாராய்ப் பூட்டி நின்ற அவன் வீட்டு வண்டியில் ஏறிக் கொண்டான். அந்தப் பெண்ணின் மனுஷர்கள் மூன்று நாலு பேர் கரையில் நின்று கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்கள் கிளம்புவதற்கு அவசரப்பட்டதாகத் தெரியவில்லை. சிவசங்கரனுடைய வண்டி வேகமாய்ச் சென்றது. தனகோடி தன்னையே பார்த்துக் கொண்டு நிற்பதாக அவனுக்கு ஒரு பிரமை உண்டாயிற்று.

அவள் யாராயிருக்கலாம்! எங்கே இருந்து வருகிறாள்! எங்கே போகிறாள்! இனிமேல் அவளை எப்போதாவது காண்போமா! ஆகா! அவள்தான் என்ன அழகு!—இந்த விஷயம் இப்போதுதான் அவன் மனத்துக்கு வரத் தொடங்கியது—முகத்தில் என்ன களை! என்ன குறுகுறுப்பு!—அப்பா! அதென்ன கண்கள்! ஒவ்வொரு தடவை அவள் கடைக்கண்ணால் தன்னைப் பார்த்தபோதும்......ஆகா! இவளை மட்டும் சில நாளைக்கு முன்பு பார்த்திருந்தால், இந்தக் கல்யாணம்......"சீ சீ! இதென்ன பைத்தியக்கார எண்ணம்!" என்றெண்ணிச் சிவசங்கரன் பெருமூச்சு விட்டான்.

கல்யாணம் ஏக அமர்க்களமாய் நடந்தது. அந்த தடபுடலில் சிவசங்கரன் நதிக்கரைச் சம்பவத்தை மறந்து விட்டான். கல்யாணப் பெண்ணை அசப்பில் பார்த்துப் பார்த்து மகிழ்ச்சியடைந்தான். இரண்டாம் நாள் சதிர்க் கச்சேரி. சிவசங்கரனுக்கு சதிரில் ரொம்ப வெறுப்பு. "இதென்ன அநாகரிக வழக்கம்!" என்று எரிந்து விழுந்தான். ஆனாலும் எல்லாரும் வற்புறுத்தியதின்மேல் சபையில் வந்து உட்கார்ந்தான். இவ்வளவு ஆண் பிள்ளைகளுக்கு மத்தியில் ஆடத்துணிந்த பெண் எப்படித்தான் இருப்பாள் என்று எண்ணி ஒரு முறை நிமிர்ந்து பார்த்தான்; பார்த்தவன் பார்த்தவன்தான். சிறிது நேரம் கண்ணைக் கொட்டக் கூட இல்லை. ஏனெனில், அங்கு நாட்டியம் ஆடிய பெண் அவன் நதிக்கரையில் சந்தித்த பெண்தான்.

சிவசங்கரனுக்குச் சுய ஞாபகம் வரச் சிறிதுநேரம் பிடித்தது. அப்புறம் "சீ! இப்படி நாம் வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தால் நாலு பேர் என்ன நினைப்பார்கள்!" என்று எண்ணி, வேறு பக்கம் பார்க்கத் தொடங்கினான். அருகிலிருந்த தன் தோழனிடம், "நாட்டியக்காரிக்கு எந்த ஊர்?" என்று கேட்டான். "உனக்குத் தெரியாதா! இத்தனை காலம் திருச்சிராப்பள்ளியில் இருக்கிறாயே! பிரசித்தி பெற்ற மலைக்கோட்டை தனகோடி. இவள்தான்!" என்றான் அந்த சிநேகிதன்.

தனகோடி முதலில் கொஞ்ச நேரம் நாட்டியம் ஆடினாள். பிறகு பதங்கள் பாடி அபிநயம் பிடித்தாள். இதிலெல்லாம் சிவசங்கரனுடைய கவனம் செல்லவில்லை. அவனுடைய மனது எங்கெங்கேயோ சென்று கொண்டிருந்தது. நடுநடுவே மட்டும் தனகோடியை ஒரு கணம் பார்ப்பான். பிறகு வேறு புறம் திரும்பிக்கொள்வான். ஆனால், கடைசியில் அவள் ஒரு சம்ஸ்கிருத

சுலோகத்தைச் சொல்லி அதற்கு அபிநயம் பிடித்தபோது, அவளுடைய லாவண்யம் முழுவதும் அதில் சென்றது. அது ஒரு ராமாயண சுலோகம். காகாசுர விருத்தாந்தத்தைக் கூறுவது. ராமர் சீதையின் மடியில் தலையை வைத்துத் தூங்குகையில் காகாசுரன் வந்து சீதையைக் கொத்தித் துன்புறுத்துகிறான். அவன் எத்தனைதான் ஓட்டியும் போகவில்லை. ராமர் கண்விழித்து அதன் மீது தர்ப்பாஸ்திரத்தை விடுகிறார். தர்ப்பாஸ்திரம் துரத்துகிறது. காகாசுரன் மூன்று உலகங்களுக்கும் போய் விட்டுக் கடைசியில் ராமனிடமே வந்து அடைக்கலம் புகுகிறான். இந்த சுலோகத்தைப் பாடி அதற்கு அபிநயமும் பிடித்தாள் தனகோடி. காக்கையைக் குறிப்பிடுவதற்கு, அவள் கைவிரல்களைக் காக்கைமாதிரி வைத்துக் கொண்டு, கண்ணைக் காக்கை சாய்ப்பதுபோல் சாய்த்தபோது, சபை முழுவதும் 'கொல்' லென்று சிரித்தது. சபையிலிருந்த ஒரு ஒன்றரைக் கண் பேர்வழி எழுந்தே போய் விட்டான். பிறகு, சீதை காக்கையை ஓட்டியது, அது போகாமல் வந்து தொந்தரவு செய்தது முதல் நெடுகச் சொல்லி வந்து, கடைசியில், ராமர் அதை மன்னித்து விட்டதைக் காட்டி விட்டு, ஜெசங்கரன் பக்கம் ஒரு பார்வை பார்த்தாள். ஓ! அந்தப் பார்வை, இத்தனை வருஷத்துக்குப் பிறகு, இப்போது கூட மனக்கண் முன்பு நிற்கின்றதே!

4

கல்யாணத்துக்குப் பிறகு ஜெசங்கரன் மறுபடி திருச்சிக்குப் பள்ளிக்குப் படிக்கப் போனான். ஆனால் அவனுக்குப் படிப்பில் குறியே போய் விட்டது. சதா காலமும் தனகோடியின் ஞாபகந்தான். திருச்சியில் அவளுடைய நாட்டியம் எங்கே நடந்தாலும் இவன் தவறாமல் ஆஜராவான். ஒரு நாள் நாட்டியம் முடிந்து இவன் வெளியே வந்து கொண்டிருந்தபோது, தனகோடியின் நாயனாரைச் சந்தித்தான். அசட்டுத் தைரியத்துடன், "உங்கள் வீடு எங்கே இருக்கிறது?" என்றான். அவன், வீதியின் பெயரைச் சொல்லி, "ஒரு நாளைக்கு வீட்டுக்கு வாருங்களேன், பிள்ளை!" என்றான்.

பிறகு, ஜெசங்கரன் தனகோடியின் வீட்டுக்குப் போகத் தொடங்கினான். ஆனால், அப்படிப் போய் வந்ததில், ஒரு விஷயம் மட்டும் அவன் மனதுக்கு மிகுந்த சஞ்சலத்தை அளித்து வந்தது. தன்னுடைய வருகையைத் தனகோடி விரும்புகிறாளா, இல்லையா என்பது அவனுக்குத் தெரியவில்லை. நதிக்கரையில் தனகோடியிடம் அவன் கண்ட குதூகலத்தை இப்போது காண முடியவில்லை. அவளுடைய முகத்தில் மகிழ்ச்சியைவிடத் துயரத்தின் சாயையே அதிகம் காணப்பட்டது. தனகோடியின் கண்கள் அவனிடம் அளவிலாத அன்பைத் தெரியப்படுத்தின. ஆனால் அவனிடம் அவள் இரண்டொரு வார்த்தைக்கு மேல் பேசுவது கிடையாது. இந்த அதிசயமான மாறுதலை நினைக்க நினைக்க, அவனுக்கு மனவேதனை அதிகரித்து வந்தது.

ஒரு தடவை தனகோடி ஜெசங்கரனை, "நீங்கள் போட்டோ எடுத்துக் கொண்டிருக்கிறீர்களா?" என்று கேட்டாள்.

"ஓ! எடுத்துக் கொண்டிருக்கிறேன்" என்று ஜெசங்கரன் பொய் சொன்னான். "அப்படியானால், எனக்கு ஒன்று கொடுங்கள்; சீக்கிரம் கொடுக்க வேணும்" என்றாள்.

தீபாவளி இன்னும் ஆறு நாள்தான் இருந்தது. தலை தீபாவளி யல்லவா! ஜெசங்கரனை ஊருக்கு வரச் சொல்லிக் கடிதம் வந்திருந்தது. ஆனால் அவன் போவதில்லை என்று நிர்மானித்தான். முன்னாலேயே தெரிவித்தால், யாராவது நேரில் அழைத்துப் போக வந்து விடுவார்களென்று தீபாவளிக்கு முதல் நாள் போய்ச் சேரும்படியாகக் கடிதம் எழுதினான். "படிக்க வேண்டியது அதிகமாயிருக்கிறபடியால் தீபாவளிக்கு ஊருக்கு வரவில்லை" என்று தெரிவித்திருந்தான்.

அம்மாதிரி அவன் நிர்மானித்ததற்கு முக்கிய காரணம், தன்னுடைய போட்டோ ஒன்று எடுத்துத் தீபாவளியன்று அதைத் தனகோடிக்கு நேரில் கொடுக்க வேண்டும் என்பது தான். அவ்வாறே தீபாவளி அன்று காலையில் அவன் ஸ்நானம் செய்து புது வேஷ்டி கட்டிக் கொண்டு, நேரே தனகோடியின் வீட்டுக்குப் போனான். தனகோடி இவனைப் பார்த்ததும் வியப்புடன், "என்ன! நீங்கள் தீபாவளிக்கு ஊருக்குப் போகவில்லையா?" என்று கேட்டாள். "இல்லை, உனக்கு இந்தத் தீபாவளிப் பரிசு கொடுப்பதற்காகத்தான் இருந்தேன்" என்றான். தனகோடி, புகைப் படத்தை வாங்கிக் கொண்டு, "ரொம்ப சந்தோஷம்" என்றாள். ஆனால் அவளுடைய முகத்திலோ, குரலிலோ சந்தோஷத்தைக் காணவில்லை.

இதனால் உற்சாகக் குறைவு அடைந்தவனாய், ஜெசங்கரன் வெளியே வந்தான். சுய நினைவு இல்லாமலே வீதியோடு நடந்தான். கொஞ்ச தூரம் சென்றதும், அவனுடைய தகப்பனார் எதிரில் வருவதைக் கண்டு திடுக்கிட்டான். ஐயோ! தான் தனகோடியின் வீட்டிலிருந்து வெளி வந்ததை அவர் பார்த்திருப்பாரோ!

நெஞ்சு, படக் படக் என்று அடித்துக் கொள்ள, "எங்கே அப்பா வந்தீர்கள்!"

என்று கேட்டான். "உன்னை அழைத்துக் கொண்டு போகத் தான்" என்றார் தகப்பனார்.

வீட்டுக்குப் போனதும், ஜாகையையே காலி பண்ணுவதற்கு ஏற்பாடு செய்தார். "இது என்ன அப்பா?" என்று கேட்டதற்கு, "நீ படித்தது போதும். ஊருக்குத் தபாலுக்குக்கூட வர முடியாமல் படிக்க வேண்டுமென்றால், அந்தப் படிப்பு வேண்டாம்" என்றார்.

இவ்வுலகில் சிவசங்கரன் செய்ய முடியாத காரியம் ஒன்று இருந்தது. அது, அவனுடைய தகப்பனாரின் கட்டளைக்கு மாறாக நடப்பதுதான். எனவே, அவர் சொன்னபடி அவன் உடனே சொந்தக் கிராமத்துக்குச் சென்றான். ஆனால் கொஞ்ச காலம் வரையில் அவனுக்குப் பிரமை பிடித்தாற் போலிருந்தது. தனகோடியைப் பார்க்க முடியாதது ஒரு பக்கம். தகப்பனார் தன்னுடைய படிப்பையே நிறுத்தி விட்டதற்குக் காரணம் என்னவாயிருக்கலாமென்ற யோசனை ஒரு பக்கம். கடைசியாக, ஒரு நாள், அந்தக் காரணத்தை அவன் கண்டு பிடித்தான். ஒரு நாள் அவன் வீட்டு இரும்புப் பெட்டியைத் திறந்து ஏதோ ஒரு நகையைத் தேடியபோது அவன் கையில் ஒரு கடிதம் அகப்பட்டது. அது திருச்சினாப்பள்ளி முத்திரை போட்ட கடிதம். அதை எடுத்து வாசித்தான். நல்ல, அழகான, குண்டு குண்டான எழுத்தில் பின்வருமாறு எழுதியிருந்தது:—

"ஐயா,

தங்களுடைய பிள்ளையின் கல்யாணத்துக்கு நன்றாய் பரத நாட்டியம் ஏற்பாடு செய்தீர்கள்! அதனுடைய பலன் கோவலன்—மாதவி கதையாக முடியும் போலிருக்கிறது. இதற்கு மேல் நான் ஒன்றும் சொல்வதற்கில்லை. பிள்ளையைக் காப்பாற்ற எண்ணமிருந்தால், மலைக்கோட்டை ............... வீட்டுக்குப் போகாமல் தடை செய்ய வேணும். இப்படிக்கு,

உண்மை விளம்பி."

சிவசங்கரனுக்கு இப்போது எல்லாம் விளங்கிப் போயிற்று. ஆனால் இந்தக் கடிதத்தை எழுதிய பாதகன் யார்! ஒரு வேளை, தனகோடி வீட்டுக்கு வரும் வழக்கமுடைய வேறு யாராவது எழுதி யிருப்பானோ! அல்லது தன்னுடைய கலாசாலை சிநேகிதன்தான் யாராவது வேணுமென்று எழுத்தை மாற்றிக் கொண்டு எழுதியிருப்பானோ! யாராயிருந்தாலும் அவன் பேரில் அவனுக்கு அசாத்திய கோபம் வந்தது. ஆனால், காலடைவில், இரண்டொரு வருஷத்தில் தனகோடியின்மீது அவனுக்கிருந்த மோகம் மாறியபோது, மேற்கண்ட கோபமும் மாறுதலடைந்தது. அந்தக் கடிதத்தை எழுதியவன் தனக்கு ஒரு பெரிய உபகாரம் செய்து தன்னைக் காப்பாற்றினான் என்றே கருதலானான். ஆகா! என்ன வெட்கக் கேடான காரியம் தான் செய்யப் புகுந்தது! தன்னுடைய குடும்பத்துக்குத்தான் என்ன கேவலம்! தனகோடியின் வீட்டுக்குத் தான் சென்று போயிருந்தபோது, அவள் தாயார் முதலியவர்கள், அந்த வீட்டுக்கு வரும் வழக்கமுள்ள பெரிய மனுஷர்களை யெல்லாம் பற்றி என்ன கேவலமாய்ப் பேசினார்கள்! அப்படித்தானே ஒரு நாளைக்குத் தன்னைப் பற்றியும் பேசுவார்கள்! கோவலன்—மாதவி கதை என்று அந்தக் கடிதத்தில் எழுதியிருந்ததில்தான் பிசகு என்ன! சீ! இதெல்லாம் அந்தக் காலத்தில் தனக்குத் தெரியாமல் போனது என்ன ஆச்சரியம்! இவ்வாறு புத்தி திருந்திய சிவசங்கரன் சில நாளைக்கெல்லாம் தனகோடியின் நினைவை அடியோடு மறந்து விட்டான்......



5

மேற் கூறிய சம்பவங்கள் எல்லாம் கட்டிலின்மேல் படுத்திருந்த சிவசங்கரம் பிள்ளைக்கு நேற்று நடந்தவைபோல் ஞாபகத்துக்கு வந்தன. ஆனால், இதென்ன அதிசயம்! இந்தப் புகைப் படம் இங்கு எப்படி வந்தது! ஒரு வேளை இந்த அம்மாள்—இந்தத் தலை நரைத்த மூதாட்டி—இவள்தான் அந்த நாளில் தன்னை மோக வலையில் ஆழ்த்திய தனகோடியோ! அப்படியும் இருக்க முடியுமா! இருந்தால், இதைவிட ஆச்சரியம் இந்த உலகத்தில் ஏதாவது உண்டா!

அந்த அம்மாள் உள்ளே வந்தாள். சிவசங்கரம்பிள்ளை மெதுவாக மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு, "அதோ அந்தப் போட்டோவிலிருக்கும் பையன் யார்! எங்கேயோ பார்த்த நினைவா யிருக்கிறது" என்று கேட்டார்.

"ஐயா! அவர்தான் என் பிராண நாயகர். பாலியத்திலேயே அவரை இழந்து விட்டேன்" என்றாள்.

"என்ன! விதவையா!" என்று பிள்ளை திடுக்கிட்டுக் கேட்டார்.

"அது ஒரு பெரிய கதை. இதுவரையில் நான் யாருக்கும் சொன்னதில்லை. உங்களைப் பார்த்தால் சொல்லவேணுமென்று தோன்றுகிறது" என்றாள்.

சிவசங்கரம்பிள்ளை அதைக் கேட்பதற்குத் தம்முடைய ஆவலைத் தெரிவிக்கவே பக்கத்தில் கிடந்த விசுப்பலகையில் உட்கார்ந்து சொல்லத் தொடங்கினாள்.

"ஐயா! சொன்னால் நீங்கள் வெறுப்பீர்களோ என்னமோ! நான் தேவதாசி குலம்......" என்று கதையை ஆரம்பித்தாள். அதற்குப் பிறகு அவள் சொன்னதெல்லாம் சிவசங்கரம் பிள்ளைக்கு ஏற்கனவே தெரிந்ததையே யாகும். அவள் வேறு யாருமில்லை; தனகோடிதான். நதிக்கரையில் இவரைச் சந்தித்ததிலிருந்து, தீபாவளிப் பரிசு கொடுத்தது வரையில் சொல்லி, "அதற்குப் பிறகு அவரை நான் பார்க்கவே யில்லை......" என்ற போது, "அப்படிப்பட்ட மனுஷனை நீ ஏன் இன்னும் நினைவு வைத்துக் கொண்டிருக்கிறாய்!" என்று பிள்ளை கேட்டார்.

"அது அவருடைய குற்றமில்லை" என்று கூறித் தனகோடி ஒரு நிமிஷம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். பிறகு மேலே கூறினாள்:—"அதற்குப் பிறகு நான் அதிக காலம் பரத நாட்டியம் ஆடவில்லை. சபைகளில் சுற்றிச் சுற்றிப் பார்ப்பேன். அவர் முகம் எங்கும் இல்லையென்று தெரிந்ததும், எனக்கு உற்சாகமே போய் விடும். சில வருஷத்துக்கெல்லாம் நாட்டியம் ஆடுவதை நிறுத்தி விட்டேன். மலைக்கோட்டையில் இருக்கவே மனமின்றி, இந்த ஊருக்கு வந்து விட்டேன். இப்போது என்னுடைய மனோரதம் ஒன்றே ஒன்றுதான். நான் இறப்பதற்குள் ஒரு தடவை அவரைப் பார்த்துவிட வேண்டும். இந்த மனோரதம் கட்டாயம் நிறைவேறும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. பகவான் அருள் புரிய வேணும்" என்று தனகோடி கதையை முடித்தாள்.

சிவசங்கர முதலியார் அன்று பகலும் இரவும் அந்தவீட்டில் கழித்தார். அவருடைய மனத்தில் ஒரு பெரிய யுத்தம் நடந்து கொண்டிருந்தது. "நான்தான் சிவசங்கரன் என்று இப்போது சொல்லிவிட வேண்டியதுதான். இவள் எனது அடிமையானவள். இவ்வளவு செல்வமும் என்னுடையதாகும். கோர்ட்டில் கேஸ் போனாலும் ஒன்றும் மோசமில்லை" என்று ஒரு மனம் சொல்லிற்று. "சீச்சீ! இது என்ன வெட்கங்கெட்ட பிழைப்பு! அப்படியாவது இந்தச் சொத்துக்கு வாரிசாக வேண்டுமா! மேலும், அவள் நினைத்துக் கொண்டிருக்கும் வாலிப சிவசங்கரன் எங்கே! இந்தத் தலை நரைத்த கிழவன் சிவசங்கரன் எங்கே! நான்தான் சிவசங்கரன் என்று சொன்னாலே அவளுடைய அன்பு சாம்பலாய்ப் போய்விடாதா! கூடவே கூடாது" என்று இன்னொரு மனம் சொல்லிற்று. கடைசியில் இரண்டாவது மனந்தான் வெற்றி பெற்றது.

டங் டங் டங் என்று கடிகாரத்தில் மூன்று மணி அடித்தது. வீட்டில் எல்லாரும் அயர்ந்து நித்திரை போனார்கள். சிவசங்கரம் பிள்ளை மெதுவாக எழுந்து, சத்தமின்றி நடந்து வாசற் கதவைத்

திறந்து கொண்டு விழித்து வந்தார். ஆகா! இதென்ன! உடம்பு இவ்வளவு இலேசாக இருக்கிறதே! சிறிதுகூட இளைப்பாக இல்லையே! காற்றைப் போல் ஆகாசத்தில் போக முடிகிறதே! ஓ! ஓ! இது மரணத்துக்குப் பிந்தைய நிலையல்லவா! ஸ்தூல சரீரம் தனகோடி வீட்டுக் கட்டிலிலே கிடக்க, சூக்ஷ்ம சரீரத்துடன் அல்லவா இப்போது வெளி வந்திருக்கிறோம்! ஆகா! மரணம் என்பது இவ்வளவு ஆனந்தமானதா!



தெரு வீதியில் பட்டாசு வெடிகள் வெடிக்கும் சத்தம் கேட்டது. உடனே, குழந்தைகளின் ஞாபகம் வந்தது. இவ்வுலகை விட்டுப் போகுமுன் அவர்களை ஒரு தடவை பார்த்துவிட வேணும். இந்த சூக்ஷ்ம சரீரத்தில் நினைத்தால் நினைத்த இடம் போகலாமல்லவா!

அடுத்த கணத்தில், சிவசங்கர முதலியார் தமது வீட்டு வாசலில் நின்றார். கதவை இடித்தார். ஆனால், உள்ளிருந்து பதில் வரவில்லை. குழந்தைகளின் பெயரைச் சொல்லி உரக்கக் கூப்பிட முயன்றார். ஆனால் வாயிலிருந்து சத்தம் வரவில்லை. ஓ! மரணமென்றால் இதுதான் சங்கடம் போலும்!

* * *

"சிவசங்கர முதலியார்! சிவசங்கர முதலியார்!" என்று கூப்பிடும் சத்தம் இலேசாகக் காதில் விழுந்தது. இதென்ன கூத்து! பிட்டுவய்யர் இங்கே எப்படி வந்தார்!

[சிவசங்கரம் பிள்ளையை முதலியார் என்று கூப்பிடுகிறவர் பிட்டுவய்யர் ஒருவர்தான். முதல் தடவை அவரைப் பார்த்த போது, பிட்டுவய்யர் தவறாக அப்படிக் கூப்பிட்டார். அது முதல் வேண்டுமென்றே அப்படிக் கூப்பிட்டு வந்தார்.]

இந்த வக்கீல் குமாஸ்தா பூலோகத்தில் தன்னைப் படுத்தி வைத்த பாடெல்லாம் போதாதா? இங்கேயும் வந்து விட்டாரே!

"சிவசங்கர முதலியார்! சிவசங்கர முதலியார்!" என்று உரத்துக் கேட்டது.

"எங்கேங்காணும் இருக்கிறீர்!" என்ற வார்த்தைகள் இவருடைய வாயிலிருந்து வந்தன. அதே சமயம் கண்களும் திறந்தன. எதிரே சாக்ஷாத் பிட்டுவய்யர் மண்டி போட்டு உட்கார்ந்திருந்தார்.

"என்ன, முதலியாரே! இப்படி அநியாயம் பண்ணத் துணிந்து விட்டீரே!" என்றார்.



சிவசங்கரம் பிள்ளைக்கு முழு ஞாபகமும் வரக் கொஞ்ச நேரம் ஆயிற்று. தான் சமுத்திரக் கரையில் கிடப்பதைக் கண்டார். நன்றாய் இருட்டிப் போயிருந்தது. பக்கத்தில் இன்னும் இரண்டு மூன்று பேர் நின்றார்கள். பிட்டுவய்யர் கூஜாவிலிருந்து காப்பி எடுத்துக் கொடுத்துக் குடிக்கச் சொன்னார்.

காப்பி குடித்துக் கொஞ்சம் தெம்பு வந்ததும், "எப்படி என்னைக் கண்டு பிடித்தீர்!" என்று பிள்ளை கேட்டார்.

"கேஸ் முடிந்து வக்கீலும் நானும் அறைக்கு வந்தபோது உம்மைக் காணோம். நான் உம்மிடம் விளையாட்டுக்குச் சொன்னதை வக்கீலிடம் சொன்னேன். அவர் 'அடபாவி! சண்டாளா! அந்த மனுஷர் இந்தக் கேஸின் ஜயத்தைத்தானே நம்பியிருந்தார்! எங்கேயாவது போய் உயிரை விட்டு வைக்கப் போகிறாரே!' என்று கூச்சல் போட்டார். நீர் இங்கே சமுத்திரக் கரையில்தான் இருப்பீர் என்று நான் தேடிக் கொண்டு வந்தேன். இங்கே வந்தால், வக்கீல் சொன்னதே நிஜமாயிற்று. செம்படவர்கள் உம்மைக் கரையில் இழுத்துப் போடாதிருந்தால், இத்தனை நேரம் ஆசாமி காலி! பிட்டுவய்யர் மண்டை உடைந்து உருளும்."

"கேஸ் என்ன ஆயிற்று!" என்று சிவசங்கரம் பிள்ளை கேட்டார்.

"என்னவாயிற்று! ஜயந்தான்! யாரோ ஒரு ஜில்லா ஜட்ஜுதான் பைத்தியக்காரனாயிருந்தால், ஹைகோர்ட்டு ஜட்ஜுகளும் அப்படி இருப்பார்களா, என்ன!"

## 6

சிவசங்கரம் பிள்ளை வீட்டில் அந்த வருஷம் தீபாவளி மிகவும் குதூகலமாகக் கொண்டாடப்பட்டது. கேஸ் ஜயித்துப் பத்து வேலி நிலமல்லவா கிடைத்து விட்டது!

ஆனால் சிவசங்கரம் பிள்ளை மனத்தில் மட்டும் அமைதியில்லை. கடலில் விழுந்து பிரக்ஞையற்றிருந்த சமயத்தில் அவர் அடைந்த அதிசயமான மனோலோக அநுபவங்கள் அவர் மனத்தை விட்டு அகலவில்லை. ஒருவேளை உண்மையிலேயே தனகோடி இன்னும் ஜீவித்திருக்கிறானோ? தன்னை நினைத்துக் கொண்டிருக்கிறானோ!

அன்று அவருக்கு ஒரு தபால் பார்ஸல் வந்தது. அதைப் பிரித்துப் பார்த்தபோது அவர் அடைந்த அதிசயத்துக்கு அளவே கிடையாது. ஆம்; அதில் அவர் திருச்சிராப்பள்ளியில் முப்பத்தைந்து வருஷத்துக்கு முன்னால் எடுத்துத் தனகோடிக்குக் கொடுத்த புகைப் படம் இருந்தது. அத்துடன் ஒரு கடிதமும் வைக்கப்பட்டிருந்தது.

"நான் இந்த உலகை விட்டுப் போவதற்கு முன் தங்களை ஒரு தடவை பார்க்க வேண்டுமென்று ஆசை கொண்டிருந்தேன். அந்த மனோரதம் நேற்று நிறைவேறி விட்டது. மாலை நேரத்தில் என்னை அறியாமல் தூக்கம் வந்து நான் தூங்கும்போது, கனவில் தங்களைக் கண்டேன்.

இன்னும் இரண்டொரு நாள்தான் நான் ஜீவித்திருப்பேன் என்று வைத்தியர்கள் சொல்லியிருக்கிறார்கள். என்னுடைய சொத்துக்களையெல்லாம் தர்மத்துக்கு எழுதி வைத்து, தங்களை டிரஸ்டியாக நியமித்திருக்கிறேன். தயவு செய்து தாங்கள் அதை ஏற்றுக் கொள்ள வேணும். தாங்கள் எனக்கு அளித்த தீபாவளிப் பரிசை இத்துடன் திருப்பி அனுப்பியிருக்கிறேன். என்னுடைய ஞாபகத்துக்காக அதை வைத்திருக்க வேணும்.

இப்படிக்கு,

தனகோடி."

இந்தக் கடிதம் சிவசங்கரம் பிள்ளைக்கு எத்தனை ஆச்சரியம் அளித்திருக்கும் என்று சொல்ல வேண்டியதில்லை. ஆனால், அக்கடிதத்தில் எழுதியிருந்ததைக் காட்டிலும் அவருக்கு அதிக ஆச்சரியம் அளித்தது ஒன்று இருந்தது. அது அந்தக் கடிதத்தின் கையெழுத்தேயாகும். ஏனெனில், அந்தக் கையெழுத்தில் இப்போது கொஞ்சம் நடுக்கம் காணப்பட்ட போதிலும், முப்பத்தைந்து வருஷத்துக்கு முன்னால் சிவசங்கரம் பிள்ளையின் தந்தைக்கு அவர் குமாரனைப் பற்றி எச்சரித்து எழுதப் பெற்ற கடிதத்தில் கண்ட கையெழுத்தும் இதே கையெழுத்துத்தான்!

---

1938ம் ஆண்டு ஆனந்த விகடன் தீபாவளி மலரில் வெளியானது.




# அன்னையின் அன்பு

[1938-ம் ஆண்டில் ஸ்ரீ தெ. கி. நித்தாரப்பன் — காலஞ் சென்ற 'தீபன்' — எழுதிய கதை. இது வரை எதிலும் வெளிவராதது.

அன்பு என்ற அற்புதமான சக்தி, என்னென்ன காரியங்களை யெல்லாம் எப்படி யெப்படிச் செய்து முடித்து விடுகிறது என்பதை நுட்பமான மனத் தத்துவத்தோடு விளக்குகிறது இந்தக் கதை. இக்கட்டான ஒரு விஷயத்தை ஆற்றலோடு கையாளும் விதத்தில் கத்தி முனையிலே நடந்து வெற்றி கண்டிருக்கிறார் 'தீபன்'. — ஆசிரியர்]

குருசாமி, ஒரு நாள் ராத்திரி சுமார் பத்து மணி இருக்கும், படுக்கையில் போய்ப் படுத்தான். வெகு நேரத்துக்குத் தூக்கமே வரவில்லை. ஏதோ ஒரு கவலை அவனுடைய மனத்தை அறுத்துக் கொண்டிருந்தது. இதுவரையும் அவனுடைய வாழ்க்கையில் இந்தமாதிரிக் கவலைக்குக் காரணமாயிருந்த சம்பவங்கள் எத்தனையோ நடந்திருக்கின்றன. அத்தனையும் ஒன்றன்பின் ஒன்றாக அவனுடைய ஞாபகத்துக்கு வந்தன. அவைகளைப் பற்றிய பல வேறு எண்ணங்கள் அவனுடைய உள்ளத்தில் ஒரு பெருஞ் சஞ்சலத்தை விளைவித்தன. இந்த எண்ணங்களை மனத்தை விட்டகற்ற அவன் எவ்வளவோ முயன்றும் முடியவில்லை. கடைசியாக, அவன் வீட்டை விட்டு எங்கேயாவது கொஞ்ச தூரம் நடந்து போய் விட்டு வந்தால் ஒரு வேளை மனம் நிம்மதியடையும், என்றெண்ணிக் கதவைச் சாத்திப் பூட்டி விட்டுப் புறப்பட்டு விட்டான்.

மணி பன்னிரண்டு இருக்கும். சந்திரன் கரு மேகங்களால் மறைக்கப்பட்டிருந்தது. நிலா வெளிச்சம் ரொம்பவும் மங்கலாக இருந்தது. குருசாமி, பிள்ளையார் கோவில் தெரு வழியே போய்க்கொண்டிருந்தான். தெருவில் இரண்டு பக்கத்திலுமுள்ள எல்லா வீடுகளும் சாத்தப் பட்டிருந்தன. பனிக்குப் பயந்து எல்லோரும் வீட்டுக்குள்ளேயே படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். வீட்டுக்குள்ளிருந்து சிலர் குறட்டை விடும் சப்தம் கேட்டது. நாலைந்து தெருக்களுக் கப்பால் எங்கிருந்தோ ஒரு நாய் குரைக்கும் சப்தமும் கேட்டது. மற்றப்படி அத்தெருவில்

தீபன்

நிசப்தம் குடிகொண்டிருந்தது. அன்றைக்குப் பார்க்க, ஊருக்குள் காற்றும் "சொட்டு"க்கூட கிடையாது. குருசாமி அடிமேலடி வைத்து நடந்து போய்க் கொண்டிருந்தான். அப்படிப் போகும் பொழுது தெரியாமல் அவன் கால் காய்ந்து போன ஒரு இலைச் சருகின் மேல் பட்டுவிட்டால் போதும், அவன் பயந்து விடுவான்— இலைச்சருகு அசங்கினதால் உண்டான அந்தச் சத்தம் வீட்டுக்குள் தூங்கிக் கொண்டிருப்பவர்களை எழுப்பி விடுமோ என்று.

அந்தத் தெரு பிள்ளையார் கோவிலுடன் முடிவடைகிறது. பிள்ளையார் கோவில் முக்கு திரும்பித் தெற்கே போனால் நடுத்தெரு என்று ஒரு சின்னத் தெரு இருக்கிறது. குருசாமி பிள்ளையார் கோவில் பக்கம் வந்ததும், பக்கத்துத் தெருவிலிருந்து ஒரு வீட்டுக் கதவு திறக்கப்படும் சத்தம் கேட்டது. அப்படியே பிள்ளையார் கோவிலில் நின்று கொண்டு எட்டிப் பார்த்தான். நடுத்தெருவில் மூன்றாவது வீட்டுக்கு முன் ஒரு பெண் உருவம் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தான். அந்தப் பெண் வீட்டுக் கதவைச் சாத்திப் பூட்டிவிட்டு, அக்கம் பக்கம் ஒரு தடவை பார்த்து விட்டு, அந்தத் தெரு வழியாகத் தெற்கு நோக்கி நடந்தாள்.



குருசாமிக்கு இதெல்லாம் ரொம்ப ஆச்சரியமாக இருந்தது. அவன் யோசித்தான். 'இது என்னடா இது! இந்நேரத்தில் ஒரு பெண் தன்னந் தனியாக வெளியில் புறப்பட்டுவிட்டாளே! என்ன துணிவு! சரி, இவள் எங்கு போகிறாள்? எதற்காகப் போகிறாள்? என்பதைக் கண்டுபிடித்து விட வேண்டியதுதான். ஒருவேளை போகும் வழியில் ஏதாவது ஆபத்து நேரிட்டாலும் அவளுக்கு உதவியாக இருக்கலாம் அல்லவா?' என்று எண்ணிக்கொண்டு அவன் பார்த்து விடாதபடி அவளைப் பின் தொடர்ந்து போனான்.

அவள் அநேக தெருக்களைக் கடந்து ஊருக்கு வெளியே போய் விட்டாள். ஒரு தடவை திரும்பிப் பார்த்துக் கொண்டாள். அப்பொழுது குருசாமி ஒரு மறைவிடத்தில் ஒளிந்து கொண்டான். பிற்பாடு அவள் சாலை வழியாகவே போனாள். அவளைப் பின் தொடர்ந்தே போனான் குருசாமி. சாலையையும் கடந்து அவள் ஆற்றுப் பாலத்தருகே வந்து விட்டாள். அங்கே கொஞ்ச நேரம் தாமதித்து நின்றாள். சுற்று முற்றும் ஒரு தடவை பார்த்து விட்டுப் பாலத்தின் மேல் வேகமாக நடக்கலானாள்.

ஆற்றில் புது வெள்ளம் பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருந்தது. இரு கரையும் பொங்கிப் போகிறது. மரங்களையும், வைக்கோல் போர்களையும் அடித்துக் கொண்டு போகிறது. பாலத்துக் கணவாய்கள் வழியாகத் தண்ணீர் அதி வேகமாகப் போகிறபடியால் பெரிய பெரிய சுழிகள் ஏற்பட்டு, "கொள கொள" என்று சத்தம் போட்டுக் கொண்டு போகிறது. அந்தச் சத்தம் கேட்பதற்குப் பயங்கரமாக இருக்கிறது. "உன்னைப் பிடித்து விழுங்கிவிடுவேன்" என்று பயமுறுத்துவது போலிருக்கிறது.

அவள் பாலத்தின் மத்தியில் கைப்பிடிச்சுவரோரமாக நின்று கொண்டு ஒரு தடவை சுற்று முற்றும் பார்த்தாள். அடுத்தவிநாடி ஆற்றில் ஏதோ "பொத்" தென்று விழுந்த சத்தம் கேட்டது. இதைக் கேட்டுக் குருசாமி திடுக்கிட்டு மறை விடத்தை விட்டு வெளியே வந்து அந்தப் பெண்ணைப் பார்த்து ஓடி வந்தான். குருசாமி வருவதைப் பார்த்ததும், அவள் திடுக்கிட்டு மூர்ச்சையாகிக் கீழே விழுந்து விட்டாள். குருசாமி அவள் பக்கம் ஓடி வந்து பார்த்தான். நல்ல வேளையாகக் கீழே விழுந்ததில் காயம் ஒன்றும் ஏற்படவில்லை. அப்படியே அவன் ஓடிப் போய் ஆற்றில் தன் மேல் துண்டை முக்கிக் கொண்டு வந்து அவள் முகத்தில் பிழிந்தான். பிழிந்து விட்டு, ஈரத் துணியால் அவள் முகத்தைத் துடைத்துக் கொண்டே இருந்தான். கொஞ்ச நேரத்தில் அவள் மூர்ச்சை தெளிந்து கண்ணைத் திறந்து பார்த்தாள். அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. கண்ணைக் கசக்கி விட்டு மறுபடியும் கண்ணை விழித்துப் பார்த்தாள். எதிரில் குருசாமி இருப்பதைப்பார்த்து, "நான் எங்கே இருக்கிறேன்? நீங்கள் யார்?" என்று கேட்டாள். அதற்குக் குருசாமி, "அதையெல்லாம் பிற்பாடு சாவகாசமாகச் சொல்லுகிறேன். முதலில் வீட்டுக்குப் போவோம் வாருங்கள். இந் நேரத்தில் இங்கே இருப்பது சரியல்ல. மெல்ல எழுந்திருங்கள்" என்று சொன்னான். அவள் வெகு கஷ்டப்பட்டு எழுந்து நின்றாள். நடப்பதற்குக் காலை ஒரு எட்டு எடுத்து வைத்தாள். அவ்வளவுதான். அதற்கு மேல் அவளால் நடக்க முடியவில்லை. அவளுடைய கால்கள் தள்ளாடின. குருசாமி அவளுடைய கால்களைத் தடவி விட்டான். அவள் ரொம்பவும் பலஹீனமாக இருந்ததால், நடப்பது கஷ்டந்தான்; கைத் தாங்கலில்லாமல் அவள் கீழே விழுந்து விடுவாள் என்று எண்ணி அவளுடைய இடுப்பில் கையைப் போட்டுக் கொண்டு மெல்லக் கூட்டிக் கொண்டு போனான். சுமார் இரண்டு, இரண்டரை மணிக்கு நல்ல வேளையாக ஒருவரும் பார்த்துவிடாமல் இருவரும் அவளுடைய வீடு வந்து சேர்ந்தார்கள்.

வீடு வந்து சேர்ந்ததும், அவள் ஒரு பாயின்மேல் உட்கார்ந்து கொண்டு சுவரில் சாய்ந்து கொண்டாள். குருசாமி அவளுக்கு எதிரில் உட்கார்ந்து கொண்டான். அவள் இன்னும் பலஹீனமாகவே இருந்தாள். நடந்து வந்ததினால் களைப்பாகவும் இருந்தது. கொஞ்ச நேரம் களைப்பாறின பிறகு தான் அவளால் நிமிர்ந்து உட்காரவே முடிந்தது. அடைத்துப் போன குரலில் அவள் குருசாமியுடன் பேச ஆரம்பித்தாள் :—

"ஐயா! நீங்கள் எனக்குச் செய்த பெருபகாரத்துக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?"

"அம்மா! யாரும் அந்தச் சமயத்தில் இந்த உதவியை உங்களுக்குச் செய்திருப்பார்கள். நான் அந்தச் சமயத்தில் அங்கே நின்று கொண்டிருக்கும்படி நேரிட்டதால் எனக்கு அந்த பாக்கியம் கிடைத்தது."

"ஐயா, உங்களுடைய நடத்தையையும், குணத்தையும், முகத்தையும் பார்த்த பிற்பாடு எனக்கு உங்கள் மேல் இல்லாத ஒரு பிரியம் ஏற்பட்டு விட்டது. உங்களைக் கையெடுத்துக் கும்பிடுவதில், ஏதோ ஒரு நல்ல காரியத்தைச் செய்துவிட்ட மாதிரி எனக்கு ஓர் உணர்ச்சி இருக்கிறது. உங்களை இன்றைக்குச் சந்தித்தது ஒரு பெரிய பாக்கியம் என்றே கருதுகிறேன். இன்றைக்கு நான் ஒரு பாபச் செயலைச் செய்திருக்கிறேன். அதற்குத் தக்க காரணங்கள் உண்டு. என்ன காரணங்கள் இருந்தென்ன? பாபச் செயல், பாபச் செயல்தான். என்னுடைய குற்றத்தை உங்களைப் போன்ற நல்ல மனிதர் ஒருவரிடம் ஒப்புக்கொண்டு விட்டால் என் மனம் கொஞ்சம் ஆறுதலடையும் என்று எண்ணுகிறேன். இன்னும் பாபச் செயலுக்கு இந்த லோகத்தில் இது ஒன்றுதான் பிராயச்சித்தம்."

"அம்மா நீங்கள் சொல்லுவது ஒன்றும் எனக்கு விளங்கவில்லையே!

நீங்கள் அப்படி என்ன குற்றத்தைச் செய்து விட்டீர்கள்?"

"உங்களுக்கு அப்படித்தான் தோன்றும். நான் திடீரென்று மூர்ச்சையாகி விழுந்து விட்டேனே, ஏன் தெரியுமா?"

"தெரியாதே, ஏன்?"

"நான் மூர்ச்சையாவதற்கு முன் ஆற்றில் ஏதோ விழுந்ததுபோல் சத்தம் கேட்டதல்லவா? விழுந்தது என்னதென்று நினைக்கிறீர்கள்? அது ஒரு குழந்தை."

"குழந்தையா! அடாடா! தவறி விழுந்து விட்டதோ?"

"இல்லை இல்லை. நான்தான் போட்டு விட்டேன்."

"என்ன, வேணுமென்றா? என்னால் நம்பவே முடியவில்லையே! அது யாருடைய குழந்தை?"

"அது என்னுடைய அருமைக் குழந்தைதான்" என்றாள்.

"ஆணா? பெண்ணா?"

"ஆண் குழந்தைதான்."

"ஆற்றில் போட்டபோது குழந்தை உயிருடன் இருந்ததா? அல்லது..."

"உயிருடன்தான் இருந்தது. அதனால்தான் ஒரு பெரிய பாபச் செயலைச் செய்து விட்டதாகச் சொன்னேன்."

"அப்படி ஒரு குழந்தையை ஈவு இரக்கமில்லாது ஆற்றுக்குப் பலிகொடுக்க உங்களுக்கு மனசு எப்படித்தான் வந்ததோ? இன்னும், இந்தக் கொலை பாதகத்தைச் செய்ய என்ன அவசியம் அம்மா ஏற்பட்டது?"

"என்னுடைய குழந்தை உயிரோடு இருந்து இந்த லோகத்தில் வாழ்ந்திருப்பதைவிட அது உலகம் தெரிவதற்கு முன்பே இறந்துபோவது மேல் என்று நான் எண்ணினேன்."

"அப்படி என்னக் காரணமென்ன?"

"அவன் இந்த லோகத்தில் வாழ்ந்திருப்பானாகில், அவனை ஒருவரும் மதிக்க மாட்டார்கள். அவனை எல்லோரும் ரொம்பக் கேவலமாக எண்ணுவார்கள், பேசுவார்கள், நடத்துவார்கள். என் வயிற்றில் பிறந்த பிள்ளை என்ற ஒரு காரணம் பற்றியே அவன் தினம் தினம் அநேகவித அவமானங்களுக்கு ஆளாவான். அதையெல்லாம் சகித்துக் கொண்டு உயிருடன் இருப்பதைக் காட்டிலும் அவன் இறந்து போவதே மேல் அல்லவா?"

"என்ன காரணத்தை உத்தேசித்தும் ஒரு தாய்க்கு இந்தமாதிரி மனப்பான்மை இருக்கக் கூடுமென்று என்னால் நம்பவே முடியவில்லை."

'என்னாலேயே அது சாத்தியமென்று எண்ண முடியவில்லையே! இந்தக் காரியத்தை நான் எப்படிச் செய்து விட்டேன் என்று எண்ண எண்ண எனக்கு ரொம்ப ஆச்சரியமாக இருக்கிறது. எனக்கு இதில் இஷ்டமே இல்லையென்று சொல்லவும் வேண்டுமோ? முழு மனதுடன் இதை ஒரு தாயால் செய்ய முடியுமா? இந்தக் குழந்தையை ஆற்றில் போடுவதற்கு முன் என் மனம் பட்டபாடு அந்த ஆண்டவனுக்குத்தான் தெரியும். அப்படியிருந்தும், நான் அந்தப் பாதகச் செயலைச் செய்து விட்டதற்குத் தக்க காரணம் உண்டு.

"எனக்கு ஒரு பையன் இருந்தான். பதினேழு வயது வரைக்கும் இருந்தான். அவன் போய் மூன்று வருஷந் தானாச்சு. அதி புத்திசாலி. பார்வைக்கு வெகு அழகாக இருப்பான். யாரிடத்தும் அன்பாகப் பேசுவான். சங்கீதத்தில் நல்ல ஞானம். சதா புஸ்தகமும் கையுமாகத்தான் இருப்பான். தமிழில் உள்ள கட்டுரைகள், கதைகள், கவிதைகள் எல்லாவற்றையும் எனக்கு வாசித்துக் காண்பிப்பான். நானும் பொழுது போவது தெரியாதபடி அவைகளைக் கேட்டுக் கொண்டிருப்பேன். அவன் இருக்கிற வரைக்கும் எனக்கு யாதொரு கவலையும் இல்லாமல் இருந்தது.




"இப்படியிருக்கையில், ஒரு நாள் ராத்திரி அவன் மழையில் நனைந்து கொண்டு வீட்டுக்கு வந்தான். ஈர உடைகளைக் களைந்து விட்டுப் புது உடைகளை உடுத்திக் கொண்டு, படுக்கையில் போய்ப் படுத்தான். சாப்பாடு வேண்டாமென்று சொல்லி விட்டு, குளிர் நடுக்குகிறதென்று போர்வையை இழுத்துப் போட்டுக் கொண்டு தூங்கி விட்டான்.

"மறுநாள் விடியற் காலம் வழக்கம் போல் பலகாரம் சாப்பிடுவதற்காக அவனை எழுப்பினேன். 'என்ன அம்மா?' என்று கண்ணைத் திறந்து பார்த்தான். ஆனால், அவனால் படுக்கையை விட்டு எழுந்திருக்க முடியவில்லை. அவன் உடம்பைத் தொட்டுப் பார்த்தேன். கொஞ்சம் சூடாயிருந்தது. சரி, காய்ச்சல்போலிருக்

கிறது. சாப்பிடாமல் படுத்துக் கொள்வதே நல்லதென்று எண்ணிச் சும்மா இருந்து விட்டேன். இரண்டு நாள் அவனுக்கு உடம்பு கொஞ்சம் குணமாயிருந்தது. மூன்றாவது நாள் திடீரென்று உயிர்போய் விட்டது. எப்படித் தான் போச்சோ! அது எனக்கு இன்னும் மர்மமாகத்தான் இருக்கிறது. சாதாரணக் காய்ச்சல்தான். அந்தக் காய்ச்சலில் உயிர் போய் விடும் என்று நான் கனவிலும் எண்ணவில்லை. ஆகையினால் அப்படித் திடீரென்று உயிர் போய் விட்டதற்கு வேறு காரணமும் இருந்திருக்க வேண்டும். அவன் இறப்பதற்குக் கொஞ்ச நேரத்துக்கு முன் 'அம்மா' என்று கூப்பிட்டான். பக்கத்தில் போனேன். அவன் என்னிடம் பின்வருமாறு பேசினான்:

"'அம்மா, இன்னும் கொஞ்ச நேரத்தில் என்னுடைய உயிர் போய்விடுமென்று எனக்கு நிச்சயமாகி விட்டது. கடைசியாக என்னைப்பெற்று வளர்த்த உன்னிடம் சில வார்த்தைகள் சொல்லி விட்டுச் செத்தால்தான் என்னுடைய ஆத்மாவுக்குச் சாந்தி ஏற்படும். நீ இதுகாறும் என்னைச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்திருக்கிறாய். என்னை ஒரு பொருட்டாக எண்ணி எத்தனையோ கஷ்டங்களுக் கிடையில் எனக்கு வேண்டிய சௌகரியங்களெல்லாம் செய்து கொடுத்திருக்கிறாய். என்னையே உன்னுடைய உயிராக மதித்து வந்திருக்கிறாய். இதற்கெல்லாம் நான் உனக்கு நன்றி யுள்ளவனாக இருக்கிறேன் என்று மனப்பூர்வமாகச் சொல்ல, என்னால் முடியவில்லையே! ஏனென்றால், நீ என்னை வளர்த்தது அவ்வளவும் வீண். இந்த உலகத்தில் என்னைச் சீண்டுவார் கிடையாது. கேவலமாக எண்ணுபவர்களோ ஏராளமாக உண்டு. உன்னுடைய அளவிலா அன்பு காரணமாகத்தான் நான் இவ்வளவு நாளும் உயிரை வைத்துக் கொண்டிருந்தது. இல்லாவிட்டால், உலகம் தெரிந்த அன்றைக்கே உயிரை விட்டிருப்பேன். இப்பொழுதாவது உயிர் போகப் போகிறதே என்பதில் எனக்கிருக்கும் சந்தோஷம்—அடாடா!-இதுவரைக்கும் என்னுடைய வாழ்க்கையில் இவ்வளவு சந்தோஷத்தை அனுபவித்ததே கிடையாது. இந்த உலக வாழ்க்கையின் மேல் என் மனதில் அவ்வளவு வெறுப்பு வேரூன்றி வளர்ந்து கொண்டே வந்திருக்கிறது. இதற்குக் காரணம் இந்த உலகம் என்னைப் பார்த்து ஏளனமாகச் சிரிப்பதுதான். அப்படி ஏன் சிரிக்கிறது தெரியுமா அம்மா, உனக்கு? எல்லாம் உன் வயிற்றில் பிறந்த துர்ப் பாக்கியத்தினால்தான். இதை நான் உனக்கு விளக்க வேண்டியதில்லை. என்னைப் பெற்று விட்டதுதான் இந்த உலகத்தில் நீ செய்து விட்ட ஒரு பெரிய குற்றம். இது விஷயம், கடைசியாக உன்னிடத்தில் ஒன்று கேட்டுக் கொள்ளுகிறேன். இனிமேலாவது நீ இந்தக் குற்றத்தைச் செய்யக் கூடாது என்பதுதான். அதாவது, இன்னொரு குழந்தையைப் பெற்று இந்த உலகத்தில் விட்டுவிடக் கூடாது என்பது தான். இதுதான் என்னுடைய கடைசி வேண்டுகோள். இதை நீ ஞாபகம் வைத்துக் கொள்ளுவாயா அம்மா?' என்று சொல்லிவிட்டு, இன்னும் என்னமோ சொல்ல வாயெடுத்தானோ இல்லையோ ஜீவன் போய் விட்டது.

"நான் மானமுள்ள பெண்ணென்றால் அப்பொழுதே உயிரை விட்டிருக்க வேண்டும். எனக்கேது மானம்? தற்கொலை செய்து கொள்ளுவதற்கோ துணிவில்லை. அவனுடைய உயிர் போனமாதிரி எனக்கும் தானாக உயிர் போய் விட்டால் எவ்வளவோ சௌகரியமா யிருக்கும். ஆனால் அப்படி சுலபமாக உயிர் போய் விடுவதற்குப் புண்ணியம் செய்திருக்க வேண்டாமா? அவன் புண்ணியம் செய்திருக்கிறான். அவன் உயிர் நினைத்த மாத்திரத்தில் போய் விட்டது. நான் புண்ணியம் செய்யவில்லை. உயிர் இருந்துகொண்டு என்னை வதைத்துக் கொண்டிருக்கிறது. இன்னும் அவன் கடைசி வேண்டுகோளுக்கு இணங்கியாவது என்னால் நடக்க முடிந்ததா? அதுவும் இல்லை. நான் ஒரு கெட்ட மூதேவி... என் தலை விதி......ஒரு பிள்ளையைப் பெற்று வைத்தேன். அதுவும், கண்ணும் மூக்கும் இல்லாத குழந்தையா, ஆற்றில் கொண்டு போய்ச் சனியன் தொலைந்ததென்று போட்டுவிட? மூக்கும் கண்ணும் பிடித்து வைத்தது போலிருந்தது. அடாடா! என்ன அழகு! மூத்த பையனின் கடைசி வேண்டுகோள் ஞாபகத்துக்கு வந்தது. வந்துமென்ன? பெற்ற மனம் என்ன செய்யும்? அதைக் கொல்ல மனம் வருமா? கொல்லக் கூடாதென்றே முதலில் தீர்மானித்து விட்டேன். பிற்பாடு வெகு நேரம் யோசித்ததில், அதை இந்த லோகத்தில் உயிருடன் வளர விட்டு விடுவது அதைப் பெற்றதை விடப் பெரிய குற்றமாகும் என்ற முடிவுக்கு வந்தேன். இந்த முடிவின் பிரகாரமே குழந்தையை ஆற்றில் போட்டு விட்டேன். இது ஒரு பெரிய பாவந்தான். சிசுக் கொலை தான். ஆனால், இதைத் தவிர வேறு எனக்கு என்னமாவது வழி யிருக்கிறதா, ஐயா? நீங்களே சொல்லுங்கள்."

"நான் என்னத்தைச் சொல்ல! எனக்கு இப்பொழுது எல்லாம் விளங்கி விட்டது. இந்தக் குழந்தையை நீங்கள் ஆற்றில் போட்டு விட்டது ரொம்பவும் சரி. அதன் மூலம் நீங்கள் ஒரு புண்ணிய காரியத்தைச் செய்து விட்டீர்கள் என்றே நான் எண்ணுகிறேன். இறந்து போய் விட்டானே, உங்களுடைய மூத்த மகன், அவனுடைய கடைசி வேண்டுகோளின்படி நடந்ததில் நீங்கள் உங்கள் கடமையைச் செய்து விட்டீர்கள். அவன் இது விஷயம் என்ன சொன்னானோ அது முற்றிலும் சரி. நானும் அவன் மாதிரியே அபிப்பிராயப் படுகிறேன்."

"ஐயா, நீங்கள் சொல்லுவதெல்லாம் எனக்கு ரொம்ப ஆச்சரியமாக இருக்கிறது. இது விஷயமாக இந்த லோகத்தில் என்மேல் ஒருவரும் அனுதாபப்பட மாட்டார்கள் என்றே எண்ணி யிருந்தேன். ஆனால் இப்பொழுது நீங்கள் என்மேல் இப்படி அனுதாபம் கொள்ளுவது எனக்கு அளவிலா ஆச்சரியத்தைக் கொடுக்கிறது. இப்பொழுது உங்களைப் பற்றித் தெரிய வேண்டுமென்று எனக்கு ரொம்ப ஆவலா யிருக்கிறது. நீங்கள் யாரென்று எனக்குச் சொல்லலாமா?"

"நானும், உங்களைப் போல் ஒருத்தி வயிற்றில் பிறந்தவன்தான். ஆனால், உங்களுக்கு உங்கள் குழந்தைமேல் எவ்வளவு அன்பு இருக்கிறதோ அவ்வளவு அன்பு என்னைப் பெற்ற தாய்க்கு என்மேல் இருந்திருந்தால்—" இருந்திருந்தால் என்ன என்று சொல்லி முடிப்பதற்குள் குருசாமி கண்களினின்றும் தாரை தாரையாய்க் கண்ணீர் பெருக ஆரம்பித்தது. அப்படியே அங்கிருந்து புறப்பட்டு விட்டான்.

சூரியன் உதயமானான். புல் நுனியிலும், புஷ்பங்களிலுமுள்ள பனித் துளிகளைப் பருகினான். ஆனால், குருசாமி கண்களிலுள்ள கண்ணீர்த் துளிகளைப் பருக அந்த சூரியனால் முடியாதா?

**"அறத்துக்(கு) அன்புசார் பென்ப—அறியார்
மறத்துக்கும் அஃதே துணை."**



ஒவ்வொரு காரியமும் தங்கள்
உழைப்பின் வெகுமதி

சிறந்ததையே நாடிப் பெறுங்கள்



வா, உக்காரு !
இந்தா, வெத்திலே போட்டுக்கோ !
"அசோகா" பாக்கு !
ஆறு போட்டுக்கிரேம்மா !



உளம் கனிந்த

## தீபாவளி நல் வாழ்த்துக்கள்

★ உழைப்பு
★ கவர்ச்சி
★ சிக்கனம்

ஒருங்கே அமையப் பெற்றவை

## ஸ்பைடர் பனியன்கள்
&
## பெண்கள் பாடிகள்

## SPIDER KNITTING CO.
TIRUPPUR

'Grams: "SPIDER" 'Phone: 160



## வாழி காவேரி!

மலைச் சாரலில் மகள் காவேரியை அழைத்துக்கொண்டே நடந்தார் அகத்திய முனிவர்.

"கண்மணி, எத்தனை அழகான மலை இந்தத் தமிழ் நாட்டு மலை! இங்கேயுள்ள மரங்களும், செடிகளும், கொடிகளும் எத்தனை சௌந்தர்யமாகக் கோலம் தருகின்றன, பாரம்மா!" என்று மலையின் இயற்கை வளப்பத்தை யெல்லாம் அருமை மகளுக்கு அன்போடு காட்டினார் முத்தமிழ் முனிவர். என்ன நேர்ந்தது?

'இந்த மலையையும் இதன் சௌந்தர்யச் செடி கொடிகளையும், மரங்களையும் இப்படியே தழுவி அணைத்துக் கொண்டால் எப்படி யிருக்கும்!' என்று மனம் உருகினாள் காவேரி. அவ்வளவுதான்!

தமிழ் நாட்டுத் தமிழ் மலையிலே, தமிழ் முனிவருடைய தமிழ்க் குமரி, காவேரி வெள்ளம் தமிழ் நதியாக ஓடினாள்! மலைகளையும் செடி கொடிகளையும் ஒரு தாயின் அன்போடு அணைத்துக் கொண்டு ஓடினாள்! அந்த அன்பு தமிழ் மக்களை யெல்லாம் நிரந்தரமாக அணைத்துப் பாதுகாத்து வருகிறது.

"நடந்தாய் வாழி காவேரி!" என்று அவளைத் துதித்தது சிலப்பதிகாரம்!



## மாய வடிவம்!

திருமாலின் திருமேனியைக் கண்டு கண்டு ஆனந்திக்கும் உள்ளத்துக்கு அந்த மேனியின் அழகு எத்தனையோ வண்ண வண்ணக் காட்சிகளை நினைவூட்டுகிறது. அந்தக் கருநீல மேனியைப் பார்க்கும்போதெல்லாம் கருநீல மேகமும், கருநிற மழையும் கண்முன்னே நிற்கின்றன. கருநீலமான குன்றம் தெரிகிறது. காயாமலர் பூத்த வனமே கண்முன்னே வந்து நிற்கிறது. கழுநீர் பூத்த தடாகம் தெரிகிறது, பக்தர்கள் கண் முன்னே!

"நீலமேனி, ஐயோ, நிறைகொண்டது என் நெஞ்சினையே" என்று மனம் உருகும் ஆழ்வாரின் பாடலோடு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டிய இன்னொரு பழம் பாடல்:

நீல மழைமுகிலோ நீலமணிக் குன்றமோ
கோலம் நிறைந்த குரைகடலோ — சோலையிளம்
காயா வனமோ கழுநீரோ கண்ணமங்கை
மாயா உனது வடிவம்!

'மாயன்' என்ற சொல்லுக்கு இணங்க, மாய வர்ணமான கரு நீல வர்ணத்திலே காட்சி தரும் திருமாலையும், மேலே கண்ட பாடலின் மயக்கக் காட்சிகளையும் ஒருங்கே சித்திரித்திருக்கிறார் ஓவியர் எஸ். ராஜம்.




## அஞ்சன விழிகள்!

நந்திவர்ம பல்லவனுக்குச் சொந்தமான ஊர் சென்னை மயிலாப்பூர். அங்கே ரத வீதியில் நடந்து செல்கிறாள் அந்த நங்கை, மாலை நேரத்தில்! எப்படிச் செல்கிறாளாம்?

செவ்வரி படர்ந்த நீண்ட கண்களில் அஞ்சனம் என்ற அந்த விஷம மை இருக்கிறதே, அதை நன்றாகத் தீட்டியிருக்கிறாள்! கூந்தல் சுருண்டு சுருண்டு கிடக்கிறது. பார்க்கிற இளைஞனுடைய மனம் என்ன பாடுபடும்!

இந்த நங்கைக்கு இத்தனை திருக் கோலங்களும் செய்து ரதவீதியிலே நடக்கும்படி விட்டு விட்டார்களே, அவளுடைய அன்னையர்கள்! அடடா! இந்த உலகத்தையே வென்று விடுவதற்கல்லவா இப்படி ஒரு சூழ்ச்சி செய்து விட்டார்கள் போலிருக்கிறது. அந்தத் தாய்மார்களுக்குத்தான் இந்த உலகத்தினிடம் அப்படி என்ன பகை?

அரியில் நெடுநாட்டத்து அஞ்சனம் முழுதூட்டி
புரிகுழல் மடமானைப் போதர விட்டாரால்
சுரபதி எனும்நந்தி தொன்மயி லாப்பூரில்
உருவுடை இவள்தாயர்க்கு உலகொடும் பகையுண்டோ? — நந்திக் கலம்பகம்



## அசையாத மணி!

குலோத்துங்க சோழனுடைய அரண்மனையிலே ஆராய்ச்சி மணி தொங்குகிறது. ஏதாவது அநீதி நடந்து விட்டால், அநீதிக்கு உள்ளானவர்—எத்தனை பெரியவராக, எத்தனை சாமானியராக இருந்தாலும்—அரண்மனை வாயிலுக்குச் சென்று மணியை அசைத்து விடலாம்! அரசனின் காதுக்கே அநீதி எட்டி விடும். இப்படிப்பட்ட குடியாட்சியின் நீதி முறையைக் கண்டவர்கள் தமிழ் அரசர்கள்.

ஆனால் குலோத்துங்கனுடைய ஆட்சியில் இந்த ஆராய்ச்சி மணி அசைவதே இல்லையாம்! அதற்கு அவசியமான அநீதி ஏதும் நடந்தால்தானே? அந்த தர்ம ராஜ்யத்தில் முறையீடுகளுக்கே அவசியமில்லாதபடி அறமுறை ஆட்சி செய்தது.

ஆடும் கடைமணி நாஅசை யாமல் அகிலமெங்கும்
நீடும் குடையைத் தரித்த பிரான்—

என்று குலோத்துங்கனுடைய வெண் கொற்றக் குடையைப் பாட ஆரம்பித்தார் ஒட்டக் கூத்தர். பாடலை முடிப்பதற்கு முன்னே அவருக்குப் பின்னால் இன்னொரு குரல் கேட்டது. அந்தக் குரல் பாடலின் மற்ற வரிகளைத் தொடர்ந்து முடிக்கிறது!

"—என்றே நித்தம் நித்தம்
பாடும் புலவர் புகழ்ஒட்டக் கூத்தன் பதாம் புயத்தைச்
சூடும் குலோத்துங்க சோழன்என் றேஎன்னைச் சொல்லுவரே!

என்று கவிராசரின் பதாம்புயத்தைச் சூடிக் கொண்டது யாரென்று நினைக்கிறீர்கள்? புவிராசன் குலோத்துங்கனே!

# மேலும் இப்பொழுது

# பியட் புதிய 1100 டிலக்ஸ்

## மிக சுறு சுறுப்புள்ளது-அதிக சௌகரியங்கள்-சிக்கனமானது

முன்னேறின தோற்றம்—

ஜாஸ்தியான க்ரோமியம் அலங்கரிப்புகள்

அதிக வசதிகள்—

ஸ்டாண்டர்டு எக்யூப்மென்டாக ட்யூப் இல்லாத டயர்கள். பின் பார்வை கண்ணாடியில் விளக்கு. இரண்டு வெய்யல் காப்புகள். பின் வீட்டுகளுக்கு கைபிடிகள்.

மலிவானது—

எக்ஸ் பாக்டரி ரூ. 9,438/- எல்லா வரிகளும் நீங்கலாக.



உங்களுடைய வியாபாரி
யிடம் இன்றே பாருங்கள்

முன்னேற்றத்துடன் தயாரிப்பவர்கள்

**தி**
**பிரிமியர்**
**ஆட்டோமொபைல்ஸ்**
**லிமிடெட்**

ஆக்ரா ரோடு, குர்லா,
பம்பாய்

*விற்பனையாளர் :*

டி. வி. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ், லிட்.
"டி. வி. எஸ். பில்டிங்", மேற்கு வெளி வீதி, மதுரை

சுந்தரம் மோட்டார்ஸ் லிட்., மவுண்ட் ரோடு, மதராஸ்

SSTA'S-PAL-198-TAM

# சென்னைக் கடற்கரை

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னே ஒரு மாலைப் பொழுதில் சென்னைக் கடற்கரையிலே "காற்று வாங்க"க் காதல் மனைவியோடு வந்தார் ஒரு கவிஞர். கண்ணுக்கு அடங்காத வெண் மணற் பரப்பையும், எண்ணுக்கு அடங்காத மக்களின் சிறப்பையும், அடுத்தடுத்து நித்திலங்களை அலைக்கையால் அள்ளி வீசி நில மகளின் அடி பணிந்த நெடுங் கடலைக் கண்டு இன்புற்றனர் இருவரும்.

அப்போது வெள்ளைப் பரங்கியர் கூட்டம் ஒன்று அவர் இருந்த இடம் நோக்கி வந்தது. காற்சட்டையும் மேற் சட்டையும் போட்டுக் கொண்டு, வாயிலே சுருட்டுக் கட்டைகளை மாட்டிக் கொண்டு, உடம்பை ஆட்டிக் கொண்டு வந்த கூட்டத்தைக் கண்ட கவிஞர் ஒரு பாட்டுக்கட்டி விட்டார்.

"வெள்ளைக் காரர்கள் பற்பலர்
மிக்க உல் லாசக்
கள்ள ருந்திய படைஞர்கள்
களிநுற உலவ
எள்ளி னும்பிறர் அதைச்சிறி
தேனும் என் னுயிலைக்
கொள்ளி வாய்ப்புகைச் சுருட்டினர்
சிலர் அவண் குழும"

என்ற பாட்டு கவிஞரின் மனைவிக்கு மிக்க மகிழ்ச்சி அளித்தது.

**மனைவி:** இப்படிக் கள்ளுண்டு தள்ளாடித் திரியும் வெள்ளையர்களைத்தான் காலாடி என்று சென்னைவாசிகள் சொல்லுகிறார்களோ?

**கவிஞர்:** சென்னையைச் சார்ந்த திருவொற்றியூரிலே காலாடிப் பேட்டை ஒன்று இருக்கிறது, தெரியுமோ?

**மனைவி:** அங்கு குடிகார வெள்ளையர் தாம் குடியிருக்கிறார்களோ?

**கவிஞர்:** முற்றத் துறந்த பட்டினத்து அடிகளின் தெய்வ ஒளி விளங்கும் திருவொற்றி



பூரிலே வெள்ளைக்காரர் தங்காட்டு வார்களா? நெசவுத் தொழில் செய்யும் சாலியர்களே அங்கே குடியிருக்கிறார்கள். ஆனால் அவர்களைக் குடியிருத்தியவன் ஒரு வெள்ளைக்காரக் கவர்னர்! காலெட் என்பது அவன் பெயர். பேர் ஆசை பிடித்த அவ்வெள்ளையன் சென்னையிலே தன் பேரை நிலைநாட்ட ஆசைப்பட்டான். திருத்தியூரில் ஒரு பேட்டையை உண்டாக்கினான். "காலெட்பேட்டை" என்று அதற்குப் பெயரிட்டான். அதைக் 'காலாடிப் பேட்டை' யாக்கி விட்டனர் அவ்வூர் வாசிகள்.

**மயிலை:** வெள்ளையர்கள் மீது சென்னை மக்களுக்கு உள்ள வெறுப்பு இதனால் வெளிப்படுகிறது. தாமில்டன் என்ற ஆங்கிலேயன் பெயர் தாங்கிய வாராவதியை அம்பட்டன் வாராவதியாக்கி, அதை ஆங்கிலத்திலும் 'பார்பர்ஸ் பிரிட்ஜ்' என்று மொழிபெயர்த்துச் சென்னை வாசிகள் வழங்கி வருகின்றார்கள் என்று அடிக்கடி நீங்கள் சொல்லுவீர்களே!

**கவிஞர்:** ஆம்; வெள்ளையர்கள் நமக்கும் நம் மொழிக்கும் செய்துள்ள தீமைகளுக்கு இதுவும் செய்யலாம், இன்னமும் செய்யலாம். திருவல்லிக்கேணியை 'டிரிப்பிளிக்கேன்' என்று சிதைத்து விட்டார்களே! 'வெள்ளையர் இட்டது சட்டம்' எனக் கருதி நம்மவர்களும் அச்சொல்லைப் பணிந்து ஏற்றுக் கொண்டார்களே!

**மயிலை:** திருவல்லிக்கேணி 'கல்விக் களஞ்சியம்' என்று சொல்லப்படுகிறதே! அங்கே 'டிரிப்பிளிக்கேன்' என்ற பாழான பெயர் பரவியிருப்பது ஒரு விந்தைதான்.

**கவிஞர்:** திருவல்லிக்கேணி என்பதில் உள்ள 'கேணி'யின் அருமையைச் சிறிது கருத்தூன்றிப் பார்! மயிலாப்பூரில் வாழ்ந்த தெய்வப் புலமைத் திருவள்ளுவர்,

"தொட்டனைத்து ஊறும் மணற் கேணி"



என்று அழகாகப் பாடினார். அந்தக் காலத்தில் இந்தக் கடற்கரையில் திருவள்ளுவரும் உலாவி யிருப்பார்; அழகிய தாமரைக் குளமாகிய திருவல்லிக் கேணியைக் கண்டிருப்பார். அவர் கண்ட அல்லிக் கேணியின் அருகே எழுந்தது பெருமாள் கோவில். அத்திருக் கோவிலைப் பற்றிய பழம்பாட்டு ஒன்றைப் பாடுகின்றேன், கேள்!

"வந்துதைந்த வெண்திரைகள்
செம்பவளம் வெண்முத்தம்
அந்தி விளக்கும்
அணிவிளக்காம் — எந்தை
ஒருவல்லித் தாமரையாள்
ஒன்றியசீர் மார்பன்
திருவல்லிக் கேணியான்
சென்று."

என்று அருமையாகப் பாடினார் அருட்கவிஞர். இந்த ஊர்ப் பெயரின் அழகை முற்றும் அழித்து விட்டார்களே வெள்ளையர்கள் என்று எண்ணும் பொழுது என் உள்ளம் எரிகின்றது.

**மயிலை:** வெள்ளைக்காரர்களுள் நல்லவர் ஒருவரும் இல்லையா?

**கவிஞர்:** நல்லவர்களே இல்லை என்று சொல்லிவிடலாமா? வில்லியம் மில்லர் என்பவர் மிகவும் நல்லவர். பல்லாயிரம் மாணவர்களுக்குக் கல்வி யறிவு ஊட்டியவர்.



வில்லியம் மில்லர்

"உண்மைவழி காட்டியுல
குய்விக்க வந்தவனை
அன்பினூர் உள்ளத்தில்
அன்பு விதைப்பவனைப்
பன்மலர யாம்ஆடிப்
பாடுகம்வா நெஞ்சே"

என்று அப்பெருமகனை மனமாரப் பாடியுள்ளேன் நான். செய்ந்நன்றி மறவாத சென்னை மக்கள் அவர் பணிசெய்த கிறிஸ்தவக் கல்லூரி (Christian College) யின் முன்னே அவரது உருவச் சிலையை நிறுவியுள்ளார்கள். உயர் நீதி மன்றத்துக்கும் கிறிஸ்தவக் கல்லூரிக்கும் நடுவே நிற்கும் அவ்வுருவச்சிலை வாழையடி வாழையெனக் கல்வி பயில வரும் இளைஞர்களை நோக்கி "மாணவர்களே! கல்லூரியில் கற்கத் தகுந்த நூல்களைக் கற்ற பின் நிலைவழுவா நெறி முறையில் நீங்கள் வாழ்தல் வேண்டும்" என்று அறிவுரை கூறுவது போல் தோன்றுகின்றது.

**மயிலை:** நீங்கள் சொல்லிய நீதி மன்றத்தின் உச்சியில்தானே "லைட் ஹவுஸ்" இருக்கிறது?

**கவிஞர்:** மாதே! ஆங்கில மோகம் உன்னையும் விட்டபாடில்லையே! கடற்கரை விளக்கைக் குறிப்பதற்குத் தமிழ்ச் சொல் இல்லையா? இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே இக்காட்டிலே துறைமுகங்களுண்டு; கப்பல்களுக்குத் துறை காட்டும் விளக்குகளும் உண்டு. 'கலங்கரை விளக்கு' என்று சிலப்பதிகாரம் கூறுவதை மறந்து விட்டாயா? அருமையான தமிழ்ச் சொல் இருக்க ஆங்கிலத்தை எடுத்தாளுதல் அறிவீனம் அல்லவா? கரும்பிருக்க இரும்பைக் கடிப்பார் உண்டோ? 'கலங்கரை விளக்கு' என்ற சொல்லின் பொருளைச் சிறிது சிந்தித்துப் பார்! கடலில் மிதந்து வரும் கப்பல்களைத் துறைமுகத் திற்கு அழைக்கும் விளக்கு என்ற அழகான பொருள் உடையதன்றோ அச்சொல்.

"அளக்க ரிற்சில
ஆர்ந்துவங் கம்பலம்
துளக்க முற்றுத்
துயரடை யாவணம்
அளக்க ரும்புக
ழாளர் கலங்கரை
விளக்க மென்னவுள்
நிட்டனர் மேலைநாள்"

இத்துணை அழகான பெயர் மழுங்கி மறைந்து விடலாமா?

**மனைவி:** அப்படியானால் 'ஹார்பர்' என்ற ஆங்கிலச் சொல்லையும் விட்டொழித்து, துறைமுகம் என்று சொல்லலாமே!

**கவிஞர்:** அப்படிச் சொல்லுவது தான் அறிவுடைமைக்கு அழகு. தமிழ் நாட்டிலே தமிழ் ஆட்சி புரியும் காலம் வரும். அப்போது ஆங்கிலச் சொற்கள் தாமாகவே நீங்கி விடும். இந்நாட்டில் மகமதியர் ஆதிக்கம் பெற்றிருந்த போது சென்னைத் துறைமுகத்திற்கு "பந்தர்" என்று பெயரிட்டார்கள். பந்தர் என்பது துறைமுகத்தைக் குறிக்கும் பாரசீகச் சொல். அவர்கள் இட்ட பெயரை நம் முன்னோர் ஏற்றுக் கொண்டனர். பச்சையப்பன் கல்லூரிக்கு அருகே 'பந்தர் தெரு' என்று ஒரு தெரு இருப்பது உனக்குத் தெரியுமல்லவா? அத் தெருப் பெயரிலே தான் இப்போது பந்தர் ஒட்டிக் கொண்டிருக்கிறது. அப்படியே ஹார்பர் என்ற ஆங்கிலப் பெயர் வெள்ளைக்காரர்களோடு வெளியேறி விடும். சென்னைத் துறைமுகத்தின் அமைப்பைப் பார்! கடலின் உள்ளே இரு கைகளையும் நீட்டிச் சென்னையாகிய அன்னை கப்பல்களை வரவேற்பது போல் தோன்றுகின்றதல்லவா? மணிக் குழந்தைகளாகிய மரக்கலங்களை அன்புடன் அணைக்கும் இத் துறைமுகத்தின் அழகு என் மனத்தை அள்ளுகின்றது.

"சென்னைமகள் அருள்கூர்ந்து
செவ்விமுகம் மலர்ந்தொளிரத்
தன்இரண்டு கைகளையும்
தாய்குழவி அணைப்பதுபோல்
முன்இரையும் கடல்நோக்கி
மொய்த்துவரும் நிரைவிலக்கி
நன்னர்வளைந்தே கலங்கள்
நயந்தணைத்தல் காணுதியால்"

**மனைவி:** பாட்டு அழகாய் அமைந்து விட்டதே! கடற்கரையிலே நல்ல கவிதை பிறக்கும் என்னும் உண்மையை இன்று கண்டு கொண்டேன்.

**கவிஞர்:** கவிதைக்குக் கடற்கரை மட்டும் போதாது.

"பாட்டுக் கலந்திடவே-அங்கே ஒரு
பத்தினிப் பெண் வேணும்"

இப் பாட்டைக் கேட்டு நாணித் தலை கவிழ்ந்த மனைவியோடு வீட்டை நோக்கிப் புறப்பட்டார் கவிஞர்.









# சந்திர புஷ்பகம்




ஆயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்று ஒன்பதாம் வருஷம். ஜனவரி முதல் தேதி இரவு 8-55. அடையாற்றில் கடற்கரையோரத்தில் ஒரு சிறிய பங்களாவில் டாக்டர் சந்திரசேகரன், தன் மனைவி இந்துமதி, மகன் பாலசந்திரனுடன் ரேடியோ கேட்டுக் கொண்டிருந்தான். பாட்டு இனிமையாக இருந்தபோதிலும், மாட்டியிருந்த கடிகாரத்தின் மீதே அவன் கவனம் ஆழ்ந்திருந்தது. ஒவ்வோர் விநாடியும் நீடியதாகத் தோன்றிற்று. இதைக் கண்ட இந்துமதி முறுவலுடன் 'ஒன்பது மணி தானாக வரும், அவசரப்பட்டு என்ன பிரயோசனம்! அப்படி என்ன பிரமாத சமாசாரம் இருக்கப் போகிறது!" என்றாள்.

"ஏதாவது சந்திரலோக யாத்திரையைப் பற்றிய செய்தியிருக்கும்" என்று சொல்லிச் சிரித்தான் பாலு.

"ஏதோ இவர்கள் எல்லோருக்கும் பைத்தியம் பிடித்திருக்கிறது. இந்த பூமியில் சரியாக வாழ வழியில்லை. சந்திரனுக்குப் போய் என்ன செய்யப் போகிறார்கள்! அங்கே நம்மைப் போல் மனிதர்கள் இருந்தாலும், இப் பிரம்மாண்டமான முயற்சியை ஒருவாறு ஏற்கலாம். இதே விஞ்ஞானிகள் சந்திரன் மீது எவ்வித உயிருமில்லை, செடி கொடிகள்கூட இருக்க முடியாது. பகலில் தாங்க முடியாத வெயில், இரவில் சகிக்க முடியாத குளிர், நீரில்லை, காற்றில்லை, செத்த உலகமென்கிறார்கள். எப்படியோ போகட்டும். நமக்கு என்ன அதைப் பற்றி!' என்றாள் இந்துமதி.

"அவசரப்பட்டு அப்படி யெல்லாம் சொல்லாதே" என்றான் அவள் கணவன்.

ஒன்பது மணி அடித்தது. அகில இந்திய ரேடியோவில் தினசரிச் செய்தி ஒலிபரப்பு ஆரம்பித்தது. 'முக்கியமான அறிவிப்பு. மன்னாத்;!நிலிருந்து சந்திரலோக யாத்திரை கோஷ்டியார் ஒரு மகத்தான அறிக்கை விடுத்திருக்கிறார்கள். அடுத்த ஜனவரி மாதம் முதல் தேதி, அதாவது இருபத்தி ஓராவது நூற்றாண்டு முதல் நாள் காலை எட்டு மணிக்குச் சந்திரலோக யாத்திரை கோஷ்டி புறப்படும். வான விடுதியில் சந்திர புஷ்பகம் தயாராகி விட்டது. முதல் கோஷ்டியில் ஐம்பது நாடுகளிலிருந்து ஐம்பது விஞ்ஞானிகள் பிரயாணம் செய்வார்கள். இதற்காக ஐம்பதினாயிரம் விண்ணப்பங்கள் வந்தன. ஆழ்ந்த ஆலோசனைக்குப் பின் இவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அமெரிக்கக் கண்டத்திற்கு இருபது பிரதிநிதிகள், ருஷ்யாவைத் தவிர இதர ஐரோப்பிய கண்டத்துக்குப் பத்து, ருஷ்யாவுக்கு ஐந்து, ஆசியாவுக்கு எட்டு, ஆப்பிரிக்காவுக்கு நாலு, ஆஸ்திரேலியாவுக்கு நாலு பிரதிநிதிகள் வீதம் பங்கிட்டுக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதில் இந்தியப் பிரதிநிதி டாக்டர் சந்திரசேகரன், பூதல விஞ்ஞானி, அடையாறு, சென்னை' என்று கேட்டவுடன் 'ஐயோ' என்று அலறி இந்துமதி தரையில் விழுந்தாள். அவள் அழுவதைக் கண்டு பன்னிரண்டு வயது பாலுவும் அழத் தொடங்கி விட்டான்.

ரேடியோவை மூடி விட்டு, சந்திர சேகரன் இந்துவை எழுப்பி அவள் கண்ணீரைத் துடைத்தான்.

"உனக்கென்ன புத்தி இல்லையா! ரேடியோவில் என்ன கூறினார்கள்! ஐம்பதினாயிரம் பேர்களில் ஐம்பதே பேர்கள். இந்தியாவில் நான் ஒருவனே. இவ்வளவு பெரிய கௌரவம்

லெப்டினன்ட் கவர்னர் கனம் க. சந்தானம்

யமக்குக் கிடைத்ததற்கு, ஊரை யெல்லாம் அழைத்து விருந்து செய்வதை விட்டு, இப்படி அசடுமாதிரி அழலாமா?"

இப்படிச் சொல்லிமுடிப்பதற்குள் டெலிபோன் அடித்தது. சென்னை கவர்னர் சந்திரசேகரனைப் பாராட்டினார். அதன் பின் ஒரு மணி நேரம் மந்திரிகள், நீதிபதிகள், சர்வகலாசாலை ஆசிரியர்கள், இந்துமதியின் தோழிகள், பானுவின் சகாக்கள் அனைவரும் டெலிபோனில் தங்களது மகிழ்ச்சியைத் தெரிவித்தனர். அது முடிவதற்குள், வீட்டு வாசலில் மோட்டார் சத்தம் கேட்டது. ஒன்றன் பின் ஒன்றாக ஐந்து வண்டிகள் வந்து நின்றன. அவிலிருந்து பத்திரிகை நிருபர்கள் புகைப்படக் கருவிகளுடன் கூட்டமாக வந்து வாசல் கதவைத் தட்டினார்கள்.

பானு அவசரமாகத் தனது தாயாரை "நீ கண்ணீரைத் துடைத்து முகம் கழுவிக் கொண்டு வா" என்றான்.

பத்திரிகைப் பேர்வழிகள் போன பின் மீண்டும் இந்துமதி அழ ஆரம்பித்தாள். பேசிப் பயனில்லை என்று சந்திரசேகரன் மௌனம் சாதித்தான். பானுவோ இப்பொழுது தந்தையின் பக்கம் சேர்ந்து கொண்டான். டெலிபோன் போற்றுதல்களையும், பத்திரிகை நிருபர்களையும் கண்டு தன்னுடைய தந்தையிடம் அவனுக்குப் பெருமையும், பக்தியும் பெருகிற்று.

"உலகமெல்லாம் சந்தோஷப்படும் பொழுது, நீ மட்டும் ஏன் அழுகிறாய்!" என்றான், அன்னையிடம்.

"உன் தந்தையைப் பலி கொடுத்து நீ புகழைக் கட்டிக் கொள். எனக்கு அது வேண்டாம்" என்று கடுமையாகக் கோபித்தாள் இந்துமதி.

அடுத்த பத்து நாட்கள் எப்படிப் போயின என்று அவனுக்குச் சரியாகத் தெரியாது. கணக்கற்ற விருந்துகள், ஆடிக் கூட்டங்கள் பாரதத்தின் மூலை முடுக்குகளிலிருந்து போற்றுதல் தந்திகள் தமிழ் நாட்டிலிருந்தே ஆயிரம் கடிதங்களும், தந்திகளும் கிடைத்தன. போதை மயக்கத்திலிருப்பவன் போல் காலம் தள்ளினான்.

கடைசியில் சந்திரசேகரன் மங்களத் தீவிற்கு ஆகாய விமானத்தில் செல்லும் பொழுது அவள் உபவாசமிருந்து ஓயாமல் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தாள். விமான நிலையத்திற்குப் போக முடியவில்லை. பானு மட்டும் போய் அனுப்பினான். பெரும் கூட்டம். அதில் ஒவ்வொருவரும் தாமே சந்திர யாத்திரை செல்வதாகப் பாவித்துப் பரவசமடைந்தனர்.



ஆகாய விமானம் தோன்றியது முதற் கொண்டு சந்திர யாத்திரையைப் பற்றிச் சில நிபுணர்கள் ஆலோசித்துக் கொண்டிருந்தனர். ஆனால் 1955-ம் வருஷத்தில் பிரஸிடென்ட் ஐஸன்ஹவர் ஒரு செயற்கை கிரகம் செய்ய நிச்சயம் செய்து பிரகடனம் செய்தபிறகே இதற்குக் காரியாம்சத்தில் வேலை ஆரம்பமாயிற்று. பூமியிலிருந்து 120 மைல் தூரத்தில் ஒரு சிறிய கிரகம் பூமியைச் சுற்றுவதற்காக இயந்திர நிபுணர்கள் திட்டம் போட்டனர். இது சுமார் மணிக்கு இருபதாயிரம் மைல் வேகத்தில் பூமி சுழலும் திசையில் சுழல வேண்டும்; சிறிய நக்ஷத்திரம் போல் தோன்றும். இரண்டு மணிக்கு ஒருதரம் பூமியைச் சுற்றி வரும். அதில் ரேடியோக் கருவிகள் வைத்து அதன் மூலம் வான யாத்திரையில் ஏற்படக் கூடிய பல கஷ்டங்களைப் பற்றி அறிந்து அதற்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்ய உத்தேசித்தனர்.

முதல் கிரகம் 1958-ல் விடப்பட்டது. அது குறிப்பிட்ட இடம் போய்ச் சேர்ந்தது. ஆனால் பூமியைச் சுற்றுவதற்குப் பதிலாக எங்கேயோ போய் விட்டது. அதன்பின் வருஷந்தோறும் ஒரு கிரகம் மேலே அனுப்பினார்கள். பத்து வருஷத்துக்குப் பின், ஆயிரம் கோடி ரூபாய் செலவழித்த பிறகு, ஒரு கிரகம் ஐந்து நாட்கள் பூமியை வலம் செய்து மறைந்தது. இதனால், விஞ்ஞானிகள் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தனர். அடுத்தபடியாக ஓர் ஸ்திரமான வான விடுதி ஏற்படுத்த நிச்சயித்தனர். நுட்பமான கணக்குகள் போட்டுப் பார்த்ததில் பூமியிலிருந்து ஆயிரத்து எழுபத்தைந்து மைலில் இதை ஸ்தாபிப்பதில் பல சௌகரியங்கள் இருக்கிறதென்று கண்டனர்.

பூமியிலிருந்து நேரில் சந்திரனுக்கு யாத்திரை செய்ய விமானம் செல்வது சாத்தியமல்ல. அதில் முக்கால் பாகம் கனம் முதல் 60 மைல் போவதற்காகவே. இப் பாகம் தாண்டுவதும் கஷ்டம். இங்குதான் வாயு மண்டலத்தின் எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டும். அதற்காக மூன்று வெடிகுண்டுகள் கொண்ட விமானம் தயார் செய்ய ஆரம்பித்தனர். முதல்குண்டு வெடித்ததும் மணிக்கு 6256 மைல் வீதம் 25 மைல் கொண்டு போய்ச் சேர்க்கும். இரண்டாவது வெடி குண்டு, 40 மைல் அதற்கு மேல் எடுத்துச் செல்லும். பிறகு, அங்கப் பிரயாசை யின்றி விமானம் செல்லும். 1075 மைலில் வான விடுதி ஸ்தாபிக்கப் பட்டு அது பூமி சுற்றும் திசையில் 1846 மைல் வேகத்தில் செல்லுமாயின், பூமியின் ஆகர்ஷண சக்தி அதனைப் பாதிக்காது. அதற்குள் இருப்பவர்கள் பூமியில் தரையின்மேல் இருப்பது போலக் கவலையின்றி வசிப்பார்கள். வாயு மண்டலத்துக்கப்பால் இருப்பதால், சுவாசம் விடுவதற்குப் பிராணவாயுப் பையை உபயோகிப்பதின் மூலம்தான் சாத்தியமாகும். எப்பொழுதும் வான கவசத்திற்குள்ளே தான் அவர்கள் வசிக்க வேண்டும்.

முதல் கிரகத்தைக் காட்டிலும் வானவிடுதி அமைப்பதில் மிகுந்த கஷ்டங்கள் ஏற்பட்டன. அதற்கென்று மங்களத் தீவில் ஒரு கேந்திரம் ஏற்படுத்திவிட்டு வருஷம் இரண்டாயிரம் மூவாயிரம் கோடி ரூபாய்கள் செலவிடப்பட்டன. இம் முயற்சியில் பல்லாயிரம் விமானிகளும், விஞ்ஞானிகளும் உயிர் துறந்தனர். ஆனால் உலகின் உற்சாகமோ ஓயாமல் வளர்ந்து வந்தது. ஏழை நாடுகள் கூட தம் மக்கள் பட்டினி கிடப்பதைக் கவனியாமல் இம் மானிடக் கனவைப் பூர்த்திசெய்ய ஏராளமான நன்கொடை வழங்கின.

முடிவில் 1995ம் வருஷத்தில் வான விடுதி ஸ்தாபிக்கப் பட்டது. அதில் நூறு விமானத் தொழிலாளர்கள் வசித்து சந்திர புஷ்பகத்தை அமைக்கலானார்கள். அது 1999-ம் வருஷம் பூர்த்தியாயிற்று.

சந்திரசேகரன் மங்களத் தீவு சேர்ந்து சந்திர யாத்திரைக்காக ஒரு வருஷப் பயிற்சியில் ஆழ்ந்தான். ஐம்பது விஞ்ஞானிகள் ஏற்கனவே பயிற்சி முடித்து விமானவிடுதி சென்று வந்தவர்கள். ஒரு மாதத்துக்குப் பின் சந்திரசேகரன் தன் அருமை மனைவிக்கு எழுதிய நீண்ட கடிதத்தில் அதன் விவரங்களைக் குறிப்பிட்டான்.

'என் இந்துவுக்கும் பானுவுக்கும் அளவற்ற அன்பு. நீங்கள் சுகமாக இருக்கிறீர்கள் என்று நம்புகிறேன்.

எங்கள் பயிற்சியை விளம்பரம் செய்தால் உலகம் திடுக்கிடும். பலர் பரிகாசம் செய்வார்கள். நமது புராணங்களில் முனிவர் கடும் தவம் செய்ததாகக் கேட்டிருக்கிறோம், அல்லவா! அதை இங்கே பிரத்தியக்ஷமாக அப்பியாசம்செய்கிறோம். முதல் மாதத்தில்சாராயம், மாமிசம், காப்பி, டீ, புகையிலை முதலிய எவ்வித கொழுப்பு, மயக்கப் பொருள்களுமில்லாமல் பழக வேண்டும். அதன் பின் சமையலில்லாமல் தானிய, காய்கறிச் சத்துக்கள் அடங்கிய மாத்திரைகளை உண்டு ஆரோக்கியத்துடன் இருக்க வேண்டும். முதல் மாதத்திலேயே ஐந்து நபர்கள் முடியாதென்று விலகி விட்டனர். அவர்களுக்கும் பதி

லாக வேறு ஐந்து பேர்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டனர்.

வான கவசத்திற்குள்ளேயே வசிக்க வேண்டும். பிராண வாயுப் புட்டிகளிலிருந்து குழாய்கள் மூக்கில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. சீதோஷ்ணத்திற்காகக் கவசத்திற்குள் சிறிய மின்சார இயந்திரங்கள் கம்பிகள் உடம்பு முழுதும் சுற்றப் பட்டிருக்கின்றன.

நித்தியக் கடன்கள் கழிப்பதற்குச் செய்யப்பட்டிருக்கும் ஏற்பாடு மிகவும் சிக்கலானது. வர்ணிக்க முடியாது.

வாயுமண்டலத்திற்கப்பால் சத்தமில்லை. நம் காதருகில் ஒரு சிறிய வாயுமண்டலம் ஏற்படுத்தி ரேடியோ மூலம் சத்தம் உண்டாக்க வேண்டும். ஒருவருக்கொருவர் இதன் மூலம்தான் பேசவேண்டும். கை, கால் அசைப்பதுகூட மிகவும் பிரயாசையான காரியங்கள்.

மொத்தத்தில் இப் பயிற்சியில் நான் மற்றவர்களைவிட நன்றாகச் சமாளித்துக் கொண்டு வருகிறேன்.

நீங்கள் இருவரும் தைரியமாக இருக்க வேண்டும். சந்திரனை அடைந்து திரும்பி வந்து உங்களைப் பார்க்கிறேன்.

அன்புடன்,

சந்திரசேகரன்

இக்கடிதத்தை அனுப்பும்பொழுது அதன் பலனைச் சந்திரசேகரன் எதிர்பார்த்திருக்க மாட்டான். இந்துமதிக்கு ஒரு யோசனை தோன்றிற்று. சந்திர யாத்திரை செய்யத் தன் கணவன் தவம் செய்தால், அவன் உயிருடன் திரும்பி வர ஏன் தான் தவம் செய்யக் கூடாது! தினமும் ஒரு தரம் பாலும், பழமும் புசித்துக் கடவுளைத் தியானம் செய்து, பக்தி நூல்களைப் படித்தும் கணவனை நினைத்தும் காலம் கடத்தலானாள்.

பானுவோ வான சாஸ்திரத்தில் விருப்பம் கொண்டு சந்திரனைப் பற்றிய விசேஷமான எல்லாப் புத்தகங்களையும் படித்துப் படங்களையும் கவனிக்கலானான்.

சந்திரலோகயாத்திரை நெருங்கவே எல்லா நாடுகளிலும் மனிதரின் மனமெல்லாம் அதனிலேயே ஆழ்ந்தது. தமது வேறு அலுவல்களைக் கவனிக்கவில்லை. இரண்டு நாள் முன்னதாகவே உலகெங்கும் மூன்று வாரம் விடுமுறை என்று விளம்பரம் செய்யப்பட்டது. சந்திரனைப் பற்றிய தகவல்கள், வான விடுதிக்குச் செல்லும் வெடி விமானத்தின் வர்ணனைகள், புஷ்பகத்தின் விவரங்கள், யாத்ரீகர்களின் படங்கள் இவைகளால் பத்திரிகைகள் நிரம்பியிருந்தன. ரேடியோவிலும் இதேபேச்சுத்தான்.

ஆண்டு இரண்டாயிரம், ஜனவரி முதல் தேதிக்கு மங்களத் தீவிலிருந்து விமானம் கிளம்பியது. கோவில்கள், மடங்கள், நகர மண்டபங்கள் எல்லாவற்றிலும் மணிகள் ஒலித்தன. பிரார்த்தனைகள் நடந்தன.

முதல் வெடிகுண்டின் வேகத்தால் பதினைந்து மைல் தூரம் விமானம் சென்று விட்டதென்று அறிந்ததும், எங்கும் அடங்கா மகிழ்ச்சி பரவிற்று. அடுத்த இரண்டு கட்டங்களும் தாண்டிப் பதினைந்து நிமிஷங்களில் யாத்ரீகர்கள் வான விடுதிசேர்ந்தனர். முன்பழகியவர்கள் தவிர மீதிப் பேர்கள் மயக்கத்தில் வைக்கப்பட்டிருந்ததால் குண்டுகளின் அதிர்ச்சியை அவர்களால் உணர முடியவில்லை.

வான விடுதியில் ஒரு நாள் தங்கிப் புஷ்பகத்தில் விரைந்தனர். 239,000 மைல் தூரத்திலுள்ள சந்திரனுக்குப் போய்ச் சேர ஐந்து நாட்கள் பிடிக்கும். ஆனால் வழியில் அதிகக் கஷ்டமில்லை. சந்திரனை அணுகும் பொழுதுதான் அபாயம். அதன் ஆகர்ஷண சக்தி பூமியினுடையதைக் காட்டிலும் அரைக்கால் பாகமாகவிருந்த போதிலும், காற்றில்லாத வெட்ட வெளியிலிருந்து சந்திர மண்டலத்தருகில் வந்ததும் உடலும் எல்லாச் சாமான்களும் பெரும் பாரமாகத் தோன்றும்.

மூன்று புஷ்பக விமானங்கள் சேர்ந்து புறப்பட்டன. ஒன்றில் நாற்பது பிரயாணிகள். மற்ற இரண்டிலும், விஞ்ஞானக் கருவிகள், விமானம் செலுத்தும் என்ஜின், கூடாரம், உணவு முதலிய சாமான்கள் நிறைந்திருந்தன. புஷ்பக விமானம் ஓட்டுவதற்கு மட்டும் ஐந்து பேர்கள் ஒவ்வொன்றிலும் இருந்தனர்.



புஷ்பக விமானங்கள் புறப்பட்டு முதல் நாள் நல்ல தகவல்களே வந்து கொண்டிருந்தன. கணக்குப்படியே அவை சென்று கொண்டிருந்தன. யாத்திரை கோஷ்டியார் ஐந்து நிமிஷத்துக் கொருதரம் பூமிக்கு ரேடியோச் செய்தி அனுப்பினார்கள். அதனை வாங்கி வானொலி நிலயங்கள் எங்கும் பரப்பி வந்தன.

இரண்டாவது தினம், சாமான்களின் புஷ்பகத்திலிருந்து அபாய அறிவிப்பு வந்தது. தன் பாதையிலிருந்து சற்று விலகி விட்டதாகவும், என்ஜின்களில் கோளாறு ஏற்பட்டதாகவும் தகவல் கிடைத்தது. மங்களத்தீவிலிருந்து அதற்கு என்ன பரிகாரம் செய்வதென்று ரேடியோச் செய்திகள் அனுப்பினார்கள். ஆனால் சிறிது நேரத்துக்குப் பின் அந்த விமானத்திலிருந்து செய்திப் போக்குவரத்து நின்று விட்டது. அமெரிக்காவிலிருக்கும் பெரும் வான ஆராய்ச்சிக் கூடத்திலிருந்து விமானம் எரிந்து சாம்பலாகி விட்டதாக மிகுந்த துக்கத்துடன் அறிவித்தனர்.

மூன்றாம் நாள் இரண்டாவது சாமான்கள் - விமானமும் எரிந்து போயிற்று.

அதன் பின் எல்லோருக்கும் ஒரே கவலை. பிரயாணிகள் - விமானம் சென்று கொண்டிருந்தது. தகவலும் தவறாமல் வந்து கொண்டிருந்தது. ஆனால் அவர்கள் திரும்பி வர வழியில்லை. சந்திரன் மீதும் வசிக்க முடியாது. அதற்கு வேண்டிய சாதனங்கள் எல்லாம் விமானங்களோடு எரிந்து போய் விட்டன.

ஆனால், யாத்திரை கோஷ்டிக்கு இது தெரியாது. சற்றுத் தாமதமாக இதர புஷ்பகங்கள் வருவதாக எண்ணிக் கவலை யற்றிருந்தனர். நான்கு நாளாகி விட்டது. புஷ்பகம் சந்திரனை அணுக ஆரம்பித்தது. ஆனால் நாற்பது பிரயாணிகளில் இருபது பேர்கள் மூச்சடைத்து இறந்து விட்டனர்.

அடுத்த ஆறு மணி நேரத்தில் மீதியிருந்தவர்களில் பத்து விஞ்ஞானிகள் மாண்டு விட்டனர்.

சந்திரனுக்கு இரண்டு மணி யாத்திரைதான் பாக்கி. மங்களத் தீவிலிருந்து புஷ்பகத்தைத் திரும்பி வந்து விடுமாறு கட்டளையிட்டனர். திரும்பும் யந்திரம் கெட்டுவிட்டதென்று பதில் கிடைத்தது. அதன் பிறகு செய்திகள் நின்று விட்டன.

மீதி உயிருடனிருந்த பத்து விஞ்ஞானிகளும் சந்திரன்மீது இறங்கினார்களா, முன்னதாகவே மாண்டனரா என்ற தகவல் இல்லை. அவர்களுக்குள் சந்திரசேகரனும் ஒருவன்.

சந்திரன் மீது பத்திரமாக இறங்கியிருந்தாலும், பல நாட்கள் பிழைத்திருக்க முடியாது. அவர்களையும் போனவர்களின் கணக்கில் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று கூறியது மங்களத்தீவின் அறிக்கை.

"இந்த விபத்து எதிர்பார்த்ததே. இதனால் நாம் அதைரிய மடையவில்லை. புதிய புஷ்பகங்கள் தயார் செய்ய ஆரம்பித்து விட்டோம். அடுத்த மூன்று வருஷங்களில் தயாராகி விடும்" என்று தெரிவித்தனர்.

இந்துமதிக்கு மட்டும் சந்திரசேகரன் சந்திரன்மீது எப்படியோ ஜீவித்திருப்பதாகவே நம்பிக்கை. அப்படியே கனவு கண்டாள்.

தானும் தந்தையைப் போலவே சந்திர மண்டல யாத்திரை செய்ய வேண்டுமென்பது பானுவின் பேராசை.

சந்திரனுக்கு அடுத்தது வெள்ளி! அது சந்திரனைவிட சுமார் நூறு மடங்கு தூரத்தில், அதாவது இரண்டு கோடி மைலுக்கப்பால் இருக்கிறது. சூரியனுடைய தூரம் ஒன்பது கோடி மைலுக்குமேல். மிகவும் அருகிலிருக்கும் நக்ஷத்திரம் சூரியனைவிட ஆயிரம் மடங்கு தூரத்தில் இருக்கிறது. சந்திரன் ஒளிக் கணக்கில் 1¼ நொடி (செகண்டு) தூரம்! சூரியன் எட்டு நிமிஷம். நக்ஷத்திரங்களோ நான்கு வருஷத்திலிருந்து பல்லாயிர வருஷங்கள் தூரம். இந்த நெடிய தூரத்தை வெல்லுவது நமது கற்பனைக்கு அப்பாலாகத் தோன்றலாம். ஆனால் செய்கையில் மிகவும் மகத்தானது. மனித அறிவு இயற்கை சக்திகளை வென்று விட்டதற்கு முடிவான அறிகுறியாகும்!




# மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்.

போன்: 250 (5 லைன்) : மதுரை : தந்தி: "ஹார்வி"



சகல நெசவாளர்களும் பெரிதும் விரும்பும் சிறந்த நூல் களை பல்வேறு ரகங்களில் தயாரிக்கும் பிரபல ஸ்தாபனம்

○●○

5,00,000 நூற்கும் கதிர்கள் : நெ. 80 வரை நூல்கள்

○●○

மில்கள்: மதுரை : தூத்துக்குடி : அம்பாசமுத்திரம்

○●○

கைத்தறி, இயந்திரத்தறி, பின்னல் தறிகளுக்கான சகலவிதமான நூல்கள்

○●○

<u>விசேஷ ரகங்கள்:</u> கயிறுகள், விழுதுகள், இத்தான்கள், நாடாக்கள் முதலியவைகளுக்கான விசேஷ நூல்கள்-தையல் நூல் - முறுக்கேற்றிய திரித்த சரடுகள் முதலியன.

○●○



# புனலூர் பேப்பர் மில்ஸ் லிமிடெட்

புனலூர் (திருவாங்கூர்-கொச்சி ராஜ்யம்)

போன்: 15 :: தந்தி: பேப்பர்மில்ஸ்

கிரீம்லெய்ட், போஸ்டர், லெட்ஜர், மனில்லா, ரொப்டு, பிரவுன், மாட்ச், பிரிண்டிங் முதலிய சகல விதமான காகிதங்கள் தயாரிக்கும் சிறந்த ஸ்தாபனம்





# பிரகாசமுள்ள வெண்ணிறப்பற்கள் மட்டுமல்ல அத்துடன் ஆரோக்கியமான ஈறுகளும்!

'போர்ஹான்ஸ்' மட்டுமே உங்கள் ஈறுகளை ஆரோக்கியத்துடனும் பற்களை தூய வெண்மையாயும் வைக்கும். ஈறுகள் சம்பந்தப்பட்ட நோய்களின் தொல்லையிலிருந்து உங்களைப் பாதுகாக்கத் தக்க மருந்துப் பொருள்களடங்கிய பற்பசை இது ஒன்றே. ஈறுகளுக்காகவே Dr. ஆர். ஜே. போர்ஹான்ஸ் டி. டி. எஸ். அவர்களால் பரிபக்குவப்படுத்திய பற்பசை இதுவே. ஆகையால் 'போர்ஹான்ஸ்' கொண்டு காலையிலும் மாலையிலும் உங்கள் பற்களை தேய்த்து பிரகாசமுள்ள வெண்ணிறப்பற்களும் ஆரோக்கியமான ஈறுகளுடையவரெனப் பெருமைப்படுங்கள்.




உங்கள் ஈறுகளில் கொஞ்சமேனும் ரத்தம் கசிந்தால் ஈறுகளில் பெரும் கோளாறு ஏற்படுவதற்கு அறிகுறியாகும். உங்கள் ஈறுகளை பிரதி காலையிலும் இரவிலும் 'போர்ஹான்ஸ்' கொண்டு தேய்க்கவும். அவைகள் விரைவில் குணமடையும்.




மெத்தெனவிருக்கும் ஈறுகளுக்கு உடன் கவனித்தல் வேண்டும். 'போர்ஹான்ஸ்' உபயோகிக்க உடனே துடங்குங்கள். நாள் தோறும் காலையிலும் இரவிலும் உபயோகித்து உங்கள் ஈறுகளை கெட்டியான ஆரோக்கிய நிலைக்கு கொண்டு வரவும்.




வீக்கமடைந்து கூசும் ஈறுகளை அப்படியே விட்டு விடலாகாது. காலையிலும் இரவிலும் அவைகளை 'போர்ஹான்ஸ்' கொண்டு மெதுவாகத் தேய்க்கவும். உங்கள் ஈறுகள் அதி விரைவில் ஆரோக்கியமுள்ளதாயும் செக்கச் செவேலெனமாறிவிடும்.

ஆர்.ஜே.போர்ஹான்
டி. டி. எஸ்.





# உள்ளம் தெளிந்தது



ஆனந்தி

ஸ்ரீவிலாஸ் காப்பி ஹோட்டலில் ஐந்தாறு கல்லூரி மாணவர்கள் உட்கார்ந்து சிற்றுண்டி சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். உண்மையில் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்களா அல்லது பேசிக் கொண்டிருந்தார்களா என்பதுதான் புரியவில்லை. ஒரே சப்தமாக இருந்தது. அவர்களுடைய பேச்சை மிக சுவாரஸ்யமாக ரஸித்துக் கொண்டே ஒரு ஸர்வர் நின்றான்.

"ஏன்டா! மணி! நேற்று பத்திரிகையைப் பார்த்தாயாடா! ஒரு கான்ஸ்டலேஷன் பிளேன் விழுந்து நொறுங்கி விட்டதாமே!"

"பாவம்! இருபது பேருக்கு மேல் இருந்தார்களாம். ஒருவரைக் கூடக் காப்பாற்ற முடியவில்லையாமே!" என்றான் மணி.

"இருந்தாலும் இந்த ஏரோப்ளேனிலிருந்து விழுந்து சாவது ரொம்பப் பயங்கரம்" என்றான் முதலில் பேசிய ஸ்ரீதரன்.

"போடா! நீ வெறும் தொடை நடுங்கி. எங்கே விழுந்து செத்தால் என்ன! எப்படியும் ஒருநாள் செத்துப் போய்த்தானே ஆகவேண்டும்!"—இது சேகர்.

"நீ மகா வேதாந்தி! அவ்வளவு தைரியமிருந்தால் போய் விமானம் ஓட்டக் கற்றுக் கொள்ளேன். நிறையச் சம்பளம் கொடுக்கிறார்களாம். படித்து விட்டு, வேலை கிடைக்காமல் வீட்டில் ஈ ஓட்ட வேண்டாம்" என்று சுந்தரம் கூறினான்.

"ஆமாம்! எப்போதும் உயரப் பறந்து கொண்டே இருக்கலாம். மிக உயர்ந்த உத்தியோகம்தான்!"

"நான் சேரமாட்டேனென்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா! எங்கப்பா என்னை அனுப்ப மாட்டார். ஒரே பிள்ளையாக இருப்பது எவ்வளவு கஷ்டம் தெரியுமா!" என்றான் சேகர்.

"ஏய்! நீ பொய் சொல்லாதே. உங்கப்பா ஒன்றும் அப்படிப் பயந்தவர் இல்லை. உன்னுடைய 'பிரண்ட்' போகக் கூடாது என்று கண்ணீர் விடுகிறாள். இல்லையா!" என்று கேட்டான் ஸ்ரீதரன்.

எல்லா மாணவர்களும் கலகலவென்று சிரித்தார்கள்.

இவர்கள், உட்கார்ந்திருந்த மேஜைக்கு அடுத்த மேஜையில் ஒருவர் உட்கார்ந்திருந்தார். நடுத்தர வயதுடைய மனிதர். பார்ப்பதற்கு ஆஜானுபாகுவாய் இருந்தார். அவரை இந்த மாணவர்கள் ஒருவரும் கவனிக்கவில்லை. ஆனால் அவர் இவர்களுடைய பேச்சைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார்.

"ஒன்று செய், அப்பனே! அவளுக்கும் எப்படியாவது 'ஏர் ஹோஸ்டஸ்' வேலை வாங்கிக் கொடுத்து விடு. பிறகு கணவனும் மனைவியும் வானளாவக் காதல் புரிந்து கொண்டே இருக்கலாம்."

"போடா! அப்படியெல்லாம் உளறாதே" என்றான் சேகர்.

"இது கிடக்கட்டும். சூ என் லாய் சென்ற ஏரோப்ளேனைக் கவிழ்க்கச் சதி செய்தார்களாமே. அதைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்!" என்று கேட்டான் ஸ்ரீதரன்.

டான். ஒரு நிமிஷம் மேலேயே பார்த்துக் கொண்டிருந்தான்.

பிறகு அவள் தலைவலி மாத்திரையைக் குமாரின் கையில் கொடுத்து விட்டுத் தண்ணீரும் கொடுத்தபோது அவளுடைய கைகள் நடுங்குவதைக் குமார் கவனித்தான்.

"உனக்கு உடம்பு சரியில்லையா மைதிலி!" என்று கேட்டான்.

மைதிலி அவனை ஒரு தடவை ஏறிட்டுப் பார்த்தாள். அவளுடைய கண்களில் கண்ணீர் குளமாகத் தேங்கி யிருந்தது. குமாரின் நெஞ்சை அது என்னவோ செய்தது.

"மைதிலி! இன்று வேலை முடிந்த பிறகு நாம் சேர்ந்து சாப்பிடப் போவோம்" என்று சொல்லி விட்டுக் குமார் தன் இடத்துக்குச் சென்று விட்டான். 'மைதிலியின் துன்பத்தை இன்னும் அதிகமாக்கக் கூடாது. இன்று விண்டு பேசி விட வேண்டும்' என்று அவன் நெஞ்சம் நினைத்தது.

அன்று வேலை முடிந்த பிறகு விமான நிலையத்தில் உள்ள சாப்பாட்டு விடுதிக்கு இருவரும் சென்றார்கள். அங்கு கிடந்த மேஜையருகில் இருவரும் நாற்காலிகளை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தார்கள்.

குமாருக்குப் பேச்சை ஆரம்பிக்கத் தெரியவில்லை. வெகு நேரம் யோசித்தான். மைதிலியும் வாயைத் திறக்கவில்லை. சிலைமாதிரி மௌனமாக உட்கார்ந்திருந்தாள்.

குமார் கடைசியில் உடைத்துக் கேட்டு விட்டான். "நீ என்னை எதற்காக இவ்வளவு வெறுக்கிறாய், மைதிலி!" என்று வினவினான்.

மைதிலிக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவளுடைய கண்களிலிருந்து பொல பொலவென்று வெண் முத்துக்கள் உதிர்ந்தன. அந்த அழகைக் கண்டு குமார் பிரமித்துப் போனான்.

பிறகு சமாளித்துக் கொண்டு, "ஏன்! நான் உங்களை நேசிப்பது தவறா?" என்று கேட்டாள்.

"தவறில்லை. ஆனால் நான் உன்னை மணந்து கொள்வது இயலாத காரியம்."

"ஏன்!"

"அது ஒரு பெரிய கதை."

"சொல்லுங்கள், கேட்கிறேன்."

"சொல்லுகிறேன். அப்போதுதான் என் மனநிலை உனக்கு நன்றாகப் புரியும். அதன் பிறகாவது நீ என்மீது தவறு இல்லை என்று தெரிந்து கொள்கிறாயா, பார்க்கலாம்.

"என் தந்தை மத்திய தர குடும்பத்தைச் சேர்ந்தவர். என்மீது தம் உயிரையே வைத்திருந்தார். அடிக்கடி, 'குமார்! நீ யாராவது பணக்காரனுக்குப் பிள்ளையாய்ப் பிறந்திருக்கக் கூடாதா! உன் அறிவுக் கூர்மைக்கு எவ்வளவோ படிக்கலாமே' என்பார்.

என் தாயாரிடம், 'நம் குமாருக்கு நல்ல பணக்கார இடத்துப் பெண்ணாகப் பார்த்துக் கல்யாணம் செய்து வைக்க வேணும். அவனைச் சீமைக்கு அனுப்பிப் படிக்க வைக்கக் கூடிய மாமனாராக வர வேண்டும்' என்பார்.

என் தாயார், 'அதெல்லாம் வேண்டாம். அவன் இருக்கிற கெட்டிக்காரத் தனத்துடன் இங்கேயே எப்படியாவது சௌக்கியமாக இருக்-



தால் போதும்' என்பாள். அவருக்குக் கோபம் கோபமாய் வரும்.

நான் இண்டர்மீடியட் பரீட்சை எழுதி விட்டு எஞ்சினீயரிங் கல்லூரியில் ரொம்பக் கஷ்டப்பட்டுச் சேர்ந்தேன். அப்போதுதான் என் மாமா பெண் ஞானமி ஊரிலிருந்து எங்கள் வீட்டுக்கு வந்து சேர்ந்தாள். பெற்றோர்கள் இருவரையும் இழந்த ஞானமியின்மீது எனக்கு ஒரு பரிவு ஏற்பட்டது. நாளடைவில் காதலாகப் பரிணமித்தது. ஞானமியின் களங்கமற்ற சுபாவமும், அவளுடைய அடக்கமான பேச்சும், அழகிய வதனமும் இன்னும் என் இதய அரங்கத்தை விட்டுச் சிறிதும் நீங்கவில்லை.

எங்கள் வீட்டுக் கிணற்றடியில்தான் நாங்கள் எங்கள் காதல் சம்பாஷணைகளை நடத்துவோம். அதிகம் வளர்த்துவானேன்! ஞானமியும் நானும் பிரிந்து வாழ்வதே இயலாத காரியம் என்று எனக்குத் தோன்றி விட்டது. இதைத் தாயாரிடம் கூறினேன். அப்பாவிடம் சொல்லக் கூச்சமாக இருந்தது.

ஒரு நாள் அம்மா பேச்சுவாக்கில் இதை அப்பாவிடம் சொன்னாள்: 'பணக்கார இடமும் வேண்டாம். அவர்கள் இஷ்டப்படி ஆடும் தரித்திரமும் குழந்தைக்கு வேர வேண்டாம். ஞானமியைக் கல்யாணம் செய்து வைத்து விட்டால் நமக்கும் சௌகரியம், அவர்களும் சந்தோஷமாக இருப்பார்கள்.'

என் தகப்பனாருக்கு ஒரேயடியாகக் கோபம் வந்து விட்டது. பிரமாதமாகச் சத்தம் போட்டார். நான் அவரிடம், 'அப்பா! நீங்கள் சொன்னபடி நான் எப்போதும் நடந்து வந்திருக்கிறேன். உங்கள் பேச்சை மீறியதே இல்லை. ஆனால் நான் ஞானமி இல்லாமல் வாழ மாட்டேன். இந்த ஒரு விஷயத்தில் மட்டும் எனக்குச் சுதந்திரம் கொடுங்கள்' என்றேன்.

அவர் உறுமிக் கொண்டே இருந்தார். பிறகு நான் ரொம்ப வற்புறுத்தவில்லை. மெள்ளப் பார்த்துக் கொள்ளலாம் என்று பேசாமலிருந்து விட்டேன். அதுதான் தவறாகப் போயிற்று.

கல்லூரி மாணவர்களுடன் நானும் சில அணைக்கட்டுகள் முதலியவைகளைப் பார்க்கச் சென்றேன். பதினைந்து நாட்கள் நான் ஊரில் இல்லை. நான் திரும்பி வந்த போது வீடு வெறிச்சென்றிருந்தது. அம்மாவிடம் 'ஞானமி எங்கே!' என்றுதான் முதலில் கேட்டேன். அம்மாவின் கண்களிலிருந்து நீர் பெருகிற்று. ஞானமியைச் சுப்ரமண்ய சர்மா என்பவருக்கு அப்பா இரண்டாந்தாரமாகக் கல்யாணம் செய்து கொடுத்து விட்டார் என்று அறிந்தபோது என் மனம் பட்ட பாட்டைச் சொல்லி முடியாது. முட்டிக் கொண்டேன். மோதிக் கொண்டேன். வெறியனைப்போல் ஆகிவிட்டேன். ஞானமியின் கணவனை, இல்லை, இல்லை, என் ஞானமியை என்னிடமிருந்து திருடிய பாவியைக் கொன்றுவிட வேண்டுமென்று தோன்றிக் கொண்டே இருந்தது. அவனைக் கொன்று விட்டு ஞானமியை மணந்து கொண்டு விட்டால் என்னவென்று கூடத் தோன்றியது.

ஞானமியை மணந்து கொண்ட சுப்ரமண்ய சர்மா என் தந்தைக்குப் பணம் வேறு கொடுத்ததாக அறிந்தபோது, என் தந்தை மீது நான் வைத்திருந்த பாசமெல்லாம் அப்படியே விஷமாகி விட்டது. அதற்கு மேல் அந்த வீட்டில் இருந்தால் என் ஞானமியை விற்ற என் தந்தையையே ஏதாவது செய்து விடுவேனோ என்ற பயத்தால் வீட்டை விட்டுக் கிளம்பி விட்டேன். யாரிடமும் சொல்லவில்லை. கடைசியில் விமானப் படையில் சேர்ந்தேன். டேராடூன் பயிற்சி முகாமில் பல நாட்கள் இருந்த பிறகு, யுத்த விமானங்கள் பலவற்றை ஓட்டியிருக்கிறேன். இரண்டாவது மகாயுத்தம் தீர்ந்த பிறகு இந்த வேலையை ஒப்புக் கொண்டேன். அப்போது முதல் இப்படித்தான் இருக்கிறேன், மைதிலி! ஞானமியை என்றும் மறக்க முடியவில்லை. அவள் என்னை மனப்பூர்வமாக நேசித்தாள். ஒரு பெண்ணை மணந்து கொண்டு என்ன சுகத்தைக் கண்டுபிடிக்கப் போகிறாள்! அவள் அப்படி வாழும்பொழுது நான் மட்டும் மணந்து கொண்டு வாழ்வதா! என் ஞானமி என்னை நினைத்து உருகிக் கொண்டிருக்கும் போது நான் அவளை மறக்கலாமா?" என்று கேட்டான் குமார்.

மௌனமாக இத்தனையும் கேட்டுக் கொண்டிருந்த மைதிலி, "உங்கள் மனத்தைத் திறந்து காட்டியதற்கு ரொம்ப சந்தோஷப் படுகிறேன். ஆனால் என் மனத்தையும் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டாமா?" என்று கேட்டாள்.

"சொல்லு, மைதிலி!"

"நானும் உங்களைத் தவிர வேறு யாரையும் மனத்தினால்கூட நினைக்க முடியாது. நீங்கள் எப்படி ஞானமிக்காக எல்லாவற்றையும் துறந்து வாழ்கிறீர்களோ, அதே மாதிரி நானும் உங்களுக்காக அப்படி வாழ்வேன். சாகும் வரை உங்களுக்காகவே வாழ்ந்து மடிவேன். நீங்கள் என்ன சொன்னாலும் இது மாறப் போவதில்லை" என்றாள் மைதிலி.

குமார் இதை எதிர்பார்க்கவில்லை. அவனுடைய நெஞ்சம் சற்று நெகிழ்ந்தது.

"உண்மையாகவே நீ என்னை அவ்வளவு நேசிக்கிறாயா மைதிலி! எதற்காக!" என்று கேட்டான்.

"அதுதான் எனக்கும் தெரியவில்லை" என்று எழுந்து சென்றுவிட்டாள் மைதிலி.

அதன் பிறகு அவள் ஒரு வாரம் வேலைக்கு வரவில்லை. பிறகு குமார் மைதிலிக்கு ஜுரம் என்று விசாரித்துத் தெரிந்து கொண்டான். அவனுக்கே மைதிலி மீது இரக்கம் பொங்கி எழுந்தது. 'தனக்காகவே துடித்துக் கொண்டிருக்கும் ஒரு பெண்ணைத் தவிக்க வைப்பதும் தவறு! இதுவும் பாவம் தானே!' என்று தோன்றிற்று அவனுக்கு.

அவளைப் போய்ப் பார்த்து விட்டு வந்தான். மைதிலி ஒன்றுமே நடக்காதது மாதிரி குதூகலமாகப் பேசினாள். என்ன காரணத்தாலோ அது குமாருக்குச் சற்று ஏமாற்றமாக இருந்தது.

மறுபடியும் மைதிலி வேலைக்கு வந்து விட்டாள். வழக்கம்போல் எல்லாம் நடந்து கொண்டிருந்தது. ஆனால் மைதிலியின் கலகலப்பு மட்டும் கொஞ்சம் குறைந்து போய் விட்டதை எல்லோரும் கவனித்து அறிந்து கொண்டார்கள்.

ஒரு நாள் விமானம் புறப்பட்டதும் வழக்கம்போல் மைதிலி பிரயாணிகள் ஜாபிதாவை வைத்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். அப்போது குமார் அவள் அருகில் வந்தான்.

"இன்று யாரோ முக்கியமான பிரமுகர்கள் வந்து கொண்டிருக்கிறார்கள் நமது விமானத்தில்" என்றாள் மைதிலி.

குமார், "யாராக இருந்தால் நமக்கென்ன!" என்று சொல்லிக் கொண்டே அந்த ஜாபிதாவைப் பார்த்தான். அவன் விழிகள் வெளியே தெறித்து விடும்போல் இருந்தன.

"என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்!" என்று கேட்டாள் மைதிலி.

குமார் தன் விரலால் மிஸ்டர் கே. எம். சுப்ரமண்ய சர்மா என்று எழுதியிருந்ததைச் சுட்டிக் காட்டினான். மைதிலியின் மனத்தில் கலவரம் உண்டாயிற்று. அந்த ஜாபிதாவை அவனிடம் காட்டியது முட்டாள்தனமென்று எண்ணினாள்.

அவளுக்கு அந்த விமானிகள் இருக்கும் அறையை விட்டு வெளியே போக மனம் வரவில்லை. ஏதோ விபரீதம் நிகழப் போகிறது என்று தோன்றியது. அதற்கேற்றாற் போல் குமார் உட்கார்ந்து கொண்டு பைத்தியம் மாதிரி சிரித்தான்.

மைதிலிக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. விமானம் ஆயிரம் அடிக்கு மேல் பறந்து கொண்டிருந்தது. துணை விமானி அறையில் வந்தபோது, "நீ கொஞ்சம் கவனமாக இரு. குமாருக்கு மனசு சரியாக இல்லை. நான் போய்ப் பிரயாணிகளைக் கவனித்து விட்டு வருகிறேன். குமார் ஏதாவது செய்தால்

# பின்னி

## புகழோங்கிய பெயர்

**பின்னியின்** பெயர் 150 ஆண்டுகளுக்குமேலாக பிரசித்திபெற்று விளங்குகிறது. இந்த உண்மையை எடுத்துக்காட்டி பெருமிதம் அடைகிறோம். இந்தியா முழுவதும் வீட்டுக்குவீடு ஒரே பேச்சாக இருக்கும், தலைமுறைதோறும் விளங்கும் பின்னியின் சிறந்த மதிப்பையும் நீடித்த உழைப்பையும் குறிப்பிட்டு மேன்மேலும் பெருமை அடைகிறோம்.

**பின்னியின்** துணிமணிகள் — தி பக்கிங்ஹாம் & கர்நாடிக் கம்பெனி லிட். மற்றும் தி பெங்களூர் வுல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிட். தயாரிக்கும் இந்தத் துணிமணிகள் இந்தியா முழுவதும் புகழ் பெற்றிருப்பதுடன், அயல் நாடுகளிலும் இந்திய நெசவுத் துணியின் புகழைப் பரவச்செய்ய மிகவும் உதவுகின்றன.

**பின்னியின்** இன்ஜினியரிங் தொடர்புகள் இந்தியாவின் பொருளாதார வளர்ச்சிக்கு இன்றியமையாத பொருள்களை அளிக்கின்றன. எவ்வகை மின்சார சாதனங்கள், டீசல் மற்றும் காஸ் என்ஜின்கள், பாயிலர்கள், டேங்குகள், பெல்டிங்குகள், பின் சாக்குகள், கயிறுகள், மற்றும் கேபிள்கள், உயர்ரக பெயிண்டுகள், பம்புகள், ஏர் கண்டிஷனிங் இயந்திரம், பிஸ்கட், மிருகக் கொழுப்பு இன்னும் எத்தனையோ பல.

**பின்னியின்** இன்ஜினியரிங் தொழிற்சாலையில், எஃகு டாங்குகள், மற்றும் எல்லாவித எஃகு நிர்மாணங்களும் உருவாக்கப்படுகின்றன; கியர்கள் வெட்டுதல், இரும்பு, மீஹனைட், மற்ற உலோகங்கள் உருக்கி வார்த்தல், ஆக்ஸி — அஸிடிலின், மற்றும் எலெக்டிரிக் வெல்டிங் செய்தல், பாய்லர் பழுது பார்த்தல் முதலிய வேலைகள் கையாளப்படுகின்றன.

**பின்னியின்** கப்பல் போக்குவரத்து சேவை, கப்பலில் பாரம் ஏற்றுமதி இறக்குமதி வேலைகள், சரக்குகளை இறக்கி, அனுப்பும் அலுவல்கள், மற்றும் இன்ஷூரன்ஸ் வசதிகளும் பாராட்டத்தக்கவை.

# பின்னி

## — இந்தியாவில் பிரசித்தபெற்ற ஒரு பெயர்

BY. 961

உடனே என்னைக் கூப்பிடு" என்று சொல்லி விட்டுப் போனான்.

பத்து நிமிஷத்துக்கெல்லாம் மறுபடியும் விமானிகள் அறைக்குச் சென்றாள். குமார் அங்கு நிமிர்ந்து உட்கார்ந்திருந்தான். மைதிலி அவனருகில் போய், "குமார்! என்ன யோசிக்கிறீர்கள்?" என்றாள்.

"மைதிலி! உனக்குச் செத்துப் போகப் பயமில்லையோ?" என்று கேட்டான் குமார்.

"இது என்ன பேச்சு, குமார்! உங்கள் புத்தி தெளிவாகத்தான் இருக்கிறதா!"

"என் அறிவு ரொம்பத் தெளிவாக இருக்கிறது, மைதிலி! என்றும் இவ்வளவு தெளிவாக இருந்ததே இல்லை. நான் பழி வாங்கிக்கொள்ளச் சரியான சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. என் கையால் சாகவேண்டுமென்பது அவன் தலைவிதி போலும். இல்லாவிட்டால் இந்த விமானத்துக்கு வந்து சேர்வானேன்!"

"குமார்! இது நியாயமா! உங்கள் ஒருவருடைய சுயநலத்துக்காக, எப்போதோ ஏற்பட்ட கோபத்துக்காக, மற்ற இருபத்து மூன்று பிரயாணிகளும் சாக வேண்டுமா!" என்றாள் மைதிலி.

குமாருக்கு மைதிலி சொன்ன விஷயத்தில் நியாயம் இருக்கிறதென்று தெரிந்துதான் இருந்தது. ஆனாலும் ஜானகியைத் தன்னிடமிருந்து பிரித்த மகா பாதகனைக் கொன்று விட்டால் அவளுக்காவது விடுதலை கிடைக்கும். தனக்கும் மரணத்திலாவது அமைதி கிடைக்குமல்லவா!

அவன் மனத்தில் ஜானகி தன்னுடன் மொட்டைமாடியில் பேசியதும், சாதம் போட்டதும், தன்மீது அன்பைப் பொழிந்ததும் படமாக ஓடிக் கொண்டிருந்தது.

குமாரின் மனத்திரையில் காட்சி மாறியது. சுப்ரமண்ய சர்மாவும், சந்தோஷத்தைப் பறி கொடுத்துவிட்ட ஜானகியும் காட்சி அளித்தார்கள்.

குமாரால் அதைத் தாங்க முடியவில்லை. தான் உட்கார்ந்திருந்த ஆசனத்தை விட்டு வேகமாக எழுந்திருந்தான். தன்னுடைய ஆசனத்தில் அமர்ந்து ஏதேதோ விசைகளை அழுத்தினான்.

நல்ல வேளையாக அவனுடைய கைக்கு அத்தனை விசைகளும் பழக்கமாகி இருந்தன. அவனுடைய நினைவின் தேவை இன்றியே கைகள் சரியாக வேலை செய்தன. விமானம் உயர ஏறிற்று. எட்டாயிரம் அடி உயரத்தில் பறந்தது.

"இவனிடம் என்னை விட்டு விட்டு நீங்கள் எங்கேயோ போய் விட்டீர்களே! எனக்கு விடுதலையே கிடையாதா!" என்று ஜானகி பரிதாபமாகக் கேட்பது போன்ற பிரமை.

"உண்டு, ஜானகி! நான் விடுதலை தருகிறேன். உன் விடுதலைக்கு நான் என் உயிரையே பலியிடுகிறேன்" என்று தனக்குத்தானே பேசிக் கொண்டான் குமார்.

விமானத்தின் வலது பக்கத்திலிருந்து படாரென்று ஒரு சத்தம் கேட்டது.



மைதிலி திடுக்கிட்டாள். அவனுக்கு உடல் எல்லாம் வியர்த்துக் கொட்டியது. "குமார்! குமார்!" என்று கத்திக் கொண்டே ஓடிவந்து அவனைப் பிடித்து இழுத்தாள். துணை விமானியும் அவனைப் பிடித்துத் தள்ளினான்.

குமாருக்குத் தாங்க முடியவில்லை. உடம்பெல்லாம் அவனுக்குப் பதறியது. மெதுவாக எழுந்தான்.

"குமார்! என்ன செய்து விட்டீர்கள்!" என்றாள் மைதிலி.

"நான் ஒன்றும் செய்யவில்லை, மைதிலி! என்மீது சிறிதும் தவறில்லை. விமானத்தில் ஏதோ கோளாறு ஏற்பட்டிருக்கிறது."

குமாரை எரித்து விடுவது போல் பார்த்தாள் மைதிலி. "நீர் ஒரு கொலைப் பிசாசு. இத்தனை பிரயாணிகளைப் பலி கொடுக்கத் துணிந்து விட்டீர்களே! நான் போய் அவர்களை எச்சரிக்கிறேன்" என்று கோபத்துடன் கதவைத் திறந்துகொண்டு பிரயாணிகள் உட்காருமிடத்துக்குச் சென்று விட்டாள்.

குமார் திகைத்து நின்றான். வலதுபக்கம் என்ஜினில் கோளாறு ஏற்பட்டிருந்தது. நிமிஷத்துக்கு நிமிஷம் அது அதிகமாயிற்று. விமானம் ஒன்பதினாயிரம் அடி உயரத்தில் பறந்து கொண்டிருந்தது.

மறுபடியும் படாரென்று ஒரு சப்தம் கேட்டது. குமாருக்கு நிச்சயமாக விமானம் இன்னும் அரை மணி நேரத்துக்கு மேல் பறக்காது என்று தெரிந்துவிட்டது. இன்னும் அவர்கள் ஒரு மணி நேரம் பிரயாணம் செய்தால்தான் விமான நிலையத்தை அடைய முடியும். கண்டிப்பாய் விமானத்தை இறக்கவேண்டும். கீழே குனிந்து பார்த்தான் குமார். தரிசு நிலங்கள் கொஞ்ச தூரம் கண்ணுக்குத் தெரிந்தன. இந்த இடத்தை விட்டுவிட்டால் விமானத்தை இறக்கினால் ஒரு வேளை பிழைக்கலாம். இல்லாவிட்டால் எல்லோரும் கூண்டோடு கைலாசம்தான். துணை விமானியால் இறக்க முடியாது. குமார் இறக்கினால் ஒரு சமயம் பிழைக்கலாம்.

குமார் ஜானிடம் சென்றான். "ஜான்! நான் விமானத்தைக் கீழே இறக்குகிறேன். நீ விமான நிலையத்துக்குச் செய்தி அனுப்பு" என்றான்.

ஜான் அவனை முறைத்துப் பார்த்தான். ஆனால் ஒன்றும் பதில் சொல்லவில்லை.

"ஜான்! நான் சொல்வதைக் கேள். விமானத்தை என்னிடம் விட்டுவிடு. இல்லாவிட்டால் ஒருவரும் பிழைக்க முடியாது" என்றான் குமார்.

"எல்லோரையும் கொல்லப் போகிறாய் என்று சொல்லு. உன்னிடம் 'கன்ட்ரோலை'க் கொடுக்கவே மாட்டேன். இங்கு இறக்கவும் கூடாது. எப்படியாவது விமான நிலையத்தில் கொண்டு சேர்த்து விடுகிறேன்" என்றான் ஜான்.

வொயர்லெஸ் ஆபரேட்டர் விமான நிலையத்துக்கு, "வலப் பக்கம் என்ஜின் பழுதாகி விட்டது. உதவி வேண்டும்" என்று விடாமல் செய்தி அனுப்பிக் கொண்டிருந்தார்.

குமார் என்ன செய்வதென்று புரியாமல் நின்றான். தன்னை எப்படி ஜான் நம்பும்படி செய்வது என்று புரியவில்லை. மைதிலியிடம் ஓடினான். மைதிலி பிரயாணிகளுக்குச் சிரித்த முகத்துடன் பெல்ட்டுகளை கட்டிக் கொண்டிருந்தாள். கவலையை வெளிக் காட்டாத அவள் முகத்தைக் கண்டதும் குமாருக்கு மனம் நெகிழ்ந்து போயிற்று. அவளுடைய கடமை உணர்ச்சியையும், தன்னுடைய பேதமையையும் எண்ணியபோது அவனுக்கு அவமானமாக இருந்தது.

எல்லோருடைய முகத்திலும் கவலைக் குறி காணப்பட்டது. ஒரு சின்னஞ் சிறு குழந்தையை மார்போடு அணைத்தவாறு ஒரு ஆங்கில மாது உட்கார்ந்திருந்தாள். அவள் குமாரைப் பார்த்ததும், "ஒன்றும் அபாயம் நேராதே!" என்று கேட்டாள்.

குமாரின் மனம் கலங்கியது. "ஒன்றுமே ஆகாது, அம்மா! நீங்களும் குழந்தையும், சௌக்கியமாக இறங்குவீர்கள்" என்றான்.

சுப்ரமண்ய சர்மாவை அவன் கண்கள் தேடின. சற்று வயதான தென்னிந்தியர், நெற்றியில் சந்தனப் பொட்டுடன் உட்கார்ந்திருப்பது ஒரு கணம் அவன் கண்ணில் பட்டது. உடனே முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

"மைதிலி! நீ உள்ளே வந்து ஜானிடம் பேசு" என்று அவளை அழைத்துக் கொண்டு முன் அறைக்குள் சென்றான்.

மைதிலிக்கு நிலைமை ரொம்ப மோசம் என்று தெரிந்து போயிற்று. குமாரை நம்பினால் பிழைக்க வழியுண்டு, நம்பாவிட்டால் நிச்சயம் பிழைக்க முடியாது.

ஜானுக்குத் திறமை போதாதென்பது அவனுக்குத் தெரியும்.

ஜானிடம் சென்று, "குமார் சரியாக விமானத்தை இங்கே இறக்கி விடுவார். அவரை ஓட்ட அனுமதியுங்கள்" என்றாள்.

"எனக்கு அவரிடம் நம்பிக்கையில்லை" என்றான் ஜான். மைதிலிக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை.

மறுபடியும் என்ஜினிலிருந்து படார் என்று முன்னைவிடப் பலமாகச் சத்தம் கேட்டது. குமாரால் அதற்குமேல் தாங்க முடியவில்லை. ஜானை இழுத்துக் கீழே தள்ளினான். சிறிது நேரம் என்ன நடந்ததென்று யாருக்கும் புரியவில்லை. மூக்கில் பலமாக அடிபடவே, ஜான் பிரக்ஞை இழந்து விழுந்தான். மைதிலி திகைத்து நின்றாள்.



குமார் ஒன்றுமே நடக்காத மாதிரி விமானத்தைக் கீழே இறக்கத் தொடங்கினான். ஆபரேட்டர் செய்தி அனுப்பிக் கொண்டே யிருந்தான்.

மைதிலி குமாரின் அருகில் வந்தாள். "விமானம் தரையில் இறங்கும் போது தீப்பிடித்துக் கொள்ளலாம் அல்லவா!" என்று கேட்டாள்.

"ஆமாம்!" என்றான் குமார்.

மைதிலியின் மனம் கலங்கிற்று. "குமார்! நான் மற்றவர்களைக் காப்பாற்றுகிறேன். உங்களை எனக்கு இறைவன் காப்பாற்றித் தருவார்" எனக் கூறிச் சென்றாள்.

விமானம் கழுகைப் போல் வட்டமிட்டு வட்டமிட்டு இறங்கிக் கொண்டிருந்தது.

மறுபடியும் மைதிலி ஓடி வந்தாள். கொன்சலஸ் ஆபரேட்டரின் உதவியுடன் பிரக்ஞையற்றுக் கிடந்த ஜானைப் பின் பக்கம் தூக்கிக் கொண்டு போனாள்.

விமானம் தரையைத் தொட்டது. அதே சமயத்தில் பலத்த சத்தத்துடன் வலது பக்கத்து என்ஜின் வெடித்துத் தீப்பிடித்துக் கொண்டது.

ஆஸ்பத்திரியில் இருந்த குமாருக்கு மூன்று நாட்களுக்குப் பிறகே நினைவு வந்தது. அவன் கண்களைத் திறந்த உடனே முதலில் பார்த்தது மைதிலியைத்தான். மைதிலி ஹோஸ்டஸ் மாதிரி இல்லாமல் சாதாரணப் புடவை உடுத்திக் கொண்டிருந்தாள். இதில் அவள் இன்னும் அழகாக இருப்பதாகத் தோன்றியது. குமாரின் கைகளிலும் கால்களிலும் கட்டுக்கள் போடப்பட்டிருந்தன.

மைதிலி அவனருகில் வந்து, "ஏதாவது வேண்டுமா?" என்று கேட்டாள்.

"நீதான்!வேண்டும்" என்றான் குமார். மைதிலி பிரமித்துப் போனாள்.

அவனருகில் போய் உட்கார்ந்து கொண்டு, "நான் வேண்டிக் கொண்டது வீண் போகவில்லை, குமார்! இறைவன் உங்களை எனக்குக் காப்பாற்றிக் கொடுத்து விட்டார்" என்றாள்.

குமாருக்குப் பின்னால்தான், கடவுள் மைதிலியின் உருவத்தில் வந்து தன்னைக் காப்பாற்றினார் என்று தெரிந்தது. அன்று விமானத்தில் பயணம் செய்து கொண்டிருந்த கிருஷ்ணன் என்பவர் குமாரைப் பார்க்க வந்தார்.

அவர் மூலம் குமார் நடந்ததை யெல்லாம் தெரிந்து கொண்டான்.

மைதிலி அன்று நடந்து கொண்ட மாதிரி யாராலும் நடந்து கொண்டிருக்க முடியாது. அத்தனை பிரயாணிகளையும் சாந்தப்படுத்தி ஒவ்வொருவராகக் கீழே இறங்கச் செய்தாள். எல்லோரும் இறங்கிய பிறகு கிருஷ்ணனும் மைதிலியும் மட்டும் விமானத்தில் இருந்தார்கள்.

மைதிலி கிருஷ்ணனிடம், "விமானி இன்னும் வரவில்லை. அடிபட்டிருக்கும் போலிருக்கிறது. அவரைக் காப்பாற்ற முயற்சிக்கப் போகிறேன். தாங்கள் உதவி செய்ய முடியுமா?" என்று கேட்டாளாம். இருவரும் ஓடி வந்து கதவைத் திறந்தார்களாம். நெருப்பு ஜ்வாலை வீசியதாம். மைதிலி சிறிதும் தயங்காமல் உள்ளே சென்றாளாம். இருவரும் கீழே அலங்கோலமாக விழுந்து கிடந்த குமாரைத் தூக்கிக் கொண்டு வந்தார்களாம்.

குமாரின் மனம் இளகிப் போயிற்று. மைதிலியின் நினைவாகவே இருந்தது. அவள் நினைவில் தன் உடம்பு வேதனை கூட அவனுக்குக் குறைந்து போயிற்று.

உடம்பு சரியான பிறகு அவனுக்குக் கால் எலும்பு முறிந்து விட்டபடியால் சரியாக நடக்க முடியவில்லை. இது குமாருக்கு அளவிலாத வேதனை யளித்தது. தான் இனிமேல் விமான ஓட்டி வேலைக்கு லாயக்கற்றவனாகி விட்டோமே, என்று அவனுக்குத் துயரமாக இருந்தது. ஆனால் மைதிலி சந்தோஷப்பட்டாள். "அந்தப் பயங்கரமான வேலை உங்களுக்கும் வேண்டாம். நானும் விட்டு விட்டேன்" என்று கூறினாள்.

"மைதிலி! உனக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். உன் அன்பு என்னை உருக்குகிறது. ஆனால் ஒரு தடவை ஜானகியைப் பார்த்து அவளிடம் சம்மதம் பெற்றுக் கொள்ள வேண்டுமென்று தோன்றுகிறது" என்றான் குமார்.

"நாம் இருவருமே அவளைப் பார்த்து விட்டு வரலாமே!" என்றாள் மைதிலி.

இருவரும் விமான நிலையத்தில் சுப்ரமண்ய சர்மாவின் விலாசத்தை விசாரித்துக் கொண்டு அவர் வீட்டுக்குச் சென்றார்கள். அங்கே அவர் மட்டும் இருந்தார். அவர் மூலம் ஜானகி இறந்து போய் ஒரு வருஷத்துக்கு மேல் ஆகிவிட்டது என்றும், அவளுக்கு ஒரு மகன் இருக்கிறானென்றும் தெரிந்து கொண்டார்கள்" என்று தேவசகாயம் தம் கதையை நிறுத்தினார்.

மணி எல்லோரையும் சத்தம் போடாமலிருக்கும்படி சொல்லி விட்டு, "குமாரும் மைதிலியும் மணந்து கொண்டார்களா, இல்லையா?" என்று கேட்டான்.

"இதைக் கேட்க வேண்டுமா! அவர்கள் இருவரும் மணந்து கொண்டார்கள். ஜானகியின் புத்திரனை மிகுந்த பிரயாசைப்பட்டுத் தங்களுடன் அழைத்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள்."

"உங்கள் கதை ரொம்ப நன்றாக இருந்தது மிஸ்டர் தேவசகாயம்! ரொம்ப நன்றி" என்றான் சேகர்.

"என் கதையைப் பொறுமையுடன் கேட்டதற்கு வந்தனம்" என்று சொல்லி விட்டு நடந்து சென்றார் தேவசகாயம்! அவர் நடையிலிருந்து அவர் கால் முறிந்து மறுபடியும் சரியாகி இருக்க வேண்டுமென்று தெரிந்தது. மாணவர்கள் ஒருவரை ஒருவர் அர்த்த புஷ்டியுடன் பார்த்துக் கொண்டார்கள்.

# போக்குவரத்து ஸ்தாபனங்களே!





## டயர்ஸோல்ஸ் பரிசீலனை செய்யுமுன் தேய்ந்த டயர்களை எறிந்துவிடாதீர்கள்

டயர் உற்பத்தியாளர்கள் தற்காலம் தயாரித்து வரும் டயர்கள், மனிதனுடைய சிருஷ்டித் திறமையின் முழுச்சிறப்பும் வெளிப்படும்படி அமைந்தவை. டயரின் டிரெட் பாகம் தேய்வதற்குள் டயரை புதுப்பித்துக் கொள்வது தேச நலனுக்கு இன்றியமையாத செயலாகும்.

டயர்ஸோல்ஸ் பொது மக்களிடம் அவர்களுக்குள்ள பொறுப்பை உணர்ந்தவர்கள் ஆதலால் பொது ஜன பாதுகாப்பு விஷயத்தில் சந்தேகமுள்ளதாக கருதப்படும் டயர்களை தயங்காமல் நிராகரித்து விடுவர். இவ்வித நிராகரணத்துக்குக் காரணம் கோணல் புத்தி அல்ல இதனால் பாதகமடையக்கூடிய எல்லா அம்சங்களையும் கருதியே செய்யப்படுகிறது.

டிரெட்பாகம் தேய்ந்தாலும் உறுதியான உறையுடைய டயரை ஒதுக்கிவிடுவது வீண்நஷ்டமுண்டாக்கும். தேய்ந்து மழுமழுப்பான டயர்கள் மதிப்புடையவை. டயருக்குமேல் டயர்ஸோல்ஸ் டிரெட் பொருத்தப்பட்டு விட்டால் புது டயர் உழைக்கும் காலத்திற்கு திரும்பவும் உழைக்கின்றது. இன்னொரு முக்கிய விஷயம். புதிய டிரெட் பொருத்தப்படும் போது பழைய உறை (கேஸிங்) சேதமாவதில்லை. எனவே டயர்ஸோல்ஸ் டிரெட் தேய்ந்த பிறகுகூட மீண்டும் உபயோகமாகின்றது.



டயர்ஸோல்ஸ், டயர் பராமரிப்பு பிரச்னைகளை தீர்ப்பதில் ஒவ்வொரு டயர் மைலுக்கும் செலவு மிக மிகக் குறைவு.

**டயர்ஸோல்ஸ்**

ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (ஸௌத் இந்தியா) லிட்.

கோயமுத்தூர்

அவளுக்கு அழகை அளிப்பது . . .
. . . கோஹினூர் கொக்கிகள்.

# குறவர் கும்மி

*●*

கொள்ளை அழகினன் உள்ளம் இனியனன்
வள்ளிப்பெண் வள்ளிப்பெண் எங்கள்சாதி;
வள்ளியின் உள்ளத்தைக் கொள்ளை அடித்திட்ட
வேலவர் வேலவர் எங்கள்சாமி.

கைவளை பூணவே மையல் ஆகிவிட்ட
வள்ளிப்பெண் வள்ளிப்பெண் எங்கள்சாதி;
கைவளை பூட்டியே மையலை ஊட்டிய
வேலவர் வேலவர் எங்கள்சாமி.

தேனும் தினைமாவும் தாத்தாவுக்(கு) ஊட்டிய
வள்ளிப்பெண் வள்ளிப்பெண் எங்கள்சாதி;
திண்ணையில் விக்கல்எ டுக்கந டித்திட்ட
வேலவர் வேலவர் எங்கள்சாமி.

தும்பிக்கை கண்டஞ்சி தம்பிகை பற்றிய
வள்ளிப்பெண் வள்ளிப்பெண் எங்கள் சாதி;
நம்பியைக் கண்டஞ்சி வேங்கையாய் நின்றிட்ட
வேலவர் வேலவர் எங்கள்சாமி.

வேடன் எல்லாம் வேலன்—மலைத்
தோடன் எல்லாம் வேலன்;
மாடன் எல்லாம் வேலன்—எங்கள்
காடன் எல்லாம் வேலன்.

வெங்கி எல்லாம் வள்ளி—குறச்
சிங்கி எல்லாம் வள்ளி;
வஞ்சி எல்லாம் வள்ளி—மன
ரஞ்சி எல்லாம் வள்ளி.

விஜயா.

சுந்தா



# கள்ள வாசல்

நாம் எல்லாம் உலகத்தோடு ஊடாடுவதற்காக, உடலிலே, ஐந்து வாசல் வைத்திருக்கிறது. ஆனால் இந்த வாசல்கள் வழியாக, உலகத்தை எட்டிப் பார்ப்பவர்களுக்கு உள்ளதை உள்ளபடி உணர முடியாது என்று சிவவாக்கியர் கருதுகிறார். இந்த உடலிலேயே ஒரு கள்ள வாசல் இருக்கிறது. சாமானிய மக்களால் அதைக் காண முடியாது. அந்த வாசலைத் திறந்து பார்த்தால்தான் பேருண்மையை நேரடியாகத் தரிசனம் செய்யலாம் என்ற கருத்தை,

"கள்ள வாசலைத் திறந்து
காண வேணும், மாந்தரே!"

என்று சிவவாக்கியர் பாடுகிறார்.

அந்தக் கள்ள வாசல்தான் எது? பஞ்சேந்திரிய வாசல்களை நன்குத் திறந்து பார்த்தால் உண்மையைக் கண்டுவிட முடியாதா? விஞ்ஞானக் குன்றேறி, அதன் கோடு முடியில் நின்று, அணுகுண்டை வைத்து அம்மானையாடும், இருபதாவது நூற்றாண்டு மனிதனுக்கா முடியாது! வெறும் பத்தாம் பசலிப் பேர்வழியாக இருக்கிறாரே, இந்த சிவவாக்கியர்!

* * *

மீன் தட்டையாயிருக்கிறது; அதற்கு அகலம் உண்டு, நீளம் உண்டு, ஆனால் உயரம் அநேகமாக இல்லை யென்றே சொல்லி விடலாம். ஆகவே, தட்டையாயிருக்கும் காரணத்தால், மீனுக்கு அகலமும், நீளமும்தான் புலப்படுமேயொழிய, உயரம் புலப்படாது. மீனாக்ஷி அம்மன் கோபுரத்தையே முன்னால் நிறுத்தி வைத்தாலும், அது தட்டையாகத்தான் தெரியும் அந்த மீனுக்கு. ஆகவே, உள்ளதை உள்ளபடி அதற்குப் பார்க்கத் தெரிய வில்லை. அதற்குக் கொடுத்து வைத்ததெல்லாம் அரைகுறைப் பார்வைதான்.

ஆனால், மனிதன் ரொம்பத் திறமைசாலி. அவனுடைய பார்வைக்கு உயரம் என்ற அளவையும் தெரிகிறது. ஆனால், காலம் என்ற அளவையோ அவனுக்குப் பிடிபடுவதில்லை. ஆகாய விமானம் போன்ற ஒரு வாகனத்திலேறிச் சென்று, நாளை நடக்கப் போவதை அவனால் எட்டிப் பார்க்க முடிய வில்லை. அப்படியானால், அவனுடைய பார்வையும் ஒன்றரைக் கண் பார்வைதானே?

மனிதன் சமர்த்தானவன், ஆனால் உலகத்தை அளப்பதற்காக அவன் வைத்துக் கொண்டிருக்கிற கஜக் கோல் தான் குறைபாடுள்ளதா யிருக்கிறது.

யானையின் தோலிலே எத்தனையோ வெடிப்புகள் இருக்கின்றன. ஒவ்வொரு வெடிப்பும் பேன்களுக்கு வாசஸ்தலமாக அமைந்திருக்கிறது. பேனுடைய மனசுக்குள்ளிருந்துகொண்டு பார்க்கும் போது, ஒவ்வொரு வெடிப்பும் ஒரு பெரிய பள்ளத்தாக்கு மாதிரி யல்லவா காட்சி யளிக்கிறது. அந்தப் பள்ளத்தாக்குக்குள்ளேயே, பேன் பிறக்கிறது, வளர்கிறது, காதலிக்கிறது, போராடுகிறது, சாகிறது. பக்கத்து வெடிப்புகளைப் பற்றி அறிவதற்கோ சிந்தனை செய்வதற்கோ அதற்கு நேரமில்லை.

யானை மாவுத்தன் யானையை ஆற்றுக்கு அழைத்துச் செல்லுகிறான்; வாளி, வாளியாகத் தண்ணீரைக் கோதி விட்டு யானையைக் குளிப்பாட்டுகிறான். தோல் வெடிப்புகளுக்கும் யானைக்கும் அப்பாலிருந்து பார்க்கும் நமக்கு யானை குளிக்கத்தான் செய்கிறது என்று தெரியும். ஆனால், அந்தத் தோல் வெடிப்புகளுக்குள் வாழ்க்கை நடத்துகிற பேனுக்கோ, ஏதோ ஒரு ஜலப்பிரளயம் எங்கிருந்தோ வந்து விட்டது என்று தானே தோன்றும். ஏனென்றால், யானைக்குப் புறம்பாக நின்று அதை மொத்தமாகப் பார்க்கத் தெரிய வில்லை, அந்த அப்பாவிப் பேனுக்கு. பேனைக் காட்டிலும் புத்திசாலி மனிதன்; அவன் யானை குளிக்கிறது என்பதை யல்லவா உணர்ந்து விடுகிறான்!

ஆனால் பூமிக்கு அப்பால் நின்று கொண்டு, பூமியில் நடக்கிற காரியங்களை மொத்தமாகப் பார்க்கக் கொடுத்து வைக்க வில்லை மனிதனுக்கு. பூகம்பம் ஏற்படுகிறதென்றால், மனிதனுடைய குடல் எல்லாம் பதறுகிறது. ஏதோ ஜலப்பிரளயம் ஆரம்பித்து விட்டதோ என்று நடுங்குகிறான். சூரியனிலிருந்து கொண்டு பூமியில் நடக்கும் பூகம்பத்தைப் பார்த்தால், உண்மை கொஞ்சம் தெளிவாகத் தெரியும். பூமி என்ற பந்து அந்தரத்திலே சுற்றி வருவதும், சுற்றுகிற வேகத்தில், பந்து ஒரு பக்கம் அமுங்குவதும், ஒரு பக்கம் வீங்குவதும், இதை யெல்லாம் அறியாத மனிதப் பேன்கள் பூகம்பம் வந்து விட்டது என்று அலறுவதும் சூரியனிலிருந்து பார்ப்பவனுக்கு ரஸமா யிருக்கும். ஆனால், அவனுடைய பார்வையும் மேற்படி, மேற்படிதான். பேரண்ட யானையின் முதுகிலே ஏற்பட்ட எண்ணிறந்த வெடிப்புகளில் ஒன்று சூரிய மண்டலம். பேரண்டம் முழுவதையும் மொத்தமாகப் பார்த்தாலொழிய பூர்ணமான பார்வை நமக்குக் கிட்டப்போவதில்லை. ஆனால், ஒன்று நன்கு விளங்குகிறது. இடம் மாற மாற, நம்முடைய பார்வை மாறிக் கொண்டே போகிறது. உண்மையான காட்சி எது என்று தெரிய முடிய வில்லை. விஷயங்களை அளப்பதற்கு, பேன் வைத்துக் கொண்டிருக்கும் கஜக் கோலுக்கும், மனிதன் வைத்திருக்கும் கஜக் கோலுக்கும் சூரிய மண்டலத்திலுள்ள மாமனிதன் வைத்திருக்கும் கஜக்கோலுக்கும் எத்தனை வேறுபாடிருக்கிறது! கஜக்கோல் மாற மாற, உலகத் தோற்றமும் மாறிக்கொண்டே வருகிறது. காலத்தாலும் இடத்தாலும் இவ்வாறு மாறுபடுகிற கஜக் கோலை நம்பி, உள்ளதை உள்ளபடி அளந்துவிட முடியுமா?

அங்கிங்கெனாதபடி எங்கும் பரவி நிற்கும் வஸ்துவை அளப்பதற்குக் கம்பர் ஓர் கற்பனைக் கருவியைக் கையாண்டு பார்க்கிறார். பேரண்டத்திலுள்ள உலகங்களை யெல்லாம் ஒன்று கூட்டிப் பிசைந்து ஒரு பிரம்மாண்டமான காழியை உண்டாக்குகிறார். இதைக் கையால் தூக்கி அளப்பதற்கு ஆள்



வேண்டுமே! உலகங்களை யெல்லாம் படைத்த பிரம்மாவுக்கே இந்த வேலையைக் கொடுத்திருக்கிறார் கம்பர். கவிச் சக்கரவர்த்திக்குக் கூலி வேலை செய்யும் போது, ஏமாற்ற மனம் வராது சிருஷ்டி கர்த்தாவுக்கு! ஆகவே, நன்றாக வேட்டியைத் தார்ப் பாய்ச்சிக் கட்டிக் கொண்டு, உட்கார்ந்து கொண்டல்ல, நின்று கொண்டே பிரமன் பேரண்ட நாழியைக் கொண்டு அளக்கிறான்; ஊழி காலம் அளக்கிறான். அப்படி அளந்தும் கொஞ்சமும் குறைவுபடாத வஸ்துவாயிருக்கிறது கடவுட் தத்துவம். இந்த விஷயத்தைக் கம்பர் சொல்லுகிறார்.

"நாழி, நவைதீர் உலகெலாமாக,
நளினத்து நீ தந்த நான்முகனார்தாமே,
ஊழி பலப்பலவும், நின்றளந்தால்,
ஒன்றும் உலவாப் பெருங்குணத்து உத்தமனே"

இப்பேர்ப்பட்ட கற்பனை அளவுகோலைக் கொண்டு அளந்து பார்த்தாலும், "முடியாத காரியம்" என்று கையை விரிக்கத்தான் வேண்டியிருக்கிறது. சிவவாக்கியர் பத்தாம் பசலிப் பேர்வழிதான்; இருந்தாலும் அவர் சொல்லிலே கொஞ்சம் உண்மை இருப்பது போலத் தெரிகிறதே. காலம், இடம் கடந்த மெய்ப் பொருளை நம்மால் அளக்க முடியாது. ஆனால், உலகத்திலுள்ள சாமானியப் பொருள்களைக் கூடவா நம்மால் உள்ளபடி உணர முடியாது போய் விடுகிறது?

வெளியுலகக் காரியங்களைக் கவனிப்பதற்காக நம்மிடம் ஐந்து அற்புதமான கருவிகள் இருக்கின்றன. வானொலி நிலையத்திலிருந்து வரும் மின்சார அலைகளைப் பிடித்து இழுக்கிற ரேடியோப் பெட்டி மாதிரி, வர்ணபேதங்களோடு வரும் ஒளி அலைகளைப் பிடித்து இழுப்பதற்காகக் கண் என்ற கருவியை வைத்திருக்கிறோம். ஆனால் கண்ணுக்கு வானவில்லின் ஏழு வர்ணங்களைத்தான் பார்க்கத் தெரியும். அந்த ஏழு வர்ணங்களைத் தவிர, கோடாநு கோடி வர்ணங்கள் உலகத்தில் இருக்கின்றன, எக்ஸ்ரே போன்ற வர்ணங்கள். ஊதாவுக்கும் நுட்பமான ஒளி அலைகள் எத்தனையோ இருக்கும், அவைகளைக் காணக் கொடுத்து வைக்க வில்லை மனுஷக் கண்ணுக்கு. ஆகவே, அந்த நிறங்கள் சம்பந்தமாக, மனிதன் விழிகண்குருடன்தான்; உள்ளதை உள்ளபடி அவனால் பார்க்க முடிய வில்லை.

ஒலியைக் கேட்பதற்காக, நமக்கு அமைந்திருக்கும் கருவியும் இந்த அழகில்தான் அமைந்திருக்கிறது. மனிதக் காதுக்குக் கேட்கக் கூடியதெல்லாம் ஏழு ஸ்வரங்கள்தான். ஏழு ஸ்வரங்களுக்கு அப்பாற்பட்ட ஒலிகள் அனந்தம்; அவை சம்பந்தமாக, மனிதன் செவிடனாகவே இருக்கிறான்.

இதைப் போலவே, மோப்பத்துக்காக ஏற்பட்ட மூக்கு, ருசியை அறிய வைத்திருக்கும் நாக்கு, உற்றறிவதற்காக உள்ள உடல்—எல்லாம் குறைபாடு நிறைந்த கருவிகளாகவே யிருக்கின்றன.

உணர்வது குறைவாக இருந்தாலும், உணர்ந்ததை யாவது உள்ளபடி சொல்லத் தெரியுமா அவைகளுக்கு? அதுவுங்கூடத் தெரிய வில்லை.

நீதி மன்றத்திலே, வழக்கு விசாரணை நடக்கிறது. கொலைக் குற்றம் சாட்டப்பட்ட எதிரி, கூண்டிலே நிற்கிறான். முதலாவது சாட்சி கொலை நடந்தது தனக்குத் தெரியும் என்று சொல்லுகிறான். "நீ உன் கண்ணால் பார்த்தாயா?" என்ற கேள்விக்கு, "நான் பார்க்க வில்லை, என் மனையாள் ஊற்றடிக்குப் போயிருந்தாள். கொலை நடந்ததை நேரில் பார்த்த சுப்பனுடைய மனைவி சுப்பியை அவள் கண்டாள். சுப்பி சொன்னதை, என் மனைவி என்னிடம் சொன்னாள். அவள் சொன்னதை நான் இங்கே சொல்லுகிறேன். எதிரிதான் கொலை செய்தான். அதை ஊர் முழுவதும் சொல்லும்" என்று சாட்சி பதில் சொல்லுகிறான். அவனுடைய வாக்கு மூலம், கண் கண்ட சாட்சியின் வாக்குமூலம் அல்ல, காது கை கடந்த சாட்சியம் என்று சட்டம் அதை நிராகரித்து விடுகிறது. "நேரில் என் கண்ணால் கொலை நடந்ததைப் பார்த்தேன்" என்று சாட்சி சொல்லியிருந்தால், சட்டம், அதை உயர்ந்த நேரடியான சாட்சியம் என்று ஒப்புக் கொள்ளத் தயாராயிருக்கிறது. ஆனால், "என் கண்களால் கண்டேன்" என்று சொல்லும் சாட்சியின் அநுபவத்தை அலசிப் பார்த்தால், அதுவும் நேரடியான அநுபவம் அல்ல என்று துலங்கும்.

பள்ளிக்கூடத்திலே முப்பது ஆண்டுகளுக்கு முன் நம்மோடு படித்தானே, அந்த ராமசாமியை, திடீர் என்று ரயில் வண்டியிலே சந்திக்கிறோம். அவனைக் கண்டவுடன் இனம் கண்டு பிடித்துக் கொள்கிறோம். ஆனால், நம்முடைய மனசு நம்மை விட்டுப் போய், அவனை நேரடியாகத் துளாவிப் பார்த்து, ராமசாமிதான் என்று கண்டு பிடித்து விட வில்லை. உண்மையில் நடப்பது என்ன? அவன் உடலின் தோல் பாகத்தில் ஒளிக்கதிர்கள் விழுந்து தெறிக்கின்றன. சிறிய கதிர்கள், அவன் உருவத்தைப் பற்றிய மேலெழுந்த வாரியான ஓர் செய்தியைச் சுமந்து கொண்டு, நம் கண்ணிலிருக்கும் ஊசித்துவாரம் வழியாகச் சென்று கண்ணுக்குள்ளே யிருக்கும் ஒரு சினிமாத் திரையிலே (Retina) விழுகின்றன.

திரையிலே, ராமசாமியின் உருவநிழல், (ஐயோ, பாவம்!) தலைகீழாக விழுகிறது. இந்தத் திரைக்கும் மூளைக்கும் இடையிலே ஆயிரக்கணக்கான நரம்புகள். திரையில் விழுந்திருக்கும் நிழலைப் பற்றி, நரம்புகள் நமக்குப் புரியாத பரி பாஷையில், மூளைக்குத் தந்தியடிக்கின்றன. தந்தியை, மூளை நம்முடைய உதவி இல்லாமலே மொழிபெயர்த்து, உருவத்தைத் தலை மேலாக மாற்றி, மனத்துக்குச் சமர்ப்பணம் செய்கிறது. இப்படியாக காது கை கடந்து வந்த நிழல் உருவத்தை மனசு உடனே இனம் கண்டு பிடிப்பதில்லை. மனசுக்குள்ளே ஒரு 'ஆல்பம்' இருக்கிறது. பிறந்தது முதல் இந்த நிமிஷம் வரையில் நாம் கண்ட காட்சிகள், கேட்ட ஒலிகள் முதலியவற்றை யெல்லாம், அந்த ஆல்பத்தில் பதிவு செய்து வைத்திருக்கிறது மனசு. ராமசாமியின் உருவ நிழலைப் பார்த்ததும், மனசு தன்னுடைய ஆல்பத்தைப் புரட்டிப் பார்க்கிறது. அதிலே முப்பது வருஷங்களுக்கு முன் பதிவு செய்யப்பட்டிருக்கும். ராமசாமியின் உருவத்தோடு, இப்போது வந்திருக்கும் செய்தியை ஒத்துப் பார்க்கிறது மனசு. அடாடா, இது நமது நண்பன் ராமசாமிதான் என்று முடிவு கட்டுகிறது: ஊகம் செய்துதான் முடிவு கட்டுகிறது. ஆகவே, வந்த செய்தியோ காது கை கடந்த செய்தி. அதை நேரடியாக உணராமல், ஞாபக சக்தியின் உதவியைக் கொண்டும், கற்பனை செய்தும், ஊகம் பண்ணி



யும் மனம் ஒரு நிர்மானத்துக்கு வருகிறது. இந்த நிர்மானத்தை நேரடியான அனுபவம் என்று சொல்லுவது பொய். 'என் கண்ணால் கண்டேன்' என்று சொல்லுகிற சாட்சியின் அனுபவமும் நேரடியானதல்ல என்று தள்ள வேண்டியதுதானே.

ஒரு தினசரிப் பத்திரிகையின் ஆசிரியர் தில்லியில் இருக்கிறார். உள்நாட்டில் பல ஊர்களிலே அந்தப் பத்திரிகையின் நிருபர்கள் இருக்கிறார்கள். நாட்டில் நடந்த செய்திகளைப் பற்றித் தினந்தோறும் தில்லி ஆசிரியருக்குத் தபால் அனுப்புகிறார்கள். நிருபர்களுக்கோ உண்மையை அறியும் சாதனம் எப்பொழுதும் கிடைப்பதில்லை; தப்பித் தவறி அறிந்தாலும், சூட்டோடு சூடாக ரஸம் தரும் நோக்கத்தோடு சொல்லும் இயல்புடையவர்கள். அவர்கள் அனுப்புகிற செய்தி உண்மையா என்று நேரடியாக ஆராய்ச்சி செய்யாமல், அவர்கள் சொல்லுவதை நம்பி, பல முடிவுகளுக்கு வருகிறார் பத்திரிகாசிரியர்; தினந்தோறும் தலையங்கமே எழுத வேண்டியிருக்கிறது.

இதே நிலையிலே இருக்கிறான் ஒவ்வொரு மனிதனும். ஒவ்வொரு மனிதனுக்கும் ஐந்து நிருபர்கள் இருக்கிறார்கள்; கண் என்றும், காது என்றும், நாக்கென்றும் மூக்கென்றும், உடல் என்றும் பெயர் வைத்துக் கொண்டிருக்கிற நிருபர்கள். அபத்தச் செய்திகளை சதா அனுப்பிக்கொண்டே இருக்கிறார்கள் இந்தப் பொய்யான நிருபர்கள். இவர்களை நம்பி இந்த மனசு, பத்திரிகாசிரியர் தொழிலை நடத்துகிறது, நிமிஷத்துக்கு நிமிஷம் ஒரு நிர்மானத்துக்கு வருகிறது, தலையங்கமே எழுதுகிறது. இந்தத் நிர்மானங்களுக்கு நிலையான மதிப்பைக் கொடுக்க முடியுமா?

'முடியாது' என்று கண்டார்கள் நம்முடைய ஞானிகள். அப்படியானால் மனிதனுடைய அனுபவம் எல்லாமே போலி அனுபவமா? நேரடியான அனுபவம் என்பதே அவனுக்கு எட்டாப் பழமா? — என்ற ஆராய்ச்சியில் அவர்கள் இறங்கினார்கள். நேரடியாக உணரக் கூடிய சரக்கு ஒன்றே ஒன்றுதான் நமக்குக் கிடைத்திருக்கிறது, அதுதான் மனசு என்றும் கண்டார்கள்.

மனசு தன்னைத்தானே ஆராயும்போது, நிருபர்கள் தயவு அதற்கு வேண்டியதில்லை, காது கை கடந்த செய்தியை நம்பி அது இயங்க வேண்டியதில்லை. அறிவும் கருவியும் அறியப்படும் பொருளும் ஒன்றாக இருக்கும்போது, இடை ஊறு ஒன்றுமே இல்லை. இப்படி ஆராய்ச்சி செய்யும்போதுதான், நேரடியான உணர்வு, அதாவது மெய்யுணர்வு நமக்குக் கிட்டுகிறது.

இதைத்தான் திருமூலர் சொன்னார்: — "மனசை மனசுக்குள்ளேயே செலுத்திப் பார். எவ்வளவு தூரம் செலுத்த முடியுமோ, அவ்வளவு தூரம் செலுத்து. அப்படிச் செய்தால், வெட்ட வெளியென்றும், கடவுள் என்றும் பேரிட்டு அழைக்கிறார்களே, அந்தப் பேருண்மையை நேரடியாக உணரலாம்."

"செல்லு மளவும் செலுத்துமின் சிந்தையை,
அல்லும், பகலும் அருளொடு தூங்கினால்,
கல்லும் பிளந்து, கடுவெளி ஆமே."

மனது, மனத்தையே துருவித் துருவி ஆராய்ந்தால், உள்ளதை உள்ளபடி உணர்ந்து விடலாம் என்ற பேருண்மையை, ஞானிகள் பலவிதமாகச் சொல்லிச் சொல்லி அனுபவிக்கிறார்கள். "இறைவன் எங்கே இருக்கிறான்?" என்ற கேள்விக்கு, "மனத்தகத்தான்" என்று பதில் சொல்லுகிறார் அப்பர் சுவாமிகள். இப்படி மொட்டையாகச் சொல்லி விட்டால், விளங்காதோ என்று பயந்து, திருமூலர் பாவ விளக்கம் கொடுக்கிறார். மனிதனைப் படைக்கும் போதே கடவுளுக்கு ஒரு சந்தேகம் ஏற்பட்டதாம். மனிதனுக்குத் தெரியாத, அப்பாலுக் கப்பாலாய் நாம் இருந்து விட்டால், அந்த ஆடுக்குத் தெளிவு ஏற்படாமல் போய்விடுமே என்று நினைத்து, எல்லையற்ற அருளாளனான இறைவன், மனிதனுடைய மனத்தினுள்ளேயே ஒளிந்திருந்து, அவனை ஆட்கொள்ளுகிறான் என்று சொல்லுகிறார்.

"கள்ளப் பெருமக்கள் காண்பர் கொலோ என்று
உள்ளத்தி னுள்ளே ஒளித்திருந்து ஆளுமே!"

இதே உண்மையை சிவவாக்கியர் அவருக்கே உரிய கம்பீர பாஷையிலே பேசுகிறார். "எல்லாம் இறைவன் மயமா யிருக்கிறது. ஆகையினால் தெளிந்த அறிவாளி ஒருவன் ஒரு புல்லை எடுத்துக் கொண்டு ஆராய்ச்சி செய்தாலும், இறைத் தத்துவத்தைக் கண்டு கொள்வான். ஏனென்றால், அந்தப் புல்லுக்குள்ளே கூட ஒரு வாசல் வைத்திருக்கிறது. அந்த வாசல் வழியாக எட்டிப் பார்த்தால், பேருண்மையைக் கண்டு கொள்ளலாம். இப்படியாக, உலகத்திலே ஆயிரக்கணக்கான பொருள்களும், ஆயிரக்கணக்கான வாசல்களும், திரையை நீக்கி இறைவனைக் காட்டுவதற்காகக் காத்துக் கொண்டிருக்கின்றன. ஆனால், அவைகள் மூலமாக எட்டிப் பார்த்து உண்மையை அறிவது என்பது எல்லாராலும் முடியாது. ஆனால் ஒவ்வொரு மனிதனும் எளிதில் எட்டிப் பார்த்து, உணரக் கூடிய கள்ள வாசல் ஒன்று இருக்கிறது. அது தான் மனமாகிய வாசல். ஏகபோகமாக நாம் அனுபவிக்கக் கூடிய வாசல். என் மனசுக்குள்ளே வந்து இன்னொருவன் எட்டிப் பார்க்க முடியாது. டிக்கட் வாங்காமல், செலவில்லாமலே பார்க்கக் கூடிய வாசல்" என்று பொருள் படும்படியாக, சிவவாக்கியர் பாடுகிறார்:

"அண்ட வாசல் ஆயிரம், அகண்டவாசல் ஆயிரம்,
ஆறி ரண்டு நூறுகோடி ஆனவாசல் ஆயிரம்,
இந்த வாசல் ஏழைவாசல், ஏகபோகமான வாசல்,
எம்பிரா னிருந்தவாசல், யாவர் காண வல்லிரே!"

இந்தக் கள்ள வாசல் வழியாக, உள்ளே மறித்துப் பார்க்கும்போது, ஆனந்த மயமான வெட்ட வெளியைக் கண்டார் ராமலிங்க அடிகள். இந்த அனுபவத்தை மனிதனுடைய பாஷையிலல்லவா சொல்லித் தொலைக்க வேண்டியிருக்கிறது; சொல்லவும் செய்கிறார்.

ஆனந்தம் ஏற்படும் போதெல்லாம், இயல்பான வாழ்க்கை நடத்துகிறவர்களுக்கு, நடனமாடத் தோன்றும். குழந்தைகள் ஆனந்தத்தை நடனமாடியே காட்டுவார்கள். பறவைகளிலே, மயிலும் அப்படியே காட்டுகிறது. ஆகவே, (மன) வானத்தின் மீது மயிலாடக் கண்டேன் என்று சொல்லுகிறார். ஆனந்தம் மேலிடும் போது, பாடலாகத்தான் பொங்கி வடியும். ஸ்வானுபவ முள்ள நம் நாட்டு ஞானிகள் எல்லாருமே, தாம் கண்ட ஆனந்தத்தைப் பாடல்களில் தேக்கி வைத்து விட்டுப் போயிருக்கிறார்கள். பறவைகளிலே ஆனந்தத்தை எப்படி மயில் ஆடிக் காட்டுகிறதோ, அப்படியே குயில் பாடிக் காட்டி விடுகிறது. தனக் கேற்பட்ட ஆனந்தத்தையும், ஆனந்தத்திலிருந்து உருவான கவிதா உத்ஸாகத்தையும் எப்படியோ ராமலிங்க சுவாமிகள் வெற்றிகரமாகச் சொல்லி விடுகிறார்:

"வானத்தின் மீது மயிலாடக்கண்டேன்,
மயில் குயில் ஆச்சுதடி — அக்கச்சி,
மயில் குயி லாச்சுதடி."




## குகைச் சிற்பம்

பம்பாய் 'எலிபெண்டா' குகைகளில் எத்தனையோ அபூர்வமான சிற்பங்கள் பாரத நாட்டின் கலைப் பெருமைக்கு உன்னதமான சான்றுகளாகத் திகழ்கின்றன. காலஞ்சென்ற ஓவியர் 'சந்திரா' 1949-ம் ஆண்டு பம்பாய் சென்று இந்தக் குகைச் சிற்பங்களைக் கண்டு அனுபவித்துத் தமது இறகினால் அவற்றைச் சித்திர விசித்திரமாக உருவாக்கினார். மேலே உள்ள சித்திரம் சந்திராவின் இத்தகைய கலைப் பொக்கிஷங்களுள் ஒன்று. இதைத் தொடர்ந்து அடுத்து வரும் பக்கங்களில் 'ஓவியர் சந்திரா நினைவுப் போட்டி'யில் பரிசு பெற்ற சித்திரங்களையும் மகிழ்ச்சியோடு இங்கே வெளியிடுகிறோம்.

# ஓவியர் சந்திரா

## நினைவுப் போட்டிச் சித்திரங்கள்

மலரன்னமும், மடவன்னமும்!

எஸ். கோமதிநாதன்
பழவங்காடி, திருவனந்தபுரம்

"தலை வாரிப் பூச் சூட்டும் தாய்"

வி. ராஜேந்திரன்
மயிலாப்பூர், சென்னை-4

# நடிகனும் பாத்திரமும்

கொடுமையான வெயில்; காலில் மிதியடியுமில்லை; நடந்து வருகிறார் ஒரு நண்பர். வீட்டிற்குள் நுழைந்ததும், "அப்பா! மண்டை பிளந்து விட்டது; கால் கொப்பளித்து விட்டது" என்கிறார். நமக்குத் தெரியும், நண்பருடைய மண்டையும் பிளக்கவில்லை, காலும் கொப்பளிக்க வில்லை யென்று. வெயிலின் வேகத்தை அவ்வாறு குறிப்பிடுகிறார் என்பதைப் புரிந்து கொள்ளுகிறோம்.

ஒரு நல்ல நடிகனைப் பற்றிக் குறிப்பிடும்போது, "அவர் நடிக்கவில்லை; அந்தப் பாத்திரமாகவே மாறிவிட்டார்" என்று சொல்லுகிறார்களல்லவா? அதுவும் இப்படித்தான். நடிகனின் திறமையைத்தான் அவ்வாறு குறிப்பிடுகிறார்கள். உண்மையில் நடிகன் பாத்திரமாகத் தன்னை எண்ணிக் கொள்ளுகிறானே தவிர பாத்திரமாக மாறி விடுவதில்லை. அப்படி மாறி விடவும் கூடாது.

நடிகன் மேடையில் நடிப்பதையே மறந்து தான் புனைந்துள்ள பாத்திரமாகவே மாறி விடும்போதுதான் பூரணவெற்றி பெறுகிறான் என்று சில ரசிகர்கள் நினைக்கிறார்கள். உண்மை அப்படியல்ல. பாத்திரமாக மாறுவது என்பதெல்லாம் "வெயிலில் மண்டை பிளந்து விட்டது" என்று சொல்வதுபோல் வெறும் வார்த்தை மயக்கமே தவிர வேறொன்றுமில்லை.

நடிகன் பாத்திரத்தின் குண இயல்புகளை நன்றாகத் தெரிந்துகொண்டு பாத்திரத்துடன் ஒன்றி நடிக்கவேண்டும். ஆனால், 'நாம் நடிக்கிறோம்' என்ற உணர்வு ஒவ்வொரு விநாடியும் நடிகனின் கவனத்தில் இருக்கவும் வேண்டும். அப்போதுதான் அவன் தன் நடிப்பிலே வெற்றி பெறுகிறான். தன்னை மறவாமல் பாத்திரத்தோடு இணைந்து நடிக்கும் வரையில்தான் அதை 'நடிப்பு' என்று சொல்ல முடியும். தன்னை மறந்த நிலையில் உணர்ச்சி வசப்பட்டுப் பாத்திரமாகவே மாறி மயங்கி நிற்கும் நிலையை நடிப்பு என்று சொல்ல முடியாது.

நடிகன் தனக்கு எதிரே வீற்றிருக்கும் சபையின் ரசிக உணர்ச்சியைத் தெரிந்து கொள்ள வேண்டும். மேடையிலுள்ள இதர அமைப்புகளையும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். பாத்திரத்தோடு ஒன்றி நடிக்கும் அதே சமயத்தில் தானாகவும் விலகி நின்று பாத்திரத்தைக் கண்காணிக்கப் பழகிக் கொள்ள வேண்டும். மறந்தும் மறவாத நிலையில் நின்று நடிப்பவன்தான் சிறந்த நடிகனாகக் கருதப்படுவான்.

*    *    *

நாடகத்திலே உணர்ச்சியான ஒரு கட்டம். பாண்டியனுக்கும் சோழனுக்கும் வாட்போர் நிகழுகிறது. கத்திகளை ஒத்திகைப்படி இருவரும் வீச வேண்டும். இல்லா விட்டால் ரத்த காயங்களுடன் விற்க நேரும். பாண்டியனாகவும் சோழனாகவும் வேடம் புனைந்த நடிகர்கள் உணர்ச்சி மேலிட்டால் மெய் மறந்து பாத்திரங்களாகவே மாறி வாள் வீசத் தொடங்கி விட்டால் விபரீதமல்லவா விளையும்!......அதை நடிப்பென்று எப்படிச் சொல்லுவது!

மேடையில் நடிகன் மட்டும் நடிக்க வில்லை. சட்டம், துணி, சாயம், பலகை ஒளி விளக்கு எல்லாமே நடிக்கின்றன. மலையாகவும், கடலாகவும், மலர்ப் பூங்காவாகவும், மணி மண்டபமாகவும் காட்சியளிப்பவை இவைதான். இவற்றில் எதுவும் உண்மை யில்லை. பாத்திரமாக நின்று இவற்றை

டி. கே. ஷண்முகம்



யெல்லாம் மலையாகவும் கடலாகவும், மலர்ப் பூங்காவாகவும் மணி மண்டபமாகவும் எண்ணிக் கொள்ளும் அதே நேரத்தில் நடிகன் தானாகவும் நின்று இவை யனைத்தும் பலகை, சட்டம், அட்டை, துணி இவற்றால் செய்யப் பட்டவை என்பதையும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். தவறினால் அரண்மனை யெல்லாம் ஆட்டம் கண்டு விடும்; சபையோரின் சிரிப்புக்கும் ஆளாக நேரிடும்.

ஒரு சிறிய யானைப் பொம்மை. மரத்தால் செய்யப் பட்டது. ஆனால், இப்போது மரம் மறைந்து விட்டது; யானைதான் தெரிகிறது. அன்பர் ஒருவர் வருகிறார். கொஞ்சம் ஆராயுந் தன்மை கொண்டவர். "இந்த யானை எந்த மரத்தால் செய்யப் பட்டது?" என்று கேட்கிறார். இப்போது யானை மீண்டும் மரமாகி விட்டது. யானைக்குள் மறைந்திருந்த மரம் வெளி வந்து விட்டது.



மரம் யானையாகவும் பூனையாகவும் மேசையாகவும் கட்டிலாகவும் பல்வேறு உருவங்களில் காட்சி யளித்தாலும் அவற்றிலெல்லாம் மரம் என்ற மூலப் பொருள் மறைந்து கிடப்பதை நாம் அறிவோம். அதைப் போலவே கண்ணனாகவும், கருப்பனாகவும், அரசனாகவும், ஆண்டியாகவும் எத்தனை எத்தனை வேறு பட்ட பாத்திரங்களில் நடிகன் தோன்றினாலும் எந்தச் சமயத்திலும் அவன் அப்பாத்திரத்தின் உள்ளே மறைந்து நிற்கிறான் என்பது உண்மை.

உலகப் பற்றில்லாமல் உலகிலே வாழும் யோகிகளை, முனிவர்களைக் குறிப்பிடும்போது "தாமரையிலை நீர் போல் பற்றற்று வாழ்கிறார்" என்று சொல்லுகிறார்களல்லவா? அதைப்போல் பாத்திரத்துடன் ஒன்றுபட்டு நிற்கும் நடிகனையும் 'தாமரையிலை நீர்த்துளி போல் பாத்திரத்தோடு ஒட்டியும் ஒட்டாமலும் நிற்பவன்' என்று கொள்வது பொருத்தமாக இருக்கும். ஆதாரமாக இருக்கும் தாமரை இலையிலிருந்து கீழே விழுந்தால் நீர்த்துளி உருக் குலைந்து போகுமல்லவா? நடிகனை ஆதாரமாகக் கொண்டு நடமாடும் பாத்திரமும் அப்படித்தான். நடிகனை விட்டு விலகினால் உடைந்து சிதறுண்டு போகும்.

மனித உடலில் ஆத்மா எவ்வாறு ஊடுருவி நிற்கிறதோ அவ்வாறே பாத்திரத்தோடு நடிகன் ஊடுருவி நிற்க வேண்டும். நடிப்புக் கலைக்குரிய தத்துவ விளக்கம் இதுதான். மனிதன் செய்யும் ஒவ்வொரு செயலையும் அவனது ஆத்மா கண்காணித்துக் கொண்டிருக்கிறது. எந்தச் சமயத்திலும் மனிதனின் உள்ளுணர்வு அவனுக்கு நன்மை தீமைகளை எடுத்துக் கூறத் தயங்குவதில்லை. எப்போதும் அந்தராத்மா அவனுக்கு அறிவுரை கூறி உடனிருந்து திருத்திக் கொண்டே யிருப்பதால்தான் மனிதன் மனிதனாக வளர்கிறான். நடிகன் நல்ல நடிகனாக வளர்ச்சி பெறுவதற்கும் இந்த உள்ளுணர்வு, அந்தராத்மா துணை செய்ய வேண்டும். வெளிப்புற உணர்ச்சிகள் பாத்திரத்தோடு ஒன்றிக் கிடந்தாலும் அந்தப் பாத்திரத்தைக் கண்காணிக்கும் கருவியாக நடிகனின் உள்ளுணர்வு இயங்கிக் கொண்டே யிருக்க வேண்டும். அவ்வாறு பாத்திரத்திற்கு உணர்ச்சிகளை அடிமைப் படுத்தி விடாமல் தனது உள்ளுணர்வைத் தெளிவாக வைத்துக் கொள்பவனால்தான் நடிப்பில் வெற்றி காண முடியும்.

நான் அவ்வையாராக நடித்து வருகிறேன். எனது நடிப்பிலே அது சிறந்தது என்று நண்பர்கள் பாராட்டுகிறார்கள். மேடையில் நடிக்கும்போது அவ்வையின் பாத்திரத்தை ஒவ்வொரு விநாடியும் ஷண்முகமாகவே இருந்து கண்காணித்துக் கொண்டிருக்கிறேன். கூன் முதுகு, பொக்கை வாய், கை நடுக்கம், முகத்தின் சுருக்கம், தளர் நடை, பெண் குரல் எல்லாவற்றையும் உள்ளுணர்வு சொல்லிக் கொண்டே யிருக்கிறது. இவற்றில் எதை மறந்தாலும் அவ்வையாரின் வேஷம் கலைந்து விடுமல்லவா? இவை மட்டுமா? மேடையிலே திரை விழும் இடங்கள்; ஒளி அமைத்திருக்கும் இடங்கள்; 'மைக்' வைத்திருக்கும் இடங்கள் இன்னும் எத்தனையோ விஷயங்களை 'அவ்வையார்' கவனத்தில் வைத்திருந்தாலல்லவா சபையோர் நாடகத்தை நன்கு ரசிக்கலாம்.

அஷ்டாவதானம், தசாவதானம், சதாவதானம் என்று பெரும் புலவர்கள் அவதானம் செய்து பல விஷயங்களை நினைவில் வைத்துக் கொண்டு அற்புதம் போல் விடை தருகிறார்களல்லவா? நடிகனும் ஏறக்குறைய ஒரு அவதானியாகவே தன்னை ஆக்கிக் கொள்ள வேண்டும். ஆனால் அவதானிகளைப் போல் ஒன்றுக் கொன்று சம்பந்தமில்லாத விஷயங்களை மூளையில் போட்டுக் குழப்ப வேண்டிய நெருக்கடி நடிகனுக்கு இல்லை. மேடையில் நடிப்பின் வெற்றிக்குத் தேவையான முக்கியமான சில அம்சங்களை மட்டும் நினைவில் வைத்துக் கொண்டால் போதும்.

மேடையைத் தவிர வேறு சிந்தனைகள் எதுவும் நடிகனின் உள்ளத்தில் இடம் பெறக் கூடாது. எப்போதும் சபையைப் பொது நோக்காகவே நோக்க வேண்டும். குறிப்பிட்ட எவரையும் பார்ப்பது, கவனத்தை வேறு வழியில் திருப்பக் கூடும். நடிப்பிலே கோளாறு ஏற்பட்டு விடும். நாடகம், பாத்திரம், நடிப்பு, மேடை, சபை இந்தச் சூழலை விட்டு வேறிடத்துக்குப் போகாமல் நடிகன் தனது சிந்தனையைக் கட்டுப் படுத்திக் கொள்ள வேண்டும்.

தன்னை மறந்து பாத்திரமாகவே மாறி உணர்ச்சி வசப்படுவது நடிப்பின் வெற்றியல்ல என்பதை விளக்கினேன். ஆனால், அவ்வாறு உணர்ச்சி வசப்படுவதும் நடிகர்கள் நாளடைவில் திருத்திப் பண்பட்டுவிட முடியும். பாத்திரத்தையே மறந்து தானாகவே நிற்கும் நடிகர்களும் உண்டு. இவர்களால் பாத்திரம் கொலை செய்யப்படுகிறது என்றே சொல்ல வேண்டும்.

மறந்தும் மறவாத வழியே வெற்றிக்குரிய வழி. இது மேடை யேறுபவர்கள் எல்லோருக்கும் வந்து விடாது. நன்கு பயிற்சி பெற்று, பல ஆண்டுகள் நடித்து, அனுபவ முத்திரை பெற்ற நடிகர்களிடமே இந்த உயர்ந்த நடிப்பைக் காணலாம். நடிப்பு என்றும் நடிப்பாகவே இருக்க வேண்டும். அது உண்மையாகி விடக் கூடாது. நான் பல ஆண்டுகளாகப் பெற்ற நாடக மேடை அனுபவம் இந்த அறிவுரையைத்தான் கூறுகிறது.



# குமரியின் கல்யாணம்



சென்னைப் பட்டணத்தின் முக்கிய வீதியான மவுண்ட் ரஸ்தா அல்லோல கல்லோலப் பட்டுக் கொண்டிருந்தது. அரை பர்லாங்கு அகலமும் இரண்டு மைல் நீளமும் உள்ள அந்த அகன்ற வீதியின் தலையில், அப்படி அது பிதி படவேண்டும் என்று எழுதியிருந்தது. எள்ளுப் போட்டால் எண்ணெயாக பிழிந்து விடக்கூடிய அவ்வளவு ஜன நெருக்கம்; கல்லுப் போட்டால் கார்களின் தலையில்தான் விழுந்து ஓடுமே தவிரக் கீழே விழ இடமில்லை. இரு ஓரங்களிலும் சாரி சாரியாக நகர்ந்து செல்லும் மனிதத் தலைகளும், நடுவில் சங்கிலித் தொடர் போல் ஊர்ந்து செல்லும் கார்களும், இவற்றிடையே ஹார்ன்களும், குரல்களும் சேர்ந்து எழுப்பும் நானாவித நாத கோஷ்டி கோஷங்களும் வானைப் பிளந்தன.

இந்த மனிதக் கால்நடைத்திரளும், மோட்டார் தொடர்களிலிருந்த கபிரக் கிரணங்களும், ஏதோ உலகமே வெள்ளை ரூடாக் கடலில் கவிழ்ந்து மூழ்கி விடப் போவது போலவும், தாங்கள் தங்கள் பட்டாடைகளும், ஜரிகை வேஷ்டி அங்கவஸ்திரங்களும் அந்தக் கடல் நீரில் நனையாமல் பாதுகாப்பதற்காகப் பத்திரமான ஒரு குறிப்பிட்ட கேந்திர ஸ்தானத்தை நோக்கி அவசர அவசரமாக விரைந்து செல்வதுபோலவு மிருந்தன. இந்தக் கேந்திர ஸ்தானம், மயிலாப்பூரை வீதியின் நடு மத்தியில் தானிருந்தது. கண்ணுக் கெட்டும் தூரம் வரையில் அந்த இடம் தீபாலங்காரங்களுடன் ஜாஜ்வல்லியமாக ஜொலித்துக் கொண்டிருந்தது. அந்த இடத்திலும் அதன் சுற்று வட்டாரத்தில் இருந்த மரம் செடி கொடிகள் எல்லாம் இந்திரலோகத்திலிருந்து இதற்கென்று இறங்கி வந்த மின்னல் கொடிகளால் நிர்மாணிக்கப் பட்டவை போல் தோற்றமளித்தன.

ராஜ்பஹதூர் அதிசயலிங்கம் என்று நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம்; கேள்விப்படா விட்டால் இப்போது கேள்விப் படுங்கள். ராஜ்பஹதூர் அதிசயலிங்கம் பெயருக்கொப்பவோர் அதிசயமான மனிதர்.

இரண்டாவது மகாயுத்தம் தோன்றி மறைந்து, பிரிட்டிஷ் சாம்ராஜ்யமும், இந்திய எல்லைகளிலிருந்து மறைந்துபோன பின்னரும் அந்தப் பட்டத்தை (இரு "பிராக்கெட்டு"களுக்கிடையே) பத்திரமாகக் காப்பாற்றி வந்ததே ஓர் மாபெரும் அதிசயந்தான்!

அதைவிட மற்றொரு அதிசயம் என்னவென்றால் அவருடைய சந்ததி மறைந்து போகாமலிருப்பதற்காக அவர் குலத்தில் அவதரித்த குமரி கன்யா என்ற அவருடைய செல்வப் புதல்விதான். புத்திர பாக்கியமில்லாமல் ஏங்கிக் கொண்டிருந்த ராஜ்பஹதூர் அதிசயலிங்க தம்பதிகளுக்கு, வெகு காலம் கழித்து, இந்த அதிசயப் பெண் அவசரமாகப் பிறந்தாள். க்ஷேத்திராடனம் செய்து கடைசி

பரதன்



யில் கன்யா குமரி பம்பயைத் தரிசித்து விட்டு வந்த சில மாதங்களுக்கெல்லாம் ஸ்ரீமதி அபிலம் அதிசயலிங்கம், கிழப் போதும் இந்தச் சந்தோஷமான அதிசயத்தை வெளியிட்டாள். அதனால் அந்த கன்யா குமரி அம்மன் பெயரையே குழந்தைக்கு வைத்தார்கள். ஆனால் அப்படியே நேராக 'கன்யா குமரி' என்றழைத்தால் மற்றவர்கள் உண்மையில் அந்த அம்மன் தானோ அவள் என்று ஏமாந்துவிடக் கூடாதென்றிருக்கலாம். அல்லது கன்யாவை முன்னால் வைத்தால் என்றும் கன்னியாகவே இருந்து விட்டால் என்ன செய்வதென்று பயந்திருக்கலாம்; அல்லது குமரி முன்னாலிருந்தால் கன்யா தானாகவே பின் தொடர வேண்டியதுதானே என்ற இயற்கையை யொட்டி அப்படிப் பெயர் வைத்திருக்கலாம். அல்லது பெயரிட்ட அத்தை, அவசரத்தில் வாய் குழறி முன்னுக்குப் பின்னாகப் பெயரை உச்சரித்திருக்கலாம். எதுவாயிருந்தாலும் 'குமரி கன்யா' என்ற பெயர் குழந்தைக்கு நிலைத்து விட்டது. ராவ்பகதூர் அதிசயலிங்கம் தம் அருமைக் குமரியை அந்தக் காலத்து அரசிளங் குமாரிக்கு மேல் மேன்மையாக வளர்த்து வந்தார்.

குழந்தைப் பருவத்தில் 'பேபி'யாக தவழ்ந்த குமரி கேட்டதையெல்லாம் வாங்கிக் கொடுத்தார். பேபி குமரிக்காக அவர் கொண்டு வராத விளையாட்டுச் சாமான்கள் உலகத்தில் இல்லை. ஜப்பானிலிருந்து விளையாட்டுப் பொம்மைகள், ஜெர்மனியிலிருந்து சாவி கொடுத்து ஓடும் வாத்துக்கள், இங்லெண்டிலிருந்து கண்ணடித்துக் கொண்டு பாடும் பொம்மைப் பாப்பாக்கள், ஸ்விட்ஸர்லாந்திலிருந்து மணியை இன்னிசைக் குரலில் கூவும் குயில் கடியாரங்கள், அமெரிக்காவிலிருந்து தூக்கித் தூக்கிப் போட்டு ஓடும் விசைக் குதிரைகள்-இப்படி உலகத்தில் என்னென்ன விநோத விளையாட்டுக் கருவிகள் உண்டோ அத்தனையும் சேகரித்துக் கொடுத்தார்.

பிறவியிலேயே குமரி அசாதாரணமான ஆராய்ச்சி ஆர்வம் படைத்திருந்தாள். விளையாட்டுப் பொம்மைகளும், கருவிகளும் வந்த இருபத்து நாலுமணி நேரத்துக்குள் அவை ஒவ்வொன்றின் அமைப்புக்களையும் அக்கு அக்காகப் பிரித்து ஆராய்ச்சி செய்தாள். இந்த ஆராய்ச்சியின் பயனாக அமெரிக்கக் குதிரை பிரிட்டிஷ் பாப்பா முகத்துடன் கண்ணடித்தது; ஆனால் ஓட்டத்தில் மட்டும் காலை நொண்டியாக்கிக் கொண்டிருந்தது. மணியாகப் பாடும் குயில் ஜப்பானியத் தலையாட்டியைச் சிரச்சேதம் செய்து விட்டு, அதன் தோளில் ஏறி உட்கார்ந்து மௌனம் சாதித்தது. இப்படிக் குழந்தை குமரியின் ஆராய்ச்சியின் பயனாக விளையாட்டுப் பொம்மைகளும், சாமான்களும் புனர் ஜன்மங்கள் எடுத்து, விசித்திரமான நூதன அவதாரங்களாகத் திகழ்ந்தன.

இப்படிக் குழந்தை குமரி கன்யா வளர்ந்து தளிர் நடை போட ஆரம்பித்தது. அந்த நடையை ஜதிஸ்வரத்துடன் இணைப்பதென்று நிர்மானித்து "தாம் தகிடதோம்" என்று குதிக்க வைக்கும் நட்டுவனார்களைக் கொண்டு பயிற்சி யளித்தார்கள். குமாரி குமரி கன்யா பூர்வ ஜன்மத்தில், தேவலோகத்தில் ஒரு தேவதையாக இருந்திருக்க வேண்டும்; அப்போது நாட்டிய கலாதேவியுடன் ஏதோ மனஸ்தாபம் ஏற்பட்டிருக்க வேண்டும்; "பார் உன்னை என்ன செய்கிறேன், உன்னைச் சித்திரவதை செய்யாமல் விட்டேனா!" என்று சபதம் பூண்டு, வரன் வாங்கிக் கொண்டு இந்த பூமியில் மானிட ஜன்மமெடுத்து, 'நாட்டிய கலா சம்ஹார ரூபிணி'யாக அவதரித்திருக்க வேண்டும்; இல்லாவிட்டால் அந்த நாட்டியத்தை அப்படிக் காலடியில் நாசம் செய்யக் கேவலம் ஒரு நரச் சிறுமியால் முடியவே முடியாது. சங்கீத தேவதையும் இதே பாடுதான் பட்டாள்.

ராவ்பகதூர் அதிசயலிங்கமும் அவரது தர்மபத்தினியும் இந்த அபூர்வக் குமாரியைக் கண்டு அப்படியே அகமகிழ்ந்து பெருமையில் மூழ்கி மூழ்கி எழுந்தார்கள். "அபூர்வ கலாவதி" என்று தாங்களே அவளுக்குப் பட்டம் சூட்டி அரங்கேற்றினார்கள்; அரங்கேற்றத்துக்கு அப்புறம், கலாதேவி ஓடி ஒளிந்து மறைந்து கொண்டாள். அப்படியேதான் சங்கீத, நாட்டிய சங்கக்காரர்களும், சங்கடத்துக்குள்ளாகாமல், ராவ்பகதூர் கண்ணில்படாமல் ஒளிந்து கொண்டார்கள்!

ராவ்பகதூர் அதிசயலிங்கம் இதற்கெல்லாம் சளைத்தவரா! சங்கீதமும், நாட்டியமும் தம் அபூர்வ கலாவதியை நாடி வராவிட்டால் அந்தக் கலைகளின் துர்ப்பாக்கியம் அது; அருங்கலைகள் இவை இரண்டுதானா என்ன! ஏன்! ஓவியக் கலை எங்கே போயிற்று! அதற்கு ஒருவர் தயவும் வேண்டாமே! ஊரில் உள்ள வர்ணங்களை எல்லாம் அருமைக் குமரிக்கு வாங்கிக் கொண்டு குவித்தார். உலகத்தில் உள்ள பெயர் பெற்ற ஓவியக்காரர்களின் சித்திரப் படங்களை—அதாவது சித்திரங்களின் புகைப் படங்களைச்—சேகரித்து வைத்தார்; வீட்டிலேயே ஒரு 'ஆர்ட் காலரி' ஆக்கினார். சித்திரம் தீட்டும் கோல்களையும், பிரஷ்களையும், பல நாடுகளிலிருந்து தருவித்தார். 'அபூர்வ கலாவதி'யாக அதிசயக் குமரி திகழாவிட்டாலும், சித்திர கலாவல்லியாக விளங்குவாள் என்று அவர் நம்பினார். இந்தச் சித்திரக் கலையே ஒரு விசித்திரம்தான். 'சாஸ்திரீயம்' என்ற கட்டுப்பாடு வேண்டியதில்லை; எல்லையுங் கொல்லையுங் கட்டுப்பாடில்லாமல், கைபோனபடி வரைகிறார்களே அவ்வளவுக் கவ்வளவு அவை 'நவீனம்' ஆகும்; கால்களை முழு நீளம் போட்டு விட்டுக் கைகளைக் கத்தரிக்காய் போல வைக்கலாம்; உடலைப் பற்றிக் கவலைப் படவேண்டாம்! (யாராவது கேட்டால் தெனாலி ராமன் சொன்னது போல், பூத உடல் மறு பக்கம் இருப்பதாக வைக்கலாம்!) இரண்டு வரிகளைக் கிழித்துவிட்டுக் கயல் விழியாளைக் கற்பனை செய்து கொண்டு விடலாம். எனவே குமாரி குமரிகன்யா சித்திர கலா வல்லியாகத் தன் பெற்றோர்களுக்கும், அவர்கள் மூலம் மற்றோர்களுக்கும் விளங்குவதில் வியப்பில்லை. அவள் வரைந்த 'காடும் மேடும்' 'வீணையும் நாதமும்' 'தனிமை,' 'ஒருமை,' 'பன்மை' '!!' '!!!' '......' முதலிய சித்திரங்கள் அபார வெற்றி யடைந்து, சித்திரக் கண்காட்சிகளில் 'பிரைஸ்' கூட அடித்தன.

ராவ் பகதூர் அதிசயலிங்கமும் அவரது தர்ம பத்தினியும் அகமகிழ்ந்து அளவிலா ஆனந்தத்தில் மூழ்கினார்கள். இதற்கிடையில் அவர்கள் தங்கள் செல்வக் குமாரியின் கல்வியிலும் ஆழ்ந்த கவலை கொண்டார்கள். பிறவியிலேயே அவளுக்கு ஆராய்ச்சி மனப்பான்மை இருப்

பதை பரிந்து, ஆராய்ச்சி நுட்ப சாஸ்திரப் பயிற்சி பயின்றார்கள். ஆராய்ச்சிக் கூடங்களில் அணு அணுவாக ஆராய்ச்சி செய்யச் சந்தர்ப்ப மளித்தார்கள்.

ராவ்பஹதூர் அதிசய லிங்கமும் அவரது தேவியாரும் அறுபதாவது ஆண்டுக் கோட்டைத் தாண்டினார்கள். ஆனால் குமரிகன்யா குமரியாகவே இருந்தாள்; கன்னியாகவே இருந்தாள். அவள் விஷயத்தில் ஒரு கட்டத்தில் வயது என்பது 'பிரேக்' போட்டு நின்று விட்டது. மார்க்கண்டேய வரம் பெற்றவளாக என்றும் பதினாறாகவே குமரி கன்யாவை அவள் பெற்றோர்களும் கருதினார்கள்; அவளும் அப்படியே கருதினாள். அபிராம்பாளுக்கு என்னவோ, பெண்ணுக்குக் கல்யாணம் செய்து விட்டுத்தான் கண்மூட வேண்டும் என்று இருந்தது. ராவ்பஹதூர் அதிசய லிங்கமோ "இதற்குள் கல்யாணம் என்ன வந்தது, குழந்தைக்கு! படிக்கட்டும்; பிறகு பார்க்கலாம்" என்று தள்ளி வைத்துக் கொண்டே வந்தார். அபிராம்பாளின் தொந்தரவு பொறுக்காமல் வேண்டா வெறுப்பாக வந்த வரன்களை யெல்லாம் பார்த்துக் கொண்டும் இருந்தார்.

அந்த அம்மாள் உபத்திரவம் பொறுக்காமல் பார்த்த வரன்களைக் குமரி குமரி கன்யா தனது முழு "வீட்டோ" அதிகாரத்தைப் பிரயோகித்துத் தள்ளிவிடுவாள்.

"சே! அவனு! அவன் மூக்கைப் பார்த்தால் கொஞ்சமும் சகிக்கவில்லை" என்பாள் ஒருவனைப் பார்த்து.

"தூ! குள்ள பாண்டி" என்பாள் மற்றொருவனை.

"ஐயே! பனை மரம் மாதிரி வளர்ந்து கெடக்கிறான்" என்பாள் இன்னொரு ஆசாமியை.

"படிப்பில்லாத பட்டிக்காட்டைக் கட்டிக் கொண்டு யார் வாழ்வது!" என்பாள், வேறு ஒன்றும் அகப்படாவிட்டால்.

"பண மூட்டை எனக்கு வேண்டாம்" என்பாள் லக்ஷாதிபதி குபேரனைப் பார்த்து.

கல்யாணப் பேச்சுப் பேசி அலுத்து ஓய்ந்து விட்டது பெற்றோர்களுக்கு.

"வேளை வந்தால் தானே நடக்கும்" என்றார் ராவ்பஹதூர்.

"அவள் கல்யாணத்தைப் பார்த்து விட்டுத் தான் கண் மூடுவேன்" என்றாள் அபிராம்பாள். யமனும் இதைக் கேட்டுப் பயந்து கொண்டு அந்த வழி வராமலே, வேறு பக்கமாகப் போனான்!

இப்படி ராவ்பஹதூர் எழுபத்தைந்தாவது வயதையடைந்தார். அபிராம்பாள் எழுபதாவது வயதையடைந்தாள்.

குமரி கன்யாவோ! அதே வயதில் கன்னியாகவே இருந்தாள்!

அவளுக்கு வயது முற்ற விட்டாலும், அவள் கல்வியும் ஆராய்ச்சியும் முற்றிக் கொண்டே வந்தன. இந்தச் சந்தர்ப்பத்தில்தான் பத்திரிகையில் வந்த செய்தி ஒன்று அவள் கண்ணில் பட்டது.

* * *

ஆப்பிரிக்காவில், தசாம்போ என்ற ஒரு சிறு பிரதேசத்தில் ஓர் அபூர்வ ஆதிக் குடிகள் இருப்பதாகவும், இதுவரை யாரும் அவர்களைப் பார்த்ததில்லை யென்றும், இது சம்பந்தமாக ஓர் ஆராய்ச்சி கோஷ்டி அங்கு போகப் போவதாகவும் அந்தச் செய்தியில் கண்டிருந்தது.

"இதுவே நாம் காத்திருந்த சந்தர்ப்பம்" என்று வெகுநாட்களாக மறந்திருந்த பரதநாட்டிய பாணியில் ஒரு குதி குதித்தாள் குமரி கன்யா.

அந்த ஆராய்ச்சிக் குழுவுடன் தானும் போகவேண்டும் என்று ஒற்றைக் காலால் நின்றாள் (மீண்டும் பரதநாட்டிய பாணி.) "சரி" என்று அதிசயலிங்க தம்பதிகள் ஒப்புக் கொள்ளாமல் என்ன செய்வது? ஆசிகூறி, மாலைபோட்டு, வழியனுப்பினார்கள், வருத்தத்தோடுதான். விமானம் ஏறி விர்ரென்று பறந்து சென்றாள் நமது கதாநாயகி, தசாம்போ பிரதேசத்தை நோக்கி.

தசாம்போவுக்கும் நாகரிக உலகத்துக்கும் தற்கால போக்குவரத்துச் சாதனங்கள் மிக மிகக் குறைவு; ஒன்றுமே இல்லை என்றே சொல்ல வேண்டும்.

கடைசி ரயிலடியி லிருந்து பாலை வனத்தை ஒட்டகத்தின்மேல் கடந்து, பிறகு அடர்ந்த காடுகளை ஒட்டைச் சிவிங்கிமேல் சவாரி செய்து தாண்டி, குறுக்கே உள்ள காட்டாறுகளை முதலை முதுகில் ஏறிக் கடந்து, காண்டாமிருகம் கட்டிய கட்டைவண்டியில் சவாரிசெய்து, வரிக் குதிரைகள் சகாயத்தால் குன்றுகளைக் கடந்து சென்றார்கள். மூன்று நூற்றுஎழுபத்து நாலாவது நாளன்று ஒரு பயணத்தாக்கில் சமதரைப் பிரதேசத்தை அடைந்தது ஆராய்ச்சிக் குழு.

அக் குழுவின் தலைவிதான் நமது குமரி கன்யா. இந்த ஆராய்ச்சிக் குழுவுக்கு அவளையே தலைவியாகப் பொறுக்கெடுத்தில் ஆச்சரியமில்லை. ஏனென்றால் அக்குழுவில் அடங்கிய ஆறு ஆண் மெம்பர்களும் இந்தப் பெண் புலிக்கு அடங்கி நடக்கத் தீர்மானித்தது இயற்கைக்கும், சம்பிரதாயத்துக்கும், நவ நாகரிகத்துக்கும், ஒரே சமயத்தில் ஒத்த தாகத்தான் இருந்தது.

குமரி கன்யா தேஜஸின் தலைமையில் சென்ற ஆராய்ச்சிக் குழுவினர் தசாம்போ பிரதேசத்தை யடைந்ததும், அங்கு முதலில் மனித சஞ்சாரமே இல்லையென்று நினைத்தனர். அங்கு உயிரே இருப்பதாகத் தெரியவில்லை.

ஆனால் அங்கு நரவாசனையே இல்லை என்று சொல்ல முடியாது. தசாம்போ பிரதேசத்தில் "டோம் டோம்" என்ற மூட்டுக் குள்ள மனிதர்கள் சஞ்சரிப்பதாகச் சில ஆராய்ச்சி நிபுணர்கள் ஊகித்திருந்தார்கள்.

இந்த ஆதிக்குள்ளர்களைக் கண்டுபிடித்து அவர்கள் சாமுத்ரிகா லக்ஷணங்களையும் குணாதிசயங்களையும் ஆராய்ந்தறிந்து உலகத்துக்கு எடுத்துச் சொல்லவே இந்த ஆராய்ச்சிக் குழு தசாம்போவில் இப்போது முகாம் போட்டிருந்தது.

ஆப்பிரிக்க வனாந்திரத்திலே அடர்ந்த காடுகளுக்கிடையே காட்டு மிருகங்கள், காட்டுமிராண்டிகள் சஞ்சரிக்கும் பிரதேசத்திலே தன்னந்தனியாகப் போகக் கூடிய ஒரு பெண்மணி ஜன்மம் உண்டு என்று நம்புவது சற்றுச் சிரமந்தான். ஆனால் அதிசயலிங்கத்தின் அருமைக் குமாரியைத் தவிர வேறு யாராலும் இந்த அரிய சாதனையைச் செய்ய முடியாது என்பது அதிசயம், ஆனால் உண்மை.

குமரி கன்யா தலைமையில் தசாம்போ பிரதேசத்தில் முன்னேறி வந்து முகாம் போட்ட அந்த ஆராய்ச்சிக் குழுவைக் கண்டு வனவிலங்குகள் ஓட்டம் பிடித்தன. ஆனால் அங்கிருந்த "டோம் டோம்" குள்ளர்கள் என்ன ஆனார்கள்! ஆராய்ச்சிக் குழு அங்கு வந்து டேரா போட்டு நாலு



காட்டின் வரையில் அவர்கள் போக்கு முகவையே காணோம். மரப் பொந்துகளிலும், புதர்க்கடியில் சுரங்கங்களிலும் பதுங்கிக் கொண்டிருந்ததாகப் பின்னும் கண்டு பிடிக்கப்பட்டது.

மனித உயிர்ப் பிராணி வாசனையே இல்லாமல் இருந்து காட்டின் வெறிச்சென்றிருந்ததால் கு. க. ஆ. குழுவினரில் (குமரி கன்யா ஆராய்ச்சிக் குழுவினரைச் சுருக்கிச் சொன்னால்) இருந்த ஆண் பகுதி பலிஞ் சடுகுடு ஆட்டம், கொண்டிக் குதிரை விளையாட்டு, கோலி விளையாட்டு, பாண்டி, பல்லாங்குழி, புளியம் புள்ளி, பாட்டு ஆட்டம் முதலிய, சரீரத்துக்கும் மூளைக்கும் நல்ல ஊக்கமளிக்கும் வேடிக்கைகளில் பொழுது போக்கினர். தலைவி கு. க. தேவி ஜிக்கோ இதில் எல்லாம் மனம் செல்லவில்லை. கூடவே கொண்டு வந்திருந்த சித்திரம் வரையும் மூக்காலியையும், பலகையையும், வர்ணப் பெட்டியையும், வரைகோலையும் எடுத்தாள். தனக்கே தனி உரிமையான சித்திரக் கலையில் ஈடுபட்டாள்.

இப்படி அவள் ஓவியக் கலையில் மூழ்கி இருந்த சந்தர்ப்பத்தில் தான் நமது சித்திர கலா வல்லியின் வாழ்க்கையிலேயே அதிர்ச்சி தரும் அதி முக்கியமான அந்தச் சம்பவம் நிகழ்ந்தது. அந்த அதிர்ச்சியானது, ஒரு பூகம்பம், ஒரு கடல் கொந்தளிப்பு, ஒரு மேக கர்ஜனை, ஒரு புயல் இவையாவும் சேர்ந்து, அந்த சப்தங்களுக்கு நடுவில் ஆயிரக் கணக்கான நரிகள் ஊளை விடுவது போல் ஒரு கூச்சலும் கேட்டது. கு. க. ஆ. கு. ஆண்கள் திடுக்கிட்டுத் தங்கள் வேடிக்கைகளை நிறுத்தி விட்டு கு. க. தேவிஜியின் சித்திரப் பலகை மூக்காலிக்குப் பின்னும் ஓடி, மண்டியிட்டுச் சரண் புகுந்தார்கள். தேவிஜியோ மெய்மறந்து சித்திரம் வரைவதில் ஈடுபட்டிருந்ததால் ஒன்றையும் கவனிக்கவில்லை.

அந்த சப்தத்துக்கும் கூச்சலுக்கும் காரணத்தை அறிய அந்தக் காட்டுக்குள் புகுந்து மரங்களுக்குப் பின்னும் சற்று எட்டிப் பார்த்தோமானால் தெரியும். காப்பகத் தோட்டப் போட்டியில் பரிசு வாங்கின பிரம்மாண்டமான பூசனிக் காய்கள் அப்படியே திரண்டு உருண்டு வருவது போல் இருந்தன. இந்த ராக்ஷசப் பூசனிக் காய்களுக்குத் தலை, கால், கை எல்லாம் இருந்தன. "போய் போய்" என்று கூச்சல் போட்டுக் கொண்டே, கையில் கோரைப் புல் ஆயுதபாணிகளாக இந்தக் காட்டு மிராண்டிக் குள்ளர்கள் எங்கிருந்தோ ஈசல் போல் கிளம்பி வந்து கொண்டிருந்தார்கள்.

"போய் போய்" குள்ளர்கள் அதி வேகமாக ஆவேசத்துடன் முன்னேறிக் கோரைப் புல்லை "ஸ்விஷ், ஸ்விஷ்" என்று வாள் வீசுவது போல் வீசி வந்தார்கள். சித்திரப் பலகை மூக்காலிக்குப் பின்னும் பதுங்கி யிருந்த கு. க. ஆ. கு. ஆண் சிங்கங்கள் மூல நடுங்கி மயக்கம் போட்டு விழுந்தனர். கு. க. தேவிஜி மட்டும் சற்றும் சிதறாமல் இமைக்காமல் தன் சித்திரத்திலேயே ஈடுபட்டிருந்தாள்.

"போய் போய்கள்" வட்டமாக வந்து ஆராய்ச்சிக் குழுவினரையும் அவர்கள் தலைவியையும் சூழ்ந்து கொண்டனர். அந்த முரட்டுக் குள்ளர்கள் மூர்த்தி சிறிதாக இருந்தாலும், பலம் பெரிதாக இருந்ததால் மயக்கம் போட்டு விழுந்திருந்த அந்த ஆராய்ச்சி நிபுணர்கள் ஆறு பேர்களையும் அப்படியே கண்டு விரல் நுனியால் ஆளுக்கொருவராக அலாக்காகத் தூக்கிக் கொண்டு, "போய் போய்" முழக்கத்துடன் 'டான்ஸ்' ஆட ஆரம்பித்தார்கள்.

சித்திரக் கலையின் ஒரு சக்தி பாருங்கள், இவ்வளவு அமர்க்களத்திலும் கு. க. தேவிஜி இமை பயக்காமல் வர்ணம் தீட்டிக் கொண்டிருந்தாள். "போய் போய்" படையிலேயே மிகக் குள்ளமாக இருந்த ஒரு ஆசாமி இதைப் பார்த்துக் கிட்டே சென்று கத்திக் கொண்டு அந்தச் சித்திரப் பலகையை நோக்கிப் பாய்ந்தான். சித்திரத்துக்கும் அவனுக்கும் மூன்றடி தூரம் தான்; இன்னொரு பாய்ச்சலில் அவனே சித்திரத்தில் பதிந்து விடுவான். ஆனால் அவனது பார்வை அந்தச் சித்திரத்தின் மேல் பாய்ந்தது; சிவக்காய் இருப்பா விருந்த அவன் கண்கள் ஒரு கணத்தில் 'லைட்' தட்டுப்போல் விரிந்தன. வழக்கமான "போய்" கூச்சலை மறந்து "ஜோய்" என்று வாயைப் பிளந்தும் ஒரு கூச்சல் போட்டான். தரையிலிருந்து பத்தடி ஆகாசப் பக்கம் ஒரு குதி குதித்தான்; மீண்டும் தரையில் அவன் கால்கள் வந்து சேர்வதற்கு முன் அவன் வந்த பக்கம் திரும்பி விட்டது அவன் உடல்; உடனே வெறி வந்தவன்போல் கூச்ச லிட்டுக் கொண்டு வந்த வழியைப் பார்த்து ஓட்டம் பிடித்தான். அவனுடைய சகாக்கள், அந்த ஆறு ஆராய்ச்சி நிபுணர்களையும் அப்படியே 'பொத் பொத்'தென்று பூசனிக்காய்கள் போலக் கீழே போட்டு விட்டுத் தலைவன் வேகமாகப் பின் தொடர்ந்தார்கள்.

மயக்கம் போட்ட நிபுணர்களோ மெல்ல மூர்ச்சை தெளிந்து எழுந்து கண்ணைக் கசக்கிக் கொண்டார்கள்.

"ஆ! என்ன நடந்தது!" என்று ஒருவரை ஒருவர் கேட்டுக் கொண்டார்கள்.

தலைவியைக் கேட்கலாம் என்று மெல்ல கு. க. தேவிஜி முன்வந்து நின்றார்கள். என்ன விந்தை! வலக்கரத்தில் பிடித்த பிரஷ், கையில் அப்படியே இருக்கிறது; இடக்கரம் வர்ணத் தட்டைத் தாங்கி நிற்கிறது. சாக்ஷாத் தேவியே அந்த தாம்போ வனாந்தரத்தில் வந்து காட்சி யளிக்கிறாளோ! இல்லை, பராசக்தியே அந்த அவதாரம் எடுத்திருக்கிறாளோ என்று வியந்தார்கள்.

"ஜோர்...ர்...பூர்...ர்...சிக்...ஜோர்... ச்சி...டிசிக்" என்று சப்தம் வந்தது. திடுக்கிட்டு ஆராய்ச்சி நிபுணர்கள் திரும்பிப் பார்த்தார்கள். தங்கள் அபார ஆராய்ச்சி மூளைக்கு வேலை கொடுத்தார்கள். கடைசியில் சப்தம் எழும்பும் மூலத்தைக் கண்டுபிடித்த கண் பார்வை கூர்மை விழுந்த ஒரு நிபுணர், "அதோ!" என்று சுட்டிக் காட்டினார். எல்லோரும் அந்தப் பக்கம் பார்த்தார்கள். சாக்ஷாத் குமரி கன்யா தேவிஜி ஆழ்ந்த நித்திரைக் கலையில் ஈடுபட்டிருந்தாள்.

கடைசியில் எப்படியோ தட்டி எழுப்பித் தங்களுக்கு ஞாபக சக்தி இருந்த வரையில் தாங்கள் கண்டு அனுபவித்ததைச் சொன்னார்கள்.

"ஆ! அப்படியா! பலே! நாம் வந்த காரியம் இனி வெற்றிதான்! அந்த 'போய் போய்'களைச் சும்மா விடுவதில்லை! தக்க பாடம் கற்பிக்க வேண்டும். நம் ஆராய்ச்சியையும் வெற்றிகரமாக முடிக்க வேண்டும்" என்று சொல்லிக் கொண்டே, ஒரு குதி குதித்து எழுந்து பிரஷ்ஷோடும் கையுமாக 'போய்போய்' படைகள் ஓடியதாகக் காட்டிய திசையில் அவளும் விரைந்து சென்றாள். ஆறு ஆராய்ச்சி நிபுணர்களும் மீண்டும் மயக்கம் போட்டு விழுந்தார்கள்!

மறுபடி அவர்கள் கண் திறந்தபோது, தலை வணங்கிய 'போய் போய்' படை சூழ, குமரி கன்யாதேவி குள்ளர் கோமானை இடுப்பில் தூக்கி வைத்துக் கொண்டு விளையாட்டுக் காட்டிக் கொண்டிருந்தாள். பிறகு அவனைக் கீழே இறக்கி விட்டு, "தம்போ டம்போ ஜம்போ" என்று அதிகார தோரணையில் அவனைப் பார்த்துச் சொன்னாள். அவனும் தலையசைத்துக் கொண்டே "ஜோகம் போகம்" என்றான். மற்ற குள்ளர்கள் "போய் போய்" கோஷமிட்டனர்.

* * *

குமரி கன்யாதேவிஜி தாம்போவிலிருந்து வெற்றி வாகை சூடி ஆராய்ச்சிக் குழுவுடன் நாடு திரும்பியதை வர்ணிக்க ஆயுள் பூராவும் போதாது; ஆகையால் அதை வாசகர்களுக்கு விட்டு விடுவோம். ஆனால் அவள் தாம்போவிலிருந்து கொண்டு வந்த மதிப்பற்ற ஒரு பொருள் — உயிர்ப் பொருள் உண்டு; அதுதான் தாம்போ காட்டுக் குள்ளர் தலைவன் "டபடப்டோ"வின் இதயம். அந்த இதயத்தைப் பின்பற்றியே அதன் சொந்தக்காரனும் வந்து விட்டான். யாத்திரையின் போது குமரி கன்யாவிடமிருந்து காதல் பாஷை மட்டுமல்ல, அவள் சொந்த பாஷையையும் அவன் கற்றுக் கொண்டான்.

ஊர் வந்து சேர்ந்ததும் அவர்களுக்குப் பிரமாத வரவேற்பு ஏற்பாடாகி இருந்தது. அடுத்த உலகத்தை எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த அதிரசலிங்கம் தன் அருமைக் குமரி வந்த ஆனந்தத்தில் மூழ்கினார்; அவள் கலியாணத்தைப் பண்ணி விட்டுத்தான் உயிர் விடுவதாகச் சபதம் செய்த அல்லாம்பாள் அம்மாள் அதற்காகக் காத்துக் கொண்டிருந்தாள். உலகத்தில் அவர்கள் கடைசி ஆசையைப் பூர்த்தியாக்கும் சந்தர்ப்பம் வந்து விட்டது.

ராஜபகதூர் அதிரசலிங்கம் அவர்கள் செல்வக் குமரி கன்யாவுக்கும் தாம்போப் பிரதேசத்தின் மன்னன் டபடப்டோவுக்கும் சுப முகூர்த்தத்தில் விவாகம் தடபுடலாக மேளதாள பாண்டு வாத்திய முழக்கங்களுடன் இனிது நடந்தேறியது. இதே சுப முகூர்த்தத்தில் குமரி கன்யாவின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவும் கொண்டாடப் பட்டது. இந்த வைபவத்தை ஒட்டித்தான் முதலில் வர்ணனை செய்யப்பட்ட சம்பவங்களும் காட்சிகளும் நடந்தேறின.

* * *

சிங்கார மாப்பிள்ளையும் பெண்ணும் தம் தேனிலவைத் தாம்போவிலேயே கழிப்பதெனப் பெரியோர்களால் தீர்மானிக்கப்பட்டு, அவர்கள் அடுத்த கப்பலிலேயே ஆப்பிரிக்காவுக்குப் பயணமானார்கள். ஸ்ரீமதி குமரி கன்யாதேவியின் திருமண வைபவம் இப்படி இனிது நடந்தேறி விட்டதால், அல்லாம்பாள் அம்மாளும் தமது பரலோக யாத்திரைக்குச் சித்தமானாள்; ராஜபகதூர் அதிரசலிங்கத்துக்கு மட்டும் இனி என்ன வேலை இங்கே! அவர் பின்தொடரத் தமது ஜோலிகள் ஆகக் கட்டினார்!

# தி இங்கிலீஷ் சைக்கிள் & மோட்டார் இம்போர்ட்டிங் கம்பெனி லிமிடெட்

(ஸ்தாபிதம் 1916)





4/9, பிராட்வே, மதராஸ்-1

தபால் பெட்டி நெ. 177

தந்தி: "CYCLES" : போன்: 3168

விற்பனையாளர்

- சைக்கிள்கள்
- மூன்று சக்கர சைக்கிள்கள்
- குழந்தைக்குரிய பிராம்புலேட்டர்
- சிறிய டாய் கார்கள்

இன்னும் சகலவிதமான சைக்கிள் சாமான்கள்

★

பல வருஷங்களாகப் புகழ் பெற்ற நம்பிக்கையான ஸ்தாபனம்





## இசைக்கு அருளும் பெருமான்

இந்திரனை வென்று திரும்பியபோது, வழியில் தனக்குத் தடையாக நிற்கிறது என்று கைலாசமலையை ஒரு அசைப்பு அசைத்தானாம் இராவணன். பார்வதிதேவி வெருண்டு போய் எம்பிரானைப் பற்றினாள். புன்முறுவல் பூத்த முகத்தினராய் சிவபெருமான் தமது கால் விரல் ஒன்றினால் மலையை அழுத்தினர். இராவணன் சிக்குண்டான். தப்பிக்க வேறுவழியின்றி அப்படியே வீணையை மீட்டினான் அவன்! அந்த இசையிலே மனம் நெகிழ்ந்து, அவனை மன்னித்து அருளினார் வீணையின் காதலரான சிவபெருமான்.

எப்படிப்பட்ட குற்றத்தையும் கணத்தில் மன்னித்தருளும் கடவுட் பண்பையும், இசையினால் தெய்வமே வசமாகிறது என்ற பெருமையையும் சித்திரிக்கும் இந்தச் சம்பவத்தை அப்பர் சுவாமிகள் எத்தனையோ பாடல்களில் விதம் விதமாகப் பாடுகிறார். இந்தச் சம்பவத்தை ஓவியர் மணியம் கற்பனையிலே கண்டு உருவம் கொடுக்கிறார்.

மணியம்



கையைக் கட்டிக் கொண்டு கம்பீரமாகக் காட்சி அளிக்கும் ஆனந்தர். புத்தரின் சீடர்களில் ஒருவர். பொலன்னருவையில் உள்ள அற்புத சிற்பம். மேலே, அநுராதபுரம் மலைப் பாறையில் உள்ள யானைச் சிற்பம். குளத்தில் இறங்கி விளையாடும் செயலை யானையின் ஒவ்வொரு அசைப்பிலும் காணலாம். கீழே தெரிவது தூபாராம ஆலயம். எதிர்ப் புறத்தில் மேலே காட்சியளிப்பது திலங்க ஆலயத்தில் உள்ள சுவர்ச் சித்திரங்கள். புத்தர் பிரானைத் தரிசிப்பதற்காக தேவர்கள் பக்தியுடன் வருகின்றனர். கீழே: பொலன்னருவையில் உள்ள இலங்கைத் திலக ஆலயமும், கிரிவிகார தாகோபாவும். இந்தத் தெய்வீக அற்புத சிற்பச் சித்திரக் காட்சிகள் நமது ஓவியர் மணியம் நேரில் பார்த்து எழுதியவை.











# சூரியன் மார்க்கு

உயர்ந்த ரக **மைதா** (கோதுமை மாவு)

**சூஜி** (ரவை) - **ஆட்டா** மாவு




தயாரிப்பவர்கள் :

## செஞ்சுரி பிளவர் மில்ஸ் லிமிடெட்.

இந்தியாவில் முதன்மையான நியூமாடிக் மில்

மானேஜிங் ஏஜண்டுகள்

## ஸௌந்தரராஜன் & கம்பெனி லிமிடெட்

221, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-1

போன்: 4165 தபால் பெட்டி 1558 தந்தி: MATHOORAN

உங்களது தொடர்ந்த அன்பும் ஆதரவும் எங்களுக்கு உற்சாகமும், ஊக்கமும் தந்து எங்கள் பொருள்களின் உற்பத்தியை அதிகரிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்யத் தூண்டியிருக்கின்றன என்பதை நன்றியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

EP

# கல்லின் கருணை




அரண்மனை நந்தவனத்தில் கடுகாயமாக விளங்கிய அந்தச் சிலையின் முன்னால் பிரமித்து நின்றான், இலங்கைக்குச் சென்றிருந்த அந்த யாத்திரிகன்.

"இது கன்னிகையின் சிலையாக இருக்க வேண்டும் அல்லது கருணையின் அதி தேவதை யாக வேண்டும். என்னுடைய ஊகம் தவறில்லையே" என்று தன்னுடன் வந்த வழிகாட்டியைக் கேட்டான்.

"இந்தச் சிலை கன்னிகையுமல்ல, கருணைத் தெய்வமுமல்ல. ஒரு காட்டியக் கணிகையின் உருவம் இது" என்றான் அந்த வழிகாட்டி.

யாத்திரிகன் உரைத்தான்:

"ஐயா, இத்தகைய அருள் ததும்பும் கண்களை நான் எங்கும் கண்டதே இல்லை. இந்த முகத்தில் துலங்கும் தெய்வீகமான கருணையும் உடலில் பூரித்து நிற்கும் இளமைச் செழிப்பும் ஒரு சேரச் சேர்த்தி என்றே சொல்லத் தோன்றுகிறது. இத்தகைய பெண் திலகங்கள் வாழும் தங்கள் நாடு புண்ணியத் திருநாடு என்பதில் சந்தேகமில்லை."

யாத்திரிகனது புகழ் மொழிகளைக் கேட்டுச் சிரித்தான் வழிகாட்டி!

யாத்திரிகனுக்குத் திகைப்பு உண்டாயிற்று.

"ஐயா யாத்திரிகரே, இங்கு சிலையாக நிற்கும் காட்டிய கணிகை இந்தப் புண்ணிய நகரத்தில் ஒரு சமயம் வாழ்ந்திருந்தாள் என்பது உண்மைதான். ஆனால் அவள் இங்கு வாழ்ந்த காலத்தில், இந்த நாடு முழுதும் அவள் கொடுமைக்கு ஆளாகிப் பாலைவனமாகக் காய்ந்து கொண்டிருந்தது. இந்தச் சிலையில் தவழ்கின்ற அழகு அவளுடைய அழகுதான். ஆனால் இதன் முகத்தில் சுடர் விடுகிற வாத்ஸல்யம் அவளுடையதல்ல. அது சிற்பி மல்ல நம்பி கல்லிலே தோய்த்த கருணை" என்று விளக்கினான் வழிகாட்டி.

யாத்திரிகன் விடவில்லை. "கொடுமைக்காரியின் சிலையிலே கருணை புணர்ச்சியைப் பெய்து வைப்பதுதான் இந்த நாட்டுச் சிற்பக் கலையா?" என்று ஒரு கேள்வி போட்டான்!

**துறைவன்**

"அதைச் சிற்பி மல்ல நம்பியிடமே நீங்கள் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்" என்று சொல்லி யாத்திரிகனைச் சிற்பசாலைத் தெருவுக்கே அழைத்துக் கொண்டு சென்றான் அந்த வழிகாட்டி.

2

நாட்டின் தலைமை அதிகாரியான அமைச்சர் பெருமானின் கட்டளைக்கு முன்னால் ஏழைச் சிற்பி மல்லநம்பியின் குரல் எடுபடவில்லை.

"தேவநாயகியின் சிலை ஒரு மாதத்திற்குள் சித்தமாக வேண்டும். இது வேண்டுகோள் அல்ல, கட்டளை. தெரிந்ததா?" என்றார் அமைச்சர்.

"தெரிந்தது" என்றான் மல்லநம்பி.

எதிரே கிடந்த கருங்கல்பாளத்தை உற்று நோக்கினான்.

"அந்த தேவநாயகியைக் கல்லில் செதுக்குவதில் தான் எத்தனை பொருத்தம்! அவள் இதயமும் கல்தானே!" என்று நினைத்துப் பெருமூச் செறிந்தான்.

நெஞ்சு பழிக்குப் பழி வாங்கத் தவித்தது. தான் வெறுத்த அந்த நச்சுப் பாம்பின் உருவத்தை மனத்தில் இருத்திக் கொண்டே, சிற்றுளியைக் கையில் எடுத்தான் சிற்பி மல்லநம்பி.

'கல் கல்' என்று கருங்கல்லின் இதயப் பிரலாபம் காற்றிலே பரவலாயிற்று!

3

"மல்லநம்பி இவ்வளவு தூரம் பிடிவாதம் செய்வானென்று நான் நினைக்கவே இல்லை. தலை போய்விடும் என்றுதான், உன் சிலையைச் செதுக்க ஒப்புக் கொண்டான்" என்றார் அமைச்சர்.

மெருகேற்றிய உலோகக் கண்ணாடிக்கு எதிராக, தன் அழகில் தானே லயித்தவளாய் மஞ்சத்தில் சாய்ந்திருந்த தேவநாயகி கலகலவென்று சிரித்தாள்!

அமைச்சர் மாவலியார் அவள் அருகில் அமர்ந்து கொண்டார்.

"ஆயிரம் பொன் தருகிறேன் என்றேன், கேட்டானா? கலையைப் பொன்னுக்கு விலை பேச முடியாது என்று இறுமாப்பாகப் பேசினான். என்னை அவமதித்த கர்வம் இன்று மண்ணில் புரண்டது" என்றாள் தேவநாயகி.

அமைச்சர் சொன்னார்: "எனக்கே அவனுடைய செய்கை வியப்பைத் தான் அளித்தது! சிற்பி மல்லநம்பி அழகுக் கலைஞன். நீயோ இந்த நாட்டின் அழகுத் தெய்வம். உன்னுடைய சிலையைச் செதுக்க மறுத்ததன் காரணம் என்ன என்பதே விளங்கவில்லை."

"இப்பொழுது என்ன சொன்னான்?"

"ஏதோ புலம்பினான். அதைப் பற்றி நமக்கென்ன கவலை? உன் காரியம் வெற்றி பெற்றது. இன்னும் ஒரு மாதம் பொறுத்திரு. சிலை இங்கு வந்துவிடும்."

"தவணை தவறினால்?" என்று கேட்டாள் கணிகை.

"அவனை இங்கேயே இழுத்து வருகிறேன். வழக்கம் போல், தண்டனையை நீயே நிறைவேற்றி விடலாம்" என்றார் மாவலியார்.

தேவநாயகியின் அழகுக் கண்களில் கொடுமை மின்னல் பளிச்சிட்டு மறைந்தது.

4

அரண்மனைக் கவிஞர் தேறுதல் சொல்லத் துவங்கினார் சிற்பிக்கு.

"கைகேயி அயோத்தியைத்தான் கண்ணீர் வெள்ளத்தில் மூழ்கச் செய்தாள். இந்த தேவநாயகி நினைத்தால், நாடே பாலைவனமாகப் போகக்கூடும். நான் என்ன செய்தேன் தெரியுமல்லவா? ஒரு பாட்டு வேண்டும் என்றாள். அவள் கட்டளையை அரசனின் ஆக்ஞையாக மதித்து ஒரு சதகமே பாடி அரங்கேற்றி விட்டேன்."

மல்ல நம்பி கவிஞரிடம் அதிகம் சொல்லாடுவதற்கு விரும்பவில்லை.

"கவிஞரே, இந்தச் சிலையை நன்றாக உற்றுப் பாருங்கள். என்ன தோன்றுகிறது உங்களுக்கு?"

கவிஞர் நன்றாகவே பார்த்தார்.

"தேவநாயகியின் சாயல் அப்படியே கல்லில் பதிந்து விட்டது. தம்பி, கண்கள் தத்ரூபம். அதரங்களைத்தான் எவ்வளவு துல்லியமாகச் செதுக்கி யிருக்கிறாய்! சொல்லுக்குள் வராத அழகையெல்லாம், கல்லில் பொதிந்து விட்டது உன் கலை! இதுவரை நீ செய்த சிலைகளில் எல்லாம், இதற்கே..."

"போதும், போதும்" என்று காதைப் பொத்திக் கொண்டான் சிற்பி மல்லநம்பி.

மறுநாள், அரசவை ஓவியர் வந்தார்.



"இந்தச் சிலையைக் கொஞ்சம் கவனித்துப் பார்க்க வேண்டும். உங்களுக்கு என்ன தோன்றுகிறது?" என்று அவரையும் கேட்டான் சிற்பி.

ஓவியர் தமது கலைக் கண்களால் சிலையைத் துருவித் துருவி ஆராய்ந்தார்.

"தேவகாயவி வந்து பார்த்தால், யாரு இது என்று பிரமித்தே போவாள். அவளைக் கந்தர்வ உலகத்திலேயே சேர்த்து விட்டாய் நீ" என்று பாராட்டினார் ஓவியர்.

வந்த கோபத்தில், கையிலிருந்த சிற்றுளியை வீசி யெறிந்தான் மல்லநம்பி.

"நம்பிக்கு உலக விவகாரங்களில் அநுபவம் காணாது!" என்று முனகிக் கொண்டே ஓவியர் புறப்பட்டார்.

சிலையின் முகத்தில் இடது கண்ணின் மேமைச் சாரலில் ஒரு சிறு கிண்ணம் இருந்ததைக் கவனித்தான் மல்லநம்பி.

"இந்தக் கிண்ணத்தை ஒரு செதுக்கில் கரைத்து விட்டால், கண்ணின் பாவமே மாறி விடும். தேவகாயவியின் இதயக் கொடுமை சிறிதேனும் அங்கு பதிந்து விடும்."

சிற்றுளியின் உச்சியில், சுத்தி சிறிது தயங்கியது. பிறகு மெதுவாகச் சென்று உளியின் உச்சியில் மோதியது. மோதுகிற தருணத்தில், எங்கிருந்தோ காற்று பரபர வென்று வீசி விட்டது.

கிண்ணம் கரைந்தது. ஆனால் சிற்பி நினைத்ததற்கு மாறாகக் கண்களில் அன்புதான் மிகுந்தது. ஊட்ட நினைத்த, கொடூரச் சாயல் பதிய மறுத்து விட்டது. சிலையிலே அழகின் புதிய மெருகு வந்து சேர்ந்தது!

உலகம் தேவகாயவியின் கொடுமையைத் தூற்றிக் கொண்டிருந்தது. ஆனால் சிற்ப சாலையிலோ, தேவகாயவி தெய்விக அழகுப் பிழம்பாக உருவாகிக் கொண்டிருந்தாள்!

## 5

தேவனை கழிந்தது.

தேவகாயவியின் பணியாளர்கள் சிலையை வண்டியில் ஏற்றிச் சென்று விட்டார்கள்.

அன்று மாலை, மல்லநம்பி சிற்ப சாலைத் திண்ணையில் மனமொடிந்து போய் உட்கார்ந்திருந்தான். செய்யாத குற்றத்தைச் செய்து தவிக்கும் தாபம் கண்களிலே தேங்கி நின்றது. கவிஞர் வந்தார்.

"தம்பி, என்ன நேர்ந்து விட்டது உனக்கு? முகமெல்லாம் வாடி யிருக்கிறதே?"

"சிற்பத் தொழிலுக்கு இன்றோடு ஒரு முழுக்குப் போட்டு விடலாமென்று முடிவு செய்திருக்கிறேன்" என்றான் மல்லநம்பி.

"தேவகாயவியின் சிலை அற்புதமாய் அமைந்து விட்டது. உன் கலையின் புகழ் இனிச் சிரஞ்சீவியாய்த் திகழப் போகிறது" என்று சிற்பியை ஆசீர்வதித்தார் கவிஞர்.

மல்லநம்பி ஏளனமாகச் சிரித்தான்.

"ஆமாம் கவிஞரே, தேவகாயவியின் அழகு, நல்ல பாம்பின் அழகு. அந்த அரக்கியின் அழகோடு கலந்து நிற்கும் கொடுமையையும் என் சிலையிலே வடிக்க நினைத்தேன். அழகு அகப்பட்டது, கொடுமை என் சிற்றுளிக்குத் தப்பி விட்டது!" என்றான்.

கவிஞர் வியப்படைந்தார்.

"தம்பி, உன்னையும் என்னையும் ஆட்கொண்டிருக்கும் கலைத்தத்துவமே அதுதான் என்பேன். கலை என்னும் நெருப்பிலே, பொருள்கள் எல்லாம் மாற்று உயருகின்றன. ஒரு விஷயம் ஞாபகம் வைத்துக் கொள். கலையைக் கொண்டு யாரையும் தூற்றி விட முடியாது. தேவகாயவியின் கொடுமை மாத்திரம் சிலையில் பதிந்திருந்தால், அது மனித இதயங்களைக் கவரும் சிற்பமாக இராது. வெறும் கல்லாகத்தான் இருக்கும்!"

மல்லநம்பி தன் கைகளைப் பார்த்துச் சிரித்தான்.

"ஏதோ, கலையின் தத்துவத்தைப் பற்றிப் பேச வந்து விட்டீர்கள். இதைத் தேவகாயவி மட்டும் உணர்ந்தாளானால், என் தோல்வியே வெற்றியாக மாறிப் போகும்" என்று சொல்லி விட்டுப் பெருமூச்செறிந்தான் மல்லநம்பி.

கவிஞர் தேவகாயவியின் கொடுமையை மனத்தால் அளந்து பார்த்தார். அவளை அழகுத் தெய்வமாக நினைத்துக் கொண்டாடப் போகிற வருங்கால மக்களை நினைத்துப் பார்த்தார். விவரிக்க முடியாத துக்கம் உண்டாயிற்று.

வாசலில் குதிரை வீரர்கள் வந்து இறங்கினார்கள்!

அமைச்சரிடமிருந்து அழைப்பு வந்திருந்தது.

## 6

தேவகாயவி கலங்கிய கண்களோடு மல்லநம்பியை வரவேற்றாள்.



ஆசனத்தில் திகைத்தவனாக அமர்ந்திருந்த சிற்பியைப் பார்த்து அவன் கேட்டான்.

"சிற்பியாரே, நீர் செதுக்கிய சிலையைப் பார்வையிட்டேன். முழுதும் என் சாயலாக அது இல்லை என்றே தோன்றுகிறது."

"என் திறமை அவ்வளவுதான். குறைகளைப் பொறுத்து, ஏற்றுக் கொள்ள வேண்டும்."

தேவகாயமி தன் சிலையைச் சுட்டிக் காட்டிய வண்ணம் நிமிர்ந்து பேசினான்.

"இதில் என் அழகு, என் இளமை, என் எழில் எல்லாம் இருக்கிறது. ஆனால் முகத்தில் கனிகிறதே, அன்பு, அது என்னுடையதல்ல. கண்களில் காட்டியிருக்கிறீரே, வாத்சல்யம், அதுவும் நான் இதுவரை உணர்ந்ததில்லை."

இதைச் சொல்லும் பொழுது தேவகாயமியின் கண்களில் கண்ணீர் சுரந்து ததும்பி நின்றது. வேறு பேச்சின்றித் தன் சிலையின் முகவிலாசத்தை மீண்டும் ஒருமுறை கூர்ந்து பார்த்தான். சிலையின் முகத்தில் அழகும் அன்பும் அருளும் கலந்து ஒரு தெய்வீகமான ஜோதி திகழ்ந்து கொண்டிருந்தது.

"இது நானல்ல. இது நானல்ல" என்று முகத்தைக் கைகளால் புதைத்துக் கொண்டு கதறினான் தேவகாயமி. "என் கொடுமை, என் கர்வம் ஒன்றையும் இதில் காணோம், துளிக்கூடக் காணோம்."

சிற்பியும் அமைச்சரும் கவிஞரும் திகைத்துப் போய் விட்டார்கள்.

அமைச்சர் மாவலியார் தேவகாயமிக்கு ஏதோ ஆறுதல் கூறுவதற்கு முயன்றார்.

கண்களில் நீர் மல்க, தேவகாயமி சொன்னான்:

"ஸ்வாமி, இத்தனை காலமாய்த் தங்கள் அன்பு மழை இரக்கமற்ற பாலைவனத்தில் பொழிந்து வீணாய்ப் போய் விட்டது. இனிமேலாவது அது மக்களின் நன்மை வழியிலே பெய்ய வேண்டும். தங்களை வசீகரித்த என் அழகெல்லாம் என் இதயப் பாலையில் பூத்த கானலே என்பதை இன்று தான் உணர்ந்து கொண்டேன். இந்தக் கற்சிலையின் கண்களில் ததும்பும் அருள் என் கண்களைத் திறந்து விட்டது. இனி, இனி, இனி நான் கல் இல்லை!" என்றான்.

7

இலங்கை யாத்திரிகன், சிற்பி மல்லநம்பி கூறிய வரலாற்றைக் கேட்டு ஆச்சரியம் அடைந்தான்.

"சிற்பியாரே, தேவகாயமி பிறகு என்ன ஆனான்?"

"என்ன ஆனான்! தன்னுடைய அழகைக் கல்லுக்குத் தந்தான். கொடுமையை மாத்திரம் எடுத்துக் கொண்டு இரவோடு இரவாக இந்த நாட்டை விட்டே மறைந்து போனான். ஆனால் அவன் அவ்வாறு போயிருக்க வேண்டியதில்லை! கடைசியாக நான் சந்தித்த அன்று, அவன் என் சிலையைப் போலவே இருந்தான். அவன் கண்களில் அழகோடு இரக்கம் கனிந்து நின்றது. கவர்ச்சியோடு அருள் பொலிந்து நின்றது!"

## காதோடு காது!



# தமிழ்க் கடவுள்

# முருகன்

வை. மு. நரசிம்மன்







"முருகன்" என்பதற்கு "அழகன்" என்று பொருள். 'அகத்தியனுக்குத் தமிழைச் செவியறிவுறுத்திய செந்தமிழ்ப் பரமாசாரியன்' அம்முருகக் கடவுள். முருகனைப் பற்றி அருணகிரியார் துதிக்கும் பொழுது "முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழ வைப்போன்", "செந்தில் வாழ் செந்தமிழ்ப் பெரியோனே", "தண்டமிழ் மிகு நேய முருகேசா" எனப் பலவாறு குறிக்கிறார். முருகன் எல்லா மொழிகளுக்கும் கடவுளாயினும் சிறப்பாகத் தமிழ்த் தெய்வம் என்று பல அறிஞர்கள் சொல்கின்றனர். முருகனின் ஆபரணங்களில் தமிழ்ப் பாமாலை ஒன்று என்று அருணகிரியார் பாடுகிறார். குமரகுருபரர் தமது முத்துக் குமாரசாமி பிள்ளைத் தமிழில் பலவாறாக முருகனைத் தனித் தமிழ்க் கடவுளாகப் போற்றுகிறார். மேலும் ஐந்து வயதுவரை ஊமையாக இருந்த இவர் முருகனின் அருளால் தமிழ்ப் புலமை பெற்றார்.

**முருக வழிபாட்டின் தொன்மை:**— இந்தியாவில், "ஸ்கந்த வழிபாடு" மிகப் பண்டைக் காலம் தொட்டே நடந்து வருகிறது. கிறிஸ்து பிறப்பதற்குச் சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே, அதாவது பதஞ்சலி காலத்திலேயே 'ஸ்கந்த வழிபாடு' இருந்ததை, கல்வெட்டுச் சான்று இலக்கிய ஆதாரங்கள் மூலம் டாக்டர் பந்தர்கார் நிரூபித்துள்ளார். காளிதாசனும் "குமார சம்பவம்" என்ற தமது பெருங் காப்பியத்தில் (கி. மு. முதல் நூற்றாண்டு) முருகப் பெருமானது பிறப்பைச் செவ்வனே வருணித்துள்ளார். தமிழ்ச் சங்க இலக்கியங்களில் ஒன்றான பத்துப் பாட்டில் திருமுருகாற்றுப் படை என்ற பகுதி தென்னிந்தியாவிலுள்ள சுப்பிரமணியக் கடவுளைப் பற்றி விரிவாக விளக்கியுள்ளது. ஸ்ரீ டி. ஆர். ஆராவமுத அய்யங்கார் "ஹரப்பாவின் தெய்வங்கள்" என்ற தமது கட்டுரையில் (J. B. R. S. Vol. XXXIV Pts. III and IV 1949.) ஹரப்பா காலத்திலும், முருகனை ஏற்றுக் கொண்டுள்ளதாகவும், (கி. மு. 2300—1800) முருகன் வேதகாலக் கடவுளென்றும் தக்க சான்றுகளுடன் உறுதிப்படுத்தியுள்ளார்.

பொதுவாக, முருகன் மலைநிலத் (குறிஞ்சி) தெய்வம். தமிழ் மக்கள் முதன் முதல் மலையில்தான் வாழ்ந்தனராம். ஆனது பற்றி, தம் கடவுளையும் மலையில் வாழும் தெய்வமாகக் கொண்டனர். இயற்கையிற் காணும் அழகும் பெயர் "முருகு." ஆதலால் இயற்கையையே வடிவாகக் கொண்ட கடவுள் "முருகன்" ஆவர்.

**பல பெயர்களின் காரணம்:**—பிறப்பு முதலான காரணங்களை முன்னிட்டு முருகனுக்குப் பல்வேறு பெயர்கள் வழங்கி வருகின்றன. நெருப்பிலிருந்து தோன்றிய காரணத்தால், "அக்னிபூ" என்றும், மிகவும் சாரமான பிறப்பைக் கொண்டதால் "ஸார ஜன்மா" என்றும், சரவணக் காட்டில் பிறந்த காரணத்தால் "சரவண பவன்" என்றும், கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பட்ட படியால் "கார்த்திகேயன்" என்றும், ஆறு முகங்களை உடைமையால் "ஆறு முகன்" அல்லது "ஷண்முகன்" என்றும், என்றும் மலர்ந்த அழகான முகத்தை யுடைமையால், "கந்தன்" என்றும் திருநாமங்கள் கொண்டான். சுப்பிரமணியனுக்கு வழங்கும் மற்றும் பல பெயர்கள் அவர் செய்த செயல்களின் காரணமாகவும் அவர் தாங்கி நிற்கின்ற படைகளின் காரணமாகவும் ஏற்பட்டவை. தேவசேனைக்குத் தலைமை தாங்கியமையால் தேவசேனாபதி என்று பெயர். வேலாயுதன், தண்டபாணி, சக்திதரன், தண்டாயுதபாணி, போன்ற பெயர்கள் அவ்வாறே பல படைக் கலங்களைத் தாங்கியதால் ஏற்பட்டனவாம். குமரன், பாலசுவாமி போன்ற பெயர்கள் அவரது குமரப்பருவத்தைக் குறிப்பிடுவன. பிரம்மனது செருக்கை ஒரு சமயம் அடக்கினமையால் பிரமசாஸ்தா என்று அவர் பாராட்டப் படுகிறார். தகப்பனாரான சிவபெருமானுக்கு "ஓம்" என்ற பிரணவ மந்திரத்தின் பொருளை உபதேசித்த படியால் அவருக்கு, "சுவாமி நாதன்" "தேசிக சுப்பிரமணியன்" போன்ற பெயர்கள் அமைந்தன. கிரௌஞ்ச மலையைப் பிளந்தமையால் கிரௌஞ்ச பேத்தா என்று அழைக்கப்படுகிறார். இளமையின் வடிவமாக வணங்கப் படும்போதெல்லாம் முருகன் என்ற திருநாமம் அவருக்கு ஏற்பட்டது.

**புராண வரலாறு:**- அவரது பிறப்பைப் பற்றி மகா பாரதம் வன பருவத்தில் குறிப்பிடுகையில், தக்ஷனுடைய மகள் ஸ்வாஹா, என்பவள் அக்னி பகவானிடம் காதல் கொண்டதாகவும், ஆனால் அக்னி பகவான் ஏற்கனவே ரிஷிகளிடத்தில் காதல் கொண்டமையால் ஸ்வாஹாவின் காதலை ஏற்க மறுக்கக் கண்டு அந்த ஸ்வாஹா வானவள் தானே










ஏழு கிருத்திகை மாதர்களில் ஆறு மாதர்களைப் போல் உருவமெடுத்து அக்னியுடன் கூடியதாகவும், அதன் விளைவாக விசாகத்துடைய குணங்களெல்லாம் ஒருங்கே வாய்க்கப் பெற்ற ஓர் மகவு உதித்தது என்றும் கூறும். முழுவுருவம் அமைவதற்கு முன் அக்கினியினுடைய பிந்துக்கள் தங்கப் பாத்திரத்தில் மூடப்பெற்றுக் கிடந்தமையால் "குகன்" எனப் பெயர் வந்தது என ஒரு வரலாறு தெரிவிக்கிறது.

இராமாயணத்தில் கார்த்திகேயனுடைய பிறப்பு வேறு வகையாக விளக்கப்பட்டுள்ளது. சிவபெருமான் தவம் செய்யுங்கால், தேவர்கள் பிரமனிடம் சென்று செறுக்குப் பதிலாகத் தங்கள் சைனியத்திற்கு ஓர் தளபதி வேண்டுமென முறையிட்டுக் கொண்டார்கள். அதற்குப் பிரம்மா விடை பகர்கையில் அக்னிக்கு கங்கை வாயிலாக ஓர் மகவு தோன்றுமென்றும், அம் மகவே தேவசேனைக்குத் தலைமை தாங்குமென்றும் தெரிவித்தார். அதன்படியே அக்னி கங்கையிடம் கார்த்திகேயனைப் பெற்றதாகவும் பிரம்மாவின் விருப்பத்தின்படி காங்கேயன் தேவர்களுக்குச் சேனாபதியாகி பிரஜாபதியின் இரண்டு பெண்களில் ஒரு பெண்ணான தேவயானையை மணந்து கொண்டார். அப்பிரான் போரில் தேவர்களுக்கு எதிராக நின்ற அசுரர்களை வென்று தாரகாசுரனைக் கொன்றமையால் தாரகாரி என்றும் அழைக்கப் பெற்றார்.

மேற்கண்ட சான்றுகள் புராண காலத்தில் வழங்கி வந்த நம்பிக்கைகளை நமக்குத் தெரிவிக்கின்றன. சுப்பிரமணியக் கடவுளின் பிறப்பு பல்வேறு விதமாக வருணிக்கப்படுவதால், இச்சமயம் மிகப் பழமையானதென்றும், ஆகையால் காலவடைவில் அது பலவிதமான நிலைகளை ஏற்றுக் கொண்டதென்றும் கூறலாம். இவ்வாறு செய்திகளிலிருந்தும் அக்னி அல்லது ருத்திரன் சுப்பிரமணியனுக்குத் தந்தையாகவும், கிருத்திகை அல்லது கங்கை தாயாகவும் இருப்பதாகத் தெளிவாகத் தெரிகிறது.

**திருவுருவ அமைப்பு** :—ஆகமங்கள் இக் கடவுளின் திருவுருவங்கள் இன்னபடி அமைக்க வேண்டுமெனக் கூறுகின்றன. சுப்பிரமணியக் கடவுள் குழந்தையாக இருக்கும் பொழுதும், வாகனமின்றி உட்கார்ந்திருக்கும் பொழுதும் இரண்டு கைகளுடனும், தனியே நின்று கொண்டிருக்கும் பொழுது நான்கு கைகளுடனும், மயில் வாகனத்தில் அமர்ந்திருக்கும் பொழுதோ, வாகனத்தின் முன் நிற்கும் பொழுதோ பத்து அல்லது பன்னிரண்டு கைகளுடனும் காட்டப்படலாம். அவருக்கு ஒரு முகம் அல்லது ஆறுமுகங்கள் இருக்கலாம். அவர் எப்பொழுதும் சக்தி, வஜ்ரம் ஆகிய இரு ஆயுதங்களைத் தாங்கி நிற்பார். நான்கு கைகளுடன் அறுவகையாகவும், அவரைப் பிம்பப் படுத்தலாம். சக்தியே அவருடைய விசேஷ ஆயுதமாம். பல ஆகமங்களில் பெயருக்குத் தகுந்தபடி பிம்பங்களைச் செய்ய வேண்டிய வழிகள் எழுதப்பட்டுள்ளன.

ஸ்ரீ தத்வ நிதியில் தேவசேனாபதி என்ற பெயரை போட்டி ஒரு தலை, இரண்டு கண்கள், நான்கு கைகளுடனே அவர் சித்திரிக்கப்படுகிறார். அதில் ஒரு கரம் அபய முத்திரையாகவும், மற்றொரு கரம் வரத முத்திரையாகவும், மற்றும் இரண்டு கரங்கள் சங்கம், சக்கரம் இவைகளைத் தாங்கி நிற்பனவாகவும் கூறப்பட்டுள்ளது.

'குமார தந்திர'த்தில் தேவசேனாபதியினுடைய சிறப்பியல்புகளை எல்லாம் தன் வசத்தே கொண்டு ஆறு தலை, பன்னிரண்டு கைகளுடன் இருக்க வேண்டுமெனக் கூறப்பட்டுள்ளது. தனது மடியில் அமர்ந்துள்ள தேவியின் கழுத்தைத் தழுவிய வண்ணம் இடக் கரமும், தாமரையைத் தாங்கிய வண்ணம் வலக் கரமும், சூலம், கேடயம், வஜ்ரம், வில், கதை, குக்குடம் முதலியவைகளைக் கொண்டு மற்றக் கரங்களும் இருப்பனவாக வருணிக்கப்பட்டுள்ளது.

**முருகன்—ஸர்ப்ப வழிபாடு** :—முருகன் வழிபாட்டுக்கும் ஸர்ப்ப வழிபாட்டுக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதாகத் தெரிகிறது. 'சிவ ஸஸ்திரதம்' என்னும் நூல் சுப்பிரமணியரைப் பிரமச்சாரியாக வருணித்துள்ளது. ஐப்பசி மாதத்து ஷஷ்டி திதி சுப்பிரமணியக் கடவுளுக்கும் ஸர்ப்பங்களுக்கும் விசேஷ நாளாகும். இந்த தினத்தில் ஸர்ப்பங்களுக்குப் பால் வார்த்தல் முதலியனவும், பிரமச்சாரிகளுக்கு உண்டி, உடை வழங்குதல் முதலியனவும் செய்ய வேண்டுமெனக் கூறுகின்றது. சாதாரணமாக நாம் அன்றாடம் வழங்கும் சுப்பன், சுப்பராயன், முதலிய சொற்கள் சுப்பிரமணியக் கடவுளையும் ஸர்ப்பத்தையும் ஒருங்கே குறிப்பனவாகும். முருகனது திருவுருவம் இல்லாத கோவில்களே தென்னாட்டில் கிடையாதெனலாம். முருகன் தென்னாட்டின் சிறப்பான கடவுளாயினும், வடநாட்டின் கண்ணும் முருகனது வழிபாடு நடைபெறுகிறது. அது மட்டுமா ! கடல் கடந்தும் முருகன் வழிபாடு நடக்கிறது. இந்தோனிஷியா, பாலி, கம்போடியா முதலிய தென்கிழக்கு ஆசிய நாடுகளிலும் முருகன் வழிபாடு பரவியது.

**தென்கிழக்கு ஆசிய நாடுகளின் தெய்வம்** :—இந்த இருபதாம் நூற்றாண்டில் எப்படி இந்தியா அந்நிய ஆட்சியை உதறித் தள்ளி, சுதந்திரம் பெற்றுப் பல ஆசிய நாடுகளுக்கு வழிகாட்டி விளங்குகிறதோ, அவ்வாறுவே முதல் நூற்றாண்டிலிருந்து ஐந்து, ஆறு நூற்றாண்டு வரையில் நமது பாரதநாடு பல தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்கு எல்லா வகையிலும் வழிகாட்டியாக இருந்து, தனது கலை, பண்பாடுகளை அங்கு நன்கு வேரூன்றச் செய்தது. அப்பொழுது பல வைணவ, சைவ ஆலயங்களும் அங்கே ஏற்பட்டன. ஆனால், அந்நாடுகளில் பின் ஏற்பட்ட மத மாற்றத்தால் அக்கோயில்கள் பெரும்பாலும் சிதைந்தன. எனினும் எஞ்சியவைகளிலிருந்து பல உண்மைகள் வெளியாகும். ஏறக்குறைய ஒரே வகையான வடிவம் எப்படிப் பல்வேறு இடங்களில் காணப்படுகின்றன என்பதற்கு இங்கு காட்டப்பட்டுள்ள ஏழு புகைப்படங்களுமே தக்க சான்றாகும்.

---

### புகைப்பட விளக்கம்

1. ஜாவாவிலிருக்கும் ஓர் சிலை. 2. காசி சாரநாத் கலாபவன் மியூஸியத்திலிருப்பது. 3-7. யாழ்ப்பாணம் (இலங்கை) நல்லூர்க் கோவிலிலிருந்த பிம்பம். 4. சம்பாவிலுள்ள ஓர் புராதனச் சிலை. 5. ஸ்ரீரங்கத்தின் அருகிலுள்ள சமயபுரத்திலுள்ளது. 6. ராஜஸ்தானின் தலைநகரான ஜயபூர் அருகிலுள்ள அமீர் மியூஸியத்திற்கு நகரிலிருந்து வந்த சிலை.



# குமரியின் கோபம்

ஜெயமணி

அன்று அமாவாசை. எங்கும் கும்மிருட்டாக இருந்தது. தெருவில் இருந்த இரண்டொரு மின்சார விளக்குகள் மாத்திரம் நட்சத்திரங்களைப் போல் ஜொலித்துக் கொண்டிருந்தன.

அந்த விளக்குகள்தான், நாங்கள் இருள் சூழ்ந்த, மனித சஞ்சாரமற்ற வனாந்தரத்தில் இல்லை என்பதை அடிக்கடி எங்களுக்கு ஞாபகப்படுத்திக் கொண்டிருந்தன!

நானும் எனது நண்பரும் கன்யா குமரிக் கடற்கரையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தோம்.

கன்யா குமரிக்குச் சென்றிருந்த நாங்கள் பகலில் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தோம். வங்காளக் குடாக்கடல், அரபிக் கடல், இந்து மகா சமுத்திரம் இம்மூன்றும் சந்திக்கும் அந்தப் புனித ஸ்தலத்தில் கண்கொள்ளாக் காட்சியான சூரிய உதயத்தையும் அஸ்தமனத்தையும் கண்டு அதிசயத்தில் ஆழ்ந்தோம்.

"நீங்கள் இதைக் கண்டு இப்படிப் பிரமிக்கிறீர்களே! சித்திரா பௌர்ணமி தினத்தன்று இந்த இடத்தில் பூரண சந்திரன் கிழக்கே உதிப்பதும், நெருப்புப் போன்ற சூரியன் மேற்கே மறைவதும் ஏக காலத்தில் நிகழும். ஒரே சமயத்தில் கிழக்குத் திசையில் சந்திரனின் முழு உருவத்தையும், மேற்குத் திசையில் சூரியனின் முழு உருவத்தையும் பார்க்கும் வாய்ப்பு வருஷத்தில் அந்த ஒருநாள்தான் கிடைக்கும்" என்றார் என் நண்பர்.

பகலுக்கும் இரவுக்கும் எவ்வளவு வேற்றுமை! பகலில் அந்தப் பிரதேசம் இயற்கையின் இணையற்ற அழகே கம்பீரமான உருவத்துடன் காட்சியளிப்பது போல் தோன்றியது. சுவாமி விவேகானந்தர் போன்ற மகான்களே அந்தப் பிரதேசத்தின் அற்புதத் தோற்றத்தைக் கண்டு பிரமித்து வெகு நேரம் நிஷ்டையில் ஆழ்ந்து விட்டார்கள் என்றால், மற்றவர்களைப் பற்றிச் சொல்லவா வேண்டும்!

மகாபாரத காலத்திலேகூட பாரத நாட்டின் பல பாகங்களிலிருந்தும் சாதுக்களும் சன்னியாசிகளும் சமுத்திர ஸ்நானத்துக்காக கன்யா குமரிக்குச் சென்றனர் என்பதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன.

ஆனால், இரவிலோ அந்த இடம் மனித சஞ்சாரமற்ற இருள் வனம்போல் பயங்கரமாக இருந்தது. 'நீலத்திரைக் கடலோரத்திலே நின்று நித்தம் தவம் செய்யும் குமரி'யின் கோலத்துக்கு ஏற்ற இடமாகவே திகழ்ந்தது!

மறுநாளே நாங்கள் அங்கிருந்து புறப்படவேண்டியிருந்தது. எனவே, பகலில் அனுபவித்தது போல் இரவிலும் அந்தக் காட்சியின் இணையற்ற வனப்பைப் பருகலாம் என்ற உத்தேசத்துடனேயே நாங்கள் இருண்ட பிறகும் அங்கு சென்றோம்.

ஆனால், அன்றையச் சூழ்நிலை எங்களுக்கு மிகுந்த ஏமாற்றத்தையே கொடுத்தது.

இருந்தாலும் குளுகுளுவென்று ஆனந்தமான காற்று வீசிக் கொண்டிருந்ததால், ஒரு மணி நேரத்துக்கு மேல் அங்கு உட்கார்ந்திருந்து விட்டுக் கடைசியில் வீட்டுக்குப் புறப்படலானோம்.

ஆனால், அச்சமயம் குமரி தீர்த்தத்தின் படி வழியாக யாரோ மேலே ஏறி வருவதைக் கண்டதும், எங்கள் கண்கள் அத்திசையை நோக்கின. அந்த இருளில் தனிமையாக ஒருவர் படிகளில் உட்கார்ந்திருந்து விட்டு வருவது ஆச்சரியம் அல்லவா! அதிலும் அவர் ஒரு பெண் என்று தெரிந்ததும் எங்கள் ஆச்சரியம் பன்மடங்கு அதிகமாகியது.

எங்களை நோக்கி வந்த அந்தப் பெண் சிறிது தூரத்தில் திடீரென்று நின்று விட்டாள். அந்த இருளிலும் அவள் எங்களையே உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பதை நாங்கள் கவனிக்க முடிந்தது.

திடுக்கிட்ட நண்பர், "யார் என்று கேளுங்கள்" என்று என்னைத் தூண்டினார்.

ஆம், இரவு பத்து மணிக்கு கன்னிருளில் ஒரு பெண் எதிர்பாராத இடத்தில் தனிமையாக வந்து நின்றால், பேயோ, பிசாசோ என்ற பீதி ஏற்படுவது இயல்புதானே.

நாங்கள் பேசாமல் அவளையே பார்த்துக்கொண்டிருந்தோம். அந்தப் பெண்ணும் மௌனமாக எங்களையே பார்த்துக் கொண்டிருந்ததால், அந்தச் சூழ்நிலையில் எங்களுடைய பீதி அதிகமாயிற்று.

கடைசியில் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு, "யார் அது!" என்று உரத்த குரலில் கேட்டேன்.

உடனே அந்தப் பெண் கலகலவென்று சிரித்தாள். பிறகு எங்களுக்கு அருகில் வந்து, "ஏன், என்னைக் கண்டு பயந்து விட்டீர்களோ!" என்று கேட்டுக் கொண்டே கீழே படியில் உட்கார்ந்தாள்.

நல்ல வேளை! பெண்தான், பேயல்ல என்று என் மனத்தை ஒருவாறு திடப்படுத்திக் கொண்டேன்.

அவளது கேள்வி, என் நண்பருக்கு ஏற்பட்ட பீதியையும் அகற்றி விட்டது.

நாங்கள் அவள் கேள்விக்குப் பதில் அளிப்பதற்கு முன்பு அவளே தொடர்ந்து, "குமரி தேவியின் சந்நிதியில் பயப்படவேண்டிய அவசியமே இல்லை" என்றாள்.

அவள் அவ்விதம் கூறியது, அவளைக் கண்டு நாங்கள் பயந்ததற்காக எங்களைக் கடிந்து கொள்வதுபோல் தோன்றியது.

"ஆமாம், ஆமாம். கன்யாகுமரி மிகவும் சக்தி வாய்ந்த தெய்வம். இங்கு பயப்படுவதற்கு என்ன இருக்கிறது!" என்று சொல்லி நிலைமையைச் சமாளிக்க முற்பட்டேன்.

"சக்தி என்றால் சாதாரண சக்தியா! உலகத்தை உய்விக்கவோ அல்லது எரித்துச் சாம்பலாக்கவோ கூட அவளுக்குச் சக்தி உண்டு" என்றாள் அந்தப் பெண்.

அவள் அவ்விதம் கூறியபோது, அவள் உணர்ச்சி வசப்பட்டிருப்பதை அவளது தொனியிலிருந்து நாங்கள் அறிந்துகொண்டோம். இருளில் அவளை நன்றாகப் பார்க்க முடியவில்லை. எனினும் அவள் மிகுந்த அழகி என்பதையும், அவளுக்கு இருபது இருபத்தைந்து வயதுக்குமேல் இராது என்பதையும் நாங்கள் எளிதில் கவனித்து அறிந்து கொள்ள முடிந்தது.

அவளுடன் மேற்கொண்டு ஏதாவது பேச வேண்டும் அல்லவா! அதற்காக, "இந்த இருளில் தனியாக வந்திருக்கிறீர்களே!" என்று கேட்டேன்.

"நான் இங்கே தான் சமீபத்தில் இருக்கிறேன். தேவி கன்யா குமரியைத் தரிசனம் செய்வதற்காக நான் அடிக்கடி இங்கு வருவது உண்டு."

"நீங்கள் அதிர்ஷ்டசாலிதான். குமரி தரிசனத்துக்காக நாங்கள் வெகு தொலைவிலிருந்து வந்திருக்கிறோம். நீங்கள் இங்கேயே இருப்பதால், நினைத்தபோது தரிசனம் செய்யலாம்" என்றேன்.

சிறிது நேரம் வரையில் அவள் ஏதுவுமே பேசவில்லை. அவளது மௌனத்தைக் கலைக்கும் நோக்கத்துடன், "இரவில் குமரி தேவியின் வைர மூக்குத்தியைக் கண்டு கலங்கரை விளக்கு என்று எண்ணிச் சில கப்பல்கள் இந்தப் பக்கம் வந்து பாறையில் மோதிக் கொண்டு அழிந்து விட்டதாகக் கூறுகிறார்களே, அது உண்மைதானா! அதன் காரணமாக, அதோ தெரிகிற குமரி கோயிலின் வாசற்படியைக்கூட அடைத்து விட்டார்களாமே! நீங்கள் இந்த ஊரைச் சேர்ந்தவர்களாதலால், உங்களுக்கு அதைப்பற்றித் தெரிந்திருக்கலாம் என்றே கேட்கிறேன்" என்றேன்.

அவள் நீண்ட பெருமூச்சு விட்டாள்: "குமரி அப்படியெல்லாம் நிரபராதிகளுக்குத் துன்பத்தை விளைவிக்கும் தெய்வம் அல்ல. ஆனால், பல நூற்றாண்டுகளுக்கு முன் அது போன்ற ஒரு சம்பவம் நிகழ்ந்தது உண்மைதான்" என்றாள்.

"அது என்ன சம்பவம்!" என்று மிகுந்த ஆர்வத்துடன் கேட்டேன்.

அந்தப் பெண்ணும் தனது இனிய குரலில் சொல்லத் தொடங்கினாள்:

"வெகு காலத்துக்கு முன், பலப் பல நூற்றாண்டுகளுக்குமுன், தொண்டி, முசிறி, குமரி, கொற்கை முதலிய துறைமுகங்களிலிருந்து இஞ்சி, மிளகு, ஏலம், கிராம்பு, ஜாதிக்காய், இலவங்கப் பட்டை, சந்தனக் கட்டை முதலிய சாதனங்களும் நவரத்தினங்களும் கூட கப்பல்களில் மலேயா, சுமத்ரா, ஜாவா, கம்போடியா, சீனா முதலிய நாடுகளுக்கு ஏற்றுமதியாகி வந்தன. அப்போது இந்தப் பிராந்தியத்தில் அச்சுதன் நாயர் என்பார் அந்தச் சாதனங்களை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் பிரபல வியாபாரிகளில் ஒருவராக இருந்தார்.

அவர் வெளிநாடுகளில் தமது பிரதிநிதிகளை நியமித்துப் பரந்த முறையில் ஏற்றுமதி வியாபாரம் செய்து வந்தார். இங்கிருந்து சில மைல்கள் தூரத்தில் இருக்கும் ஒரு கிராமத்தைச் சேர்ந்த சுகுமாரன்

நாகர் கம்போடியாவில் அர்சுதம் நாகரின் பிரதிநிதியாக இருந்து வியாபாரத்தைக் கவனித்து வந்தார்.

குமாரன் நாகர் அவரது தூர பந்துவின் குடும்பத்தைச் சேர்ந்த நுதா என்ற பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டார்.

ஒரு தடவை கம்போடியாவுக்குச் சென்ற குமாரன் மூன்று வருஷங்களாகியும் திரும்பி வரவில்லை.

கடைசியாக அவரிட மிருந்து நுதாவுக்கு ஒரு கடிதம் வந்தது. அக் கடிதத்தை அர்சுதம் நாகரே நுதாவிடம் நேரில் கொண்டு வந்து கொடுத்தார். தாம் இன்னும் ஆறு மாதத்தில் திரும்பி வந்து விடுவதாகவும், கவலைப்பட வேண்டாம் என்றும் ஆறுதல் கூறி எழுதியிருந்தார் குமார்.

அதைக் கண்ட நுதா மகிழ்ச்சி யடைந்து, தனது கணவர் சீக்கிரமாகத் திரும்பி வருவதற்கு ஏற்பாடு செய்த அர்சுதம் நாகருக்குத் தனது நன்றியைத் தெரிவித்தாள். தன் கணவரின் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்து வந்தாள். அவர் எவ்வித விபத்துமின்றித் திரும்பி வர அருள் புரிய வேண்டும் என்று தேவி குமரியைப் பிரார்த்தனை செய்து வந்தாள்.

ஆறு மாதங்கள் நுதாவுக்கு ஆறு யுகங்கள் போல் தோன்றின.

கடைசியாக ஆறு மாதங்கள் சென்றன. ஆனால் குமாரன் நாகர் திரும்பி வரவில்லை. அவருக்குப் பதிலாக அவரிடமிருந்து ஒரு கடிதம்தான் வந்தது.

'வியாபார சம்பந்தமாக முக்கிய அலுவல்கள் இருப்பதால் நான் குறிப்பிட்டபடி வர முடியவில்லை. அந்த அலுவல்கள் முடிய இன்னும் எவ்வளவு காலம் ஆகுமோ! ஆகையால், அடுத்த கப்பலில் எனது எஜமானர் வருகிறார். அவருடன் நீ வரலாம். இங்கு நமக்கு வேண்டிய எல்லா வசதிகளும் இருக்கின்றன' என்று அவர் கடிதத்தில் எழுதியிருந்தார்.

தன் கணவரைக் காண வேண்டுமென்ற ஆர்வத்தினால், நுதா யாதொரு ஆட்சேபணையுமின்றி உடனே அர்சுதன் நாகருடன் கப்பலில் புறப்பட்டு விட்டாள்.

அந்தக் கப்பல் புறப்பட்டு இருபத்து நாலு மணி நேரம் ஆயிற்று.

கப்பலில் ஏறிய பின்தான் நுதா தன் நிலைமையை ஆராயத் தொடங்கினாள். அவள் அவ் விஷயமாக யோசிக்க யோசிக்க அவள் மனம் கலக்கம் அடைந்தது. கப்பலில் ஏறியதிலிருந்து அர்சுதனின் போக்கு அவளுடைய சந்தேகத்தை அதிகப்படுத்தியது.

அவ்விஷயமாக நுதா அர்சுதனைக் கேட்ட போது அவன் முதலில் உண்மையை மறைக்கப் பார்த்தான். எனினும், பிறகு தன் கையில் சிக்கிவிட்ட நுதாவிடம் எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரமாகத் தன் அபிலாஷையை வெளியிடுகிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு சீக்கிரமாகத் தன் முயற்சி வெற்றி பெறக் கூடுமென்று கருதினான்.

"நுதா! முதல் முதலாக உன்னைச் சந்தித்தபோது என் மனத்தில் எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை. ஆனால், உன்னை அடிக்கடி சந்திக்க நேர்ந்தது என் மனத்தில் வெறியைத் தூண்டி விட்டது. இதற்கு நான் பொறுப்பாளியல்ல. உன் இணையற்ற அழகுதான் காரணம். நாம் இப்போது கம்போடியாவுக்குப் போகவில்லை. வேறு இடத்துக்குப் போகிறோம். நீ என் கோரிக்கைக்கு இணங்கினால் உனக்கு எவ்விதக் கஷ்டமும் ஏற்படாமல் பார்த்துக் கொள்கிறேன். இதோ இந்தப் பையில் உள்ள வைரத்தொங்கல்களையும் என் சொத்தில் பெரும் பகுதியையும் உன் பாதத்தில் கொட்டத் தயாராக இருக்கிறேன்" என்றான் அர்சுதன் நாகர்.

நுதா தனது தீர்க்கதியான



நிலையை உணர்ந்தாள். அவள் வாய் திறக்கவில்லை.

நுதா மௌனமாக இருந்ததால், காலையில் அவளை எளிதில் தன் வசப்படுத்திக் கொள்ளலாம் என்ற நம்பிக்கை அர்சுதன் நாகரின் மனத்தில் உண்டாயிற்று.

அதே சமயம் நுதாவின் இருதயத்தில் ஒரு பயங்கரமான திட்டம் உருவாகத் துவங்கியது.

அவளுக்கு வந்த கடிதம் பொய்க் கடிதம் என்று அர்சுதன் நாகரே கூறி விட்டான். அப்போதுள்ள நிலையில் அர்சுதன் நாகரின் மனத்தை மாற்ற முடியுமென்ற நம்பிக்கையும் அவளுக்கு இல்லை. பல நாட்களாக அப்போதைக்கு சதித் திட்டம் வகுத்துள்ள அர்சுதன் நாகர், அவள் இருக்கும் இக்கட்டான நிலையில் அவளை இலகுவில் விட்டுவிட மாட்டான்.

ஒரு வேளை, தேவியின் திருவருளால் அவன் மனம் மாறினாலும் அவளை அவள் கணவர் ஏற்றுக் கொள்வார் என்பது என்னநிச்சயம்!

எனவே, இனி அர்சுதன் நாகரின் வலையிலிருந்து அவள் தப்ப முடியாது. அந்நிலைமையில் தன் வாழ்க்கை பாழாகி விட்டதுபோல் அவளுக்குத் தோன்றியது.

அந்தச் சிக்கலிலிருந்து விடுதலை பெறுவதற்கு ஒரே ஒரு வழிதான் இருந்தது. நீண்ட நேரம் சிந்தனை செய்தபின் தர்ம சங்கடமான அந்த வழியையே கைக் கொள்ளத் தீர்மானித்தாள், நுதா.

அன்றிரவு வெகு நேரமான பின் நுதா சத்தடியின்றி எழுந்திருந்தாள். தன் குலதெய்வமான கன்யா குமரி தேவியைப் பிரார்த்தனை செய்தாள். தன் கணவனையும் மனத்தில் நினைத்துக் கொண்டாள்.

"பகவதி! தாயே! குற்றமற்ற என்னை உன்தன் பாதத்தில் ஏற்றுக் கொள். சதி செய்த இந்தச் சண்டாளனுக்குத் தகுந்த தண்டனையை நீயே கொடு" என்று கூறி விட்டுக் கடலில் குதித்து விட்டாள்.

அடுத்த கணம் அவள் கண்ட காட்சியை வர்ணிக்க முடியாது. வானத்துக்கும் கடலுக்குமாகக் குமரி தேவியின் உருவம் நின்றது. தேவியின் நெற்றிக் கண்ணிலிருந்து உண்டான தீ ஜ்வாலை, அர்சுதன் நாகரையும் சேர்த்து அவனது கப்பலைச் சில விநாடி நேரத்தில் சாம்பலாக்கி விட்டது.

அந்தக் காட்சியைக் கண்ட நுதாவின் மனம் குளிர்ந்தது."



அந்தப் பெண் கூறிய விவரம் கேட்டபோது எனக்கு மெய் சிலிர்த்ததுடன், என்னை யறியாமல் என் கண்களிலிருந்து நீர் பெருகியது. அதே சமயம்,

நீலக் கடலோரத்தே
கோலத்திருள் மூன்று
நேத்திரத்தாள்

என்ற கவிச் சக்ரவர்த்தி பாரதியாரின் பாடல்தான் என்னுடைய நினைவுக்கு வந்தது.



இச் சந்தர்ப்பத்தில் என் நண்பர் குறுக்கிட்டு ஒரு கேள்வி கேட்டார். "நுதாவைக் கடல் கொண்டு விட்டது; கப்பலும் தேவியின் கோபத்தினால் சாம்பலாகி விட்டது. நடுக்கடலில் நிகழ்ந்த சம்பவம் உங்களுக்கு எப்படித் தெரிந்தது! அதை உங்களிடம் யார் சொன்னார்கள்!" என்று கேட்டார்.

சரியான கேள்வி! அந்தப் பெண் கூறிய நிறுக் கடத்தக்க கதையில் லயித்திருந்த எனக்கு இந்தக் கேள்வி தோன்றவில்லை.

அக்கேள்விக்கு அப்பெண்ணின் பதிலை இருவரும் மிகுந்த ஆவலுடன் எதிர்பார்த்தோம். அந்தப் பெண் திடீரென்று அவ்விடத்தை விட்டு எழுந்தாள்.

"யாரும் எனக்குச் சொல்லவில்லை. நானே என் கண்களால் நேரில் பார்த்து ஆனந்தம் அடைந்தேன். நான் தான் நுதா. நான் தான் நுதா."

இவ்விதம் உரத்த குரலில் சொல்லிச் சிரித்துக் கொண்டே அவள் திரை கடலை நோக்கி விரைந்தாள்.

கடைசியில் அவளது சிரிப்பொலி பயங்கரமான ஒலிக் கடல் அலைகளின் ஓசையுடன் கலந்தது!

எனினும், அது பல மாதங்கள் வரையில் என் செவிகளில் ஒலித்துக் கொண்டே இருந்தது!

# தீபாவளிப் பரிசு



வாசு மேல் மாடியில் நின்றபடி தெருவை நோக்கிக் கொண்டே யோசனையில் ஆழ்ந்து கிடந்தான். தெருவில் தீபாவளி அமர்க்களம் பிரமாதமாக இருந்தது. எதிர் வீட்டில் ரவிகுமாரும் அவன் மனைவி சரோஜாவும் தங்கள் குழந்தைகளுக்குப் பட்டாசு வேடிக்கை காட்டிக் கொண்டிருந்தனர். அதற்கு அடுத்த வீட்டிலும் வெடிச் சத்தமும் குழந்தைகள் ஆரவாரமும் பிரமாதமாக இருந்தன. இவர்கள் வீடு ஒன்றுதான் நிசப்தமாக இருந்தது, அதாவது தீபாவளி ஓசைகளின்றி. ரேடியோவில் இரட்டைப் பிடில் கச்சேரி வெகு ரம்யமாக நடந்து கொண்டிருந்தது. அதன் நாதம் அழகாக மிதந்து வந்து வாசுவை அரவணைத்துக் கொண்டது.

"சே, என்ன பயித்தியக்காரத்தனம்" என்று பல்முறை கீறல் விழுந்த இசைத் தட்டைப் போல் திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டான் வாசு. அவன் முகம் வேதனையால் சுருங்கிக் கிடந்தது.

என்றுமில்லாமல் அன்று பிற்பகல் அவன், தன் சுபாவத்துக்கே மாறாக நடந்து கொண்டு விட்டான்.

அவன் மனைவி ரமா சமையலறையில் என்னவோ வேலை செய்து கொண்டிருந்தாள். வாசு அகஸ்மாத்தாகக் கூடத்துப் பக்கம் சென்றவன் தான் கண்ட காட்சியில் உடல் மறந்து விட்டான்.

தீபாவளிப் பட்சணம் செய்த கோலம் சமையலறை முழுவதும் பரவிக் கிடந்தது. தட்டுத் தட்டாக லாடுவும், பர்ப்பியும் ஒருபுறம்; காப்பி பில்டரும் சர்க்கரை டப்பியும் ஒருபுறம் இருந்தன. கரி அடுப்பு ஒன்றில் பாத்திரத்தில் வெண்ணெய் கொதித்துக் குபுகுபுவென்று ஆவி வந்து கொண்டிருந்தது. வாசுவின் ஒரு வயதுக் குழந்தை ஸ்ரீதர் சர்க்கரை டப்பிக்குள் ஒரு கையை வைத்துக் கொண்டு மெல்ல எழும்பிக் குதித்து ஆவிச் சுருளைப் பிடிப்பதற்கு முயன்று கொண்டிருந்தான்.

வாசுவின் இதயம் பக், பக் என்று அடித்துக் கொண்டது. உரக்கக் கூவினால் குழந்தை மிரண்டு அடுப்பு மீதே விழுந்து விடுமோ என்ற பீதி அவனை உலுக்கியது. சத்தம் செய்யாமல், அதே சமயம் வேகமாகக் காலை எடுத்து வைத்து, அருகில் வந்தான் வாசு. வீட்டில் மற்றவர்கள் யாவரும் எங்கெங்கோ போயிருந்தனர். அருகில் சென்ற போதுதான் ரமாவும் அந்த அறையில் இருப்பது தெரிந்தது. சுவரைப் பார்த்தபடி முழங்கால்களைக் கட்டிக் கொண்டு குனிந்து என்ன பார்த்துக் கொண்டிருந்தாளோ அவள்!

வாசு குழந்தையை 'லபக்'கென்று அள்ளி எடுத்துக் கொண்டான். ரமா திரும்பினாள். அவள் அழுது கொண்டிருந்ததின் அடையாளமாக அவள் முகம் வீங்கிக் கண்கள் கோவைப் பழங்களாகத் தெரிந்தன. அவை ஒன்றும் வாசுவின் மனத்துக்கு எட்டவில்லை. அவன் இடது தோளில் குழந்தையை இடுக்கிக் கொண்டே வலக் கையில் ரமாவின் முகத்தில் 'பளார்' என்று அறைந்து விட்டான். அவள் முகத்தை அகற்றிய போது மறுமுறை தோளில் ஓர் அடி விழுந்தது.

"என்ன செய்து கொண்டிருந்தாய்! கழுதை!" என்று இரைந்து விட்டு மீண்டும் கையை ஓங்கினான் வாசு. ரமா ஒன்றும் பேசவில்லை. குழந்தையை வாங்கிக் கொள்ளக் கையை நீட்டினாள். ஓங்கிய கையால் சட்டென்று குழந்தையை அணைத்துக் கொண்டு அவன் விர்ரென்று திரும்பி விட்டான். "சே, தொடாதே!" என்று சீறி விழுந்து விட்டுப் பரபரப்புடன் அப்பால் நகர்ந்தான்.

"என்னடா அது!" என்று கேட்டுக் கொண்டே அங்கு வேகமாக வந்தாள் வாசுவின் தாயார்.

"என்ன அம்மா இது! நீங்கள் பட்சணம் செய்கிற அழகும் இதுவும். தீபாவளிக்குப் பட்டாசு, குழந்தையையே கட்டுக் கொளுத்திவிடப் பார்த்து விட்டீர்களே!" என்றான் வாசு கோபத்துடன்.

"என்னடா இது, அசட்டுப் பிசட்டென்று!"

"அசடோ, பிசடோ — நான் ஒரு நிமிஷம் கழித்து வந்திருந்தால் குழந்தை இருந்திராது" என்று ஆரம்பித்து நடந்ததைச் சொன்னான் வாசு.

"ஐயோ! இப்பொழுது தான் அடுப்பை இழுத்து விட்டுப் பின்புறம் போனேன்! அக்கா ரங்கநாதனை அழைத்துக் கொண்டு கடைப் பக்கம் போனாள். ரமா எங்கே!"

"ரமாவோ மண்ணாங் கட்டியோ! அங்கே சுவரோடு முட்டிக் கொண்டு கிடந்தது. தப்புக் கெட்ட..." வாசு நெற நெற வென்று பல்லைக் கடித்துக் கொண்டே மாடிக்கு வேகமாகப் போய் விட்டான்.

"ச்சோ, ச்சோ. குழந்தை அவள். நல்ல நாளும் அதுவுமாக அவளை வையாதே. எனக்குச் சற்று வேலை செய்து கொண்டிருந்தாள். அவளும் சின்னப் பெண் தானே! அவள் வயசுக்கு இப்பொழுது யாரும் கல்யாணமே பண்ணிக்கொள்வதில்லை. இரட்டைப் பின்னலைப் பின்னிக் கொண்டு பள்ளிக்கூடம் போய் வருகிறதுகள்..." என்று அம்மா அடுக்கிக் கொண்டிருந்தது வாசுவின் காதில் விழுந்தது. அவன் ஒன்றும் பதில் சொல்லவில்லை. குமுறிக் கொண்டிருந்த கோபத்துடன் மாடியிலேயே இருந்தான்.

"வாசு!" என்று அழைத்துக் கொண்டே அவன் நண்பன் வெங்கிட்டு வந்தான். அவன் கையில் பொட்டலம் ஒன்று இருந்தது.

"என்னடா! வா! வா!" என்று அவனை வரவேற்றான் வாசு.

"யாரடா கீழே ஒரு பெண் இருக்கிறாளே! கறுப்புப் புடவை, மஞ்சள் கரை... புதிதாக...!"

"என் மனைவிதான். உனக்குத் தெரியாமல் போய் விட்டதாக்கும்!"

"உண்மையாக! எனக்குத் தெரியவே இல்லை. அவளையும் பார்த்துவிட்டு உன்னையும் பார்த்தால் அப்பா – பெண் மாதிரி இருக்கிறது!" என்றான் வெங்கிட்டு.

வாசு ஒன்றும் பதில் சொல்லவில்லை. ரமா அவனுக்கு மிகவும் சிறியவள் என்று இத்துடன் எத்தனையோ பேர் கூறிவிட்டார்கள். அதனால் அந்த விஷயத்தைத் தொடராமல் அவன் பேச்சை மாற்றினான்.

"கையில் என்னடா பொட்டலம்!"

"புடவை, துணி, மணி, தீபாவளி ஜவுளி தான்" என்றான்.

"விடிந்தால் தீபாவளி. இப்பொழுது தானா வாங்கப் போனாய்!"



"அதையேன் கேட்கிறாய்? நான் எந்தப் புடவை எடுத்தாலும் அவளுக்குச் சரிப்படவில்லை. அவளையும் அழைத்துக்கொண்டு கடைக்குப் போனேன். ஏதோ பொறுக்கி எடுத்தாள். நான் அந்தப் பொட்டலத்தை எடுத்துக்கொண்டு இப்படி வந்தேன். அவள் குழந்தையை அழைத்துக்கொண்டு அப்படிப் போனாள். நாளைக்கு உன் மனைவியைக் கூட்டிக்கொண்டு நீயும் எங்கள் வீட்டுக்கு வாயேன். உங்களை அழைக்கத்தான் வந்தேன் நான்" என்றான் வெங்கிட்டு.

"நான் வருகிறேன். அக்காளும் அவளும் பிறகு அங்கு வருவார்கள்" என்று பதிலளித்தான் வாசு.

"நீ அவளை எங்கும் தனியாய் அழைத்துச் செல்வதில்லையா!"

"ஊஹூம். அம்மா, அக்கா அவர்களுடன்தான் போவாள்" என்றான் வாசு. வெங்கிட்டு மௌனமாகக் கேட்டுக்கொண்டான். பிறகு ஏதேதோ பேசிக்கொண்டிருந்து விட்டு வெங்கிட்டு அங்கிருந்து போய் விட்டான்.

அவனை வழி அனுப்ப வாசு கீழே இறங்கி வந்தான். அப்பொழுது கீழே என்னவோ வாக்குவாதம் நடந்துகொண்டிருந்தது. ரமாவின் பெயர் அடிபடவும் வாசு செவியைத் தீட்டிக்கொண்டு கேளாது போல் கேட்டான்.

"அவளுக்குக் குளிப்பாட்டத் தெரியுமா, அம்மா, சின்னவள். குழந்தையைக் கீழே போட்டு விட்டால் என்ன செய்வது! நீ போய்த் தண்ணீர் விடு. அவள் வேண்டுமானாலும் கூட இருக்கட்டும்" என்று அக்கா கூறிக் கொண்டிருந்தாள்.

"அவளைக் குழந்தையைக் குளிப்பாட்டச் சொல்வேனா! எண்ணெய், சீகாய் எடுத்து வைத்து, பிறகு துடைத்துப் பவுடர் போட்டு எல்லாம் செய்யட்டுமே!" என்றாள் அம்மா.

வாசு மீண்டும் மாடிக்கே சென்றான். போகும் வழியில் அவன் மனைவி ரமாவும், அக்காவின் மகன் ரங்கநாதனும் ஏதோ பொம்மைப் புத்தகங்களைப் புரட்டிக்கொண்டிருந்ததைக் கண்டான்.

ரமாவும் ரங்கநாதனும் ஒரே வயது. பதினாறு. அவன் இந்த வருடம்தான் கல்லூரி சேர்ந்திருந்தான். ரமாவும் அவனும் ஏதோ விளையாட்டாகப் பேசிக்கொண்டு இருப்பார்கள்.

அந்தக் காட்சியைக் கண்டதும் வாசுவுக்கு வெங்கிட்டுவின் சொற்கள் நினைவுக்கு வந்தன. தான் செய்தது தவறு தானோ என்று அவன் யோசித்தான்.

போன வருடம் அவனுக்குக் கல்யாணமான போது அவனுக்கு வயது இருபத்தேழு; ரமாவுக்குப் பதினைந்து. தன்னை விடப் பன்னிரண்டு வயது சிறியவளை மணந்து கொள்கிறோமே என்று அப்பொழுது அவனுக்குத் தோன்றவில்லை. பிறகுதான் அதைப் பற்றி நினைக்கச் சந்தர்ப்பங்கள் ஏற்பட்டன.

வாசு ஒரே பிள்ளை. அவனுடைய அக்காவுக்குக் கல்யாணமாகிக் கணவன் வீடு போன பிறகு பிறந்தவன் அவன். அதற்குப் பிறகும் வீட்டில் குழந்தைகள் பிறந்தன. அவர்கள் இருவரும் ஆண் குழந்தைகள். ரங்கநாதனுக்குப் பதினாறு வயதாகிய பிறகு இன்று வாசுவின் குழந்தை தான் வீட்டில் சின்னக் குழந்தை விளையாட்டுடன் விளையாடியது. இதனாலெல்லாம், ரமாவை அழைத்து வந்ததும் பெண் குழந்தை இல்லாத குறையைத் தீர்க்க வந்த மகளாகவே பாவித்து வாசுவின் பெற்றோரும், அக்கா வீட்டினரும் அவளை மிகவும் செல்லமாக வைத்துக்கொண்டிருந்தனர். "ரமா!" என்று உரத்துக் கூட அழைக்க மாட்டார்கள்.

அத்தகைய ரமாவை இன்று வாசு அடித்து விட்டான். அடித்தது மட்டுமா! கண்டபடி திட்டியும் விட்டான். வாசுவின் நெஞ்சு மிகவும் உறுத்தியது.

'என்ன முட்டாள்தனம் செய்து விட்டேன்!' என்று மனம் நொந்து கொண்டான் வாசு.

சாப்பிட அழைத்தார்கள். வாசு இறங்கிப் போய் மௌனமாகச் சாப்பிட்டுவிட்டு வந்தான். ரமாவைத் தீண்டி அடித்து விட்டதைக் குறித்துத் தப்பாகக் கேட்பாரோ என்று பயந்து கொண்டிருந்தான். ஆனால் ஒருத்தரும் அதைப் பற்றிப் பேச்சே எடுக்கவில்லை. கூடமாடப் பரிமாறும் சமயம் நிமிர்ந்து பார்த்த போது ரமாவின் கண்கள் வீங்கியிருப்பதைக் கண்டான் வாசு. அதன் பிறகு அவனுக்கு உணவு பிடிக்கவில்லை. மெள்ள விழுங்கி விட்டு எல்லோருடனும் எழுந்து முன் பக்கம் போய் விட்டான்.

இரவு வெகு நேரம் வரை அக்காவும் ரமாவும் இழைகோலமிட்டுக் கொண்டிருந்தனர். அதுவும் முடிந்து விடியற்காலம் மங்கள ஸ்நானத்துக்கு வேண்டிய எண்ணெய், குத்துவிளக்கு மற்றுமுள்ள சாமக்கிரியைகளையெல்லாம் எடுத்து வைத்து விட்டு அவர்கள் எப்பொழுது தான் படுத்தார்களோ! வாசு தன் கட்டிலில் படுத்துச் சிறிது கண் அயர்ந்து விட்டான். எழுந்து பார்த்த போது அருகில் ரமாவுமில்லை, குழந்தையுமில்லை. வாசுவுக்குத் தன் செய்கையும் ரமாவின் வெந்த கண்களும் நினைவு வந்து வாட்டின. அவன் மெல்ல எழுந்து அவளைத் தேடி அடுத்த அறைக்குச் சென்றான். தூளியில் குழந்தை உறங்கியது. அருகில் தரையில் பாயில் படுத்துக் கொண்டிருந்தாள் ரமா. அவள் கையில் தூளி ஆட்டக் கயிறு இருந்தது. மெதுவாகச் சென்று அவளைத் தட்டி எழுப்ப வேண்டும் என்று நினைத்து அடியெடுத்து வைத்தான் வாசு.

"என்னடா வேண்டும்!" என்று அக்கா குரல் கேட்டது.

"குடிக்கத் தண்ணீரே கொண்டு வைக்கவில்லை, ரமா" என்று கூறிச் சமாளித்துக் கொண்டான் வாசு.

"பாவம், அவளும் என்னுடன் ஆசை ஆசையாக எவ்வளவு கோலம் போட்டு, செம்மண் இட்டு எல்லாம் செய்திருக்கிறாள்! குழந்தை வேறு இன்றைக்கு என்னவோ தூங்காமல் தொல்லை கொடுத்தது. தூளியில் போட்டு விட்டு இங்கேயே படுத்து விட்டாள், உன் உறக்கம் கலையக் கூடாதென்று" என்று வியாக்கியானம் செய்து விட்டு அக்கா ஒரு செம்பு நிறையத் தண்ணீரைக் கொண்டு கொடுக்கவும், வாசு அதைப் பெற்றுக் கொண்டு தன் அறைக்கு மீண்டான். இரவு முழுவதும் அவனுக்கு உறக்கமே இல்லை. புரண்டு புரண்டு படுத்திருக்கையிலேயே அவனை எழுப்பி விட்டார்கள்.

ஸ்நானம் செய்ய வெந்நீர் அறைக்குச் சென்றான் வாசு. வெந்நீர் விளாவி எடுத்து வைத்துக் கொண்டிருப்பாள் ரமா, அவளிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டும் என்று நினைத்தான் அவன்.

ஆனால் அங்கு அந்த வேலையில் ரங்கநாதன் ஈடுபட்டிருந்தான்.

"ரங்கு, ரமா எங்கேடா! உனக்கு என்ன தெரியும்! அவளைக் கூப்பிடு" என்றான் வாசு.

"மாமிதான் எடுத்து வைத்து விட்டுப் போனாள். மாடு கறக்கிறவன் வந்து விட்டானாம். பால் 'வாங்கப் போனாள்" என்று பதில் வந்தது!

வாசு ஸ்நானம் செய்ததும் முன் பக்கம் வரும் போதே அவன் தாயார் புத்தாடைகளைப் பிரித்துக் கொடுத்தாள். தன்

அறையில் போய் அவைகளைத் தரித்துக் கொண்டாள். எப்படியும் பட்சணங்களை எடுத்துக் கொண்டு ரமா வருவாள் என்று அவன் நம்பினான்.

"வாசு! சங்கரன், ராமகிருஷ்ணன், எல்லோரும் வந்திருக்கிறார்கள், நீயும் அவர்களுடன் சேர்ந்து பட்சணம் சாப்பிடு" என்று அம்மா அழைத்தாள்.

வாசு நண்பர்களுடன் பேசிவிட்டுப் பட்சணங்களைப் புசித்தான். அவன் மனம் மட்டும் ஒன்றிலும் ஈடுபடவில்லை. ரமாவும் அவன் இருக்கும் இடத்துக்கே வரவில்லை. பகல் போஜனம் முடிந்ததும் அவன் தன் நண்பன் ஒருவன் வீட்டுக்குச் சென்று விட்டு வெகுநேரம் கழித்தே வீட்டுக்கு வந்தான்.

அப்பொழுது கூடத்தில் எல்லோரும் உறங்கிக் கொண்டிருந்தனர். குழந்தை தொட்டிலில் படுத்துக் கொண்டு கால் கட்டை விரலைச் சப்பி விளையாடிக்கொண்டிருந்தது. வாசு குழந்தையை வாரி எடுத்துக் கொண்டு அவன் அறையில் குறுக்கும் நெடுக்கும் நடமாடலானான். அப்பொழுது தான் அவளைக் கவனித்தான்.

ரமா கட்டிலின் மீது படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தாள். சின்னஞ் சிறு பொம்மை போன்ற உருவம். குழந்தை முகத்தோடு கூடிய இளமை. ஒரு கையைத் தலைக்கு அடியில் மடித்து வைத்துக் கொண்டு அவள் படுத்திருப்பதைக் காணவே அழகாயிருந்தது. வாசு சற்று நேரம் அப்படியே அவளைப் பார்த்துக் கொண்டு நின்றான். பிறகு மெல்லக் குழந்தையை அவள் மீது விட்டு, "அம்மாவை எழுப்படா" என்றான் மெதுவாக.

தலை மயிர் தலையணைமீது புரண்டு கொண்டு இருந்ததை அள்ளிக் கொண்டே விழித்தெழுந்தாள் ரமா. வாசு அவளைப் பார்த்து மிக்க பரிவுடன் முறுவலித்துக் கொண்டான்.

"ரமா, உன்னைக் காட்டுமிராண்டித் தனமாக அடித்து விட்டேனே! வெகு நேரம் அழுது கொண்டிருந்தாயா!" என்று கேட்டான் அவன்.

அவள் இலேசாகப் புன்முறுவல் பூத்தாள். பிறகு வெளிச்சத்தில் தன் கன்னத்தைக் காட்டினாள். அவளுடைய [illegible] வாசுவின் விரல்கள் இரண்டு பதிந்து விட்டிருந்தன. வாசு அந்த இடத்தைத் தடவிக் கொடுத்தான். அவள் முகம் வேதனையால் வாடியது.

"ரமா, உன் கண்ணெல்லாம் சிவந்து கிடந்ததைக் கவனித்துக் கொண்டேதான் இருந்தேன். ஆனால் நேற்று முதல் இது வரை என் பக்கமே வரவில்லையே நீ! நேற்று ராத்திரி நான் தூங்கவேயில்லை, தெரியுமா!" என்றான் வாசு.

"நேற்றுத்தான் நான் நிம்மதியாகத் தூங்கினேன்."

"பின்னே! நீ அழுத அழுகைக்கு..."

"நீங்கள் அடித்ததற்காக நான் ஒன்றும் அழவில்லை!"

"பின் எதற்காகவாம்!"

"நீங்கள் சமையலறையில் வரும்போதே நான் அழுது கொண்டிருக்கவில்லையா!"

"ஆமாம், கவனித்தேன். ஆனால் அந்தச் சமயம் இருந்த ஆத்திரத்தில் ஒன்றுமே என் கருத்தில் படவில்லை. சொல் ரமா, என்ன குறை உனக்கு!" என்றான் வாசு.

"சொன்னால் சிரிக்க மாட்டீர்களே!"

"இல்லை, சொல்!"

"போன தடவை ஊருக்குப் போயிருந்தேனே! என் தங்கை ராதையும் அங்கே வந்திருந்தாள்."

"ஆமாம். அவளுடன் இருக்க வேண்டும் என்றுதானே போனாய்!"

"ஆமாம்! இப்பொழுதுதான் கல்யாணமாகி அவளுக்கு ஒரு மாதம்கூட ஆகவில்லை. அவள் வீட்டில் எல்லாம் அவள் பொறுப்பாம். வீட்டையே அவளிடம் ஒப்படைத்து விட்டுச் சமையல் கூடச் செய்யாமலே போய் விடுகிறார்களாம். எனக்கு ஒன்றும் தெரியவில்லை என்று அவள் கேலி செய்தாள்" என்ற போதே ரமாவின் தொண்டை அடைத்தது.



"தீபாவளி நல்ல நாளாயிற்றே என்று அதை நினைத்து கொண்டு அழுதாயாக்கும்!" என்றான் வாசு.

"என்னை இந்த ஸ்ரீதரைவிடச் சின்னவளாகப் பாவிக்கிறார்கள் இந்த வீட்டில்" என்றாள் ரமா குறை கூறும் பாவனையில்.

"ராதையை அருமையாக நடத்தத் தெரியவில்லை அவர்களுக்கு. உன் மீது அன்பாக இருக்கிறார்கள் இவர்கள். அது கூடத் தப்பாக்கும்!"

"என்ன அன்பு வேண்டி கிடக்கிறது! மத்தியானம் அடுத்த வீட்டுக் காவேரி அம்மாள் வந்தாள். அம்மாவையும் அக்காவையும் அவசரமாக எதற்கோ கூப்பிட்டாள். எரிந்து கொண்டிருந்த அடுப்பை இழுத்துப் போட்டு விட்டு அவர்கள் போகிறார்கள். நான் அக்காவிடம் போய், 'அக்கா, ஓமப்பொடி வேண்டுமானால் நான் பிழிந்து வைக்கிறேனே!'... என்றேன்."

"என்ன சொன்னார்கள்!"

"அக்கா கரிசனத்தோடு 'வேண்டாம். குழந்தையைப் பார்த்துக் கொள்' என்று கூறி விட்டாள். அம்மாவோ 'சின்னக் குழந்தை. அவளிடம் இந்த வேலையை ஒப்படைப்பதா!' என்கிறார்கள்."

வாசு 'ஓ' வென்று சிரித்தான். "பெரிய மனுஷியாக்கும் நீ! சற்றுமுன் நான் இங்கே வந்தபோது நீ தூங்கிக் கொண்டிருந்தாயா! நான் அப்பொழுது என்ன நினைத்தேன் தெரியுமா!"

"என்ன நினைத்தீர்கள்!"

"'இவளே ஒரு குழந்தை. இவளுக்கு ஒரு குழந்தையா!' என்று நினைத்தேன்."

ரமா அதை ரசித்ததாகத் தெரியவில்லை! வாசுவைத் தாண்டி அவள் வெளியே போகலானாள்.

"சற்று நில், போகலாம்" என்றான்.

ரமா சட்டென்று அவனை நிமிர்ந்து பார்த்து, "மறுபடியும் சொல்லுங்கள்" என்றாள் ஆதுரத்துடன்.

"எதைச் சொல்ல! சற்று நில்லு என்று! இதில் என்ன இருக்கிறது!"

"மறுபடியும் சொல்லுங்கள்" என்றாள் ரமா மலர் முகத்துடன்.

"பயித்தியமா உனக்கு!"

"அதெல்லாம் ஒன்றுமில்லை. ஒன்று தெரியுமா உங்களுக்கு! நேற்றுத்தான் முதல் முதல் என்னை நீங்கள் உரிமையோடு அழைத்திருக்கிறீர்கள். நேற்று அம்மாவும், அக்காவும் என்னை ஒரு வேலைக்கும், ஒரு பொறுப்புக்கும் அருகதையில்லை என்கிறார்களே என்ற வருத்தம் என் நெஞ்சை உடைத்தது. அழுது கொண்டே [illegible] செய்து வந்தேன்."

"அம்மா உன் அழுகையைப் பார்த்தார்களா!" என்றான்.

"அப்படி அழுவேனாக்கும்! அம்மா பின்புறம் போனார்கள். அக்கா கடைக்குப் போய் விட்டார்கள். பிறகுதான் மனம் விட்டு அழுது தீர்த்தேன். குழந்தை வந்ததைக் கூடக் கவனிக்கவில்லை."

"உடனே நான்வந்து அடித்து விட்டேனாக்கும்!" என்றான் வாசு.

"ஆமாம்."

"அப்பொழுது நீ என்ன நினைத்தாய்!" என்று கேட்டான் வாசு.

"என்ன நினைத்தேன்! 'இப்படி ஒரு நல்ல காலமா! நம் கணவர் நம்மைச் சமமாகப் பாவித்துக் கண்டிக்கவும் செய்வாரா!' என்று புளகாங்கிதமடைந்தேன்."

"கேலியா செய்கிறாய்!"

"இல்லை. உண்மையாக நீங்கள் 'அழாதே' என்று அதட்டியதும் எனக்குச் சந்தோஷந்தான். அம்மா அப்புறம் பேசியதுதான் என் உள்ளத்தைத் தைத்தது."

வாசு செல்லமாக அவளைக் கன்னத்தில் தட்டிவிட்டுச் சிரித்தான். குழந்தை ஸ்ரீதர் தன் தாயின் தலைப்பின்னலை எடுத்து, அடித்து அடித்து விளையாடினான்.

"ரமா, மறந்து விட்டேனே, உனக்குத் தீபாவளிப் பரிசு வாங்கி இருக்கிறேன்!" என்று கூறிப் பீரோவிலிருந்து ரோஸ் கலர் ரிப்பனை எடுத்துக் கொடுத்தான்.

"[illegible] தானே!" என்று கேட்டுவிட்டுச் சிரித்தாள் ரமா.

"சரிதான், போ!" என்றான் வாசு.

இருவரும் கலகலவென்று சேர்ந்து சிரித்தனர். குழந்தை ஸ்ரீதரும் எல்லாம் புரிந்தது போலக் கையைக் கொட்டினான்.





சங்காதத்தின் முழக்கம், தேர்ச்சி பெற்ற விரல்களால்
அழகாக வரையப்பட்ட சம்பிரதாயமான
கோலங்கள், மின்னும் விளக்குகள், எல்லாம் சேர்ந்து
மகிழ்ச்சியும் கொண்டாட்டமும் நிறைந்த இந்த
சுப விழாவை சோபிக்கச் செய்கின்றன.

குதூகலமான மனதுடன் இதில் நாமும் கலந்து
கொண்டு, அமைதியும் சுபிட்சமும், உழைப்பும் வெற்றியும்
நிறைந்த ஒரு புது வருஷத்தை ஆர்வத்துடன் எதிர்பார்ப்போமாக.



**மஹிந்திரா & மஹிந்திரா லிமிடெட்**

பம்பாய் • கல்கத்தா • டில்லி • மதராஸ்



**Thoughts and emotions of a peaceful people are reflected in these Soviet Periodicals.**

SOVIET UNION

INTERNATIONAL AFFAIRS

SOVIET LITERATURE MONTHLY

NEWS

NEW TIMES

A WEEKLY JOURNAL

Soviet Woman

*Available at:*

PEOPLE'S PUBLISHING HOUSE LTD.,
Asaf Ali Road, New Delhi 1.

ASSAM NATIONAL BOOK AGENCY LTD.,
Panbazar, Gauhati.

CURRENT BOOK DISTRIBUTORS,
3/2, Madan Street, Calcutta 13.

NABAJUGA GRANTHALAYA,
Chandni Chowk, Cuttack 2.

NATIONAL BOOK AGENCY LTD.,
12, Bankim Chatterji Street, Calcutta 12.

NEW AGE BOOK CENTRE,
Godhaulia, Banaras.

NEW CENTURY BOOK HOUSE,
C 17, Majestic Circle, Bangalore City.

NEW CENTURY BOOK HOUSE,
199, Mount Road, Madras 1.

P. P. H. BOOKSTALL,
421, Sandhurst Road, Bombay 4.

CURRENT BOOK HOUSE,
Raghunath Dadaji Street, Bombay 1.

PEOPLE'S BOOK HOUSE,
City Road, Hyderabad (Dn).

PEOPLE'S BOOK HOUSE,
Opp. B. N. College, Patna. 4

PRABHAT BOOK HOUSE,
Ernakulam.

VISHALAANDHRA PUBLISHING HOUSE,
Buckinghampet, Vijayawada.



**V/O MEZDUNARODNAYA KNIGA, Moscow 200, U.S.S.R.**




நண்பரின் கல்யாணத்துக்காக இடக்காழி என்ற கிராமத்துக்குச் சென்றிருந்தேன். எனக்கென்னவோ 'இடக்காழி' என்ற அந்தக் கிராமத்தின் பெயரே விநோதமா யிருந்தது. கல்யாணத்துக்கு வந்து இரண்டு மூன்று நாட்கள் இருந்து நன்றாகச் சாப்பிட்டு விட்டு ஆனந்தமாக ஊர் திரும்ப வேண்டுமென்று என் நண்பர்களெல்லாம் விரும்பும்போது நான் ஒருவன் மாத்திரம் நேர்மாறாக 'இடக்காழி' என்று இந்த ஊருக்குப் பெயர் ஏற்பட்ட காரணம் என்ன! ஏன்! என்றெல்லாம் கவலைப்பட்டுக் கொண்டிருந்தது மற்றவர்களுக்குச் சிறிது பரிகாசமாகக் கூட இருந்தது.

அன்று இரவு சாப்பாடு வகையறா எல்லாம் முடிந்த பிறகு என் நண்பர்களெல்லாம் உட்கார்ந்து சீட்டு விளையாடிக் கொண்டிருந்தனர். எனக்கும் சீட்டு விளையாட வேண்டுமென்ற ஆர்வம் அப்பொழுது இல்லை. சந்தடி இல்லாத இடத்தில் போய்ப் படுத்துக் கொண்டு அந்த ஊரைப்பற்றி நானே தீவிரமாகச் சிந்தித்து ஒரு முடிவுக்கு வர நினைத்தேன். கல்யாண வீட்டுக்கு எதிர்வீட்டுத் திண்ணை அமைதியான இடமாகப் பட்டதால் மேல் உத்தரீயத்தை உதறிப் போட்டுப் படுத்துக் கொண்டு சிந்திக்கலானேன். 'இடக்காழி-இடக்காழி' என்ற பெயர்தான் என் சிந்தனையில் சுழன்று சுழன்று விழுந்ததே தவிரத் தெளிவாகவும் ஆதாரமாகவும் எதுவுமே புலனாகவில்லை. நான் குழம்பிய சிந்தனையோடு இருக்கும் போது யாரோ ஒருவர் வந்து அந்த வீட்டுத் திண்ணையில் அமர்ந்து கொண்டார்.

ஒருமுறை சுற்று முற்றும் பார்த்து விட்டு "சர்வலோக சரண்யா, இடக்கை யாழியா, தீனபந்து..." என்று சொல்லி மேல் உத்தரீயத்தை விரித்துப் போட்டுக் கொண்டு படுத்தார்.

அவர் 'இடக்கை யாழியா' என்று கூறியது எனக்குச் சுரீரென்று ஏதோ ஒளி காட்டியது போலிருந்தது. இனிமேல் நான் விட்டு விடுவேனா! இருட்டில் படுத்துக் கொண்டிருந்த நான் சட்டென்று எழுந்து அவருக்குப் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டு, "ஸ்வாமிக்கு எந்தத் திவ்ய தேசமோ...?" என்றேன்.

அவர் சட்டென்று எழுந்து உட்கார்ந்து, "அடியேனுக்கு இதே திவ்ய க்ஷேத்திரம் தான்" என்றார்.

"அப்படியா! ரொம்ப சந்தோஷம். இடக்காழின்னு இந்த திவ்ய க்ஷேத்திரத்துக்கு நாமதேயம் ஏற்பட்டது ஏன் என்று தேவரீருக்குத் தெரியுமோ!" என்று அவர் அருகில் இன்னும் நெருங்கிப் போய்க் கேட்டேன் மெதுவாக.

"எல்லாம் எம்பெருமானின் கல்யாண குணத்தைப் பொறுத்ததுதான். எம்பெருமான் இந்த திவ்ய தேசத்தில் இடக் கரத்தில் சக்கரத்தைத் தாங்கி இருக்கிறார். அதனால் இந்த க்ஷேத்திரத்துக்கு இந்த நாமதேயம் விளங்கியது. பூர்வீகத்திலே இந்த திவ்ய தேசத்துக்கு ஏற்பட்ட நாமதேயம் 'இடக்கை திருவாழி' என்று. கால தேசத்திலே அது 'இடக்கையாழி' என்று மாறி இப்பொழுது 'இடக்காழி' என்று விளங்குகிறது. இன்னும் கொஞ்சம் நாள் சென்றால் என்னவாகுமோ!" என்றார்.

அந்தப் பெரியவர் சொல்லியதிலிருந்து அந்த ஊரில் ஏதோ கோயில் இருப்பதாகத் தெரிந்தது. நான் இரண்டு நாளாய் ஊரைச் சுற்றிப் பார்த்ததிலிருந்து அந்த ஊரில் கோவில் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. "இங்கே ஏதும் எம்பெருமான் கோயில் கொண்டு எழுந்தருளி இருப்பதாக அடியேனுக்குத் தெரியவில்லையே!" என்றேன்.

"இங்கேயிருந்து இரண்டு மைல் வடக்கே பெருமாள் எழுந்தருளி இருக்கிறார். இந்த ஊரும் அதைச் சேர்ந்தது தான். ஆனால் இப்பொழுது தனித் தனியாகப் போய் விட்டது. அதை இப்பொழுது 'வடக்கு இடக்காழி'ன்னு சொல்லுவா" என்றார் அவர்.

"எல்லா திவ்ய க்ஷேத்திரத்திலும் எம்பெருமான் வலக் கரத்தில் சக்கரத்தைத் தரித்திருக்கும் போது இந்த திவ்ய க்ஷேத்திரத்தில் மாத்திரம் இடது கரத்தில் சக்கரத்தை தரித்திருப்பதின் நோக்கம் என்னவோ...!" என்று மெதுவாக வினவினேன்.

"எம்பெருமானின் கல்யாண குணங்களும் திருக்கோலங்களும் சொல்லில் அடங்காதவை. அவைகளில் இது ஒரு கல்யாண குணம். அடியேனுக்கு வயது எழுபத்திரண்டு ஆகிறது. இந்த திவ்ய க்ஷேத்திரத்தின் மகிமையை நான் என் பாட்டனாரிடமிருந்து கேட்டிருக்கிறேன். என் பாட்டனார் அவருக்குப் பாட்டனார் காலத்துக் கதையைக் கேட்டுத் தெரிந்து கொண்டிருந்தார். இன்று இந்த க்ஷேத்திரத்தில் இந்த க்ஷேத்திரத்தின் பெருமையை உள்ளபடி உணர்ந்தவன் நான் தான். ஏனென்றால் அடியேன் ஒருவன் தான் இந்த திவ்ய க்ஷேத்திரத்திலுள்ள பற்றுதலை ஒழிக்க முடியாதவனும் இருக்கிறேன்" என்று கதையைச் சொல்லத் தொடங்கினார்:

"பூர்வ காலத்தில் இந்தச் சிறிய ஊர் பெரிய பட்டினமாக இருந்தது. அப்பொழுது இதற்கு வேறு ஏதோ பெயர் இருந்தது. அப்பொழுது இந்த நாட்டை வடபத்ரசேனன் என்னும் உத்தம குணம் படைத்த மன்னன் ஆண்டு வந்தானாம். அவன் சிறந்த வைஷ்ணவ பக்தன். ஆமாம்! குலசேகர ஆழ்வாரைப் போல் கனவிலும் நனவிலும் நாராயணனையே தியானித்து வந்தான். அரசனாகவும் சிறந்த வைஷ்ணவ பக்தனாகவும் இருந்த எந்த அரசர்கள் எம்பெருமானுக்குத் திருக் கோவில் எழுப்பாது இருந்தார்கள்! எம்பெருமானுக்காக இந்த திவ்ய தேசத்தில் மிகுந்த பொருட் செலவில் ஒரு அழகான திருக்கோவிலை நிர்மாணிக்க விரும்பினான் வடபத்திரன்.



"அரசனிடம் மான்யம் பெற்று ஊழியம் செய்து வந்தான் துளசிங்கன் என்ற சிற்பி. சிறந்த சிற்பி அவன். அவனுடைய புகழ் நாடெங்கும் பரவி இருந்தது. சிற்ப சாஸ்திரம் படித்துத் தேர்ந்து அங்க லட்சணங்களோடு சாஸ்திரீயமான முறையில் விக்கிரகங்களைச் செய்வதில் அவன் நிபுணன். இப்படிப்பட்ட சிற்பியைத் தன் தேசத்தவனாகவும், தன் அரசாங்க ஊழியனாகவும் பெற்ற அரசனுக்கு என்ன குறை! எம்பெருமானுக்குக் கோயில் கட்ட வேண்டுமென்று அரசன் எண்ணிய க்ஷணத்திலே சிற்பி துளசிங்கனை அழைத்து மூன்று மாதத்திற்குள் எம்பெருமானின் திருவுருவம் ஒன்றை அமைத்துத் தரும்படி உத்தரவிட்டான்..." என்று சொல்லி விட்டு அந்தப் பெரியவர் என்னைப்பார்த்து "அடியேன் சொல்லுகிற கதை புரிகிறதா!" என்று கேட்டார்.

எனக்கு உடனே அவர் கதையை முடித்து விட்டாரோ என்ற சம்சயமும் குழப்பமும்தான் ஏற்பட்டன. "நன்றாகப் புரிகிறது. கதை இன்னும் முடியவில்லையே...!" என்றேன்.

"அது எப்படி முடியும்! இனிமேல் தானே முக்கியமான விஷயங்கள் வரப் போகின்றன! பகவானின் லீலா விநோதம் எண்ணில் அடங்காதது. அதில் இதுவும் ஒன்று. ஆயிரக்கணக்கான திருவுருவங்களைச் சிருஷ்டித்து அனுபவமும் பிரசித்தியும் அடைந்திருக்கின்ற சிற்பி துளசிங்கனுக்கு அரசனின் உத்தரவுப்படி எம்பெருமானின் திருவுருவத்தை வெகு சுலபமாக சிருஷ்டித்து விடலாமென்ற அலட்சியம் இருந்தது. 'சங்கு சக்ரதாரியாய் எத்தனையோ திருவுருவங்களைச் சமைத்துள்ளோம். அதைப்போல இதுவும் ஒன்று தானே. நம்முடைய அரசனின் கட்டளை என்பதற்காக இன்னும் சிறிது அழகோடும் விசேஷமாகவும் செய்யலாம். அவ்வளவுதானே!' என்ற அலட்சியம். இந்த எண்ணம் உள்ளவனை பகவான் சோதிக்காமல் விடுவாரா!" என்று சொல்லிச் சிறிது நிறுத்தினார் பெரியவர்.

"எப்படிச் சோதனை செய்யாமல் இருப்பார்! நிச்சயம் சோதனை செய்யத்தான் செய்வார்" என்றேன் நான்.

"அரசன் கோயில் கட்டுவதில் மிகவும் தீவிரமாக இருந்ததால் கோயில் திருப்பணி வெகு துரிதமாக நடந்து வந்தது. சிற்பிக்கு இதெல்லாம் தெரிந்திருந்தும் சிறிது அலட்சியமாகவே இருந்தான். அரசனுடைய சிப்பந்திகள் வந்து விசாரிக்கும் போதெல்லாம் 'இதென்ன பிரமாதம்! ஒரு நாளில் செய்து விடுவேன்' என்று அலட்சியமாகச் சொல்லி வந்தான். கோயில் திருப்பணிகள் பூர்த்தியடையும் தருணத்தில் இருந்தன. விக்கிரகப் பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் செய்ய இன்னும் பத்து நாட்களே இருந்தன. இந்தச் சமயத்தில் அரசனின் சிப்பந்திகள் சிற்பியின் வீட்டுக்கு வந்து அவனை மிகவும் துரிதப்படுத்தவே சிற்பி அந்தத் தொல்லையிலிருந்து மீள நினைப்பவன் போல் வேலையில் ஈடுபடத் தொடங்கினான். அலுப்போடும் அலட்சியத்தோடும் தொழிலில் இறங்கியதால் அன்று அவன் வார்த்தெடுத்த விக்கிரகம் அங்க லட்சணக் குறைவாக இருந்தது. அதை அழித்து விட்டு மறு நாள் வேறொரு விக்கிரகத்தை வார்த்தெடுத்தான். அந்த விக்கிரகத்தில் எல்லா அங்கங்களும் சரியாகத்தான் இருந்தன. ஆனால் முகத்தில் மாத்திரம் லட்சணம் இல்லை. அன்று பட்ட பிரயாசை வெல்லாம் வீண் என்று எண்ணி மூன்றாவது நாள் வேறொரு விக்கிரகத்தை சிருஷ்டித்தான். அந்த விக்கிரகத்தில் அபய கரத்தில் ஒரு விரல் பின்னமடைந் திருப்பது கண்டு மனம் குழம்பியவனாக நான்காவது நாள் சரியான விக்கிரகம் ஒன்றை வார்த்தெடுக்கும் முயற்சியில் ஈடுபட்டான்.

பாவம்! நிஜமாகவே பகவான் அவன் கர்வத்தைக் குலைத்து விட நினைத்தார். நான்காவது நாள் அவன் வார்த்தெடுத்த விக்கிரகத்திலும் ஏதோ குறை இருந்தது. ஐந்தா நாளும் அப்படியே. இப்படியே ஒன்பது நாட்களும் ஓடிவிட்டன. இப்படிக் காலம் தாழ்த்தும் சிற்பியைக் கண்டு அரசன் கோப மடையாமல் என்ன செய்வான்! மறுநாள் காலை எட்டு மணிக்குள் விக்கிரகத்தோடு கோயிலுக்கு வர வேண்டும். தவறினால் அரசனின் தண்டனை மிகக் கடுமையாக இருக்கும் என்று முதல் மந்திரியே சிற்பியின் வீட்டுக்கு வந்து அதிகாரத்தோடு எச்சரிக்கை செய்து விட்டுப் போனார். பாவம் சிற்பி என்ன செய்வான்! துடியாகத் துடித்தான்.

பகவானைப் பிரார்த்தித்து அலறி அழுதான். என்ன செய்வான்! கடைசியாக அன்று இரவோடு இரவாக உட்கார்ந்து குறையில்லாத வகையில் ஒரு விக்கிரகத்தைச் செய்ய முனைந்தான்......"

"பகவானின் அருளால் அந்த விக்கிரகம் மிகவும் நன்றாக அமைந்து விட்டது போலிருக்கிறது......" என்றேன் நான் மெதுவாக.

"அந்தத் திருவுருவம் அவன் என்றும் செய்து அறியாத பேரெழிலோடுதான் விளங்கியது. ஆனால் அந்த இடத்திலும் ஒரு பெரிய பிசகு சேர்ந்து விட்டது. பகவானின் திருவுள்ளம் என்றேனே அது தான். சாஸ்திர ரீதியாய் பகவானின் வலக் கரத்தில் இருக்க வேண்டிய சக்கரம் எப்படியோ இடக் கரத்தில் காட்சியளித்தது.

"சிற்பி துளசிங்கன் எம்பெருமானின் திருவுருவைச் செய்து முடித்தவுடன் அதன் அழகைக் கண்டு ஆனந்தமும் திருப்தியும் அடைந்தான். ஆனால் அவன் அந்தத் திருவுருவத்தை அமைதியோடு அங்கம் அங்கமாகப் பரிசீலனை செய்து கொண்டு வரும்பொழுது வலக் கையில் இருக்க வேண்டிய சக்கரம் இடக் கையில் மாறி இருப்பதைக் கண்டு திகைத்து விட்டான். இத்தனை நாளாய் செய்த பிசகுகள் எல்லாவற்றையும் விட இது பெரிய பிசகாக இருந்தது. சிறிது நேரத்துக்கு முன்னால் பூரிப்படைந்து பொங்கி நின்ற அவன் மனம் இடி விழுந்து தெறி அழுந்தி விட்டது போலாகி விட்டது. தான் ஏதோ பெரிய பாவம் செய்துவிட்ட தனால்தான் பெருமான் இப்படித் தன்னைப் பெரும் சோதனையில் ஈடுபடுத்தி விட்டார் என்று பித்துக் கொண்டவன் போல் பிரலாபித்தான். அந்தக் கடைசி நேரத்தில் அரச சமூகத்திற்கு அந்த விக்கிரகத்தை எடுத்துச் செல்வதைத் தவிர வேறு வழி ஏதும் அவனுக்குப் புலனாகவில்லை. அதை மாற்றிச் செய்யவும் அப்பொழுது நேரம் இல்லை. வலது கைச் சக்கரம் இடது கையில் மாறி இருந்தாலும் எம்பெருமானின் திரு உருவ அழகில் அரசன் மயங்கி விடுவான் என்ற தைரியம் அவனுக்குச் சிறிது இருந்தது. எப்படியோ உயிருக்கு ஆபத்து இல்லாமல் தப்பி விடலாம். பகவான் காப்பாற்றுவார் என்ற தைரியம் அவனுக்குச் சிறிது இருந்தது. அரசன் ஒரு மூட பக்தனே தவிர சாஸ்திர ஞானமோ கலை ஞானமோ உள்ளவனல்ல. பகவானிடம் மிகுந்த பக்தியுடையவனாயினும் பகவானுக்கு இடது கையில் சக்கரம் இருக்க வேண்டுமா வலக்கரத்தில் சக்கரம் இருக்க வேண்டுமா என்பதெல்லாம் அவனுக்குத் தெரியாது. அங்கம் பழுதில்லாமல் அழகோடு இருந்தால் அவனுக்குப் போதும். அரசனுடைய மந்திரிகளும் அப்படித்தான். ஆனால் அரச சபையில் இன்னொருவன் இருக்கிறான். அவனை நினைத்த போதுதான் சிற்பியின் மனத்தில் திகில் ஏற்பட்டது. அவன் தான் கவி திருவாழகத்தான். தேர்ந்த சாஸ்திர ஞான முள்ளவன். தர்க்க வாதம் செய்யக் கூடியவன். அரச சமூகத்தில் அவனுக்



குற்றமதிப்பு வேறு யாருக்கும் இல்லை. மந்திரிகளிடம் உள்ள மதிப்பைக் காட்டிலும் அரசன் கவி திருவாழகத்தா- விடம் அதிகமாக வைத்திருந்தான். அவ- னுடைய ஆலோசனை இல்லாமல் அரசன் எதையும் செய்ய மாட்டான். இந்நிலையில் கவிஞன் கண்ணில் படாமல் விக்கிரகத்தை மறைத்து வைத்துவிட முடியுமா! அவன் கண்டவுடனேயே எந்த இடத்தில் பிசகு என்பதை உணர்ந்து விடுவானே! அவன் அறிந்த விஷயத்தை அவன் அரசனிடம் சொல்லாமலிருந்து விடுவானா! இதை யெல்லாம் தெரிந்து சொல்லத்தானே அவன் அரச சபையில் இருக்கிறான்! இதை நினைத்த போதுதான் சிற்பி மனங்க- ளின் நிலையும் சஞ்சலமும் அதிகமாயின. பொழுது விடிந்தால் என்னவாகுமோ, எப்படி முடியுமோ என்ற நிலையில் அவன் தூங்கவே இல்லை.

"மறுநாள் விடியற்காலை அரசனின் பணியாளர்கள் விக்கிரகத்தோடு சிற்பியை அழைத்துக் கொண்டு செல்ல அவன் வீட்டுக்கு வந்து விட்டார்கள். அந்த நேரத்தில் அவன் என்ன செய்ய முடியும்! எல்லாம் பகவானின் திருவுள்ளப்படி யாகட்டும் என்று எண்ணி அந்த விக்கிர- கத்தை ஒரு பட்டாடையில் சுற்றி எடுத்- துக் கொண்டு கோயிலுக்குச் சென்றான். கோயில் வெளி மண்டபத்தில் சிற்பியின் வரவை ஆவலுடன் எதிர்பார்த்து அரசன் தன் பரிவாரங்கள் சூழக் கொலுவீற்றிருந்- தான். கவி திருவாழகத்தானும் அரச- னுக்குச் சமீபத்தில் அமர்ந்திருந்தான். சிற்பி என்ன நடக்குமோ என்ற திகிலோடு தான் இருந்தான். அவன் மனத்தில் அமை- தியோ, முகத்தில் தெளிவோ இல்லை. அரசனுக்கு எதிரிலிருந்த பளிங்கு மேடை- யில் மெதுவாக விக்கிர- கத்தை வைத்துவிட்டுச் சுற்றி- யிருந்த பட்டுத் துணியை எடுத்தான். பூரண அழகோடு விளங்கிய எம்பெருமானின் திருவுருவம் பார்த்தவுட- னேயே அரசனின் மனத்- தைக் கவர்ந்து விட்டது. அவன் உள்ளத்தில் எழுந்த பூரிப்பும் பெருமிதமும் அவ- னுடைய முகத்தி லெழுந்த மலர்ச்சியிலும் நன்கு விளங்- கின. அரசனுடைய முக மலர்ச்சியைக் கண்ட பின்பும் சிற்பியின் நிலையும் குழப்ப- மும் தீரவில்லை. அவன் அரச- னுக்குப் பக்கத்திலிருந்த கவி திருவாழகத்தானையே பார்த்- துக் கொண்டிருந்தான். கவி திருவாழகத்தான் விக்கிரகத்- தைக் கண்டவுடனே மனத்தில் ஏதோ 'சுரீ' ரென்று தைத்- தது போல் திகைப்படைந்து நின்று கொண்டிருந்தான். திடீரென்று கவிஞனின் முகக் குறி மாறியதைக் கண்டதும் சிற்பிக்கு மூச்சே நின்றுவிடும் போலிருந்தது. குற்றவாளி மன்னிப்புக்கு மன்றுவது போல் கவிஞனைப் பார்த்தான் சிற்பி. 'என்னைக் காட்டிக் கொடுத்து விடாதே. நானும் கலைஞன்; நீயும் கலைஞன்' என்று திருவாழகத்தானைப் பார்த்துக் கெஞ்சுவது போலிருந்தது சிற்பியின் பார்வை.

"அரசன் கவிஞரைப் பார்த்து, 'என்ன கவிஞரே! நம்முடைய சிற்பி தனசிங்கன் கைத் திறனே அலாதிதான். பகவானின் திருவுருவத்தை எவ்வளவு அழகாக செதுக்- கித்து விட்டார் பாருங்கள்......!' என்று கூறினான்.

"'அதிலென்ன சந்தேகம்! அவருடைய கைத் திறனே அலாதிதான்' என்றான் திருவாழகத்தான், அரசனை ஒரு கண்ணா- லும் சிற்பியை ஒரு கண்ணாலும் ஜாடை- யாகப் பார்த்துக் கொண்டே. 'அவன் அலாதிதான்' என்று அழுத்தமாகச் சொல்லிய வார்த்தை அவன் எதையோ சுட்டிக் காட்டிப் பரிகாசம் செய்வது போல்தான் சிற்பிக்குப் பட்டது. அவன் நின்று கொண்டிருந்தாலும் ஓங்கிய வாளுக்குக் கீழே தலையைத் தாழ்த்தி இருப்பது போன்ற நிலையில்தான் அப்- பொழுது இருந்தான்.

"எனக்கு இருந்த பெரும் கவலை தீர்ந்து விட்டது. சிற்பி விக்கிரகத்தை செதுக்கித்- துக் கொண்டு வந்து கொடுத்தவுடனே. நாளையதினம் பிரதிஷ்டை செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைக் கவனிக்க வேண்- டும். அதுவரையில் விக்கிரகத்தை ஒரு நல்ல இடத்தில் வைத்துப் பாதுகாக்க ஏற்- பாடு செய்யுங்கள்' என்று மந்திரியிடம் சொல்லி விட்டுச் சிற்பியைப் பார்த்து, 'எம்பெருமானின் திருவுருவத்தை இவ்- வளவு அழகோடு செதுக்கித்ததற்காக நான் உங்களுக்கு என்ன கைம்மாறு செய்- யப் போகிறேன்! உங்களுக்கு எத்தனை கொடுத்தாலும் தகும். உங்களை எந்- தவகைய முறையில் கௌரவித்தால் சிறப்- பாக இருக்கும் என்று நான் யோசிக்க வேண்டியிருக்கிறது......' என்றான்.

"சிற்பியொன்றும் பேசவில்லை. மௌனமாக நின்று கொண்டிருந்தான். தனக்கு எந்- தவகைய பரிசும் கொடுத்துக் கௌரவிக்க வேண்டாம். உயிரோடு விட்டு விட்டால் போதும் என்றுதான் அப்பொழுது பிரார்த்தித்துக் கொண்டிருந்தான்.

"'என்ன கவிஞரே! நீங்கள் ஒன்றும் சொல்லவில்லையே! எம்பெருமான் எப்படி சேவை சாதிக்கிறார்?' என்றான் அரசன்.

"'மிகவும் அழகாகவே சேவை சாதிக்- கிறார். எம்பெருமானின் திருக் கோலங்க- ளெல்லாம் எண்ணில் அடங்காதவை. அவைகளில் இதுவும் ஒரு திருக்கோலம்' என்றான் திருவாழகத்தான்.

"சிற்பிக்கு அங்கு நிற்பது ஒவ்வொரு கணமும் உயிர் கழுவிலேற்றப்பட்டிருக்- கும் நிலையிலிருந்ததால் அரசனிடம் விடை பெற்றுக் கொண்டு வீட்டுக்குச் சென்றான்.

"வீட்டுக்குச் சென்ற பின்பும் அவன் மனம் அமைதி பெறவில்லை. எதை எதையோ எண்ணி அவன் உள்ளம் நிலை- குலைந்து கொண்டிருந்தது. கவி திரு- வாழகத்தான் விக்கிரகத்தைப் பார்த்த- வுடன் எந்த இடத்தில் பிசகு ஏற்பட்டுள்- ளது என்பதை அறிந்து விட்டான். அதை அவனுடைய முகமாறுதலிலிருந்து மட்டும் சிற்பி உணரவில்லை. அவன் அரசனுக்குப் பதில் சொல்லிய வார்த்தைகளிலிருந்தும் நன்கு உணர்ந்து விட்டான். அரசனுக்கு அந்தரங்க மந்திராலோசனைக் காரனாக இருக்கும் அவன் அரசனிடம் எதையுமே மறைத்து வைக்க மாட்டான். பலருடைய முன்னிலையில் விக்கிரகத்தில் கண்ட பெரும் குற்றத்தை அவன் அரசனிடம் தெரிவிக்கா விட்டாலும் தனிமையில் சொல்லாமலிருக்க மாட்டான் என்றுதான் சிற்பிக்குத் தோன்றியது. எந்தக் கணத்தி- லும் அரசனிடமிருந்து தனக்கு அழைப்பு வரலாம் என்று எண்ணினான் சிற்பி. அவ- னுக்கு அன்னம் தண்ணீர் ஒன்றுமே வேண்டியிருக்கவில்லை. கலங்கிய வண்- ணம் உட்கார்ந்திருந்த அவன் மனத்தில் ஒருஎண்ணம் உதித்தது. 'பொழுது போனது; திருவாழகத்தான் அந்த வேளையில் தன் வீட்டில் தானிருப்பான். ஏன் இப்பொ- ழுதே அவனிடம் சென்று தெய்வாதீன- மாக நேர்ந்துவிட்ட குற்றத்தைச் சொல்லி அரசனிடம் தன்னைக் காட்டிக் கொடுக்கா- திருக்கும்படி வேண்டிக் கொள்ளக் கூடாது! கவி திருவாழகத்தான் கலைஞர்க- ளிடம் அபிமானமும் இரக்கமும் உள்ள- வன். அவனிடம் போய் நம்முடைய தவற்- றைச் சொல்லி வேண்டிக் கொண்டால் நிச்சயம் உதவி புரிவான்' என்ற திடமான எண்ணம் சிற்பியின் மனத்தில் தோன்றவே

அவன் சட்டென்று எழுந்து திருவாழகத் தானின் வீட்டை நோக்கி வேகமாக நடக்கத் தொடங்கினான்.

"அவன் தன் வீட்டை விட்டுச் சிறிது தூரம் சென்றதுமே கவி திருவாழகத்தான் தன் எதிரே வருவதைப் பார்த்துத் திகைப் படைந்து விட்டான். அவன் நம்மைக் காணத்தான் வருகிறான். நம்முடைய குற்றத்தை அறிந்து அதை நமக்கு உணர்த் திக் காரணம் கேட்கத்தான் வருகிறான் என்று நம்பி நினைத்து நடுங்கினான். வார்த்தைகள் குழற, 'கவிஞரே! எங்கே இப்படி......' என்றான்.

"கவிஞன் நம்பியின் வார்த்தைகளைக் காதில் வாங்கிக் கொள்ளாதவன் போல் ஆவலோடு வந்து அவனைக் கட்டித் தழுவிக் கொண்டான். அப்பொழுது அவனுடைய வார்த்தைகளும் தழுதழுத்தன. 'துணைவரே! நீங்கள் எனக்கு உயிர்ப் பிச்சை அளித்தீர்கள்' என்றான். என்றுமில்லாத வண்ணம் கவிஞன் தன்னை வந்து இப்படி ஆலிங்கனம் செய்து கொண்டு ஏதோ சொல்வது நம்பிக்குச் சிறிது திகைப்பை உண்டாக்கியது. 'நீங்கள் எங்கே போகிறீர்கள்...!' என்றான் மறுபடியும் மிகுந்த பயத்தோடும் நடுக்கத்தோடும்.

"'உங்களைக் காணத்தான் வந்தேன்' என்றான் கவிஞன்.

"எதையுமே அப்பொழுது உணர்ந்துகொள்ள முடியாத தடுமாற்ற நிலையிலிருந்த நம்பி 'நான் செய்த பெரிய பிழையை நீங்கள் அறிந்து கொண்டிருப்பீர்கள். நீங்கள் என்மீது தயை வைத்துக் காப்பாற்ற வேண்டும்...' என்றான் நம்பி.

"கவிஞன் சிரித்தான். நம்பியின் மனத்திலிருந்த பயத்தைச் சரியாக உணர்ந்துகொண்டு விட்டவன் போல் 'துணைவரே! நீங்கள் செய்தது பெரிய பிழையாக இருக்கலாம். ஆனால் எம்பெருமான் ஒரு கவிஞனின் மானத்தைக் காப்பாற்ற வேண்டுமென்று திருவுள்ளம் பற்றி இருக்கும் போது இது எப்படி கோரம் விளைக்கும்! நீங்கள் செய்தது பிழையல்ல. எம்பெருமானின் திருவுள்ளம் இப்படி ஒரு திருக்கோலத்தில் காட்சி அளிக்க வேண்டுமென்று இருக்கிறது. எத்தனையோ விக்கிரகங்களையெல்லாம் செய்து அவைகளில் ஏதேதோ சிறு பிழைகள் இருக்கக் கண்டு அவைகளை அழித்து விட்டீர்களே! இந்த விக்கிரகத்தில் பெரிய பிழை ஒன்று சேர்ந்து விட்ட பொழுது இதை அழித்து வேறொன்று செய்ய உமக்கு அவகாசம் இருந்ததா! இதுதான் பரமனின் லீலாவினோதம். எப்படியோ என் கௌரவம் நிலைத்தது. பெருமை பிழைத்தது. இந்தக் கவிஞனின் மதிப்புக் குறைவு ஏற்படாமல் காப்பாற்றப்பட்டது. இந்தக் கவிஞனுக்கு உயிர்ப் பிச்சை அருளினார் எம்பெருமான்' என்று உணர்ச்சியோடு கூறினான் திருவாழகத்தான்.

"நம்பிக்கு ஒன்றுமே புரிய வில்லை. எப்படியோ அவன் உயிர் தப்பி விட்டது என்ற மன ஆறுதலும் நிம்மதியும் ஏற்பட்டன. 'நீங்கள் சொல்லுவது எனக் கொன்றும் விளங்க வில்லையே!' என்றான் அவன் வியப்போடு.

"'அது எப்படி உங்களுக்கு விளங்கும்! நேற்று இரவு அரசர் எனக்கு உத்தர விட்டிருக்கிறார். நாளைய தினம் கும்பாபிஷேகம் நடக்கும் சமயத்தில் இந்த க்ஷேத்திரத்தின் மகிமையைப் பற்றியும், இந்த க்ஷேத்திரத்தில் எழுந்தருளப் போகும் எம்பெருமானின் மகிமைகளைப் பற்றியும் நான் ஒரு காவியம் எழுதி அரங்கேற்ற வேண்டுமென்று. புதிதாகச் சிருஷ்டிக்கப்பட்ட இந்தக் கோவிலைப் பற்றியும், அதில் இனிமேல் தான் எழுந்தருளப் போகிற பெருமானைப் பற்றியும் காவியம் எழுத விசேஷமாக என்ன இருக்கிறது! ஏதும் வேண்டாமா! எனக்கொன்றும் புலப்படவில்லை. நேற்று இரவில் ஏதேதோ சிந்தித்தேன். ஒரு பயனுமில்லை. அரசர் வைத்த கெடுவுக்குள் எதுவும் நடக்காது என்று தான் எனக்குத் தோன்றியது. இவ் விஷயத்தில் நான் தோல்வி அடைந்து விடுவேன் என்று முடிவு செய்து விட்டேன். இதனால் அரச சமுகத்தில் எனக்கு இருந்த மதிப்புக் குலைவதோடு அரசரின் கட்டளையை நிறைவேற்றத் தவறிய குற்றத்துக்காக எத்தகைய தண்டனை கிடைக்குமோ என்று அஞ்சிக் கொண்



டிருந்தேன். பரமனின் திருவருள்தான். இன்று காலையில் நீங்கள் சிருஷ்டித்திருந்த எம்பெருமானின் மங்கள விக்கிரகத்தைக் கண்டவுடன், எந்த க்ஷேத்திரத்திலும் காணாத அவனுடைய திருக்கோலத்தைத் தரிசித்தவுடன்தான் எனக்கு உயிர் வந்தது. கவிதைக்குரிய பொருள் கிடைக்கும் வரையில் கவிஞன் உயிரற்றவன் போல் தானே! ஒரு பொருள் கிடைத்தது. எனக்கும் உயிர் வந்தது. இடக்கரத்தில் சக்கரத்தைத் தரித்திருக்கும்படியான ஒரு மூர்த்தியை எனக்குக் காட்டி இந்தக் கவிஞனுக்கும் அவன் கற்பனைக்கும் உயிர் அளித்த உங்களுக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்!' என்றான் அந்தக் கவிஞன்.

"'எனக்கென்ன கைம்மாறு நீங்கள் செய்ய வேண்டும்! நான் தான் எம்பெருமானின் திருவுருவைச் சிருஷ்டித்தவன். என் கற்பனையிலும் கைத்திறனிலும் தான் எம்பெருமானின் சௌந்தர்ய ரூபம் படைக்கப்பட்டது என்ற கர்வம் அடங்கும் வண்ணம் என் கவனத்திலிருந்தும் கைத்திறனிலிருந்தும் தப்பித் தானாகவே ஒரு அழகுக் கோலம் கொண்டு நிற்கும் எம்பெருமானின் பெருமையை நாம் மறந்து விட முடியுமா! நான் செய்த பெரும் பிழையினின்றும் என்னைத் தப்புவித்து, என் கைத்திறனை அரசனும் உலகமும் போற்றும் வண்ணம் செய்த எம்பெருமானின் திருவருள்தான் என்ன! இது யாருக்குக் கிடைக்கும்! எம்பெருமான் தன் தயாள சிந்தையால் என்னைக் காப்பாற்றினாரே அதுவே போதும். அதிருக்கட்டும், நீங்கள் காவியம் அரங்கேற்றும் போது அரசர் நான் செய்த பிழை அறியத்தானே நேரும்! அப்பொழுது அரசன் மனம் மாறி...' என்று சம்சயத்தோடும் பயத்தோடும் கவிஞனின் முகத்தைப் பார்த்தான் நம்பி.

"'கலக்கமடைய வேண்டாம். எம்பெருமான் எத்தகைய மாறுதலோடு விளங்குகிறார் என்பதை உணராத அரசர் அந்த அழகிலேயே லயித்து விட்டார். அதோடு என் கவிதைகள் அவர் கண்ட குற்றத்தையும் மறக்கச் செய்து பக்தியினால் புளகாங்கிதம் அடைந்து குதிக்கச் செய்யுமே தவிர வேறொன்றும் செய்யாது. மற்ற திவ்ய தேசங்களில் எழுந்தருளி இருக்கும் பெருமானை விட நம்முடைய பெருமான் ஒரு தனிச் சிறப்புடையவர் என்று அரசன் பெருமை யடைவார்' என்றான் கவிஞன்.

"'அதிருக்கட்டும், இடது கையில் பெருமான் சக்கரம் தாங்கி இருக்கும் காரணம் என்னவென்று சொல்லப் போகிறீர்கள்?' என்றான் நம்பி.

"கவிஞன் சிரித்தான். 'தகுந்த ஆதாரங்கள் இருக்கின்றன. பரமாத்மா நரகாசுரனோடு யுத்தம் செய்த பொழுது சக்கரம் தாங்கி இருந்த வலக்கரம் சிறிது சளைக்கவே சக்கரத்தை இடக் கரத்தில் மாற்றிக் கொண்டார். அத்தகைய அவசரக் கோலத்தில்தான் நம் க்ஷேத்திரத்தில் எம்பெருமான் சேவை சாதிக்கிறார் என்று வர்ணிக்கப்போகிறேன். இதற்குப் புராண ஆதாரமும் உண்டு' என்று கூறினான் திருவாழகத்தான்.

"'கவிஞரே! உம்முடைய சாமர்த்தியமே சாமர்த்தியம்' என்றான் நம்பி.

"'என்னுடைய சாமர்த்தியமோ புத்திசாலித்தனமோ எதுவும் இதில் இல்லை. எல்லாம் அவனுடைய திருவுள்ளம். அவன் அளித்த பிச்சை' என்றான் கவிஞன்" என்று பெரியவர் கதையை ஒரு விதமாக முடித்து விட்டு, "அன்றிலிருந்து இந்த திவ்ய க்ஷேத்திரத்துக்கு 'இடக்கை திருவாழி' என்ற நாமமும் பெருமானுக்கு 'இடக்கைத் திருவாழியான்' என்ற திருநாமமும் ஏற்பட்டது. இன்று இவ்வூருக்கு 'இடகாழி' என்று பெயரேற்பட்டதும் அவன் திருவுள்ளம் தானோ என்னவோ!" என்று சொல்லி ஒரு பெருமூச்சு விட்டார்.

"இந்த திவ்ய க்ஷேத்திரத்துக்கு 'இடக்காழி' என்ற பெயர் ஏற்பட்ட காரணம் என்னவென்று அறிய முடியாமல் தவித்தேன். எம்பெருமானின் திருவுள்ளம்தான் ஸ்வாமிகளை இந்த இடத்துக்கு எழுந்தருளச் செய்து இந்த திவ்ய சரித்திரத்தை அடியேன் அறிந்து கொள்ளச் செய்தது" என்றேன் அளவற்ற குதூகலத்தோடும்.

எமது பாலிஸிதாரர்கள்
அன்பர்கள் அனைவருக்கும்

## தீபாவளி நல் வாழ்த்துகள்



உங்களுக்கு வேண்டிய சகலவிதமான இன்ஷ்யூரன்ஸிற்கும் நாங்கள் குறைந்த விகிதங்களில் உயர்ந்தபட்ச அனுகூலங்களும், சிறந்த வசதிகளும் வழங்குகிறோம்.

***

## வான்கார்டு இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

## வான்கார்டு பயர் & ஜெனரல் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிட்.

"வான்கார்டு ஹவுஸ்"

11 & 12, செகண்ட் லைன் பீச் - - - சென்னை-1

# ஹோட்டல் அனுபவங்கள்







சென்ற வாரம் நான் எங்கள் கிராமத்துக்குப் போயிருந்தேன். ரயிலிலிருந்து இறங்கி ஸ்டேஷன் மாஸ்டரிடம் ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு வீட்டுக்குப் புறப்பட்டேன். போகும் வழியில்தான் ஸ்ரீமான் நரசிம்மத்தின் ஹோட்டல். அது கடந்த முப்பது ஆண்டுகளாக நிலைபெற்று நிற்கிறது.

எங்களூரில் ஹோட்டல் என்றாலே அது நரசிம்மத்தின் ஹோட்டல் ஒன்றைத்தான் குறிக்கும். அது காப்பி ஹோட்டல்தான் என்றாலும் அங்கு 'சாப்பாடும் போடப்படும்'. சாப்பாடு மட்டுமா! வேறு வேண்டுகோளுக்கிணங்க, முக்கிய சித்திரான்னங்களும் வழங்கப்படும்.

ஹோட்டல்காரரின் பெயர்தான் நரசிம்மமே ஒழிய ஆளைப் பார்த்தால் நேர் விரோதமாக இருப்பார். ஹோட்டலின் முன்புறத்திலுள்ள கீற்றுக் கொட்டகையை எடுத்து விட்டு ஓட்டு வில்லைக் கட்டடம் கட்ட வேண்டும் என்று அவர் இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னும் சொல்லிக் கொண்டிருந்தார். இப்பொழுதும் சொல்லிக் கொண்டுதான் இருக்கிறார். இந்த இருபத்தைந்தாண்டுத் திட்டம் என்றைக்குத்தான் நிறைவேறுமோ எனக்குத் தெரியவில்லை.

நான் போயிருந்த சமயம் நரசிம்மம் கணக்குகளை முடித்து அரைமணி நேரமாயிற்று. ஆனாலும் என்ன! "ரயில் அப்பவே வந்து விட்டதே, சார்! ஸ்டேஷன் மாஸ்டர் உங்களை இழுத்து வைச்சுப் பேசியிருப்பார். உட்காருங்கள், பெஞ்சியிலே. ரொம்பக் களைச்சுப் போயிருக்கிறீங்களே!" என்று சொல்லிக் கொண்டே உள்ளே போனார். அடுப்பை அவசரமாகப் பற்ற வைப்பது 'பட பட' வென்ற விசிறிச் சத்தத்தின் மூலம் தெரிய வந்தது.

"அடடா! இப்போ எனக்குக் காப்பி வேண்டாம். வீட்டுக்குப் போகணும். நேரம் ஆச்சே!" என்றேன் நான்.

விடுவாரா அவர்! "எனக்குத் தெரியாதா, சார், உங்கப்பா ஆவலோடு எதிர் பார்த்துக் கொண்டிருப்பார் என்று! அஞ்சே நிமிஷம்; காப்பி ரெடி. இதோ பால் காஞ்சுட்டுதே! ரெண்டு நிமிஷம் பொறுங்கோ சார்!" என்று காரியத்திலேயே கண்ணாக இருந்தார்.

பத்து நிமிஷத்தில் எப்படியோ காப்பி தயார் பண்ணி ஆற்றிக் கொண்டே வந்து விட்டார், நான் உட்கார்ந்திருந்த இடத்துக்கு. காப்பி சாப்பிட்டானதும் நான் ஒரு ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினேன். அதை வாங்கிக் கொண்டு பத்திரத்தைப் போல மேஜையருகில் போனார். திரும்பி வந்து மீதிச் சில்லறை பதினாலணாவைக் கொடுத்தார். பண விஷயமோ காப்பியின் தரமோ அங்கு முக்கியமல்ல. உபசரிப்பும், பேச்சின் சுவாரஸ்யமும் தான் முக்கியம்.

நரசிம்மம் கொடுத்த புகையடி வீசிய அக் காப்பியைக் குடித்ததை விடத் தண்ணீரைக் குடித்திருந்தால் கமறலும் குமட்டலும் இல்லாமல் இருந்திருக்கும். அதற்கு இரண்டணாக் கொடுத்தது, பொருளாதாரத் தத்துவப்படி வெட்டித் தண்டம்தான். இவ்வளவெல்லாம் அந்தக் காப்பியைப் பற்றி வெறுப்பு ஏற்பட்டாலும் நரசிம்மம் அதைக் கொடுத்தபோது என்னால் அதைக் குடித்து மகிழாமலிருக்க முடியவில்லை. அதில்தான் இருக்கிறது உபசரிப்புக் கலை. அதைத் தயாரிப்பதற்காக அவர் அப்பொழுது எடுத்துக் கொண்ட சிரமத்தையும், அதோடு கலந்து வந்த அன்பையும் நினைத்த போது காப்பியின் தரத்தை அடியோடு மறந்து விட்டேன்.

* * *

நாளொரு வியாதியும் பொழுதொரு எதிர்ப்பு மருந்துமாக நாகரிகம் துளிர் விட்டுக் கொண்டிருக்கிற பட்டணங்களில் நரசிம்மத்தின் ஹோட்டலைப்போல ஒன்று கூடப் பார்ப்பது அரிது! மனத்துக்கும்



உடலுக்கும் இன்பமூட்டும் உணவைப் பரிமாறும் ஹோட்டல்களில் அன்பும் பாசமும் மங்கிக் கொண்டு வருவதை நினைத்து மிகவும் வருந்தத்தான் வேண்டியிருக்கிறது.

எங்களூர் நரசிம்மம், தயாரிப்பாளர், பரிமாறுபவர், காசு வாங்குபவர் ஆகிய மூன்று அவதாரங்களையும் எடுத்துக் கொள்வதால் யாவருடனும் நன்றாகப் பழக முடிகிறது. முதலாளிகள் இரண்டு அவதாரங்கள் எடுக்கும் ஹோட்டல்களை பஸ் போக்குவரத்துக்கு அருகில் உள்ள ஊர்களில் காணலாம். அடுப்படியில் ஒரு ஆள் நின்று கொண்டிருப்பார். இன்னொருவர் சாப்பிட வருகிறவர்களை வரவேற்றுப் பரிமாறுவார். பரிமாறுபவரே உடனுக்குடன் வாசல்பக்கமுள்ள மேஜையின் பக்கம் ஓடி ஓடிச் சில்லறைகளை வாங்கிப் போட்டுக் கொள்வார். அவரேதான் முதலாளி! பஸ் வந்து நிற்கும் நேரங்களில் மட்டும் இந்த ஹோட்டல் முதலாளி சற்றுச் சுறுசுறுப்பாக ஓடி ஆடுவார். மற்ற வேளைகளில் மேஜையின் முன் உட்கார்ந்திருப்பார். படிப்பது, ஊர்ப் பிரமுகர்களுடன் அரட்டையடிப்பது முதலான உபதொழில்களில் ஈடுபட்டிருப்பார்.

இதைத் தாண்டி இன்னும் சற்றுப் பெரிய ஊர்களுக்கு வந்து விட்டால், பில் நாகரிகம் தலை காட்டுகிற ஹோட்டல்களைக் காண்கிறோம். முதலாளி பணம் வாங்கும் மேஜையடியை விட்டு நகரவே மாட்டார். நாம் இந்த ஹோட்டல்களுக்குள் போய் உட்கார்ந்ததுடன், வாரிவிட்ட கிராப், கழுத்தில் மைனர் சங்கிலி, கையில் கைக் கெடிகாரம் இத்தியாதி அலங்காரங்களுடன் ஒரு இளைஞர் நம்மை நோக்கி வருவார். வந்து, "என்ன சாப்பிடுறீங்க, சார்!" என்று கேட்பார்.

"சூடாக ஒரு தோசை கொண்டு வாங்க, சார்!" என்று நாம் 'ஆர்டர்' பண்ணி விடுவோம். நமது 'ஆர்ட'ரை உரத்த குரலில் அஞ்சல் செய்வார் இளைஞர்.

சற்று நேரத்தில் தோசையை அதற்குரிய உபகரணங்களுடன் கொண்டு வந்து நமக்கெதிரே வைத்து விட்டுப் போய் விடுவார், அந்த இளைஞர். எங்கள் ஊர் ஹோட்டல் நரசிம்மத்தைப் போல இவர் ஆசையாக ஏதாவது ஒரு வார்த்தை பேசுவாரா நம்மோடு!

இதே ஹோட்டலுக்கு அடுத்த நாள் போனதும் நாம் உட்கார்ந்து சாப்பிட்ட இடத்தில் வேறு ஒரு இளைஞர் அதே பல்லவி, அனுபல்லவி சரணங்களுடன் பரிமாறிக் கொண்டிருப்பார். முதல் நாள் அந்த இடத்தில் பரிமாறிய இளைஞருக்கு அன்று ஓய்வு நாளாக இருக்கும், அல்லது 'அவர் ட்யூட்டி' முடிந்து போயிருக்கும். நாலு மாதங்களாக நாம் தினமும் அதே ஹோட்டலில் போய்ச் சாப்பிட்டு வந்தாலும், அங்குள்ள ஒருவரிடமும் நட்புக் கொள்ளவோ, அன்பான பேச்சுக்களைக் கேட்கவோ முடியாது. ஹோட்டல் முதலாளி பில்லையும் பணத்தையும் பார்ப்

பாரே தவிர ஆளின் முகத்தைப் பார்க்கவே மாட்டார்.

மேலே சொன்ன ஹோட்டலை விடப் பெரிய பெரிய 'கபே'க்கள் பெரிய நகரங்களில் இருக்கின்றனவே; அவைகளுக்குள் புகுந்து விட்டால் போதும். தட்டுகளும் கரண்டிகளும்தான் கட கட வென்று அலறிக் கொண்டிருக்கும். இதை அடக்குவதற்காக ரேடியோப் பெட்டியை அலற விடுவதும் உண்டு. இங்கு, தொழில்கள் யாவும் இலாக்காவாரியாகப் பிரிக்கப்பட்டுத் தனித் தனி நபர்களிடம் ஒப்படைக்கப்பட்டு விடுகின்றன. காரப் பட்சணம் தயாரிப்பவர் இனிப்புப் பண்டங்களின் உற்பத்தி ஸ்தலத்தை எட்டிப் பார்க்கவே மாட்டார். அல்வாப் போடுவதற்கென்று ஒரு அல்வா 'ஸ்பெஷலிஸ்ட்' இருப்பார். அல்வாவைக் கொதி எடுத்து வைத்து விட்டால், அதோடு அன்றைய அவர் 'ட்யூட்டி' முடிந்துவிடும். இதே போலக் காலையில் காப்பி தயாரிப்பவர் மாலையில் ஓய்வு பெற வெளியே போய்விடுவார். இன்று மேலக் கோடியில் இரண்டு மேஜைகளைக் கவனித்துக் கொண்டிருப்பவர் நாளைக் கீழ்க்கோடியிலுள்ள மேஜைகளுக்கு அனுப்பப்படுவார். மறுநாள் இரவு ட்யூட்டி வடபக்கம்; நாலாவது ஐந்தாவது மேஜைப் பக்கம்!

இப்படியாகச் சொக்கட்டான் காய்களைப் போல 'ஷிப்ட்' முறைப்படி இவர்கள் இடம் மாற்றி வைக்கப்படுவார்கள். பில் எழுதும் சிரமமும் இவர்களுக்குக் கிடையாது. அதற்கென்று தனியாக ஒருவர் உட்கார்ந்திருப்பார், மேஜை நம்பரைப் போட்டுக் கொண்டு.

இந்த நவநாகரிக ஹோட்டலில் நாம் யுக யுகாந்தரமாகச் சாப்பிட்டு வந்தாலும் அதன்மீது ஒரு பாச உணர்ச்சி நமக்கு ஏற்படுவதில்லை.

ஒரு சமயம் நான் திருச்சிக்குப் போயிருந்தபோது அங்குள்ள பிரபல ஹோட்டல் ஒன்றைப் பற்றி ஞாபகம் வந்தது. அந்தக் 'கபே'க்குள் நுழைந்தேன். உள்ளே கல்யாண வீடுமாதிரி இருந்தது. கல்யாண வீட்டில் பந்திக்கு உட்காருவது போல நான்கு நீள வரிசையில், வரிசைக்கு நாற்பது பேர் வீதம் நெருக்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள் ஜனங்கள். ஒவ்வொருவர் முன்னும் ஒரு துண்டு வெறும் இலை. எனக்கு ஒன்றுமே புரியவில்லை. எனக்கு உட்கார இடமுமில்லை. என்னை உட்காரச் சொல்வாருமில்லை. ஒரு ஜன்னல் பக்கம் போய் ஒதுங்கி நின்றேன். ஜன்னல் விளிம்பில் ஒரு துண்டு இலையைக் கொண்டு வந்து போட்டார் ஒரு ஆள். அது எனக்காகத் தான் போடப்பட்டது என்பதை! நான் ஒருவாறு யூகித்துக் கொள்ள முடிந்தது.

நான்கு வரிசையில் உள்ளவர்களும் இன்ன வடிவாலேனும் பரபரப்பாக உள் பக்கம் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த போதே கட கட ஒரு பெரிய இரும்புச் சட்டியில் ரவா கேசரியை ஒருவர் தூக்கிக் கொண்டு வர, இன்னொருவர் வரிசையாக இலைகளில் ஒவ்வொரு கரண்டி கேசரியைப் பரிமாறிக் கொண்டே போனார். வரிசையில் சிலர் (இனிப்பை விரும்பாதவர்கள்) வேண்டாமென்று சொல்லிவிட்டு வெறும் இலையோடு இன்னும் காத்திருந்தார்கள். நான் ஒன்றுமே பேசவில்லை. என் பக்கம் ஜன்னல் விளிம்பில் போடப்பட்டிருந்த இலையிலும் ஒரு கரண்டி கேசரி விழுந்தது.

நான்கு வரிசைக்கும் நாலே நிமிஷங்களில் கேசரியைப் பரிமாறிவிட்டு வெறும் சட்டி உள்ளே திரும்பியது. அதே சமயம் ஒரு தட்டு நிறைய பஜ்ஜி இரண்டு ஆட்களுடன் வெளியே வந்தது. ஊர்வலத்தில் ஸ்வாமி தரிசனம் பண்ணிவிட்டு அம்மன் தரிசனத்தைக் காண ஆவலோடு நிற்கும் பக்தர்களைப் போல நான்கு வரிசை ரசிகர்களும் பஜ்ஜித் தட்டை ஏறிட்டு நோக்கினார்கள். முன் சொன்ன பிரகாரமே ஒருவர் தட்டை ஏந்தி வர இன்னொருவர் இலைக்கு மூன்று பஜ்ஜி வீதம் போட்டுக் கொண்டே போனார். அடுத்த நாலாவது நிமிஷம் அணிவகுத்த சிப்பாய்கள் போலக் காப்பித் தம்ளர்கள் அடுக்கப்பட்ட தட்டொன்றை ஒருவர் ஏந்தி வர இன்னொருவர் அதை வழங்கிக் கொண்டே போனார்.

காப்பி சாப்பிட்டானதும் நான்கு இலை வரிசைகளும் எழுந்து ஒரே தொடர்போல 'க்யூ' வரிசையில் வெளியே கிளம்பியது. இவ்வளவு நேரமாக வரிசைகளின் நடுவில் நின்று கழுகுப் பார்வையைச் செலுத்திக் கொண்டிருந்த ஒரு ஆசாமி முதலாளியின் மேஜையருகில் போய் நின்று கொண்டு "அஞ்சணா, அஞ்சணா, மூணணா, அஞ்சணா, மூணணா, மூணணா, அஞ்சணா" என்று ஒவ்வொருவருடைய கணக்கையும் தெளிவாகச் சொல்லிக் கொண்டிருந்தார். கடைசியாக நானும் அஞ்சணாவை மேஜையின்மேல் போட்டு விட்டு வெளியே கிளம்புவதற்குள், அடுத்த நான்கு வரிசை ஆட்கள் உள்ளே பாய்ந்து வந்து அமர்ந்து விட்டார்கள்.

இந்த நான்கு இலை வரிசைக் 'கபே' எனக்கு ஒரு புதுமையாகவே இருந்தது. யாரும் யாருடனும் பேச வேண்டியதே இல்லை. கணக்குச் சொல்பவரின் சப்தம் தவிர வேறு சப்தமே கிடையாது அங்கே. தினமும் ஒரு இனிப்புப் பதார்த்தம், ஒரு கார பதார்த்தம், காப்பி இவ்வளவுதான் அங்கு வியாபாரம்.

* * *

மதுரையை அடுத்துள்ள ஒரு ஊருக்குப் போயிருந்தபோது இன்னொரு அதிசயமான ஹோட்டலைப் பற்றித் தெரிய வந்தது. இந்த அதிசய ஹோட்டலுக்குப் பெயர் கிடையாது. பானை இட்டிலிக்கும் ஸ்பெஷல் காப்பிக்கும் பெயர்போனது.

ஹோட்டல்காரர் ஆசார சீலர் என்பது அவரைப் பார்த்த உடனேயே தெரிந்தது. ரொம்பவும் கண்டிப்பானவர். அதிகமாகப் பேச மாட்டார். நான் அவரைத் தாண்டிச் செல்வதற்குள் "சார்" என்று கூப்பிட்டு எதிரே உள்ள சுவரைக் காட்டினார்.

"உள்ளே நுழையும் முன் இதோ இந்தத் தொட்டியில் கால்களை நன்றாகக் கழுவிக் கொள்ளவும்" என்று அந்தச் சுவரில் எழுதியிருந்தது. அதையடுத்து, "மிதியடிகளை வெளியே கழட்டவும்" என்று ஒரு அட்டையில் எழுதித் தொங்கவிடப்பட்டிருந்தது. அவற்றில் குறிப்பிட்டிருந்தபடியே செய்து விட்டு இருபதடி தூரம் செல்வதற்குள் இன்னொரு போர்டு 'அவரவர்கள் கொண்டு வரும் சாமான்களை அவரவர்களே பாதுகாத்துக் கொள்ள வேண்டியது' என்று பயமுறுத்தியது. இதை வாசித்தவுடன் என் கையிலுள்ள பையைப் பலமாக இறுக்கிப் பிடித்துக் கொண்டு உள்ளே செல்

# வீட்டிற்கும் தோட்டத்திற்கும்

வேண்டிய மட்டும்
தண்ணீர் கொடுக்க

## டெமிங் "மார்வெல்"
வாட்டர் ஸிஸ்டம்




இதைத் தற்போது உங்கள் வீட்டிலுள்ள கிணற்றிலோ, குழாய் கிணற்றிலோ, அமைக்கலாம். வீணாக, வீட்டின்மேல் டாங்க் கட்டவோ, அதற்குள்ள குழாய்ச் செலவோ கிடையாது. இந்த பம்பு தானாகவே (ஆட்டோமாட்டிக்காக) வேலை செய்வதுடன் வருஷக்கணக்காகத் திருப்திகரமாக சேவை செய்யும்.



குழாயைத் திறந்தால்
தண்ணீர் கிடைக்கும்

## டெமிங் "மார்வெல்"
வாட்டர் ஸிஸ்டம்

ஏஜண்டுகள்

**ஈசன் இன்ஜினீயரிங் கம்பெனி, லிமிடெட்**
5-7, ஸெகண்ட் லேன் பீச் - - மதராஸ்-1

**பயனீர் ஸைகிள் ஹவுஸ்**
மேலக் கோபுரத் தெரு, மதுரை

# THE BRILLIANT TRADING CORPORATION LIMITED

TIMBER MERCHANTS

PHONE: 3876 4-A, BASIN BRIDGE ROAD, MADRAS-1 GRAM: YESKAR



பம்பாய் மியூச்சுவல் கட்டடம்

அன்பர்களுக்கும் ஆதரவாளர்களுக்கும்
எங்கள் மனமார்ந்த
**தீபாவளி வாழ்த்துக்கள்**

சென்னையில் பிரதான இடமாகிய நேத்தாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடில் புதிதாகக் கட்டப் பட்டிருக்கும் பெரிய கட்டிடமாகிய "பம்பாய் மியூச்சுவல்" கட்டிடத்திற்கு நாங்களே முழுவதும் நயம் இரங்கூன் தேக்குமரமாக சப்ளை செய்திருக் கிறோம். இதைப்போலொத்த பெரிய கட்டிடங் களுக்கும், பெரிய கம்பெனிகளுக்கும், பெரிய கண்டிராக்டர்களுக்கும் நயம் மரங்களாகவும் விலை சகாயமாகவும் சப்ளை செய்து வருகிறோம்.

புதிதாக கட்டிடம் கட்டுவோர் தங்களுக்கும் தேவையான இரங்கூன், மைசூர், மலபார், பலார்ஷா தேக்கு மரங்களுக்கும் சைஸ்களுக்கும் கருமருதி, வேங்கை, பிள்ளமருதி, ஆயினி, கோங்கு, நூக்கமரங்களுக்கும், மாம்பலகை வெண்தேக்கு மற்றும் எல்லா ரக மரங்களுக்கும் பிளேவுட் பலகைகளுக்கும் எங்களிடம் வாங்கும்படி கோருகிறோம்.

கே. வி. என். அண்ணாமலை நாடார், ஜெனரல் மானேஜர்

---

*For Your Requirements of*

## PAPER, BOARDS AND PRINTING INKS

LARGEST STOCKISTS OF IMPORTED AND INDIAN MILLS PAPERS

★

# T. CHELVARANGA MUDALIAR & SONS

289, STRINGER STREET, MADRAS-1

Telephone: 4041 Telegrams: "CHELVAM"

DISTRIBUTORS OF

- TITAGHUR PAPER MILLS CO., LIMITED
- BENGAL PAPER MILLS CO., LIMITED
- MYSORE PAPER MILLS LIMITED
- PUNALUR PAPER MILLS LIMITED
- ROHTAS INDUSTRIES LIMITED
- GANGES PRINTING INK FACTORY LTD.

றேன். 'எச்சரிக்கை!' என்ற கொட்டை எழுத்துக்களுடன் உள் வாசலில் ஒரு பலகை என்னை வரவேற்றது. அந்த 'எச்சரிக்கை'யின் கீழ் உள்ள வாசகத்தைப் படித்தேன். "ஐயா, சாப்பிடும் முன்னதாக மடியில் சில்லறை இருக்கின்றதா என்று பார்த்துக் கொள்ளவும். சாப்பிட்டபின் கடன் சொல்லவோ, அல்லது பணப் பையைப் பறி கொடுத்து விட்டதாகவோ சொல்லக் கூடாது என்பதை இதன் மூலம் அறியவும்." உடனே மடியைத் தடவிப் பார்த்துக் கொண்டேன். நல்ல வேளையாக என் பணப்பை காணாமல் போகவில்லை.

இத்தனை வெளி எச்சரிக்கைகளையும் படித்து முடித்து விட்டுத் துணிச்சலுடன் உள்ளே போய் ஒரு மேஜையின் முன் உட்கார்ந்தேன். தலைக்கு மேல் நான்கு பக்கங்களிலும் தோரணங்கள் போல விதம் விதமாக எழுதப்பட்ட பலகைகள் சரமாரியாகத் தொங்கிக் கொண்டிருந்தன. அத்தனையையும் படிக்க நேரமும் பொறுமையும் இல்லாததால் எதிர் வரிசையிலுள்ளவற்றை மட்டிலும் படித்துப் பார்த்தேன்.

"விபூதி, குங்குமம், நாமக் கட்டி, ஸ்ரீ சூர்ணம் வேண்டுமானால் கேளுங்கள், தரப்படும்." இப்படி ஒரு போர்டு. நான் போர்டுகளைப் படிப்பதைக் கண்டு சப்ளையர் ஒருவர் என் அருகில் பேசாமல் நின்று கொண்டிருந்தார். "சூடான இட்டிலி வேண்டுமானால் அருகில் நிற்பவரிடம் உத்தரவு கொடுத்து விட்டுப் பத்து நிமிடங்கள் காத்திருக்கவும். ஸ்பெஷல் காப்பி வேண்டுமென்றால் பிரத்தியேகமாகச் சொல்லிவிட வேண்டும்" என்ற பலகையைப் படித்தவுடன் சூடான இட்டிலிக்கும் ஸ்பெஷல் காப்பிக்கும் உத்தரவு கொடுத்து விட்டு அடுத்த விளம்பரத்தையும் பார்க்க ஆரம்பித்தேன்.

"அவரவர்கள் சாப்பிட்ட இலைகளை அவரவர்களே எடுக்க வேண்டுமெனக் கண்டிப்பாய்க் கேட்டுக் கொள்ளப்படுகிறது. இலை போடும் தொட்டி வடக்குக் கோடியில் வைக்கப்பட்டிருக்கிறது."

இட்டிலி சாப்பிட்ட பிறகு மேற்படி பலகை வாசகத்தின்படியே செய்வதென்று நிர்மானித்துக் கொண்டேன். அடுத்த எழுத்துப் பலகை ஒரு படத்துடன் விளங்கியது. "ஐயன்மீர்! தயவு செய்து டவரா தம்ளர்களை எச்சில் செய்து சாப்பிடாதீர்கள். திரவப் பதார்த்தங்களை அண்ணாந்து சாப்பிடவும்." இந்த வாசகத்தின் பக்கத்தில் ஒருவர் அண்ணாந்து காப்பி குடிப்பதை விளக்கும் சித்திரமொன்று பெரிய எழுத்து விக்கிரமாதித்தியன் கதைப் புத்தகத்தில் வரும் ஓவியக் கலைச் சிறப்பில் தீட்டப் பெற்றிருந்தது. படத்திலுள்ள மனிதர் தமது கையில் வாய்க்கு எதிரே அரை அடி தூரத்தில் ஒரு தம்ளரைப் பிடித்துக் கொண்டிருந்தார். அவருடைய தலை முதுகைத் தொட்டுக் கொண்டிருந்தது. மஞ்சள் நிறத்தில் காப்பியானது அவருடைய வாய்க்குள் அருவி போல எட்டிப் பாய்ந்து கொண்டிருந்தது. தம்ளரை அதுபோலக் கவிழ்த்தால் எந்தத் திரவ பதார்த்தமும் இப்படி எதிர்ப் பாய்ச்சல் பாயுமென்று இதுவரை எந்த ரசாயன சாஸ்திரியும் கண்டு பிடித்ததாகத் தெரியவில்லை.

அடுத்தது ஒரு சிறு பலகை. "லாகிரி வஸ்துக்கள் உபயோகித்தல் கூடாது. அத்துமீறுபவர்களைப் போலீசார் வசம் ஒப்புவிக்கப்படும்" என்று இருந்தது. "அரசியல் விவகாரங்களைப் பேசவோ, ஆஸ்திக நாஸ்திக விவாதங்களைக் கிளப்பவோ இங்கு அனுமதிக்கப்பட மாட்டாது" என்பதையும் படித்தேன்.

மேற்படி பலகையை வாசித்துக் கொண்டிருந்த போது சூடான பானை இட்டிலியும் அதைத் தொடர்ந்து ஸ்பெஷல் காப்பியும் எனது மேஜைக்கு வந்துவிட்டன. "சாப்பிடும்பொழுது மேலே பார்த்துக்கொண்டு படிப்பதனால், பதார்த்தங்கள் வாய் தவறிக் கீழே விழ ஏதுவாகும்" என்ற அடுத்த பலகையை இட்டிலி சாப்பிட்ட பிறகு தான் பார்த்தேன்.

பரிமாறப்பட்ட இட்டிலியின் மிருதுத் தன்மையையும், நாக்கைவிட்டு அகலாத நறுமணம் கமழ்ந்த அந்த ஸ்பெஷல் காப்பியையும் சாப்பிட்டவுடன் இன்னும் எத்தனை அறிவிப்புப் பலகைகளானாலும் படித்துத் தீர்த்து விடலாம் போல இருந்தது. ஆனால் "ரயிலுக்குப் போகவேண்டியிருப்பவர்கள் எதிரிலுள்ள பெரிய கடிகாரத்தைப் பார்க்க வேண்டாம். நேற்றைய முதல் அது நின்றுபோயிருக்கிறது" என்ற எச்சரிக்கையையும், சுவரில் கட்டியிருந்த அந்தப் பெரிய கடிகாரத்தையும் எனது கைக் கடிகாரத்தையும் பார்த்தவுடன் ரயில் புறப்பட இன்னும் கால் மணி நேரம் தானிருந்தது என்பதை அறிந்து கொண்டேன்.

சாப்பிட்ட இலையைக் கையில் எடுத்துக் கொண்டு வடகோடிக்குச் சென்றேன். "இலையை இங்கே போடவும்" என்று கைப் படம் போட்டுச் சுட்டிக் காட்டிய தொட்டியில் இலையைப் போட்டுவிட்டுக் கையலம்பத் தண்ணீரைக் காணாமல் திகைத்தேன். எதிரிலுள்ள சுவர் என்னை அதிகநேரம் திகைக்க விடவில்லை. "கை யலம்புமிடத்துக்குப் போகும் வழி இதோ செல்கிறது" என்று நீண்ட அம்புக் குறி ஒன்று போட்டுக் காட்டியிருந்தது. அந்த அம்புக் குறி காட்டிய வழியே சென்றேன். எதிரே ஒரு சுவர் குறுக்கிட்டது. அதில் எழுதியிருந்தது: "இடது பக்கம் திரும்பவும்" என்று. திரும்பினேன். இன்னொரு நீண்ட அம்புக் குறி அந்தச் சுவரோடு போய்க்கொண்டிருந்தது. நானும் அதைத் தொடர்ந்து போனேன். பின் பக்கத்துத் தோட்டத்தில் ஒரு கிணற்றின் முன் கொண்டு விட்டது என்னை. "குடி தண்ணீர்" என்று ஒரு 'டேங்கு'. "கைகால் தண்ணீர்" என்று ஒரு 'டேங்கு'. இரண்டாவதில் இணைத்திருந்த ஒரு குழாயைத் திறக்கப் போனேன். "தண்ணீரை அதிகம் சேதப் படுத்தாமல் உபயோகிக்கவும்" என்று அதன் மேல் எச்சரிக்கை கொடுக்கப்பட்டிருந்ததை உத்தேசித்து மெல்லக் குழாயைத் திருப்பினேன். பின்பு வேகமாகத் திருப்பியும் பார்த்தேன். ஒரு சொட்டுத் தண்ணீர்கூடக் கீழேவிழவில்லை.






இதே சமயம் அந்த ஹோட்டல் முதலாளி என் பக்கம் ஒரு அட்டையுடன் வேகமாக ஓடி வந்து கொண்டிருந்தார். "என்னங்க தண்ணீரே இல்லையே" என்று நான் கேட்டதற்கு அவர் பதில் சொல்லவில்லை. கையில் கொண்டு வந்த அட்டையைக் குழாயின் மேல் மாட்டினார். "டேங்கு நேற்று முதல் ரிப்பேர். தண்ணீர் வராது. ஆகையால், கையலம்பும் அன்பர்கள் தயவு செய்து தெற்கு மூலையிலுள்ள தொட்டித் தண்ணீரை மொண்டு உபயோகிக்கவும்" என்று எழுதப்பட்டிருந்தது. அதில் சொல்லிய படியே சென்று கையலம்பி விட்டு வேகமாக வெளியே வந்தேன். காசு கொடுப்பதற்காக முதலாளியைப்பார்த்தேன். அவர் அங்கில்லை. என்ன செய்வதென்று திகைத்துக் கொண்டிருக்கையில் அவர் உட்காரும் நாற்காலியைப் பார்க்க நேரிட்டது. "முதலாளி அவசர அலுவல் நிமித்தமாக உட்புறம் சென்றிருப்பதால், அரை நிமிஷம் காத்திருக்கும்படி கோருகிறோம்" என்றெழுதிய பலகை தொங்கவிடப் பட்டிருந்தது. நான் இதைப் படித்து முடிப்பதற்குள்ளாக அவரே வந்து விட்டார். பரிமாறுபவர் குரல் கொடுத்தபடி ஐந்தணாவை எடுத்து மேஜையில் வைத்து விட்டு வேகமாக வெளியில் இறங்கினேன்.

முதலாளி கை தட்டிக் கூப்பிட்டார். நான் திரும்பிப் பார்த்தேன். "மறந்து விட்டுப் போன வஸ்துவை நினைத்துப் பாருங்கள்" என்று எழுதப்பட்டு அவர் அருகில் வைக்கப்பட்டிருந்த ஒரு பலகையைச் சுட்டிக் காட்டினார். அவசரத்தில் நான் என்னுடைய செருப்பை அங்கே விட்டுவிட்டு ஓடியது அப்பொழுதுதான் ஞாபகத்துக்கு வந்தது. அவர் செய்த இந்தப் பேருதவியை எண்ணி அவரைப் பார்த்து, "நன்றி" என்றேன். அவர் தலைக்கு மேல் தொங்கிய "வணக்கம்" என்ற போர்டை மௌனமாக எனக்குச் சுட்டிக் காட்டினார்!



# மருந்து மல்லிகை!

“ஒவ்வொருவரும் ஒரு நல்ல புஸ்தகம் எழுதலாம். அதுதான் அவரவர்கள் சொந்த வாழ்க்கைச் சரிதம்” என்றார் ஒரு ஆசிரியர்.

இது முற்றிலும் உண்மை என்று நம்பி விடப் போகிறீர்கள். 'நாம் வாழ்ந்த வாழ்க்கைதானே, எழுதுவதில் என்ன கஷ்டம் இருக்கப் போகிறது!' என்று எண்ணப் போகிறீர்கள். அப்படி எண்ணினால் அதைப் போன்ற தவறான எண்ணம் வேறு ஒன்று இருக்க முடியாது! காவியமானாலும் சரி, கதையானாலும் சரி, நவீனமானாலும் சரி, எழுதுவது என்று உட்கார்ந்தால் அதில் எவ்வளவோ கஷ்டங்கள் இருக்கத்தான் செய்கிறது. அதனால் எழுதுவது என்பது அவ்வளவு சுலபமல்ல. இதற்கு நானே அத்தாட்சி.

நான் இரண்டு மாதங்கள் குற்றாலத்தில் சுகவாசம் செய்யப் போயிருந்தேன். அந்த இரண்டு மாசத்தில் ஓர் நாவல் எழுதிவிடுவது என்ற சங்கல்பத்துடன்தான் போயிருந்தேன். ஒவ்வொரு நாளும் காகிதத்தையும் பேனாவையும் எடுத்து வைத்துக் கொண்டு உட்காருவேன். ஒரு வரி எழுத வந்தால்தானே!

'என்ன! என்ன! லக்ஷ்மி இன்ஷூரன்ஸ் கம்பெனி மானேஜிங்டைரக்டரான உனக்கும் கதை - நாவல் - ஏன், இலக்கியத்துக்குமேதான் - என்ன சம்பந்தம்?' என்று ஒரே வியப்புடன் நீங்கள் கேட்பது எனக்குத் தெரிகிறது.

உண்மை. ஈக்கு இரும்புப் பட்டறையில் என்ன வேலை! ஓம், நியாயந்தான். அதே நிலைமைதான் என்னுடையதும். ஆயினும் நாவல் எழுத வேண்டிய ஒரு தர்ம சங்கடத்தில் நான் அகப்பட்டுக் கொண்டு விட்டேன். அந்த விவரத்தை உங்களுக்கு முதலில் சொல்லி விடுகிறேன்.

ஆறு மாதங்களுக்கு முன்பு எனக்குக் கம்பெனித் தொல்லைகள் அதிகமாகி விட்டன. பொது மக்களின் பணம் ஏராளமாக என் கையில் புரளும் போது அதை நல்ல படியாக உபயோகித்து, கம்பெனிக்கும் எனக்கும் லாபம் தேடிக் கொள்ள வேண்டாமா! அந்த முயற்சியில் பல ஆண்டுகள் ஏகப் புரட்டல்கள், உருட்டல்கள் ரொம்பவும் வெற்றிகரமாகவே செய்து வந்தேன். பங்கு மார்க்கெட் வியாபாரம், கட்டட புரோக்கர் வேலை, பாங்குகள் ஷேர் வாங்குதல்- இப்படி எத்தனை இல்லை! அவ்வளவையும் வெளியே சொல்லிக் கொண்டிருக்கக் கூடாது. பார்லிமென்டில் எங்கள் அட்டகாசங்களை ஒடுக்குவதற் கென்றே சட்டங்கள் வேறு வந்து நிறைவேறி விட்டன! இப்படிப் பல தொல்லைகளில் அடிபட்டிருந்த எனக்கு ஆறு மாதங்களுக்கு முன்பு ஒரு செய்தி பேரிடி போல் வந்தது! அதாவது 'அரோகரா பாங்கு' அரோகரா ஆகிவிட்டது என்று. பொது மக்களின் பணத்தில் கணிசமான பகுதி அதில் போட்டிருந்தேன். இப்பொழுது ரூபாய்க்குப் பதினைந்தரையணா வந்து விட்டது என்றாலும், அந்தச் செய்தி வந்தபோது எனக்குப் பேர் அதிர்ச்சியாக இருந்தது. ஒரே கவலை. இராத் தூக்கம் கிடையாது. சாப்பாடு இறங்காது. யாரைக் கண்டாலும் எரிச்சல். உடம்பு இளைக்க ஆரம்பித்தது. ஆறு மாதத்தில் என் உடல் நிலை மோசமாகி விட்டது. கம்பெனி நிலைமையைச் சீர்திருத்தி விட்டேன். அதில் சற்று மன நிம்மதி ஏற்பட்டது. இனி உடலைக் கொஞ்சம் பார்த்துக் கொள்வோம் என்று கருதி டாக்டர் சதானந்தத்திடம் சென்றேன்.

டாக்டர் என்னைப் பரிசோதித்து நாட்கள் பல பரிசோதனைகளுக்கு உட்படுத்தினர். கடைசியில் எனக்கு 'டானிக்'குகளும் சாப்பாடு திட்டமும் எழுதிக் கொடுத்து இரண்டு மாதம் திருக்குற்றாலத்தில் போயிருந்து, பரிபூரண ஓய்வு எடுத்துக் கொண்டு வரச் சொன்னார். வரும்போது ஒரு நாவல் எழுதிக்கொண்டு வரவேண்டும் என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டார்.

“டாக்டர், என்ன! என்ன! நாவலா! நானா எழுத வேண்டும்!...டாக்டர், நான் எழுத்தாளன் இல்லை. நான் லக்ஷ்மி இன்ஷூரன்ஸ் கம்பெனியின் மானேஜிங் டைரக்டர்!” என்று ஞாபகப்படுத்தினேன்.

“தெரிகிறது, ஸார்! தெரிந்துதான் சொல்லுகிறேன். ஏன் நீங்கள் நாவல் எழுத முடியாது! நீங்கள் நாவல் படித்ததில்லையா!” என்று கேட்டார்.

“ஓ, நிறையப் படித்திருக்கிறேன். ஆனால் எழுதுவது...” என்று இழுத்தேன்.

“பேஷாக எழுதலாம். இரண்டு மாதம் அவகாசம் இருக்கிறதே! நன்றாக எழுதிக் கொண்டு வாருங்கள். நான் படிப்பேன்!” என்று 'தீர்மானம்' வேறு கொடுத்து என்னை அனுப்பி வைத்து விட்டார்.

இதுதான் நான் கதை எழுதும் தொல்லையில் அகப்பட்டுக் கொண்ட கதை.




* * *

திருக் குற்றாலம், ஆகா! அதை நினைத்தாலே அருவி விழுவதுபோல் உள்ளத்தில் உவகை பொங்கி வழிகிறது. இயற்கை அன்னையின் எழிற் கோலம் காண வேண்டும் என்றால் குற்றாலத்துக்குத்தான் போக வேண்டும். அங்கே தங்கிய நாட்களில்



தினம் காலையிலும் இரவிலும் அருவிக்குக் குளிக்கப் போவேன். மற்ற வேளைகளில் நாவல்கள் படிப்பேன். ஒரு மாத காலத்தில் சுமார் முப்பது நாவல்கள் படித்து முடித்து விட்டேன்.

எத்தனை நாவல்கள் படித்தாலும் எனக்குச் சொந்தமாகக் கதை எழுத ஒரு கருத்து உதயமாகவில்லை. பகலில் படித்தான பிறகு மாலை வேளைகளில் வான் முகட்டைத் தொட்டு நிற்கும் மலைகளைப் பார்த்த வண்ணம் யோசனையில் ஆழ்ந்து உட்கார்ந்திருப்பேன். மலைகளைத் தழுவிக்கொண்டு மிதந்து செல்லும் மேகங்கள் எனக்குப் புதுப் புதுக் கற்பனைகளை அளிக்கும். அந்தக் கற்பனைகளை உடனே எழுத்து வடிவில் கொண்டு வர மேஜையின் முன் உட்காருவேன். அந்தக் கற்பனையும் மேகத்தைப் போலவே என் மனத்தை விட்டு அகன்று அப்பால் போயிருக்கும். எழுதி எழுதிப் பார்ப்பேன் — ஆனால் ஒன்றும் சரியாக வராது.

இப்படி ஒரு மாதம் ஓடிவிட்டது.

ஒரு நாள் அருவியில் குளித்து விட்டுத் திரும்பி வீட்டுக்கு வரும்போது எதிரில் ஒருவர் வந்து கொண்டிருந்தார். அவரை எங்கேயோ எப்போதோ பார்த்தாற்போல் தோன்றிக் கொண்டிருந்தது. அவர் முகம் அவ்வளவு பரிச்சயமான முகமாக இருந்தது. எங்கே பார்த்திருக்கிறோம் என்று என்னுள்ளான மட்டும் நினைவுபடுத்திக் கொள்ள முயன்றேன். முடியவில்லை. அதற்குள் அவர் என்னைப் பார்த்துப் புன்முறுவல் செய்து கொண்டே கையெடுத்துக் கும்பிட்டார். நானும் கும்பிட்டு விட்டு, "நீங்கள் யார் தெரிய வில்லையே! உங்களை எங்கோ பார்த்தாற் போலிருக்கிறதே!" என்றேன்.

"டாக்டர் சதானந்தம் கிளினிக் ஹோமில்தான். நீங்கள் எத்தனையோ தடவை அங்கே வந்திருக்கிறீர்களே......" என்று கூறினார் அவர்.

"ஆமாம், ஆமாம். அங்கேதான், உங்களைப் பார்த்திருக்கிறேன்! டாக்டர் தான் உங்களையும் குற்றாலத்துக்கு அனுப்பி வைத்திருக்கிறார் போலிருக்கிறது!" என்றேன்.

"ஆமாம். இரண்டு மாசம் இங்கிருந்து 'ரெஸ்ட்' எடுத்துக் கொள்ளச் சொல்லியிருக்கிறார். முந்தா நாள் தான் வந்தேன்."

"சரி, இந்த ஊரில் நமக்கு ஒரு மாசத்துக்கு நீங்கள் துணையாயிருக்கிறீர்கள். நான் இங்குதான் 'சண்பக பங்களா'வில் இருக்கிறேன். ஒழிந்த போது வாருங்கள். பேசிக் கொண்டிருப்போம்" என்றேன்.



* * *

அன்று மாலை அந்த நண்பர் வந்திருந்தார். நீண்ட நேரம் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். பேச்சு வாக்கில் அவர் கண் என் மேஜையின் மீது சென்றது. அதன் மேல் கிடந்த நாவல் புஸ்தகங்களைப் பார்த்து விட்டு, "அடேடே! 'மல்லிகை' எழுதிய நாவல்களாக வைத்திருக்கிறீர்களே. ஓ! உங்களுக்கு அவர் எழுதிய நாவல்கள் என்றால் ரொம்பவும் பிடிக்குமோ!" என்று கேட்டார் நண்பர்.

"பிடிக்கிறதோ இல்லையோ! நான் நாவல்களைப் படித்தாக வேண்டியிருக்கிறது!" என்றேன்.

"என்ன அப்படி! அந்த நாவலில் யாராவது உங்களுக்குப் பரீட்சை வைக்கப் போகிறார்களா!" என்று கேட்டார்.

"அதைவிட மோசமான காரியம். டாக்டர் சதானந்தம் இந்தக் குற்றால வாச காலத்தில் ஒரு நாவல் எழுதிக் கொண்டு வா என்று சொல்லியிருக்கிறார். அதற்காகத்தான் பிற ஆசிரியர்கள் எப்படி நாவல்கள் எழுதுகிறார்கள் என்பதைப் பார்க்க ஒரு இலக்கிய நண்பருடன் புஸ்தகக் கடைக்குப் போனேன். அவர் 'மல்லிகை எழுதிய நாவல்கள் நன்றாக இருக்கும், படித்துப் பாருங்கள்' என்றார். அதனால்தான் அவற்றை வாங்கி வந்தேன்" என்றேன்.

"அப்படியானால் நான் ரொம்பவும் பெருமையும் மகிழ்ச்சியும் அடைய வேண்டியது தான்" என்றார்.

"ஏன்!"

"ஏனென்றால் நான்தான் 'மல்லிகை.' என் நாவல்கள் நல்லவை என்று சிபாரிசு செய்யப்பட்டு நீங்கள் படிக்கிறீர்கள் என்றால் எனக்குப் பெருமையாக இராதா! மகிழ்ச்சியாக இராதா!"

"நீங்களா ஆசிரியர் மல்லிகை! உங்களை எப்படியோ அல்லவா கற்பனை செய்து வைத்திருந்தேன்! அதனால் என்ன! உங்கள் நாவல்கள் இப்போதைய நோய்க்கு மருந்தாக விளங்கினால் சரி தான்!" என்றேன்.

இப்படித்தான் எங்கள் நட்புறவு ஆரம்பமாயிற்று. பிறகு அவர் ஒவ்வொரு நாளும் வீட்டுக்கு வரும் போது, "என்ன ஸார்! உங்கள் நாவல் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது!" என்று கேட்டுக்கொண்டே வருவார்.

"ஏன் ஐயா, என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ளுகிறீர்கள்!" என்று கேட்பேன்.

இப்படித்தான் சம்பாஷணை தொடங்கும். அதிலிருந்து இலக்கியம், இலக்கிய ஆசிரியர்கள், இலக்கிய 'கிரிட்டிக்'குகள் முதலிய விஷயங்களுக்குப் போகும். நேரம் போவதே தெரியாது. ஒரு நாள் நண்பர் மல்லிகை தமது ஒரு சில அனுபவங்களைக் கூறினார். சுமார் இருநூறு பக்கங்களுக்கு மேற்பட்ட நாவலை ஒரு சமயம் மூன்றே நாட்களில் எழுதி முடித்தாராம். இன்னொரு நாவலை எழுத உட்கார்ந்தாராம். மூன்று அத்தியாயங்கள் எழுதினாராம். அதற்குமேல் ஒரு வரிகூட எழுத முடியவில்லையாம். ஏழு வருஷங்களுக்குப் பிறகு தான் மீண்டும் அவரால் அந்த நாவலைத் தொடர்ந்து எழுதி முடிக்க இயன்றதாம்.

இவற்றை யெல்லாம் கேட்கக் கேட்க வியாபார உலகத்தைத் தவிர, எப்பாடு பட்டாவதும் பணத்தைச் சம்பாதிக்க வேண்டும் என்ற உணர்ச்சியைத் தவிர, வேறான எண்ணங்களை மனம் எண்ண முடியும் என்பதை புரிந்தேன். அந்த எண்ணங்களை அழகு வடிவங்களாகச் செதுக்க முடியும் என்பதையும் நண்பர் 'மல்லிகை'யின் நட்பில் தெரிந்து கொண்டேன்.

ஆயினும் என்ன! நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. என்னால் நாவல் எழுதத் தகுந்த கருத்தே மனத்தில் தட்டுப்படவில்லை. வெறும் கையுடன்தான் டாக்டர் முன் நிற்க வேண்டியிருக்கும் போலிருக்கிறதே என்று எண்ணிக் கொண்டேன்.

* * *

ஒரு நாள் அருவியில் குளிக்கச் சென்ற போது ஒரு ஐந்து வயதுப் பெண் தன் பெற்றோர்களுடன் அருவியில் குளித்து விட்டு எதிரில் வந்து கொண்டிருந்தாள். அக் குழந்தையின் குறுகுறுப்பான பார்வையும் பால்வடியும் முகமும் கொழுகொழு என்றிருந்த கைகளும் கால்களும் பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்னிருந்த என் பெண் கமலாவின் தோற்றத்தைத்தான் நினைவூட்டின. இந்தக் குழந்தையை அந்த நிலையில் அப்படியே வாரியணைத்துக் கொள்ள வேண்டும் போல் தோன்றியது.

ஆனால் கூடவே தோன்றிய சங்கோசத்தின் காரணமாக அப்படிச் செய்ய வில்லை.

அருவியில் ஸ்நானம் செய்து விட்டு, வீட்டுக்கு வந்து சாப்பிட்டு விட்டுச் சாய்மான நாற்காலியில் சாய்ந்து புஸ்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டேன். புஸ்தகத்தில் மனம் பற்றவில்லை. அது எப்படிப் பற்றும்? அதுதான் பதினெட்டு வருஷங்கள் பின்னுக்குப் போய் விட்டதே!

அப்போது நானும் என் தமையனும் ஒரே குடும்பமாக வாழ்ந்து வந்தோம். எங்கள் இன்ஷுரன்ஸ் கம்பெனியின் சாதாரண குமாஸ்தாவாக எண்பது ரூபாய் சம்பளத்தில் நான் இருந்து வந்தேன். என் அண்ணா சர்க்கார் காரியாலயத்தில் 'சூப்பிரிண்டெண்டெண்'டாக இருந்தார். நல்ல செல்வாக்கு. அந்தக் காலத்தில் கேட்க வேண்டுமா?

என் தமையனுக்குக் குழந்தையே கிடையாது. வீட்டில் எனக்குத்தான் குழந்தைகள். மூத்தவள்தான் கமலா.

எப்பொழுதுமே என் குழந்தைகளிடம் என் அண்ணாவுக்குத் தனியான பிரியம் உண்டு. அண்ணாவுக்கு நேர்மாறு மன்னி. அவளுக்கு ஏனோ என் குழந்தைகளைக் கண்டால் பிடிப்பதில்லை.

என் மன்னியின் நிலையிலிருக்கும் எந்தப் பெண்ணுக்கும் என் குழந்தைகளைத் தன் குழந்தைகளைப் போலத்தான் கருதி நடந்து கொள்ளத் தோன்றும் என்று நினைத்தேன். ஈசன் படைப்பு விநோதத்தை யாரே அறிய வல்லார்! தனக்குக் குழந்தை பிறக்க வில்லை என்ற ஏக்கமே, என் குழந்தை கமலாவிடம் வெறுப்பாக உருமாறி யிருந்தது. ஆனால் குழந்தை கமலம் தன் பெரியம்மாவின் வெறுப் புணர்ச்சியைப் பாராமல் பழகி வந்தாள்.

என் மன்னிக்கு ஒரு அண்ணா. அவர் ஒரு பெரிய ஹைகோர்ட்டு வக்கீல். சென்னை மயிலாப்பூரில் இருந்து வந்தார். அவருக்குக் கமலாவின் வயதையொத்த ஒரு பெண். அவள் பெயர் அம்புஜம். அம்புஜத்தினிடம்தான் மன்னிக்கு வாத்ஸல்யம் அதிகம். அந்த வாத்ஸல்யத்தில் அம்புஜம் கமலாவுடன் விளையாடுவதும் பிடிக்காது. அன்யோன்யமாகப் பழகுவதும் பிடிக்காது. ஆனால் அந்தக் குழந்தைகள் இரண்டும் கொஞ்சி விளையாடும் காட்சியைப் பார்த்தால் மன்னியைத் தவிர எவருக்குமே உள்ளத்தில் இன்பக் கடல் பொங்கும். அந்த இன்பத்தை அனுபவிக்கக் கொடுத்து வைக்கவில்லை மன்னி.

ஒரு நாள் ஞாயிற்றுக் கிழமை. மன்னியின் அண்ணா மத்தியானம் வீட்டுக்கு வருவதாகச் சொல்லி அனுப்பியிருந்தார். தன் அண்ணா வருகிறார் என்றால் மன்னிக்குத் தனி உற்சாகம். வீடு திமிலோகப்படும். தித்திப்பு வகையில் இரண்டு, கார வகையில் இரண்டு செய்துவைப்பாள். அன்றும் செய்து வைத்து விட்டு, மணி மூன்றிருக்கும், என்னைக் கூப்பிட்டாள். எட்டணாக் காசை என்னிடம் கொடுத்து நிறையக் கதம்பம், மல்லி, ரோஜா எல்லாம் வாங்கி வரச் சொன்னாள். நான் வெய்யிலைச் சிறிதும் பொருட் படுத்தாமல் எல்லாம் வாங்கி வந்தேன்.

வெய்யிலில் போய் வந்த களைப்புத் தீர வாசல் திண்ணையில் உட்கார்ந்தேன். அரை மணி நேரமாகியிருக்கும். அதற்குள் மன்னி தலை வாரி, முகத்தைக் கழுவி, சிங்காரித்துக் கொண்டு, பட்டுப் புடவை உடுத்தி, தலை



விரும் ஒரு வண்டி புஷ்பமும் கூடக் கொண்டிருந்தாள். சற்று நேரத்துக்கெல்லாம் என் பெண் கமலா தலைவாரிப் பின்னிக் கொண்டு, போன தீபாவளிக்கு நான் வாங்கிக் கொடுத்திருந்த பட்டுப் பாவாடை, சட்டை அணிந்து வாசலுக்கு வந்து, "அப்பா! அம்புஜம் வரப் போகிறாளே!" என்று கும்மாளம் போட்டுக் கொண்டு குதித்தாள்.

அவள் தலையில் புஷ்பம் என்ற பேச்சையே காணோம்.

"ஏண்டி கமலம்! நிறையப் பூ வாங்கிக் கொண்டு வந்தேனே, உன் தலையில் ஏன் காணோம்!" என்று கேட்டேன்.

"இல்லே, அப்பா! அம்புஜம் வரப் போகிறாளே, இல்லையோ! அவளுக்காகப் பூவை எடுத்து வைத்திருக்கிறாள். அம்புஜம் வந்து 'இம்' என்று பூ வைத்துக் கொள்ளப் போகிறாளே!" என்று அளவு கடந்த சந்தோஷத்தோடு சொன்னாள்.



எனக்குக் குழந்தையின் பரிசுத்த மனமும், மன்னியின் நச்சு உள்ளமும் மாறி மாறித் தோன்றி என்னைச் சித்திரவதைக்கு உள்ளாக்கிக் கொண்டிருந்தன!

இதற்குள் கார் வந்து வாசலில் நின்றது. மன்னியின் அண்ணா, அவர் மனைவி, குழந்தை அம்புஜம் மூவரும் இறங்கினார்கள். கார் வந்து நின்ற சத்தம் கேட்டதுமே மன்னி வாசலுக்கு வந்து விட்டாள், அவர்களை வரவேற்க.

முதலில் இறங்கிய அம்புஜம் தன் தோழியைப் பார்த்து, "கமலம்" என்று கூவிக் கொண்டே ஓடினாள்.

கமலமும், "வா, அம்புஜம்! உனக்குப் பெரியம்மா நிறைய ரோஜாப் பூ, மல்லிகைப் பூ, கதம்பம் எல்லாம் வாங்கி வைத்திருக்கிறாளே!" என்றாள்.

"இதோ, பார்! நான் தலைக்குப் பூ வைத்துக் கொண்டாகி விட்டது!" என்று சொல்லித் தன் தலையைத் திருப்பிக் காட்டினாள். பிறகு "இதோ, உனக்கும் நிறைய பூ வாங்கி வந்திருக்கிறேன். திரும்பு, நானே உன் தலையில் வைக்கிறேன்" என்று அவளைத் திருப்பினாள். தன் கையிலிருந்த புஷ்பப் பொட்டலத்தை அவிழ்த்து அம்புஜம் கமலத்துக்கு வைத்தாள்.

இந்தக் காட்சியை வாசலில் நின்றபடியே எல்லோரும் பார்த்தோம்; மகிழ்ந்தோம். ஆனால் என் மன்னியின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. அந்தக் கோபமும் வெறுப்பும் சொல்லில் தொனிக்க, "வா, மன்னி உள்ளே!" என்று கூறினாள். அந்தக் குரல் வந்ததும் எல்லோரும் உள்ளே போனார்கள். போகும் போது மன்னியின் அண்ணா என்னைப் பார்த்துப் பொருள் பொதிந்த புன்முறுவல் புரிந்தார். நானும் இள நகை புரிந்தேன்.

இந்தக் காட்சி அப்படியே என் கண் முன் நின்றது. அத்துடன் கமலத்தின் சாயலைப் பெற்ற, அருவிக் கரையில் சந்தித்த குழந்தையின் முகமும் தோன்றியது. நான் எழுந்து உட்கார்ந்தேன்.

குழந்தை உள்ளத்தின் பரிசுத்த அன்பை உணர்ந்தேன். இது அல்லவோ எழுதுவதற்கு ஏற்ற விஷயம் என்று எண்ணினேன். இத்துடன் பல சம்பவங்கள் சேர்த்துப் பெரிய காவியமே பின்னலாமே என்று தோன்றியது. அதற்கு வேண்டிய கற்பனைதான் என்னிடம் இல்லை. இதை ஆசிரியர் 'மல்லிகை'யிடம் கூறி ஒரு அருமையான காவியம் எழுதச் செய்யலாம் என்று தீர்மானித்தேன்!

அன்று மாலை மல்லிகை வந்தார். அவரிடம் இந்த என் பழைய அனுபவத்தைச் சொன்னேன். அவர் ரொம்பவும் அனுபவித்தார். "இதை வைத்துக் கொண்டு ஒரு பெரிய நாவலே எழுதலாமே!" என்றார்.

"எழுதலாம், அல்லவா!" என்று மீண்டும் கேட்டேன்.

"பேஷாக எழுதலாம்!" என்று அடித்துச் சொன்னார்.

உடனே நான் அவரை "எனக்கு ஒரு உதவி செய்ய முடியுமா!" என்றேன்.

"என்ன!" என்றார்.

"எனக்கு அந்தச் சம்பவத்தை வைத்து ஒரு சிறு நாவல் எழுதிக் கொடுத்து விடுங்களேன். நீங்கள் எவ்வளவு பணம் கேட்டாலும் தருகிறேன்! எனக்கு லீவு முடிந்து விட்டது. இன்னும் மூன்று நாட்களில் ஊருக்குப் போக வேண்டும். டாக்டர் நாவல் எங்கே என்று கேட்டால், அவமானம், பெரிய தொல்லை!" என்றேன்.

இதைக் கேட்டதும் ஸ்ரீமான் மல்லிகை விழுந்து விழுந்து சிரித்தார். "ஸார், நான் ஒன்று சொல்லட்டுமோ! நீங்கள் நம்புவீர்களோ, என்னவோ சந்தேகமாக இருக்கிறது!" என்றார்.

"நம்புகிறேன்!"

"என்னை டாக்டர் இன்னும் ஒரு மாதத்துக்குக் கடிதம் கூட எழுதக் கூடாது. பேப்பரையும் பென்ஸிலையும் தொடக் கூடாது என்று உத்தரவு போட்டிருக்கிறார்!" என்றார்.

எனக்கு அப்படியே தலை கிறு கிறு என்று சுழன்றது.

நான்கு நாட்களுக்குப் பிறகு சென்னைக்குப் போய் டாக்டரைப் பார்த்தேன்.

அவர் என் உடல் நிலையைப் பரிசோதித்து விட்டுத் திருப்தியுடன், வேலைக்குப் போகலாம் என்று சொல்லி விட்டார்.

ஆனால் அவர் நாவலைப் பற்றியே பிரஸ்தாபிக்க வில்லை. எனக்கு மட்டும் அவர் மேல் ரொம்பவும் கோபம். எழுத்துத் திறமையற்றவனைப் போய் 'எழுதடா' என்பது; எழுதுபவனை 'வாய் மூடிக் கொண்டு இரடா!' என்பது. இதெல்லாம் என்ன விளையாட்டு என்று கேட்டு விடவேண்டும் என்று துடித்தேன். அப்படியே கேட்டும் விட்டேன்.

டாக்டர் இதைக் கேட்டு விழுந்து விழுந்து சிரித்தார். "ஓய், உம்மை நாவல் எழுதும்படி சொல்லவில்லை என்றால் நீர் குற்றாலத்தில் போய் உட்கார்ந்து கொண்டு 'இந்தப் பக்கு என்ன அழகு! அந்தப் பக்கு என்ன அழகு!' என்று செல்லரித்துள்ள கவிகள் எல்லாம் பட்டுக் கொண்டிருப்பீர். உண்மையில் ஓய்வு என்பது என்ன! ஒரு வேலையை விட்டு இன்னொரு வேலையில் ஈடுபடுவதுதான்! இப்படி நான் சொல்லவில்லை. கவி தாகூரே சொல்லியிருக்கிறார்!" என்றார் டாக்டர்.

* * *

"அது சரி, இவ்வளவு தூரம் உங்கள் அனுபவத்தை எழுத எங்கே கற்றுக் கொண்டீர்கள்!" என்று கேட்கிறீர்கள்.

இனியும் ஒளித்து வைக்க முடியாது. நான்தான் மல்லிகை! என் நண்பனின் அனுபவத்தை அவர் சொல்வதாகவே பாவனை செய்து எழுதியிருக்கிறேன். இதாவது ஓரளவு அவருக்குத் திருப்தி அளிக்காதா! நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்!

தமிழ்மக்கள் அனைவருக்கும் "புரு" மார்க் தீப்பெட்டிகளை ஆதரிக்கும் வியாபாரிகளுக்கும், பொதுஜனங்களுக்கும் எங்களது மனமார்ந்த

# தீபாவளி வாழ்த்துகள்




*

குச்சிகள் வெண்மையாகவும் எண்ணிக்கை சரியாகவும் இருக்கும். மழை காலத்திற்கும் காற்றுக்கும் உத்திரவாதமுள்ளது.

*

போலிகளைக் கண்டு ஏமாறாதீர்கள்

*

விற்பனை டிப்போக்கள் :

| | | |
|---|---|---|
| விழுப்புரம் | மதுரை | புதுக்கோட்டை |
| பாலக்காடு | பண்ருட்டி | கோயமுத்தூர் |
| கூடலூர் | மதராஸ் | நாகப்பட்டினம் |
| திருச்சிராப்பள்ளி | பையனூர் | |

# புரு

மார்க்

## தீப்பெட்டிகளை

எல்லோரும் வாங்கி உபயோகியுங்கள்






# சிறந்த ஒயரிங் என்றால்
## அது
# நிக்கோ ஒயரிங்தான்






சாலிட் & ஸ்ட்ராண்டட் காப்பர் கண்டக்டர்கள். பதப்படுத்திய காப்பர் வைண்டிங் & ப்யூஸ் ஒயர்கள். A. C. S. R. மற்றும் முழு அலுமினியம் கண்டக்டர்கள். V. I. R. இன்ஸுலேட்டட் கேபிள்களும் ப்லெக்ஸிபிள் ஒயர்களும். மோட்டார் கார்களுக்கான இக்னிஷியம் கேபிள்கள், பெல் மற்றும் டெலிபோன் ஒயர்கள். ஏரியல் கேபிள்கள். ஆயில் பேஸ் சிந்தடிக் பேஸ் கூடிய எனுமல்டு காப்பர் ஒயர்கள் முதலியவை.




மேலே உள்ளது பம்பாய், பாண்டுப்பில் கட்டப்பட்டுள்ள மெஸர்ஸ் கெஸ்ட், கீன், வில்லியம்ஸ் லிமிடெட்டின் ஸ்க்ரு பாக்டரி. இந்த பாக்டரியும் உத்தியோகஸ்தர்களின் வீடுகளும் நிக்கோ கேபிள்களினால் ஒயரிங் செய்யப்பட்டிருக்கிறது.

கண்டிராக்டர்கள்: M/s. வெஸ்டர்ன் இந்தியா என்ஜினீயரிங் கார்ப்பொரேஷன் லிட்., பம்பாய்

சிறந்த பொருள்களை வாங்கி திருப்தியடையும் பாகுபாடுள்ள என்ஜினீயர்கள், கட்டிடம் கட்டுவோர், கண்டிராக்டர்கள் முதலியவர்கள் நீண்ட கால உழைப்புக்கு எப்போதும் நிக்கோ ஒயரிங்கையே நம்புகிறார்கள்.

**NICCO**
**WIRES & CABLES**

INDIA'S OWN
INDIA'S BEST

தி நேஷனல் இன்ஸுலேட்டட் கேபிள் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்
ஸ்டீபன் ஹவுஸ் :: 4, டல்ஹௌஸி ஸ்கொயர் :: கல்கத்தா - 1
இந்தியாவெங்கும் ஏஜண்டுகளும், கிளைகளும் உள்ளன





# நாட்டிய நினைவுகள்

### கௌரி சின்னம்மா

மயிலாப்பூர் கௌரி அம்மாளை அநேகமாக நாட்டியத்தில் ருசியுள்ளவர் அனைவருக்கும் தெரிந்திருக்கும்— தெரிந்து இருக்க வேண்டியது அவசியம். ஏனென்றால் பரதநாட்டியத்துக்குப் புத்துயிர் அளித்தவர் அவரே. இந்திய நாட்டியத்தைப் பாராட்டியுள்ள நவீனப் புத்தகம் எதைப் பார்த்தாலும் இந்தக் கிழவியம்மாளின் புகழைப் படிக்கலாம். இன்று பிரபலமாகப் பெயர் பெற்று விளங்கும் பல நர்த்தகருக்கும் தண்டை கரணம் செய்தவர்; சுமார் எழுபது வயது ஆகியும் இன்னும் பலருக்குச் சிக்ஷை சொல்லி வருகிறார். இவரது குடும்பத்துக்கும் எங்கள் குடும்பத்துக்கும் தலைமுறையாக நெருங்கிய சிநேகம்.

பரத நாட்டியம் படுகுழியில் கிடந்த காலம். தகுந்த நட்டுவனாரின்றிக் கௌரி அம்மாளும் ஏங்கி இருந்தார்கள். என் பெரிய தாயார் லக்ஷ்மி ரத்தினம்மாளும் என் தாயார் ஜயம்மாளும் பின்பாட்டுப் பாடிக் கௌரி அம்மாளை அபிநயிக்கச் செய்தார்கள். இவரது அபிநயம் பாவ பூர்ணமானது. குழந்தையான என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. கௌரி சின்னம்மா எனக்கு உற்சாகம் ஊட்டி 'மொகடோச்சி பிலிசேடு' என்ற பதத்துக்குத் தன்னுடன் சேர்ந்து 'கை பிடிக்கும்படி' செய்தார்கள். இதுவே என் பரத நாட்டியப் பயிற்சிக்குப் பிள்ளையார் குட்டு. அப்போது எனக்கு வயது மூன்று.

### குரு நாதர் கந்தப்பா

இது முப்பத்தைந்து வருஷத்திற்கு முந்திய கதை. என் பாட்டியார், தனம்மாள் ஜீவித்திருந்தார்கள். வாரம் தவறாமல் வெள்ளிக்கிழமை மாலை வீணை வாசிப்பார்கள். பின்னர் எனக்குப் பரதநாட்டிய குருவான கந்தப்பபிள்ளை அப்போது தான் சென்னையில் வந்து குடியேறியிருந்தார். வெள்ளிக் கிழமை வீணைக் கச்சேரியைக் கேட்கத் தவற மாட்டார். கேள்வி ஞானம் மிக்கவர் அவர்; தனம்மாளின் அந்தரங்கமான நண்பர்களில் முக்கியமானவர். [illegible] செல்லையப்ப நட்டுவனாரின் புதல்வர் என்ற வகையில் தனம்மாளின் மதிப்பைப் பெற்றவர். என் குடும்பத்தாரின் பாட்டுக் கச்சேரிகளில் மிருதங்கம் வாசிப்பார். எங்கள் குடும்பத்தில் அப்போது கௌரி அம்மாளின் பழக்கம் அதிகமிருந்தபடியால் அவரது மேளத்தில் நட்டுவனாராக முன் வந்தார். இதிலிருந்து பரத நாட்டியத்துக்கு நல்ல காலம் பிறந்தது என்று தான் சொல்ல வேண்டும். எனக்கும் நல்லகாலம் பிறந்தது.

கந்தப்பாவின் தகப்பனார் செல்லையப்ப அண்ணா (செல்லையப்பா [illegible]) பெரிய ஞானஸ்தர். தஞ்சாவூர் நட்டுவனார் குடும்பத்துடன் நெருங்கிய [illegible] கொண்டவர். ஜாவளிகளை யெல்லாம் நவீன முறையில் தொகுத்துக் கோலாட்ட கோஷ்டிகளைக் கர்நாடக சுத்தமாகத் தயாரித்தவர். தியாக பிரம்மத்தின் சீடரும் வீணைக் குப்பையரின் குமாரருமான திருவொற்றியூர் தியாகய்யரின் பெரு மதிப்பைப் பெற்றவர். அபூர்வமான வர்ணங்களை இயற்றி வீணை தனம்மாளையும் செல்லையப்ப நட்டுவனாரையும் கலந்து அரங்கேற்றம் செய்வார்: "என்ன செல்லப்பா: இந்த வர்ணத்திலே தானக்கட்டு எப்படி? ஒரு கண்ணோட்டம் விடு, அப்புறம் தனத்தின் வாயிலே போட்டு ஒரு மெருகு ஏத்தலாம்" என்று சொந்தம் கொண்டாடுவார். செல்லையப்பாவின் சிஷ்யை, முத்து வீட்டுக் கண்ணம்மா, 'விரிபோணி' வர்ணத்துக்கு திரிகாலம் ஆடிய பெருமையை வித்வான்கள் இன்றும் சொல்லிச் சொல்லிப் புகழ்கிறார்கள். இத்திறமையைப் பிறவிச் சொத்தாகக் கொண்டவர் கந்தப்பா. நமது மேளத்திற்கு அவர் வகுத்த சில திட்டங்கள் அவருக்குத் தனி மதிப்பை உண்டாக்கின வென்று நான் தெரிந்து கொண்டேன். தன் சொந்த உபயோகத்துக்கு ஒரு தம்பூர் வாங்கிக்கொண்டு மேளம் தொடங்கு முன் அதைத் தாமே சுருதி கூட்டுவார். தனக்குப் பொருத்தமான சுருதியில் தான் முக்கியமாகப் பாட வேண்டிய பாட்டுக்களை மட்டுமே பாடுவார். இதன் காரணமாகத் தான் என் தாயார் மேளத்தில் பதங்கள் பாடும்படி நேர்ந்தது.



குழந்தை - பால சரஸ்வதி

ஒரு சமயம் காசியில் கவி டாகூர் முன்னிலையில் பரத நாட்டியம் ஆட வாய்ப்புக் கிடைத்தது. அப்போது நடனத்துக்காக ஆவல் [illegible] சம்பேர மஹாராஜாவும் வந்திருந்தார்கள். அவர்கள் ஆடிய நடன முறைகளும் அபிநயங்களும் கந்தப்பாவைப் பெரிதும் கவர்ந்தன. உடனே அவ்வழியிலுள்ள சிறந்த அம்சங்களை நாம் நின்றாடும் பாணியுடன் சேர்த்து அமைத்தார்.

### தானம் கிடைத்த வித்தை

கந்தப்பாவின் பழக்கம் நெருங்க நெருங்கக் கௌரி அம்மாளின் அபிநயங்களைப் பார்க்கும் சந்தர்ப்பமும் அதிகரித்தது. எனக்குப் பரதநாட்டியத்தில் உள்ள ருசியைப் "பிறவியுடன் பிறந்தது" என்று கருதி [illegible] கற்க பிராயம் என்று என் தாயாரிடம் தெரிவித்தார். தாயாரோ — "பாலாவுக்கு இன்னும் பல் விழவில்லையே, தம்பி!" என்று

பால சரஸ்வதி

பிடிகை போட்டார்கள். கந்தப்பாவுக்கு ஒன்றும் புரியவில்லை. திகைத்துக் கொண்டிருந்தார்.

"பல் விழுந்து கோணல் மாணல் இல்லாமல் வரிசையாக முளைத்தால் பரத நாட்டியத்தைப் பற்றி யோசிக்கலாமே!" என்று சொல்லி விட்டார் என் தாயார். இருவருமாகக் கொஞ்ச நேரம் இந்த முதல் முட்டுக்கட்டையை நினைத்து நினைத்துச் சிரித்தார்கள்.

"தானம் கிடைத்த வித்தையானாலும் பரதநாட்டியமென்றால் பல்லைப் பிடித்துப் பார்க்க வேண்டியது நியாயம் தான். ஆனால் உற்ற பிராயத்தைக் கைவிட்டால் எப்படி? பல் கோணலாக இருந்தால் பின்னர் பாடத்தை நிறுத்தி விடலாம்" என்று கந்தப்பா முடிவு கட்டினார். இன்னும் ஒரு சிறு முட்டுக் கட்டை. தனம்மாளின் ஆசீர்வாதம் இன்றி எப்படிப் பாடம் ஆரம்பிப்பது?



திரு கந்தப்ப நட்டுவனார்

'பரதநாட்டியம்' என்ற உடனே "அழகுதான்" என்று ஒரே சொல்லில் தம் அபிப்பிராயத்தைத் தனம்மாள் தெரிவித்து விட்டார்கள். நல்ல வேளையாக அந்தச் சமயம் வீணை கேட்க அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் என் பாட்டியார் முன் உட்கார்ந்து கொண்டிருந்தார். அவர் புண்ணியம் கட்டிக் கொண்டார். "பதங்களைப் பாடும் வசதி, பரம்பரையில் இருக்கும் போது சொந்தமாகப் பாடிக் கொண்டு அபிநயம் பிடிக்கும் பயிற்சி நமது பாலாவுக்குக் கொடுக்கலாமே" என்று சிபார்சு செய்தார். அம்மாவுக்கு அரை குறையான சம்மதம் தான். "சரியாக வரவில்லையானாலும் தோலை உரித்துவிடுங்கள்" என்று இட்ட ஆணையை சத்தியமாகக் கையாண்டு வந்தவர் கந்தப்ப அண்ணா.

## தோல் உரிக்கும் படலம்

சிலம்பம் மிகவும் மும்முரமாக ஆரம்பமாயிற்று. ஒரு நாள் கொன்னக் கோல் பக்கிரியா பிள்ளை அவர்கள் கந்தப்பா வீட்டில் வந்து தங்கி இருந்தார்: அன்று காலை பாடம் நடந்து தோல் உரிக்கும் படலம் ஆரம்பமாயிற்று. மற்றப் பெண்களெல்லாம் விடை பெற்றுக் கொண்டு வீடு திரும்பி விட்டார்கள். நான் ஒரு மூலையில் உரிந்த தோலும் சிந்திய மூக்குமாக நின்று கொண்டிருந்தேன். பக்கிரியா பிள்ளை பஞ்சாயத்துச் செய்ய முன் வந்தார்.

"தனத்தம்மா பேத்தியா நீ? சரி இங்கே வா. நான் ஒரு சின்ன அடவு சொல்லித் தரேன்; அதைச் சரியாகப் பிடிக்க விட்டால் வீட்டுக்குப் போகலாம்" என்று சொல்லிக் கொண்டு நின்ற நடையில் துளி துளியாக ஒரு தீர்மானத்தைச் சொல்லிக் கொடுத்தார். இந்த ஒரு பாடம்போதும். "தோலை உரிப்பது" என்பதன் பொருள் அப்போதுதான் விளங்கிற்று. மிருதங்க வித்வான் வேணு நாயக்கர் அதே தீர்மானத்தை மனப்பாடம் செய்து மிருதங்கத்தில் ஒரு சமயம் வாசித்து விட்டு, "கையில் தோல் உரிந்து விட்டது" என்று சந்தோஷம் கொண்டாடினார்!

பக்கிரியா பிள்ளைக்கு மகிழ்ச்சி. "கந்தப்பா! அரங்கேற்றம் எங்கே நடத்தணும் தெரியுமா? திருத்தணிகை சந்நிதியில் சமர்ப்பணம் செய்ய வேணும். என்னைப் போன்றவர்களுக்குப் புரியாது" என்று ஆணையிட்டார்.

இது நடந்து சுமார் பதினைந்து வருஷங்களுக்குப் பின் பக்கிரியா பிள்ளையவர்கள் மரண வாயிலில் கிடக்கும் போது, மன்னார்குடியில் வந்து ஆட வேண்டுமென்று தெரிவித்தார். எங்கள் மேளத்துடன் பிள்ளையவர்களின் வீட்டில் போய் இறங்கினோம். ஒரு எளிய பர்ணசாலையில் ஸ்ரீ அருணகிரியாரின் படத்தின் முன் மிகவும் கேவலமான தேக நிலையில் கிடந்தார் அவர். கச்சேரி தொடங்கு முன் நீடாமங்கலம் தவுல் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளையவர்களைக் கூவி அழைத்துத் தானம் போடும்படி உத்தரவிட்டார். எங்கள் மேளத்தில் மிருதங்கம் வாசிக்கும் காஞ்சிபுரம் குப்புசாமி முதலியாரைத் தட்டிக் கொடுத்து, "இந்த மிருதங்கக்காரரை விட்டுவிடாதேயுங்கள். கந்தப்பா! எந்தக் காரணத்தினாலும் நீ இந்த மேளத்தை விட்டுப் பிரியக் கூடாது" என்று பிரமாணம் பெற்றுக் கொண்டார். கந்தப்பா இந்த வாக்குறுதியை நிறைவேற்றக் கூடவில்லை.

எங்கள் மேளம் தலையெடுத்த காலத்தில் பரத நாட்டியத்துக்கு ஆதரவு மிகவும் குறைவு. கலையை நன்குணர்ந்து ரஸிப்பவர்களும் சொற்பம். கலையின் வளர்ச்சி இந்தச் சூழ்நிலையில் திணறிக் கொண்டிருந்தது. கந்தப்பா இந்த முட்டுக் கட்டைகளைப் பொருட்படுத்தவில்லை. கலையை உபாசனையாகக்கொண்டு வித்வான்களின் மதிப்பைப் பெற வேண்டும் என்பது அவருடைய நோக்கம். எனக்கு ஏழு வயதுதான் இருக்கும்.

காஞ்சிபுரம் காமாக்ஷி அம்மன் சந்நிதியில் அரங்கேற்றம் ஏற்பாடு ஆயிற்று. காஞ்சிபுரம் நாயனாப் பிள்ளை அவர்கள்தான் அன்று சபாநாயகர். ஒரு கையில் தடியும் மற்றொரு கையில் என்னையும் பிடித்துக் கொண்டு அம்மன் சந்நிதியிலுள்ள அரங்கில் அவர் கைப் படக் கொண்டு நிறுத்தி விட்டு, "கந்தப்பா! மணி ஒன்பதுக்குமேல் ஆச்சு; குழந்தை கொஞ்சம் காபி ஏதோ குடித்துவிட்டுப் போய்த் தூங்கட்டும்" என்று சொல்லிவிட்டுச் சபையில் உட்கார்ந்தார். சபையோர்களின் கவனம் எல்லாம் பிள்ளையவர்களை நோக்கித்தான் இருந்தது. சபைக்கு வணக்கம் செய்யும்போதே அவர் "ரொம்ப சரி" என்று ஆரவாரித்தார். அதை மெச்சி ஜனங்கள் கரகோஷம் செய்தார்கள். ஒவ்வொரு தீர்மானத்தையும் உணர்ந்து ரசித்துக் கந்தப்பாவைப் பாராட்டினார். எங்கள் குடும்பத்துக்கும் காஞ்சிபுரம் தனகோடி அம்மாள் குடும்பத்துக்கும் தலைமுறையாக அன்யோன்யம் உண்டு. "எங்கள் வீட்டுக் குழந்தை ஆடுவதைப் பார்த்தீர்களா?" என்று பெருமை அடித்துக் கொண்டு மிருதங்கம் வாசித்த முனுசாமியின் வாசிப்பிலும் இறுமாப்புக் கொண்டார். மறு நாள் காலை நாயனாப் பிள்ளையவர்கள் எனக்கு ஒரு சுருதிப் பெட்டியைப் பரிசாக வழங்கினர்.

## சிலம்பக் கூடம்

நாட்டிய பரம்பரைகளில் மிகவும் பிரசித்தமானது தஞ்சாவூர் நட்டுவனார் வீட்டுக் குடும்பம். அந்த மரபில் வந்தவர் கந்தப்பா. காலஞ்சென்ற நாட்டிய கலாநிதி மீனாக்ஷி சுந்தரம் பிள்ளையவர்களும், சங்கீத கலாநிதி பொன்னையா பிள்ளையவர்களும் கந்தப்பாவின் விருந்தினராகச் சென்னை வந்திருந்தார்கள். அவர்களுக்கென கந்தப்ப அண்ணா பிரத்தியேகமான சிலம்பம் பார்த்தார். (நாட்டியம் பயிலும் அரங்கிற்குச் சிலம்பக்கூடம் என்று பெயர்.)

அன்று என் நாட்டியத்துக்குப் பொன்னையாப் பிள்ளையவர்கள் கொடுத்த பரிசு பூர்விகல்யாணி ராகத்தில் சங்கீர்ண நடையில் ஒரு புதிய ஜதிஸ்வரம்.

வித்வான்களின் ஆதரவும் மதிப்பும் அமோகம்தான். பொதுஜனங்களும் பிரபுக்களும் ஆதரித்தால்தானே கலை ஓங்கி வளரக் கூடும்?

பரத நாட்டியக் கலையை ஆதரித்துப் பிரசாரம் செய்து முன்னுக்குக் கொண்டு வரப் பாடுபட்டவர்களில் முதன்மையானவர், மறக்க முடியாத ஒருவர், ஜலதரங்கம் ரமணைய செட்டியார். அவர் ஒரு வகையில் பிரபு; மற்றொரு வகையில் வித்வான். சென்னையில் அவர் ஆதரிக்காத வித்வான்கள் மிகவும் சிலர். அதே போல் டி. கே. சி. அவர்களின் பழக்கம் ஏற்பட்ட நாள் முதல் அவர் தனம்மாளையும் அவரது சந்ததியாரையும் புகழ்ந்து பேசாத சந்தர்ப்பமே கிடையாது. இந்த இரு ரசிகர்களும் அளித்த ஆதரவின் பயனாக 1932-ல் முதன் முதலாக சங்கீத வித்வத் சபையின் ஆதரவில் கச்சேரி செய்யும் வாய்ப்புக் கிடைத்தது. 'கல்கி' அவர்களின் ஆதரவும் கிடைத்தது. பரத நாட்டியத்தின் மறுமலர்ச்சிக்கு இது மிகப் பெரும் உதவி என்று சொல்ல வேண்டும்.



திரு நாயனாப் பிள்ளை

## வடநாட்டில் பரதநாட்டியம்

காக்கை உட்காரவும் பனம் பழம் விழவும் நேரம் ஒத்துக் கொள்ள வேணுமே! இதே சந்தர்ப்பத்தில் நாட்டியத்தில் லோகப் பிரசித்தரான உதய சங்கர் தமது கோஷ்டியுடன் சென்னைக்கு விஜயம் செய்தார். பரஸ்பரம் எமது நாட்டியத்தை ஒருவருக் கொருவர் பார்க்க நேரிட்டது. ஓரளவு விஷயம் தெரிந்து ரசிக்கும் வயது எனக்கு அப்போது. உதயசங்கர் கொண்ட உற்சாகத்தினால் பரத நாட்டியத்துக்குக் காசி, லக்னோம், முஜபர்பூரில் நடைபெற்ற சங்கீத மகாநாடுகளில் இடம் கிடைத்தது.

காசியில் அப்போது கவி ரவீந்திரர் வந்திருந்தார். அவர்முன் நாட்டியமாடும் வாய்ப்பும் கிடைத்தது. அவருடைய ஆசீர்வாதம் பரிபூரணமாகக் கிடைத்தது. பரதநாட்டியம் வட இந்தியாவில் பிரசாரமானதற்கு முக்கிய காரண புருஷர் உதயசங்கர். அவருக்கு இந்தியாவை விட வெளி நாடுகளில் அதிக செல்வாக்கு. அவரது பெயரில் பலர் நமது மேளத்தைப் பார்க்கச் சென்னைக்குவந்தனர். திடீரென்று ஒருநாள் உதயசங்கரின் மேனாட்டு நண்பர், ஆலிஸ் பானர் மெய்யப்பத்தைக் காண வந்தார். மேளம் முடிந்தவுடன் "நீங்களும் சங்கர் கோஷ்டியோடு மேனாட்டு விஜயத்துக்குத் தயாராகுங்கள்" என்று சொல்லிக் கொண்டே ஒப்பந்த விதிகளை நீட்டினார். எங்களுக்கு ஒன்றும் புரியவில்லை. நமது கோஷ்டி முழுவதையும் உடன் கொண்டு எப்படிப் பிரயாணம் செய்வது? நமது சம்பிரதாயம் தவறாமல் ஆடினால் மேல் நாட்டார் ரசிக்க முடியுமா? இந்தப் பிரச்னைகளுக்கு விடை தேடிச் சமாளிக்கு முன்பு கந்தப்பண்ணு உதயசங்கர் கோஷ்டியாருக்குப் பரத நாட்டியம் பயில்விக்க அல்மோரா சென்று விட்டார்.

அல்மோரா போனவர் சில ஆண்டுகளுக்குப் பின்தான் உடல் நலம் குன்றிச் சென்னைக்குத் திரும்பினார். பக்கிரியா பிள்ளைக்கு அவர் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றாமல் பொல்லாத விதி வசம் சிக்கிக் கொண்டார்.

## ஜனாதிபதியின் பரிசு

மிகவும் பால்யத்தில் அன்னை என்னை மேடை மேல் ஏற்றி விட்டார்கள். கிளிப்பிள்ளை போல் பாடங்களை ஒரு வகையாக ஆடக்கூடும்; சுயமாக விஷயங்களை ரசிக்கும் பிராயம் அல்ல. இந்த மார்க்கத்தில் என் குரு என் பாட்டி தான். நாட்டிய இசை வகைகளான பதம் ஜாவளிகளை மட்டும் அவர் போதிக்கவில்லை. மிகவும் உயர்ந்த ஒரு தத்துவத்தை அவர் எடுத்துச் சொல்லிக் கொண்டே இருப்பார். "நன்றாகப் பாடலாம்; ஐச்வர்யத்தை அடையலாம்; ஆனால் ஞானம் ஏற்படுவது மிகவும் தெய்வாதீனம்" என்று அடிக்கடி சொல்வார்கள். நன்றாகப்பாடுபவர்களிடம் எவ்வளவு மதிப்போ அதைவிடக் கேட்பவரிடம் மதிப்பு அவருக்கு. எனக்குக் குருவாக வாய்த்த மற்றொரு வித்வான், சின்னையா நாயுடுவாகும். அவரும் இதே அபிப்பிராயம் உள்ளவர். அவர் முத்தியால்பேட்டையில் உள்ள ஒரு பள்ளிக்கூடத்தில் தெலுங்குப் பண்டிதர். அபிநய சாஸ்திரத்தைக் கரைத்துக் குடித்தவர். எனக்குச் சிறு பிராயத்திலேயே தகுந்த ரசங்களை அறிமுகப் படுத்தினார். அவரது அபிநயத்தின் அழகும் பெருமையும் பாடம் கற்றுக் கொள்ளும்போது தெரியவில்லை. பல ஆண்டுகளுக்குப் பின் விசேஷ சந்தர்ப்பங்களில் தான் சின்னையா நாயுடு போட்ட அஸ்திவாரத்தின் பலம் புலன் ஆயிற்று. பம்பாயில் நடைபெற்ற ஒரு விழாவின்போது சம்போ மஹாராஜ் கதக் நடனம் ஆடினார். மஹாராஜைப் பார்க்கப் பார்க்கச் சின்னையா நாயுடு ஞாபகமாகவே இருந்தது. சம்போமஹாராஜின் அபிநயத்தைப் பார்த்த பிறகு அந்தக் கலையில் தீவிரப் பயிற்சிபெற வேண்டுமென்று ஊக்கம் அதிகரித்தது. குச்சிப்புடி நடன சம்பிரதாயத்தில் சிரேஷ்டரான வேதம் வெங்கடராய சாஸ்திரி உதவிசெய்ய முன் வந்தார். சாஸ்திரியாரிடம் கல்விப் பயிற்சி மிகவும் கடினம். இந்தப் பயிற்சிக்கும் ஆதாரமாக உதவியது சின்னையா நாயுடுவின் அனுக்கிரஹம் தான். பிற நடனங்களைப் பார்த்து ரசிப்பதற்கும் இவ்விருவர் உதவிய பயிற்சியே காரணம்.

பயிற்சி கடினம்தான். அவர்கள் கொண்ட ஊக்கமும் பெரிதே. ஆனால் அரும் பாடுபட்டு அவர்கள் தேடிக் கொடுத்த வித்தையைக் காப்பாற்ற வேண்டுமே! இந்தப் பொறுப்பு என் தாயாரையும் கந்தப்பண்ணுவின் ஸ்தானத்தை இப்போது வகிக்கும் எல்லப்பண்ணு அவர்களையும் சேர்ந்து விட்டது. தனம்மாளின் அந்த உபதேசத்தை—"ஞானம் ஏற்படுவது கஷ்டம்"—அடிக்கடி ஜயம்மாள் உரு ஏற்றிக் கொண்டே இருப்பார்கள். எல்லப்பண்ணுவுடைய புகழும் கீர்த்தியும் இப்போது சீனா வரை பரவியுள்ளது. இருவருடைய ஆசீர்வாதத்துடன் சென்ற வருஷம் ஜனாதிபதியின் பரிசைப் பெற நமது உப ஜனாதிபதியின் முன்னிலையில் கொண்டு நிறுத்தினார்கள். நாங்கள் மூவரும் ஒரு மனதாகக் கந்தப்பண்ணுவின் ஞாபகத்தில் ஆழ்ந்து விட்டோம். பரிசைப் பெறும்போது என் சிந்தனைத் திரையில் பல ஆண்டுகளுக்கு முன் ஒரு சங்கீத ஜனாதிபதியிடம் சுருதிப் பெட்டியைப் பரிசாகப் பெற்ற தோற்றமே மேலோங்கி இருந்தது.

# உலகத்தின்






# மிகச் சிறந்த




# சைகிள்களையும்

மற்ற உபகரணங்களையும் இப்பொழுது
இந்தியாவில் தயாரிப்பவர்கள்



ரட்ஜ் ஹம்பர்
ராலே
ராபின்-ஹூட்
பைசிகிள்கள்





விட்காப்
ஸீட்டுகள்

யூனியன்
தயாரிப்பு

# ஸென்-ராலே

ஸென்-ராலே இண்டஸ்ட்ரீஸ்
ஆப் இந்தியா லிமிடெட்,
கல்கத்தா-1.

SRX-30TM


தீபாவளிமலர்
பாப்பா மலர்
சிரிப்பும் களிப்பும்




டேய்! நன்றாக அடக்கி ஊது...!
இனிமேல் அடக்கு வதற்கு அவர் வாயில் இடமில்லே மாமா!


அப்பா!
கொர்


கொர்


கொர்




நான் வெடியெல்லாம் வெடிக்கலாமா என்று கேட்பதற்குத் தான் உங்களை எழுப்பினேன்
!?

## வீட்டுக்கு வீடு...!


என்னபாடு படுத்தறே! பக்கத்து வீட்டுக் குழந்தைகள் எல்லோரும் சமத்தா இல்லையா? நீமாத்திரம் ஏன் இப்படி இருக்கே?


பப்புட்டு வேணுமா மாமா!
1
2
3
4

# ரோஜாச் செடி

பூம்புகார் பெரிய பட்டணமும் அல்ல; சிறிய கிராமமும் அல்ல; நடுத்தரமான ஓர் ஊர். அந்த ஊரில் பாரதி சிறுவர் சங்கம் என்று ஒரு சங்கம் இருக்கிறது. அந்தச் சங்கம் தூங்குமூஞ்சிச் சங்கமாக இல்லாமல் சுறுசுறுப்பாக வேலை செய்து வருகிறது.

அந்தச் சங்கத்தார் வருஷத்துக்கு ஒரு முறை புஷ்பக் காட்சி நடத்துவார்கள். அந்தக் காட்சியில் ஏராளமான சிறுவர்களும், சிறுமிகளும் கலந்து கொள்ளுவார்கள். கலந்து கொள்வதென்றால், சும்மா பார்த்துவிட்டுப் போவதில்லை. ஒவ்வொருவரும் ஒவ்வொரு தொட்டியில் அவரவர் வளர்த்த புஷ்பச் செடிகளைக் கொண்டு வந்து காட்சியில் வைப்பார்கள்.

காட்சி நடக்கும் தினத்தன்று காலை ஆறு மணிக்குள் செடிகளைக் கொண்டு வந்து வைத்துவிட வேண்டும். ஒவ்வொரு செடியிலும் அதை வளர்த்த பையன், அல்லது பெண்ணின் பெயர், வயது, வீட்டு விலாசம் முதலியவற்றை அட்டையில் எழுதிக் கட்டி வைக்க வேண்டும். மிகவும் நன்றாக இருக்கும் செடிக்குப் பரிசு ரூபாய் 50! இந்தக் காட்சியைப் பார்த்துப் பரிசு கொடுப்பதற்குக் கல்வி அதிகாரிகளும், பெரிய தலைவர்களும் வருவார்கள். அந்த வருஷம் கல்வி மந்திரியே வர ஒப்புக்கொண்டு விட்டாராம்! இதனால், மிகவும் பிரமாத ஏற்பாடு செய்திருந்தார்கள் பாரதி சிறுவர் சங்கத்தார்.

* * *

மீராகநார் முருகேச பிள்ளை என்றால் பூம்புகாரில் எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். அவர் பெரிய பணக்காரர். அவருடைய மகள் மீரா ஏழாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்தாள். புஷ்பக் காட்சி நடப்பதற்கு முதல் நாள் முழுவதும் அவளுக்கு ஒரே கவலை. 'வஸந்தா கனகாம்பரச் செடி வளர்த்திருக்கிறாள். மல்லிகா சூரிய காந்தி வளர்த்திருக்கிறாள். ரேவதி ரோஜா வளர்த்திருக்கிறாள். ஆனால், நான் மட்டும் எதுவுமே வளர்க்கவில்லை. உம், என்ன செய்வது? நாளை விடிந்தால் 'புஷ்பக் காட்சி' என்று ஏங்கினாள்.

அப்போது அங்கே வந்தாள் மீராவின் சிநேகிதி கமலா. அவள் மீராவிடம், "ஏன் மீரா ஒரு மாதிரியாக இருக்கிறாய்?" என்று கேட்டாள்.

"இந்த வருஷம் புஷ்பக் காட்சிக்குக் கல்வி மந்திரி வருகிறாராம். அவர் கையாலே பரிசு வாங்க எனக்குக் கொடுத்து வைக்கவில்லை. உம், யாருக்கு இருக்கிறதோ அதிர்ஷ்டம்!" என்று பெருமூச்சு விட்டாள்.

உடனே கமலாவுக்கு ஒரு யோசனை தோன்றியது. "மீரா, நீ கவலைப்படாதே. நான் சொல்கிறபடி செய். நிச்சயம் உனக்குத்தான் பரிசு!" என்றாள்.

"என்ன! பரிசு எனக்கா? அது எப்படி?"

"நாலாவது தெருவிலே ஒரு பிள்ளையார் கோயில் இருக்கிறதே, அதற்குப் பக்கத்திலே ஒரு குடிசை இருக்கிறது. அந்தக் குடிசையிலே பார்வதி என்று ஒருத்தி இருக்கிறாள். அவள்கூட காந்தி இலவசப் பள்ளிக்கூடத்திலே ஏழாவது படிக்கிறாள். அவளை எனக்குத் தெரியும். நேற்று அவளுடைய வீட்டுக்குப் போயிருந்தேன். அவள் ரோஜாச் செடி வளர்த்திருக்கிறாள். அடடா! எவ்வளவு அழகான செடி! எவ்வளவு ரோஜாப் பூக்கள்! அவள் வீட்டுக்கு நாம் இப்போதே போவோம். ஏதாவது அவளுக்குக் கொடுத்தால் அந்தச் செடியைத் தந்து விடுவாள்......"

"நிஜமாகவா?" என்று கேட்டு, ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்துக் கொண்டு கமலாவுடன் புறப்பட்டாள். இருவரும் அந்தக் குடிசையை நோக்கிச் சென்றனர். குடிசையைச் சுற்றி வேலி போட்டிருந்தது. வேலிக் கதவைத் திறந்தாள், கமலா.

உடனே "யாரது?" என்று கேட்டுக் கொண்டே பார்வதியின் அம்மா குடிசைக்குள்ளிருந்து வந்தாள்.

"ஏனம்மா, நாங்கள்தான். பார்வதி இல்லையா?" என்று கேட்டாள் கமலா.

"கடைவீதிக்கு மண்ணெண்ணெய் வாங்கப் போயிருக்கிறாள். என்ன விஷயம்?" என்று கேட்டாள் அந்த அம்மாள்.

"ஒன்றுமில்லை. இவள் யார் தெரியுமா? மீராகநார் முருகேச பிள்ளை மகள் மீரா" என்று மீராவை அறிமுகப்படுத்தி வைத்தாள் கமலா.

"அடடே! அப்படியா?....ஆமாம், பார்வதியை எதற்காகத் தேடிக்கொண்டு வந்தீர்கள்?" என்று மலர்ந்த முகத்துடன் கேட்டாள் அந்த அம்மாள்.

"ஒரு சின்ன உதவி செய்ய வேணும். இவன் அருமையாக ஒரு ரோஜாச் செடி வளர்த்து வந்தான். அதைப் புஷ்பக் காட்சியிலே வைக்க வேண்டு மென்பது இவனுடைய அப்பாவின் ஆசை. ஆனால், எதிர்பாராமல் ஒன்று நடந்து விட்டது. இவனுடைய தம்பி படுசுட்டி. அவன் இன்றைக்குக் காலையிலே விளையாட்டாக அந்தச் செடியைப் பிடுங்கி ஒடித்துப் போட்டு விட்டான். இவன் அப்பாவுக்கு இந்த விஷயம் இதுவரை தெரியாது! தெரிந்தால், பாவம், அந்தச் சின்னப் பையனைப் போட்டு அடி அடியென்று அடித்து விடுவார். அப்பா பார்க்கிறதுக்குள்ளே வேறு ஒரு ரோஜாச் செடியை வாங்கி அந்தத் தொட்டியிலே வைத்து விட வேண்டும். உங்கள் வீட்டிலே ரோஜாச் செடி இருக்கிறதாக இவனுடைய அம்மாவுக்குத் தெரிந்தது. உடனே எங்களை அனுப்பி வைத்தார்கள்" என்று சாமர்த்தியமாகப் புளுகினாள் கமலா.

இதைக் கேட்டதும் அந்த அம்மாள், "என்ன! ரோஜாச் செடியையா கேட்கிறீர்கள்? வேண்டாம்; வேண்டாம். வேறே எதைக் கேட்டாலும் தரலாம். பார்வதி கண்ணைப் போல வளர்த்து வரும் ரோஜாச் செடியைக் கேட்கிறீர்களே! பார்வதி வந்தால் என்னைச் சும்மா விடுவாளா?" என்றாள்.

"என்னம்மா, நீங்கள் இப்படிச் சொல்லலாமா? நாங்கள் சும்மாவா கேட்கிறோம்? பணம் தருகிறோம், அம்மா!" என்றாள் மீரா.

"பணம் இருக்கட்டும். பார்வதி மனம் நோகுமே ...அது தான் பார்க்கிறேன்" என்றாள் அந்த அம்மாள்.

"பணமென்றால் நாலணா எட்டணா இல்லை, அம்மா. எவ்வளவு வேணுமோ கேளுங்கள். இரண்டு ரூபாய் வேணுமா? இல்லை, மூன்று ரூபாய். அதுவும் இல்லை. நாலு ரூபாய.........ன், ஐந்து ரூபாய். மீரா, எங்கே அந்த ஐந்து ரூபாய் நோட்டு?" என்று கூறி மீராவிடமிருந்த ஐந்து ரூபாய் நோட்டை வாங்கி அந்த அம்மாவிடம் நீட்டினாள் கமலா.

அந்த அம்மாள் கொஞ்ச நேரம் யோசித்தாள். 'பார்வதி வந்தால் நிச்சயம் வருத்தப்படுவாள்......ஆனாலும், அவளுக்குப் பரிசு கிடைக்கிறது என்ன நிச்சயம்? ஒன்றுமே கிடைக்காமல் போவதைவிட இந்த ஐந்து ரூபாய் கிடைத்தால் நல்லதுதானே! பார்வதியின் பாவாடை சட்டை யெல்லாம் கிழிந்து போயிருக்கின்றன. இந்த ரூபாயிலே ஒரு பாவாடையும் சட்டையும் வாங்கிக் கொடுக்கலாமல்லவா?' என்று தனக்குத் தானே சமாதானப்படுத்திக் கொண்டாள்.

பிறகு, "உம், நடக்கிறபடி நடக்கட்டும்" என்று கூறி ரோஜாச் செடியை அந்த ஐந்து ரூபாய்க்குக் கொடுக்க ஒப்புக்கொண்டு விட்டாள்.

மீராவும், கமலாவும் ஆனந்தமாக அந்த ரோஜாச் செடியுடன் வீடு நோக்கிக் கிளம்பினார்கள்.

* * *

பார்வதி மண்ணெண்ணெய் வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வந்தாள். வேலிக் கதவைத் திறந்ததும், ரோஜாச் செடி இருந்த இடத்தைப் பார்த்தாள். உடனே அவளுக்குத் 'திக்'கென்றது. பார்வதி அந்த ரோஜாச் செடி மீது உயிரையே வைத்திருந்தாள். கண்ணும் கருத்துமாக இத்தனை நாளாக வளர்த்து வந்தாள்.



போட்டியில் எப்படியும் அதற்குப் பரிசு கிடைக்கும் என்று நம்பியிருந்தாள். போகும்போதும் வரும்போதும் அதைப் பார்க்காமல் போக மாட்டாள். பள்ளிக்கூடம் போகும்போதெல்லாம் "அம்மா வேலிக் கதவைத் திறந்து போட்டுவிடாதே அம்மா! ஆடு மாடு வந்து ரோஜாச் செடியைத் தின்றுவிடும்!" என்று எச்சரித்து விட்டுத்தான் போவாள். இப்படியிருக்கும்போது அந்த ரோஜாச் செடியைத் தொட்டியோடே காணோம் என்றால் அவளுக்கு எப்படி இருக்கும்?

"அம்மா, அம்மா! என் ரோஜாச் செடி எங்கே அம்மா?" என்று பதறிக்கொண்டே கேட்டாள் பார்வதி.

"பார்வதி, ஒன்றும் ஆபத்து வந்து விடவில்லை. பதறாதே!" என்று பார்வதியின் அருகிலே வந்தாள் அவளுடைய அம்மா. நடந்ததை யெல்லாம் அப்படியே எடுத்துச் சொன்னாள்.

இதைக் கேட்டதும், "என்னம்மா, இப்படிச் செய்து விட்டாயே! நான் எவ்வளவு பாடுபட்டு வளர்த்தேன்! உனக்குத் தெரியாதா அம்மா? பணந்தானா பெரிது?" என்று கூறிவிட்டு விம்மி விம்மி அழ ஆரம்பித்தாள் பார்வதி.

* * *

மறுநாள் அதிகாலை நேரம். சிறுவர் சிறுமியர் அவருடைய பூச்செடிகளைக் கொண்டுபோய்க் காட்சியில் வைத்துக் கொண்டிருந்தார்கள். மீராவும் அவளுடைய ரோஜாச் செடியை ஒரு வேலையாள் தலையில் ஏற்றிக் கொண்டு வந்தாள். எல்லோரையும் போல மண் தொட்டியில் அந்த ரோஜாச் செடியை அவள் வைத்திருக்கவில்லை. பணக்காரியல்லவா? அதனால் 'எவர் சில்வர்' தொட்டியில் வைத்திருந்தாள்! முன்பு பார்வதி வைத்திருந்த பழைய மண் தொட்டியிலிருந்து இதற்கு மாற்றியிருந்தாள்.



மாலையில் கல்வி மந்திரி வந்தார். காட்சியைச் சுற்றிப் பார்த்தார். எல்லாச் செடிகளையும்விட மீராவின் ரோஜாச் செடி தான் நன்றாகவும், அழகாகவும் இருப்பதாக அவருடைய அபிப்பிராயம். மற்றவர்களின் அபிப்பிராயமும் அதுதான். அதனால், அந்தச் செடிக்கே பரிசு கொடுப்பதென்று முடிவு செய்தார். உடனே மீரா அழைக்கப்பட்டாள். மீரா மிகவும் குதூகலமாக மந்திரியின் அருகில் ஓடி வந்தாள்.

அப்போது மந்திரிக்கு ஒரு சந்தேகம் வந்து விட்டது. "ஏனம்மா, 'எவர் சில்வர்' தொட்டியில் செடியை வளர்த்திருக்கிறாயே, தொட்டியை உங்கள் வீட்டுத் தோட்டத்தில் வைத்தால் யாராவது தூக்கிக் கொண்டு போய்விட மாட்டார்களா?" என்று கேட்டார்.

"தோட்டத்திலே நான் இதை வைக்கவே மாட்டேன். எப்போதும் என் அறைக்குள்ளேயே பத்திரமாக வைத்திருப்பேன்" என்றாள் மீரா.

மந்திரி புன்சிரிப்புடன், "ஒரு நாளைக்கு எத்தனை தடவை தண்ணீர் ஊற்றுவாய்?" என்று கேட்டார்.

மீராவுக்குச் செடி வளர்க்கும் விதத்தைப் பற்றி என்ன தெரியும்? "பத்துப் பதினைந்து தடவைக்குக் குறையாமல் ஊற்றுவேன். இல்லாத போனால் இப்படி ஜோராக வளர்ந்திருக்குமா?" என்றாள்.

"ஓஹோ, அப்படியா! சரி, இந்த எவர் சில்வர் தொட்டியில் ஓட்டை ஏதாவது இருக்குமோ?"

"ஓட்டையா? ஓட்டைச் சாமான்களை நாங்கள் உபயோகப்படுத்தவே மாட்டோம். ஒரு சின்ன ஓட்டை கூட இருக்காது. நல்ல தொட்டி."

மீரா சொன்னதைக் கேட்டதும் சிரித்துக் கொண்டே "அப்படியானால் இந்தப் பரிசு உனக்கு இல்லை!" என்று சொன்னார் மந்திரி.

மீராவுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"காரணம் என்ன தெரியுமா? நீ சொன்ன மாதிரி அறைக்குள்ளேயே இந்தச் செடி இருந்திருந்தால் சூரிய வெளிச்சம் இல்லாமல் நசித்துப் போயிருக்கும். அத்தோடு, நீ தினமும் பத்துப் பதினைந்து தடவை தண்ணீர் ஊற்றினதாகச் சொல்கிறாயே, அப்படி ஊற்றியிருந்தால் அழுகிப் போயிருக்கும். நீ மண் தொட்டியைப் பார்த்திருக்கிறாயா? அதிலே இரண்டு மூன்று துவாரங்கள் போட்டு வைப்பார்கள். துவாரங்கள் இருந்தால்தான் தொட்டியிலே வேண்டிய அளவுக்கு மேல் தண்ணீர் தங்காது. அதனாலே செடி கெடாது. அதனாலே, நீ சொன்னது எல்லாமே சுத்தப் பொய்! உள்ளதைச் சொல். உனக்கு இதை யார் வளர்த்துக் கொடுத்தது?" என்று கேட்டார் கல்வி மந்திரி.

மந்திரி சொன்ன வார்த்தைகளைக் கேட்கக் கேட்க மீராவின் தலை கவிழ்ந்தது. கண்ணீர் வழிந்தது. உடனே அவள் நடந்ததை நடந்தபடி கூறி, "தெரியாமல் செய்து விட்டேன். மன்னிக்க வேண்டும்" என்று சொன்னாள்.

உடனே மந்திரி, "நான் சந்தேகப்பட்டது சரிதான். போகட்டும், இப்போதாவது உண்மையைச் சொன்னாயே. வருத்தப்படாதே!" என்று மீராவுக்குத் தேறுதல் வார்த்தை கூறி விட்டு, "பார்வதி என்ற பெண் இங்கே இருக்கிறாளா?" என்று கேட்டார்.

பார்வதி அங்கே இல்லை. உடனே ஆள் அனுப்பி அவளை அழைத்து வரச் செய்தார்கள்.

வீட்டில் அழுதுகொண்டிருந்த பார்வதி, தனக்குப் பரிசு கிடைக்கப் போவதை அறிந்ததும், மகிழ்ச்சியுடன் ஓடி வந்தாள். மந்திரியின் அருகே சென்றாள். அவர் பரிசு ரூபாய் ஐம்பதையும் அவள் கையிலே கொடுத்தார்.

பரிசைக் கையிலே வாங்கியதும் நேராக மீராவிடம் ஓடினாள் பார்வதி. "இந்தா, நீ என் அம்மாவிடம் கொடுத்த ஐந்து ரூபாய்" என்று அவள் கையிலே ஐந்து ரூபாயைத் திணித்து விட்டு வேகமாக வீட்டை நோக்கி ஓடினாள். மீதமுள்ள நாற்பத்தைந்து ரூபாயையும் அம்மாவிடம் சேர்க்கத்தான் அவள் அப்படி அளவற்ற குதூகலத்துடன் அவசரம் அவசரமாக ஓடினாள்!

# மரகதக்கல்

வசந்த காலம் குதூகலத்துடன் பவனி வந்து கொண்டிருந்தது. புன்னை விருக்ஷங்கள் மரகதம் போல் தழைத்து, வெண்முத்துப்போன்ற அரும்புகள் விட்டுப் பொன்னைப் போல் பூக்கள் மலர்ந்து காட்சி யளித்தன. ஆனால் பளிங்கு மேடையில் அமர்ந்து இவ்வினிய காட்சியை அனுபவி யாது ஏதோ பலத்த சிந்தனையில் ஈடுபட் டிருந்தான் நாயக்க மன்னர் விஜயரங்க சொக்க நாதரின் அருமை மனைவி.

"மகாராணி! தங்களை நாடி மன்னர் வரு கிறார்!" என்று கட்டியம் கூறிவிட்டு மறைந் தாள் அரண்மனைப் பணிப்பெண் ஒருத்தி.

அடுத்த கணம், "ராணியாரின் தரிசனம் கிடைப்பது அத்திபூத்தாற் போல் அல்லவா இருக்கிறது!" என்று நகைத்துக் கொண்டே வந்தார் நாயக்க மன்னர்.

ராணி பதிலே பேசவில்லை.

"அரசி! கொற்கையிலிருந்து வெகு அற்புத மான மரகதக் கல் ஒன்று வந்திருக்கிறது. அதை உனக்குப் பரிசாக அளிக்க வேண்டும் என்று உன்னைத் தேடித் தேடி வருகிறேன். நீயானால்......"

"அப்படியா! எங்கே அந்தக் கல்! இப் படிக் கொடுங்கள், பார்க்கலாம்!" என்று வேண்டுமென்றே புன்னகையை வருவித்துக் கொண்டு கேட்டாள் ராணி மீனாட்சி தேவி.

"அப்பா!...இப்பொழுதுதான் என் உள்ளம் குளிர்ந்தது. இரவில் கூம்பி கிடக்கும் தாமரை அருணனைக் கண்டதும் மலர்வதுபோல இந்த மரகதக் கல் உன் முகத்தை மலரச் செய்து விட்டது!" என்று அளவற்ற மகிழ்ச்சியுடன் கூறினார் விஜயரங்க சொக்கநாதர்.

மீனாட்சி தேவியார் கலகல வென்று நகைத்துக் கொண்டே, "அரசே! இந்த மரகதக் கல் என் உள்ளத்தை மலரச் செய்ய வில்லை. ஆனால் உங்கள் உதார ணத்தின் அழகை எண்ணிப் பார்த்தேன். சிரிப்பு வந்துவிட் டது!" என்றாள்.

"என்ன! பல வருடங்கள் பல ஆயிரம் முத்துக் குளிப்ப வர்கள் கொற்கை யில் அல்லும் பக லும் அல்லலுற் றுத் தேடிய பிறகு கிடைத்த மரகதம் உனக் குத் திருப்தியளிக்க வில்லையா! அளவற்ற ஆசையோடு என் அன்புப் பரிசாக அளித்த மரகதக் கல் உனக்கு மகிழ்ச்சியை யளிக்க வில்லையா!" பாண்டிய மன்னரின் முகத்தில் சிறிது கடுமை தோன்றியது.

"என்ன! என்னை மன்னிக்க வேண்டும். அந்த முத்துக் குளிப்பவர்களுக்காக இரங்கு கிறேன். உங்களுக்காகவும் மனமிரங்குகிறேன். இதைவிட அற்புதமான மரகதத்தைப் பார்த் திருக்கிறேன். என் தந்தை ஈடு இணையற்ற மரகதம் ஒன்றை என் அருமைத் தாய்க்குப் பரிசாக அளித்தார்......அந்த மரகதத்தின் ஒளிக்கு இந்தக் கல் உறை போடக் காணாது. அதற்கு அருகில் இதை வைத்தால் இது வெறும் கண்ணாடிக் கல்லாகவே தோன்றும்..."

விஜயரங்க சொக்கநாதரின் மீசை துடி துடித்தது. உள்ளம் வேதனையினால் படபட வென்று அடித்துக் கொண்டது.

"இது கண்ணாடிக் கல்லா!...பேஷ்! படைப் புக் கடவுள் உனக்கு அற்புத திவ்ய சௌந் தர்யத்தைக் கொடுத்தான். அதோடு நின் றிருக்கக் கூடாதா! அதோடு அதற்குக் களங்க மாக உன் உள்ளத்தில் ஆணவத்தையுமல்லவா படைத்து விட்டான்! பேஷ்!" என்று ஆக் ரோஷத்துடன் கூறினார் பாண்டிய அரசர்.

"ஆம்! இதைத் தாங்கள் அரண்மனை வாயிலிலுள்ள குதிரைச் சேவகனிடம் கொடுத்து அதை அவன் மனைவியிடம் அளிக் கச் செய்தால், அவன்கூட வேண்டாமென்று மறுத்து விடுவான்!"

"என்ன சொன்னாய்! இத்தகைய அவச் சொல்லைப் பாண்டிய மன்னரிடமா கூறுகிறாய்!







......உன்னைப் போல் ஆணவக் காரியை, கர்வக்காரியை......"

"சிறையில் தள்ளி நாக்கைத் துண்டித்து விடச் செய்யுங்கள். எனக்கு அதுவே சரியான தண்டனையாகும்..." என்று மீண்டும் பயமின்றிக் கூறினாள் பாண்டிய மகாராணி மீனாட்சி.

"ஹஹ்ஹா! நீதி வழங்க வேண்டியவன் நான். அதை நீயே முடிவு செய்து விட முடியாது. உன் உடலுக்குத் தண்டனை அளித்துப் பயனில்லை. உன் உள்ளத்தில் தாண்டவமாடும் ஆணவத்துக்குச் சரியான தண்டனை கொடுக்க வேண்டும்..."

இப்பொழுது ராணியின் உள்ளத்தில் ஆயிரமாயிரம் போராட்டங்கள் நடந்தன. கண்கள் கலங்க முற்றும் கண்ணீரைப் பெருக்கக் காத்திருந்தன. பளிச் சென்று மின்னல் வெட்டுவது போல ஒரு எண்ண அலை அவள் மனத்தில் அலை மோதியது.

"ஆணவமல்ல, அரசே! உண்மையை..." என்று ஏதோ கூறவந்த மகாராணியின் பேச்சில் குறுக்கிட்டு, "உன் ஆணவத்தினால் என் இதயத்தை உடைத்தெறிந்து விட்டாய். உனக்குச் சரியான பாடம் கற்பித்தாலொழிய என் மனம் நிம்மதி யடையாது. நான் வருகிறேன்" என்று கோபக் கனல் தெறிக்கக் கூறிவிட்டு விடுவிடென்று போய் விட்டார் பாண்டிய மன்னர் விஜயரங்க சொக்கநாதர்.

* * *

விஜய நகரத்தரசர் கிருஷ்ண தேவராயர் தென்னாட்டை வென்றபோது பாண்டிய நாட்டைப் பாதுகாக்க நாகம நாயக்கரை நிறுத்தினர். இவர் தாமே பாண்டிய அரசரானார். இவருக்குப் பின் பல நாயக்க மன்னர்கள் மதுரையை ஆண்டனர். 1706-ம் வருஷத்தில் விஜய ரங்க சொக்கநாத நாயக்கர் பட்டத்துக்கு வந்தார். இவரது அருமை மனைவியார் தான் ராணி மீனாட்சி தேவி.

காலதேவன் பாண்டிய ராணி மீனாட்சி தேவியாரைப் பிரிவெனும் துயரினில் தவித்துருகும்படி செய்திருந்தான். அளவற்ற சினத்துடன் சென்ற விஜயரங்க சொக்கநாதர் அரண்மனையை விட்டே போய் விடுவார் என்று மகாராணி மீனாட்சி சிறிதும் எதிர்பார்க்கவில்லை. எல்லாம் விதி தனது சூட்சமக் கயிற்றினால் அல்லவா கட்டியிழுத்து விளையாடுகிறது!

அன்று மாலையில் அரண்மனை நந்தவனத்தில் மனத்துயரை மறக்க உலாவி விட்டு வருவதற்காகப் பாண்டியமாதேவி அந்தரங்கத் தோழி அங்கயற்கண்ணியுடன் சென்றாள். மலர்க் கொடிகளும், செண்பக விருட்சங்களும் அடர்த்தியாக வளர்ந்திருந்த இடத்துக்கு அருகில் அவர்கள் வந்தபோது, ஏதோ பேச்சரவம் கேட்டுப் பின் வாங்கினாள். அங்கயற் கண்ணி அதை அறியாமல் பேசத் தொடங்கவே அவள் வாயைத் தன் தளிர்க் கரங்களினால் பொத்தினாள். ராணியின் செய்கையைக் கண்டு அங்கயற் கண்ணி திகைத்துப் போய்ச் சிலையாய் நின்றாள்.

ஆனால் செண்பக விருட்சத்தின் அடியில் உல்லாசமாக வாயில் காப்போர் இருவர் நாயக்க ராணி வருவது தெரியாது மனம் விட்டுப் பேசிக் கொண்டிருந்தனர். அவர்கள் உரையாடல் ராணி மீனாட்சி தேவியின் மலர் முகத்தில் ஆயிரமாயிரம் மின்னல் கீற்றுக்களைப் பாய வைத்தன. அவர்கள் நாராசம் போன்ற சொற்கள் அங்கயற் கண்ணியின் இதயத்தையே கசக்கிப் பிழிந்து கடுங்கோபத்தை வருவித்தன. அவ்விரு வாயில் காப்போரும் இதை யறியாது தொடர்ந்து உரையாடிக் கொண்டிருந்தனர்.

"என்ன அண்ணே! நம்ம அரசர் விஜய ரங்க சொக்கநாதர் நாட்டை விட்டுப் போயி ஒரு வருஷமாச்சல்லே! இன்னும் நம்ம ராணியம்மா அவரைத் தேடி அழைச்சிக்கிட்டு வர ஆளே அனுப்பிச் சாங்களா, பாத்தயா!"

"நீ நல்ல ஆளப்பா! ராணியம்மா முகத்திலே அரசரைப் பிரிஞ்ச ஏக்கம் கடுகத்தனையாவது இருக்கா, தெரியுதா!... காணல்லே! நீபாரு..."

"அப்படின்னு நம்ப அரசிக்கு அதிலே சந்தோஷம்னு சொல்லறே!"

"இதைக் கேளு...ராஜா நாட்டை விட்டுப் போறப்போ ராணி கிட்டே என்ன சொன்னாரு, தெரியுமா! 'நீ கர்வக்காரி. ஆணவத்தினாலே என் மனசை உடைக்க எறிஞ்சுட்டே. உனக்குச் சரியான பாடம் கற்பிக்கிறேன்'னு சொல் விட்டுப் போயிட்டாராம்!"

"அப்படியா, அண்ணே! அப்போ நம்ம மகாராணி அதைக் கேட்டுக்கிட்டு சும்மாவா இருந்தாங்க!"

"இல்லே! சந்தோஷமா நம்ம ராசாவை வழியனுப்பி வைச்சாங்க!"

"என்ன கொடிய மனசு! மரகதக் கல்லும், ஆசையும் அரசியை அரக்கியாக்கிட்டதே!"

அங்கயற்கண்ணி அனலிடைப்பட்ட புழுவைப் போல் துடித்துப் போய் அரசியின் மதிமுகத்தை உற்று நோக்கினாள். இது என்ன! ஆயிரமாயிரம் மின்னல்கள் படர்ந்த மகாராணியின் மதிவதனத்தில் இப்பொழுது ஆழ்ந்த அமைதியல்லவா குடிகொண்டிருக்கிறது!

கடுஞ் சினத்துடன் விளங்கிய அங்கயற் கண்ணியைக் கையைப் பிடித்துக் கரகர வென்று தொலை தூரத்துக்கு அழைத்துச் சென்றாள் ராணி. ஆனால் அங்கயற்கண்ணி நடந்து கொண்டே, "இதோ, பாருங்கள்! தங்களை அவமரியாதையாகத் தூற்றிய இவ்விரு ராஜத் துரோகிகளையும் நாக்கைத் துண்டித்துக் கழுவேற்றி விட வேண்டும்" என்றாள் பிடிவாதமாக.

"கோபப்படாதே, அங்கயற் கண்ணி! அவர்கள் சொல்வதில் என்ன தவறு? உண்மையைத் தானே அவர்கள் சொல்லுகிறார்கள்!" என்றாள் ராணி.

"என்ன, மகாராணி! அது உங்களுக்கு வேதனையைத் தர வில்லையா? உங்கள் உள்ளத்தை அச்சொற்கள் அரிக்கவில்லையா!"

"ஆமாம்! அவை எனக்கு வேதனையைத்தான் தந்தன. இருந்தாலும் அரச பரம்பரையினர் உண்மைக்குத் தலை வணங்கித்தானே ஆக வேண்டும்!" என்று உறுதியுடன் கூறினாள்.

"அதில் என்ன உண்மை இருக்கிறது? எனக்கு விளங்கவில்லையே, ராணி!... மேலும் அதற்காக இந்தத் துரோகிகளைத் தண்டிக்க வேண்டாமென்று சொல்வது.."

"உனக்கு வியப்பாக இருக்கும். தண்டனை அவர்களுக்குக் கொடுக்கக் கூடாது. எனக்குத்தான் தண்டனை அளித்துக் கொள்ள வேண்டும்!"

"என்ன விசமமாக சொல்கிறீர்கள்!" என்று கேட்டாள் அங்கயற்கண்ணி.

"ஆம்! நான் அரசருக்கு உண்மையை உரைக்காமல் ஒளித்தேன். அதனால் இந்நாளைய அவமரியாதையைத் தண்டனையாக அனுபவிக்கிறேன்" என்றாள் தேவி.

அங்கயற்கண்ணி, "என்ன ராணி! தாங்கள் நாயக்க மன்னரிடம் உண்மையை மறைத்தீர்களா? எனக்கு ஒன்றும் விளங்க வில்லையே!" என்றாள்.

"ஆம்! மன்னர் அதி அற்புதமான மரகதக் கல்லை எனக்குப் பரிசாக அளிக்க வந்தார் அல்லவா! அப்பொழுது அரசரின் தங்கையார் வழியில் இடை மறித்து அம் மரகதக் கல் தனக்கு வேண்டுமென்று மன்றாடிக் கேட்டாள். ஆனால் அரசர் அதை அவளுக்குக் கொடுக்க வில்லை."

"அதனால் என்ன! அரசர் தம் அருமைத் திருமனைவியாருக்குத் தான் கொடுக்கப் பிரியப்படுவார். அதில் தவறில்லையே!"

"இல்லை, அங்கயற்கண்ணி! அரசர் தன் தங்கையாருக்குக் கொடுப்பதை மறுத்து விட்டு அதை எனக்குக் கொடுத்தால் அதனால் அரசரின் தங்கையாருக்கு என் மீது பொறாமையும், அளவு கடந்த வெறுப்பும் ஏற்படுமல்லவா! அதை நான் விரும்ப வில்லை."

"அதற்காகவா அரசரிடம் அன்று அவ்வளவு கோபத்துடன் நடந்து கொண்டீர்கள், ராணி!"

"ஆம், தோழி! வேண்டுமென்றே கோபத்தை வருவித்துக் கொண்டு அந்த மரகதத்தைப் பறித்தேன். அந்த மரகதம் வேண்டாமென்று வெறுத்தால் அரசர் தம் தங்கையாரிடம் அதைக் கொடுத்து விடுவார் என்று எதிர்பார்த்தேன்..."

"ஐயையோ! இந்த உண்மையை நாயக்க ராஜாவிடம் கூறியிருந்தால்

அவர் தங்கள் நியாகத்தை மெச்சி அதை மகிழ்ச்சியுடன் நிறைவேற்றியிருப்பாரே!"

"அங்கயற்கண்ணி! பெண் புத்தி பின் புத்தி என்பார்கள். அது சரியாகப் போய் விட்டது. ஏதோ ஆத்திர புத்தியில் தோன்றியதைச் செய்து விட்டேன். அது எத்தனை விபரீதத்தில் கொண்டு சேர்த்து விட்டது! அரிய அபகீர்த்தியை அல்லவா நான் சம்பாதித்துக் கொண்டுவிட்டேன்!"

"ஏன், மகாராணி! நம் அரண்மனைச் சேவகர்களை அனுப்பி நாடு நகரமெல்லாம் அரசரைத் தேடச் சொன்னால் என்ன!"

"ஆம்! நல்ல யோசனை! அவ்வாறே நான் கட்டளை யிட்டதாக மந்திரியிடம் அறிவிப்பாயாக. மன்னரைக் கண்டு அவர் காலில் விழுந்து உண்மையை உரைத்து மன்னிப்புப் பெற்றால்தான் என் வெந்த உள்ளம் நிம்மதியடையும்......" என்று கூறி விட்டு விம்மினாள், பாண்டியராணி.

* * *

அந்தப்புரச் சாளரத்தின் வழியாகப் பாண்டியராணி வெளிபுறமாக நோக்கிக் கொண்டிருந்தாள். அவள் உள்ளத்தைப் போலவே கோடையின் உக்ரத்தினால் மரங்கள் பசுமையிழந்து காணப்பட்டன. பறவைகள் வெய்யிலின் கடுமை தாங் காது அரற்றிக் கொண்டிருந்தன.

"மகாராணி! மிக முக்கியமான செய்தி. உடனே தாங்கள்......" என்று பதறி படித்துக் கொண்டே ஓடிவந்த அங்கயற் கண்ணி மூச்சுத் திணறியதால் வார்த் தையை முடிக்க முடியாமல் தவித்தாள்.

"என்ன! என்ன!" என்று திடுக்கிட்டுப் போய்த் திரும்பினாள் பாண்டியமாதேவி.

"அம்மா! வைர வியாபாரி ஒருவர் வந்திருக்கிறார். அவர் உடனே தங்களைப் பார்க்க வேண்டும் என்று துடிக்கிறார்" என்றாள் தோழி.

"என்னுடைய நிலையைத் தெரிந்து கொண்டே நீ இப்படித் துன்புறுத்துவது நன்றாக இல்லை. எனக்கு இந்த நிலையில் வைரமும், பொன்னும் குட்டி மழை வேண்டும் என்று விரும்புகிறாயா! என்ன கொடுமைக்காரி நீ!" என்று கடுமையாகக் கோபித்துக் கொண்டாள் மீனாட்சிதேவி.

"இல்லை, அரசி! அவருக்கு நம் அரச ரைப் பற்றி..." என்று முடிப்பதற் குள்ளாகவே, மகாராணி, "அவருக்குத் தெரியுமா! உடனே அவரை அழைத்து வருவதற்கென்ன! இதற்குக் கூட என் உத்தரவை நீ எதிர்பார்த்து நிற்க வேண் டுமா!" என்றாள் ஆத்திரத்தோடு.

"ஆகட்டும், தேவி!" என்று கூறி விட்டு வேகமாக விரைந்தாள் அங்கயற்கண்ணி.

ஆனால் அவள் வரும் வரை பொறுமை யாகக் காத்துக் கொண்டிருக்க ராணிக் குப் பிடிக்கவில்லை. வெகு வேகமாக ஒரு அழகிய மரத்தின் அடிக்கு வந்து நின்று கொண்டு வைர வியாபாரி வரும் திக் கையே ஆவலுடன் நோக்கினாள். சில வினாடிக்குள் அங்கயற்கண்ணி வேகமாக ராணியின் அருகில் வந்து, "இதோ. வந்து விட்டார், அம்மா!" என்று கூறினாள்.

அடுத்த கணம் வைர வியாபாரி மகா ராணியின் முன் வந்து நின்றார். நாயக்க அரசிக்கு வணக்கம் செலுத்தி விட்டு, "பாண்டிய ராணியே! இந்த மரகதக் கல் யாருடைய தென்று தங்களுக்குத் தெரி கிறதா!" என்று கேட்டார்.

"ஆ! இது என் உள்ளத்தரசர் எனக்கு அளிக்கவிருந்த மரகதக் கல்லேதான். இது தங்களிடம் எப்படி வந்தது!" என்று வியப்புடன் வினவினார் ராணியார்.

"அம்மா! இது இரகசியமாகத் தங்க ளிடம் அறிவிக்கும்படி..." என்று வைர வியாபாரி சொல்லிக் கொண்டிருக்கும் போதே மகாராணி கண் ஜாடை காட் டவே அங்கயற்கண்ணி அவ்விருந்து மெது வாக நழுவி விட்டாள்.

"தங்கள் நாயகர் விஜயரங்க சொக்க நாதர் தெரிவித்திருக்கிறார்..."

"என்ன! என்ன! அவர் உயிருடன் இருக்கிறாரா! அவர் ஏன் வரவில்லை!" என்று பல கேள்விக் கணைகளைத் தொடுத் தாள் மீனாட்சி தேவியார்.

"அரசர் திருச்சிராப்பள்ளிக் கோட்டை யில் மரணப் படுக்கையில் கிடக்கிறார். தங்களை மாத்திரம் ஒரு தடவை பார்க்க வேண்டுமென்று துடிக்கிறார்."

"இதோ புறப்பட்டு விட்டேன். மன்னரின் கடைசிக் காலத்திலாவது சந் திக்கும் வாய்ப்பு கிடைத்ததே! தங்கள் உதவிக்கு என்ன கைம்மாறு செலுத்து வேன்!" என்று அளவு கடந்த ஆனந்தத் துடன் கூறினாள் மீனாட்சி தேவியார்.

"ஆனால் தங்கள் அரசரின் கட்டளை, தங்களை மாத்திரம் இரகசியமாக அழைத்து வரும்படி கூறியிருக்கிறார்..."

"ஓ! அப்படியே! அரசரின் ஆணையை நிறைவேற்றுவதைவிட இந்தப் பேதைக்கு என்ன செய்யக் கிடக்கிறது!"

* * *

மகாராணி மீனாட்சி தேவியார் தன்னந் தனியாக ஒரு வைர வியாபாரியுடன் புறப் பட்டு வந்து விட்டாள். முன்பின் தெரி யாத அந்த மனிதருடன் எப்படித் துணிந்து வந்தாள்! எல்லாம் அந்த மரகதக் கல்லின் திருவிளையாடலினால்தான்!

"அரசர் எங்கே இருக்கிறார்! அவரிடம் என்னை அழைத்துச் செல்லுங்கள்" என் றாள் நாயக்க ராணி.

"ஹ்ஹ்ஹா!" என்று பலமாக நகைத் தான் அந்த வைர வியாபாரி. அந்தச் சிரிப்பு மகாராணியின் இதயத்தில் வாள் கொண்டு அறுப்பது போல் இருந்தது.

"மகாராணி! தங்கள் அரசர் விஜய ரங்க சொக்கநாத நாயக்கர் மரண மடைந்து பல வருஷங்களாகி விட்டன. ஆனால் அவருடன் நான் பழகியது எவ் வளவு நல்லதாகப் போயிற்று! இந்த மரகதக்கல் என்னிடம் அகப்பட்டது எவ் வளவு சௌகரியமாகப் போய்விட்டது!" என்று கூறிவிட்டு இடி முழக்கம் போல் சிரித்தான் அவன்.

"ஏ! துரோகி! என்னை ஏமாற்றி அழைத்து வந்து விட்டாயே! நீ யார்! எதற்காக இத்தகைய துரோகம் செய் தாய்!" என்றாள் ராணி கோபத்துடன்.




நாயக்க மன்னரின் மனைவி மனம் குமுறித் தீயில் இடி விழுந்தவள் போல் பதறிப் போய்த் தவித்தாள். அவள் கையி லிருந்த மரகதக்கல் அவளைப் பார்த்துச் சிரித்தது. 'என்னைப் பறித்த உன்னைப் பழிக்குப் பழி வாங்கி விட்டேன்' என்று என்னி கையாடுவது போல் தோன்றி யது. அடுத்த கணம் அவள், கையிலிருந்த மரகதக் கல்லை அளவற்ற வெறுப்புடன் தரையில் எறியக் கையை ஓங்கினாள்.

அதே சமயம் 'ஹ்ஹ்ஹா' என்று அட்டகாசச் சிரிப்புச் சத்தம் கேட்டுத் திகைப்புடன் திரும்பினாள் மீனாட்சி தேவி. புதிய குரல்!...ஆனால் கேட்ட குரல்...!

ஆம்! அவள் கண்கள் அப்படியே ஆனந் தத்தால் விரிந்தன. அந்த அட்டகாசச் சிரிப்புக்குரியவர் நாயக்க மன்னர் விஜய ரங்க சொக்கநாதர்தான்!

# முதல் வீட்டார் தவிப்பு

ஓரங்க நாடகம்






பாத்திரங்கள்:

சண்முகம்–ஐம்பது வயதானவர்; கனகம் – அவர் மனைவி; மங்களம்— அவர் மகள்; சிவசாமி – அவர் மகன்; ரங்கன்–அவர் மாப்பிள்ளை.

இடம் :

வீணை நிர்த்த விநாயகர் தெரு (வீ. வி. தெரு) வின் முதல் வீட்டில் தெருவை ஒட்டிய கேட்டு வழி உள்ளே முற்றத்தை யடுத்த பெரிய திண்ணை.

நேரம் :

நடுநிசியைத் தாண்டிய பொழுது.

[சண்முகம் சறுக்காலம் ஒன்றில் அமர்ந்துள்ளார்; வீட்டின் கதவு உட்பக்கம் தாளிடப் பட்டிருக்கிறது. அவர் இருப்பதை உள்ளிருந்து வீசும் மின்சார ஒளி சன்னல் வழியாகத் திண்ணையில் காட்டுகிறது. கவலையோடு அவர் முகம் காண, ஏதோ ஒரு புத்தகத்தைச் சிவசாமி படிக்கிறான். உள்ளிருந்து எண்ணெய்ச் சட்டியின் நெடி; இடை இடையே மகள் மங்களம் சன்னல் வழியாக எட்டிப் பார்க்கிறாள். தெருவில் வண்டிச் சத்தம் கேட்கவே பயந்தவராக எழுந்து கதவைத் தட்டுகிறார்.]

சண்முகம்: இந்தா, கதவை எதுக்காகச் சாத்தி வைத்திருக்க வேண்டும்! திற, திற.

கனகம் (உள்ளிருந்தபடியே): எதுக்காகக் கதவைத் திறக்க வேண்டும்! நட்ட நடுநிசியிலே கன்முகத்தான் கதவை உடைக்கிறீர்கள்.

சண்முகம்: உனக்கு என்ன தெரிகிறது! வீ. வி. கோவில் தெருவுக்கு வருகிற பயல்கள் அத்தனை பேரும் என் பிராணனை வாங்குகிறார்கள். அதோ ஒரு வண்டி வந்து விட்டது!—(கதவைத் தட்டுகிறார்.)

மங்களம் (ஆவலோடு): இது 'அவர்' வந்த வண்டியாக இருக்கும் அம்மா!—(ஜன்னல் வழியாகப் பார்க்கிறாள்.)

[வந்த குதிரை வண்டி தெருவில் இவர்கள் வீட்டுக் கேட்டுப் பக்கம் நிற்கிறது. அதிலிருந்து ஒரு பெண் குரல்]

சண்முகம்: அட! ராமா, ராமா! என்னம்மா, யாரு இந்த நேரத்தில்!

பெண்: இதுதானே வீணைநிர்த்த......

சண்முகம்: இந்தத் தெருவிலே நீங்க யார் வீட்டு மாப்பிள்ளை!

பெண்: என்னுடைய தம்பி வண்டியிலே இருக்கிறான்; அவன்தான் மாப்பிள்ளை. அவனாலே இங்கே இருந்து உரக்கப் பேச முடியாது.

சண்முகம்: என்ன வேணும்!

பெண்: இங்கே கல்யாணராமன் இருக்கிறாரே, அவர்கள் சம்பந்தி தான்...

சண்முகம்: குறைவில்லை. போம்மா, நடுத் தெருவோடே போ.

பையன்: என்னவாம் தொல்லையோ!

சண்முகம்: நேரே போங்கள். அவர்கள் வீட்டு வாசலிலே மரம் இருக்கும்.

பெண்: என்ன மரம் என்று சொன்னால் போதும்.

சண்முகம்: இங்கே மரம் என்றால் தந்தி மரம் ஒன்றுதான். அதற்கு எதிர் வீடு! போய்ச் சேருங்கள். எங்களுக்குக் கொதிக்குது வயிறு.

பெண்: இந்த நடுநிசியிலே இந்த வீடாவது திறந்து இருந்ததே. வண்டியை ஓட்டப்பா.

சண்முகம்: எல்லார் வீட்டு மாப்பிள்ளைகளும் வந்து விட்டார்கள். நமக்கு என்று ஒரு திருவாழத்தான் வாய்த்தானே!

[வண்டி திரும்பிப் போகிறது. ஒரு மோட்டார் விசையாக வந்து நிற்கிறது. மோட்டார் சத்தம் கேட்டு மங்களம் சன்னல் வழியாக எட்டிப் பார்க்க திமுக விழுந்தாள். சிவசாமி உரத்த குரலில் கத்துகிறான்.]

மங்களம்: அதோ மோட்டார் ஒன்று வந்து நிற்குதம்மா.

கனகம்: சரி, கதவைத்திற. இல்லே, இல்லே. உன் அப்பா வீட்டுக்குள் வீரென்று வந்தால் கும்பகர்ணப்படலம் மாடியில் போய் வாசிக்க ஆரம்பித்து விடுவார்கள்! மாப்பிள்ளைதான் என்று தெரிந்த பின் கதவைத் திறக்கலாம்.

டிரைவர் (கேட்டுப் பக்கம் கதவைத் திறந்து உள்ளே வந்து): இந்தத் தெருவில் ஏ. காந்தி வீடு எது? (காரில் இருப்பவர்கள் கேட்டார்கள்.) ஏ. காந்தி.

சண்முகம்: ஏகாந்தியும் ஆச்சது. ஏகாத காந்தியும் ஆச்சது. எங்கேனும் கேள்.

டிரைவர் (மோட்டாருக்குள் இருப்பவரிடம் விசாரிக்கும் பாவனையில்): என்ன





சார்! சாய பாக்டரி பக்கத்திலே உள்ள வீடா! குப்பைத் தொட்டி இருக்கும் என்று சொல்லுகிறீர்களா! (உரத்து) சாய பாக்டரி ஏ. கார்டியாம். அவர்கள் வீட்டிலே, வீட்டுக்கு முன்னே குப்பைத் தொட்டி இருக்குமாம்.

**சிவசாமி:** நம்ம தெருவிலே கவுன்சிலர் யாருமில்லையே. குப்பைத் தொட்டி இருக்க ஏது வழி!

**சண்முகம்:** ஏகாந்தி யார்!

**மங்களம்** *(சன்னல் வழியாக)*: ஒரு வேளை சரசு மாப்பிள்ளையாக இருக்கலாம். அவர் யார் என்று கேளுங்கள். கால்நடை டாக்டர் என்றால்...

**சண்முகம்:** ஏனப்பா, டிரைவர்! அவர் மாட்டு வைத்தியரா என்று கேள்.

**மோட்** *(சற்றுத் தாமதித்து)*: ஆமாம். இவர்கள் மாட்டு வைத்தியர்தான்.

**மங்களம்:** நான் நினைத்தது சரி அப்பா. தண்ணீர்த் தொட்டி இருக்கிற வீடு என்பதை மறந்து, குப்பைத்தொட்டி என்று சொல்லியிருக்கிறார்.

**சண்முகம்:** உன்னோட தோழி சரசுவின் மாப்பிள்ளையா இவன்! டிரைவர்! இதே தெருவிலே நாலாவது சந்திலே மூன்றாவது வீடு...

[டிரைவர் போகிறார்.]

**சண்முகம்:** கனகம் கதவைத் திற. ஊரிலுள்ள பயல்களுக்கெல்லாம் விலாசம் சொல்லி அனுப்பப் போச்சு. உம், இருக்கிறேயா இல்லையா! இலங்கையிலே இருந்து எப்போ குதிக்கப் போகிறானோ? காலை ரயில், மத்தியான ரயில், சாயங்கால ரயில், போட் மெயில்,...உம்...பார்த்துப்பார்த்து அலுத்து விட்டது. இனிமேது ரயில்!

**கனகம்:** இன்றைக்கு ஒரு நாள் உங்களுக்குத் திண்ணையில் இருப்பது அத்தனை சிரமமா! வருகிற மாப்பிள்ளையைப் பார்த்துக் கொண்டு இருங்கள்.

**சண்முகம்:** இனிமேல் வருகிறவர்களுக்கு நான் பதில் சொல்ல மாட்டேன். நீ தான், சிவசாமி சொல்லியாகணும்.

**சிவசாமி:** அம்மா, இனி மேல் காத்து பயன் இல்லை. வண்டிகளின் போக்கு வரத்தும் நின்றுவிட்டது. கதவைத் திற.

**சண்முகம்:** அவன் சண்டித்தனம் எனக்குத் தெரியும். மாப்பிள்ளைக்கு உளுந்து வடை பிரியமாம். அதை கடி ராவிலேயே தட்டிக் கொண்டிருக்கிறாள். மாப்பிள்ளையைக் காண வில்லை; இங்கே வடை கட்டாறிறது.

**கனகம்:** இதெல்லாம் என்ன பேச்சு! அந்தப் பெண் என்ன நினைத்துக் கொள்ளும்! அழுமாட்டாத குறையாக இருக்கிறபோது, பேச்சைப் பாருங்கள் பேச்சை.

**சண்முகம்:** அயோக்கியப் பயல் வந்தால் என்ன! வராமல் போனால் என்ன! சொன்ன ரெயிலில் வரவில்லை. அதற்குப் பிறகு நாலு வண்டி போய்ப் பார்த்தாச்சு.

**கனகம்:** நீங்கள் மட்டும் என்ன! தலை தீபாவளிக்கு எங்கள் அப்பாவைப் படுத்தி வைத்த பாடு எனக்கு மறந்தா போச்சு! ஆடின ஆட்டமும்பாட்டமும் கொஞ்சமா! உங்களை விட உங்கள் மாப்பிள்ளை நல்லவர்.

**சண்முகம்:** நீதான் மாப்பிள்ளையை மெச்சிக் கொள்ளணும்.

[கேட்டுப் பக்கம் பெட்டியும் கையுமாக ஒரு வாலிபன் வந்து நின்று குரல் கொடுக்கிறான், "சார், சார்" என்பதாக.]

**சிவசாமி:** அப்பா, மாப்பிள்ளைக்கு நல்ல தண்டனை! போர்ட்டர்கூட இல்லாமல் தானே தூக்கி வருகிறார்.

**மங்களம்:** அவர் குரல் இல்லை இது.

**சண்முகம்:** எவனோ வந்து விலாசம் கேட்க வந்திருப்பான். (உரத்து) யாரப்பா அங்கே!

**வாலிபன்:** ரெயில்வே ஸ்டேஷனுக்கு வழி இதுதானே!

**சண்முகம்:** எல்லாரும் ஸ்டேஷனிலிருந்து வரும் போது, இவன் மட்டும் அங்கே போக வழி கேட்கிறானே! யாரப்பா நீங்க! யார் வீட்டு மாப்பிள்ளை! இப்போதாவது வந்தீர்களே!

**வாலிபன்:** அந்த வயிற்றெரிச்சலை ஏன் கிளப்புகிறீர்கள்! நான் முந்தாநாளே வந்து விட்டேன்.

**சண்முகம்:** சாம்பசிவத்தின் மாப்பிள்ளையா!

**வாலிபன்:** அந்த அயோக்கிய கொமனியை என்னியா வந்தேன்! "அவர்" சொன்னதுக்காக வந்தேன். இரண்டு பவுனிலே செயின் செய்து போடுவதாகச் சொன்னார் கடிகாரத்திற்கு. இப்போது என்னடா என்றால் போகும் போது என்கிறார். விடிந்தால் தீபாவளி. என்னை ஏமாற்றினால், வீட்டிலே அப்பா அம்மாவுக்கு நான் என்ன பதில் சொல்லுறது!

**சண்முகம்:** தம்பி! கோபித்துக் கொண்டு போகாதே! மாமனுக்காகவா வந்தாய்! கட்டிய மனைவியை நினைத்துத் தானே வந்தது! உனக்குள்ள பெருந் தன்மை எங்கள் மாப்பிள்ளைக்கு இல்லை.

வைர மோதிரமும், கடிகாரத்துக்குத் தங்கச் செயினும் இங்கே தூங்குகிறது.

**கனகம்** (மெதுவாக): தெருவோட போகிறவர்களைக் கூப்பிட்டு என்ன உபசாரம் வேண்டியதிருக்கிறதாம்!

[இந்த வேளையில், தெரு வழியாக 'மாப்பிள்ளை, மாப்பிள்ளை! கோபப்பட்டுக் கொண்டு போகாதீர்கள்' என்று அரற்றிக் கொண்டு வருகிறார் சாம்பசிவம்.]

**சண்முகம்**: அட சாம்பசிவம், உங்கள் மாப்பிள்ளையைக் கௌரவம் செய்யும் முறை இதுதானா! அவர் கோபம் கொண்டால் என்ன ஆச்சது!

**சாம்பசிவம்**: நீங்கள் விழித்துக் கொண்டா இருக்கிறீர்கள்! இப்போது தான் கடை வீதியிலிருந்து வருகிறேன். வீட்டுக்குள் வந்தால் மாப்பிள்ளை கோபித்துக் கொண்டு எங்கோ கிளம்பிப் போய் விட்டதாகத் தெரிந்தது. ஓடிவருகிறேன்.

**சண்முகம்**: நான்தான் புத்தி சொல்லி நிறுத்தி வைத்திருக்கிறேன்.

**வாலிபன்**: எனக்கு நம்பிக்கை இல்லை. கடையிலிருக்கும் போகவே இல்லை......

**சாம்பசிவம்**: இதோ பாருங்கள் கடையில். சாமான். செயின் மூன்று பவுன்......

**வாலிபன்**: சரி, போகலாம் மாமா!

**சண்முகம்**: அது தங்கமா! கில்டா!

**வாலிபன்**: ஏதோ ஒன்று! அம்மா அப்பா தொல்லைக்கும் பயந்துதான் இதை கேட்பது. கில்டாக இருந்தாலும் இன்னும் ஒரு வருஷம் வரை கவலையில்லை!

[மாப்பிள்ளை முன்னே போகச் சாம்பசிவம் பின் போகிறார்.]

**சிவசாமி**: மாப்பிள்ளை என்று பெயர் வந்தாலே கொழுப்பு வந்துவிடுமோ? மாமனார், மாப்பிள்ளையை ஓட்டிக் கொண்டு போவதைப் பாரு, மங்களம்!

**மங்களம்**: நாளைக்கு நீயும் தலை தீபாவளிக்கு இப்படித்தான் செய்வாய்!

**சண்முகம்**: கனகம், கதவைத் திற. இல்லை, நான் விநாயகர் கோவிலுக்குப் போய், மண்டபத்தில் தூங்கப்போகிறேன். திறக்கிறாயா இல்லையா!

[சைக்கிள் கிக்கிர மணியோசை கேட்கிறது. அதிலிருந்து, ஒரு குரல் ஏதோ கேட்கிறது. பிறகு புரியாத ஒலிகள்.]

**சண்முகம்**: இவன் மாமனார் வீட்டுக்கு வருகிறானா! இல்லை மாமனார் வீட்டிலிருந்து ஓடுகிறானா! என்னய்யா வேணும்!

**குரல்**: சார், இங்கே பி.சி.ஜி வீடு எது!

**சிவசாமி**: இங்கே ஒருபயலும் பி.சி.ஜி போட்டுக்கொள்ள வில்லை. நல்ல நாளிலே வந்து பி. சி. ஜி பேச்க பேச இடம் பார்த்தாயே. ஓடய்யா.

**குரல்**: பி. சி. ஜி அதான் மண்ணெண்ணெய் வியாபாரம் பி. சி. கோபாலன்.

**சண்முகம்**: நல்ல வேளை ஐயா, பி. சி. ஜி குத்தத்தான், தீபாவளியும் அதுவுமாக வந்து விட்டாயோ என்று பயந்து போய் விட்டோம்!

**சிவசாமி**: டி. பி. தெருவிலே போய்க் கேளுங்கள். இது வி. வி. தெரு.

**குரல்**: இது டி. பி. தெருவில்லையா! தரும பிரான் தெரு இல்லையா! விடு கிஷ்டா. வி. வி. தெருவிலே கொண்டு வந்து விட்டா, பி. சி. ஜி அகப்படுவாரா!

**சண்முகம்**: பி. சி. ஜி வீட்டு மாப்பிள்ளை கூட வந்திட்டான். எப்ப இவர்களை விருந்து குடிப்பாளோ, நம்ம ரங்கன். அட ரங்கா! (கோபம்) கனகம்! இனிமேல் வீட்டுக்கு விடு வரவேண்டிய பயல்கள் வருகிறதை என் கண்ணும் பார்த்துக் கொண்டிருக்கமுடியாது. முடியாது, திற கதவை. (உடைக்கிறார்)

**மங்களம்**: (ரகசியமாக) அம்மா, அப்பா கோபமாக இருக்கிறார்.

[கதவு திறக்கப்படுகிறது. மாடிக்குத் தாவுகிறார். அவர் குமாரன் போகிறான். மங்களம் பெருமூச்சு விடுகிறாள். கனகம் சன்னல் வழியே தெருவைக் கவனிக்கிறாள். இடை இடையே விலாசம் கேட்க யார் யாரோ குரல் கொடுக்கிறார்கள். கடிகாரம் மூன்று அடிக்கிறது.]

**கனகம்**: இனிமேல் ரெயில் இல்லை. வாங்கிய ஜரிகை வேட்டி எல்லாம் வீண்.

**மங்களம்** (விசித்து அழுகிறாள்): எனக்கு நேற்று எக்ஸ்பிரஸ் டெலிவரியில் வருவதாக எழுதினாரே அம்மா.

**கனகம்**: போய்ப் படுத்துக் கொள். என்னமோ நாம் செய்த கஷ்டமோ. வரவேண்டியவர் வரவில்லை யென்றால் வருத்தமாகத்தான் இருக்கிறது. (கண்ணீர் துடைத்து முந்தானை நனைகிறது.)

**மங்களம்**: எனக்குத் தூக்கமே வரவில்லையம்மா. நீ தூங்கு. விடியும் வரை இந்த சன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டிருப்பேன்.

**கனகம்**: நீ பார்க்கிறதால் வந்து விடுவாரா! அப்பா போய்ப் படுத்துக் குறட்டை விடுகிறார்! அண்ணனும் படுத்துத் தூங்கி விட்டான்.

**மங்களம்**: அம்மா பேசாதே யம்மா. நீ போய்ப் படுத்துக் கொள். எப்போது தூங்கவேண்டுமென்று எனக்குத் தெரியும்.

[கார் ஒன்று வந்து நிற்கிறது. 'இது தானா?' என்று கேட்கிறது ஒரு குரல். பதிலுக்கு 'சத்தமாக இருக்கிறது' என்றபடியே.]

**ரங்கன்**: இது வி. வி. கோவில் தெருவா!

**நண்பர்**: என்ன மிஸ்டர் ரங்கன். உங்கள் மாமனார் உமக்காக வழி மேல் விழி வைத்து இருப்பார் என்றீரே!

**ரங்கன்** (கேட்டுக் கதவைப் பலமாக உடைக்கிறான்): சார் இதுதானே வி. வி. கோவில் தெரு. இங்கே தானே...

[இந்தச் சத்தம் பொறுக்க முடியாமல் மாடியில் காவக் கிடக்கும் விறகுக் கட்டையை எடுக்கிறான் சிவசாமி. சண்முகம் கையிலே ஏதோ ஒரு தடியைத் தாங்கித் தடதட வென இறங்குகிறார். விளக்கும் போடப்படுகிறது. கதவு படாரெனத் திறக்கிறார்கள்.]

**சண்முகம்**: யாருடா அவன்! எவன் வந்து ராவிலே கதவை உடைக்கிறவன்!

**சிவசாமி**: இது என்ன தர்ம சத்திரமா! விடுங்கள் அப்பா போய்.

**மங்களம்**: அப்பா! அவர் வந்து விட்டார். அவரே தான்!

**கனகம்**: ரொம்ப அழகாக இருக்கிறது, சிவசாமி! கைத்தடியைக் கீழே போடு. உங்களைத்தானே! கம்பைப் போடுங்கள்.

**சிவசாமி**: அப்பா தான் தடி வைத்திருக்கிறார்.

**சண்முகம்**: யார்! (அதிசயத்துடன்) ஓகோ நீங்களா!

**சிவசாமி**: நம்ம வீட்டு மாப்பிள்ளையா! இங்கே நின்ற மங்களம் கேட்டுக்குத் தாவியது எப்படி!

**ரங்கன்**: எல்லாரும் தூங்கி விட்டீர்களா! ஓகோ மங்களமா! நீ மட்டும் தூங்கவில்லையா!

**மங்களம்**: (அதிகாரம்) டிரைவர், சாமான் இருந்தால் எடுத்து வா...

**ரங்கன்** (வாயைப் பொத்தி): உஸ்... அவர் டிரைவர் இல்லை. என் நண்பர். புதுக்கோட்டையில் படித்துக் கொண்டிருந்தார். திருச்சிக்கு அவர் காரிலே வந்தேன். அதுதான் குறித்த ரெயிலில் வர முடியாமல் போய் விட்டது.

**சண்முகம்**: டேய், சிவசாமி! சாமான் இருந்தால் எடுத்து வா. வாங்க சார்...

**நண்பர்**: பரவாயில்லை. உங்கள் மாப்பிள்ளையை 'டபா'த்துக் கொண்டு வந்து விட்டேன். புதுக்கோட்டையில் இறங்கவே மாட்டேன் என்று சொல்லி விட்டான். நான் கொண்டு வந்து விடுவதாகச் சொன்னேன். கொஞ்சம் லேட்.

**சண்முகம்**: வந்து சேர்ந்தாரே, அது தான் பெரிசு. நிம்மதியாச்சு.

**கனகம்** (மெதுவாக): என்ன பேச்சு! வீட்டுக்குள்ளே கூப்பிடுங்கள். வந்தவரை வெளியே நிறுத்தி வைக்கலாமா! சிவசாமி! ஜமுக்காளம் எடுத்துப் போடு...

**நண்பர்**: நான் உடனே போக வேண்டும். எனக்குத் தலைதீபாவளி.

**ரங்கன்**: நீங்கள் போகலாம். உங்களுக்கும் தலைதீபாவளியா!...

**நண்பர்**: உங்களைப் பார்த்து வெகு காலமாச்சுதா! ரயிலில் வந்தவரை நான் வற்புறுத்தி இறங்கச் சொன்னேன். கொண்டு வந்து விடத் தாமதம் ஆச்சுது. மன்னிக்க வேண்டும்.

**சண்முகம்**: நீங்கள் காப்பி பலகாரம் சாப்பிட்டதும் புறப்படலாம்.

**நண்பர்**: என் மனைவி, பொம்மனதவள். உடனே புறப்படணும்

**சண்முகம்**: காப்பி பலகாரம் இப்போது சாப்பிட்டதும் புறப்படலாம். மங்களம் ரெடியாக எடுத்து வை.

**மங்களம்**: இதோ (ஓடுகிறாள்)

**ரங்கன்**: ரொம்ப இளைத்து விட்டாள்.

**சிவசாமி**: மாப்பிள்ளை சார் உங்கள் பிருவைக் காட்டி விட்டீர்கள். இளைத்திருப்பது உங்கள் கண்தான்.

[கேட்டுப் பக்கம் 'சார், சார் இங்கே இதுதானே சண்முகம் வீடு' என்ற குரல்]

**சண்முகம்**: ஆமாம் என்ன!

**சிவசாமி**: (பயம்) தந்திச் சேவகன் என்ன காரியமோ!

**தந்திச் சேவகன்**: இதோ. 33 நம்பருக்கு நேரே கையெழுத்துப் போடுங்கள்.

**நண்பர்**: (கவலை) இந்த நேரத்தில் என்ன தந்தியோ!

**மங்களம்**: (பீதி) என்னப்பா தந்தியா!

**ரங்கன்**: (ஆறுதல்) பதறாதே.

**சிவசாமி**: என்ன! ஓகோ, மாப்பிள்ளை புதுக்கோட்டையிலிருந்து இங்கே திருச்சிக்குக் கொடுத்த தந்தி! 'நண்பர் ஒருவர் வீட்டில் தங்கி விட்டேன். காரில் விடியு தற்குள் வந்து விடுவேன்—ரங்கன்.'

**நண்பர்**: என்னது! நாம் கொடுத்த தந்தியா! அழகுதான். போய்ச் சேரப்பா, தந்தி சேவகா. அதுதான் இவர்கள் கவலை யோடு இருந்திருக்கிறார்கள்.

[தந்திச் சேவகன் மறைகிறான். எல்லோரும் உள்ளே வருகிறார்கள்.]

**சிவசாமி**: மங்களத்தம்மாள் முகத்தில் இப்பத்தான் செல்வம் கொழிக்குது.

**சண்முகம்**: டேய், சிவசாமி, மாப்பிள்ளைக்கு வாங்கிய ஜரிகை வேட்டி, கடிகாரச் செயின் வைர மோதிரத்தை அவர் கண்படுக்கக் கொண்டு வந்து காட்டு.

[எங்கும் சிரிப்பும் மகிழ்ச்சியும் அதிர் வேட்டுப் போல நிலவுகின்றன.]

# ஒட்டகம் மார்க் தீப்பெட்டிகள்

பொதுஜனங்களுக்கும் "ஒட்டக மார்க்" தீப்பெட்டிகளை ஆதரிக்கும் மக்களுக்கும் வியாபாரிகளுக்கும் எமது மனமார்ந்த

## தீபாவளி வாழ்த்துகள்






குளிர் மழை பிரதேசங்களுக்கு உகந்தது
பூரண உத்திரவாதம் உள்ளது

*

போலிகளைக் கண்டு ஏமாறாதீர்கள்

*

எல்லோரும் வாங்கி உபயோகியுங்கள்

## சௌத் இந்தியன் லூசிபர் மாட்ச் ஒர்க்ஸ் சிவகாசி.

தந்தி: 'LUCIFER', த.பெ.நெ. 26, போன். 81.

விற்பனை டிப்போக்கள்:

மங்களூர் ... 678, அஜீஸுடின் ரோடு
கள்ளிக்கோட்டை- 2-3, பீச் ரோடு
கண்ணனூர் ... 674, காம்ப் பஜார்
தலைச்சேரி ... 7/233, மெயின் ரோடு
திரூர் ... 127-A, மலப்புரம் ரோடு
கூனூர் ... மார்க்கெட்



## இதய மலர்

"முருகின் சிவந்த கழுநீரும்
முதிரா இளைஞர் ஆருயிரும்
திருகிச் செருகும் குழல்மடவீர்"

— கலிங்கத்துப் பரணி.

ஓடையிலே மலர்ந்திருக்கும் சிவந்த கழுநீர் மலரைத் திருகி எடுத்துக் கூந்தலிலே சூடிக் கொள்கிறாள் அந்த நங்கை. ஆனால் மலரை மட்டுமா திருகிச் செருகுகிறாள்? பாவம்! முதிரா அந்த இளைஞனுடைய இளம் மனத்தையும் அல்லவா சேர்த்துத் திருகிச் செருகி விட்டாள், தன் கொண்டையிலே!

கல்கி தீபாவளி மலர் 1955



## “இங்குற்றேன்!”

திருஞான சம்பந்தர் என்ற ஞானச் செல்வரைக் காணவேண்டும் என்றும் ஆசை மிகுதியினால் அப்பர் சுவாமிகள் சீர்காழி நோக்கிச் செல்கிறார். அங்கே பக்தர்கள் புடை சூழ ஞானசம்பந்தர் பல்லக்கிலே வருவது அறிந்து தாமும் அந்தத் திருக் கூட்டத்திலே சென்று கலந்து கொள்கிறார்.

“அப்பர் எங்குற்றார்?” என்று சம்பந்தர் கேட்க, “தேவரீரைத் தாங்கும் பேறு பெற்று இங்குற்றேன்!” என்று பதில் எழுந்தது.

உடனே ஞானசம்பந்தர் அப்பரை அளவற்ற அன்போடு வரவேற்க, இருவரும் பேதமற்ற முறையிலே ஒருவரை ஒருவர் அணைத்து அஞ்சலி செய்து ஆனந்தித்தனர்.

இந்த இரு பெரும் ஆசாரியர்களின் சந்திப்பைச் சித்திரிக்கிறது மேலே உள்ள வர்ண ஓவியம்.

கல்கி தீபாவளி மலர் 1955



## தீன் இலாஹி

எல்லா மதத்தினரும், எல்லாக் கொள்கையினரும், எல்லா மக்களுமே ஒப்புக் கொண்டு எல்லா உள்ளங்களுக்கும் உகப்புத் தரும் வகையில் ஒரு சித்தாந்தத்தை ஸ்தாபிக்க முனைந்தார் அக்பர் சக்கரவர்த்தி.

அறத்திலும், நியாயத்திலும், அன்பிலும் சரி நிகரற்று விளங்கிய இந்த முகலாய மன்னரின் பெருமையைச் சரித்திரம் பேசிப் பேசி மகிழும். கவிஞர்கள் பாடிப் பாடிப் பரவசம் அடைவார்கள். இப்படிப்பட்ட உயர்ந்த சக்கரவர்த்தி 'தீன் இலாஹி' என்ற அந்த உன்னதமான சமரச சித்தாந்தத்தைத் தொடர்பில் உள்ளிட்ட அறிஞர்களின் முன்னிலையிலே பிரகடனப்படுத்தும் காட்சியை வர்ண ஓவியமாகச் சித்திரிக்கிறார் ஓவியர் ராகவன்.

கல்கி தீபாவளி மலர் 1955



வியக்கத் தகுந்த **புதிய** வெளுக்கும் சாதனம்

# துணிகளுக்கு
# கண்ணைப் பறிக்கும் வெண்மையைத்
# தருகிறது

டினோபால் பி வி என் ஓர் உயர்தர வெண்மை தரும் பவுடர். நீலம் போடுவதற்குப் பதிலாக உபயோகிக்கப்படுவது. துணிகளுக்கு இது வரை எப்பொருள் உபயோகிப்பதினாலும் ஏற்படாத, உண்மையில் கண்ணைப் பறிக்கும், வெண்மையைத் தருவது. டினோபால் சிக்கனமானதும் கூட! ஏனெனில் ஒரு தரம் உபயோகிப்பதால் ஏற்படும் வெண்மை 3 அல்லது 4 சலவைகள் வரை நீடித்திருக்கிறது. டினோபால் முதன்முதலாக வீட்டு உபயோகத்திற்கென ஒரு அவுன்ஸ் பிடிக்கும் அழகான பிளாஸ்டிக் புட்டியில் தயாரிக்கப்பட்டுள்ளது. இன்றே ஒரு டினோபால் புட்டி வாங்குங்கள். உங்கள் பருத்தி, பட்டாடைகளில் ஏற்படும் மாறுதல்களைக் கண்டு நீங்கள் ஆனந்திப்பீர்கள்.

குறிப்பு:— முன்பே சோப்பினால் சுத்தம் செய்து அலசிய துணிகளுக்கே டினோபால் பி வி என் உபயோகிக்க வேண்டும்.

எல்லா உயர்ந்த
கெமிஸ்ட்களிடமும் கடைகளிலும் கிடைக்கும்.

# டினோபால்



டினோபால் பி வி என் ஓர் உயர்ந்த வெளுக்கும் சாதனம்!




ஒரு கெய்கி தயாரிப்பு

அமால்கமேடட் கெமிகல்ஸ் & டைஸ்டப்ஸ் கம்பெனி லிமிடெட்,
தபால் பெட்டி நெ. 965, பம்பாய்.

# அன்னை தந்த ஒளி

பெ. தூரன்

"சொக்கப்பா, ஒரு நல்ல அழகான பெண்ணிருக்கிறு, கலியாணம் பண்ணிக்கிறயா!" என்று அவனைக் கேட்காதவர்கள் காட்டுப் பாளையத்தில் இருக்க மாட்டார்கள். ஆண்கள் மட்டுமல்ல; பெண்களுந்தான் கேட்பார்கள். சிறுவர் சிறுமிகளுக்கும் இந்தக் கேள்வியைக் கேட்டு அவனிடம் விடை பெறுவதில் ஒரு மகிழ்ச்சி பிறந்தது.

இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லச் சொக்கப்பனுக்குக் கொஞ்ச நேரம் ஆகும். இரண்டு மூன்று தடவை வற்புறுத்திய பிறகுதான், "எனக்குச் சோறு போடப் பெரிய பண்ணைக்காரர் இருக்கிறுங்கோ—எனக்கு எதுக்குக் கலியாணம்!" என்று ஆழ்ந்து யோசனை செய்து முடிவு கட்டியவன் போலப் பதில் சொல்லுவான். இதே பதிலைத்தான் அவன் ஒவ்வொரு தடவையும் சொல்லுவானென்றாலும் அது பழக்கத்தில்கூடச் சீக்கிரமாக வந்து விடாது. ஆழ்ந்த சிந்தனையின் முடிவு வெளியாவது போல வெகு நேரம் கழித்துத்தான் அது சொக்கப்பன் வாயை விட்டுக் கிளம்பும்.

சொக்கப்பன் பதில் சொல்லும் போது அவன் முகம் ஒரு தனிக் காட்சியாக இருக்கும். அகத்தின் அழகு முகத்தில் தெரியுமல்லவா! அப்படி அவன் முகத்தில் ஒன்றுமே தெரியாது. அவன் முகம் எப்பொழுதும் ஒரே மாதிரி குப்பையண்டின இருட்டறையைப் போல் இருக்கும். மனத்தில் உள்ள உணர்ச்சிகளை யெல்லாம் கண்களாகிய சாளரத்தின் வழியே பார்த்து விடலாம் என்று நினைப்பவர்கள் அவனிடம் வந்தால் ஏமாந்து போவார்கள். அப்படி அவன் கண்களில் ஒருவித ஒளியையும் காண முடியாது.

அதிகம் சொல்லுவானேன்! சொக்கப்பன் ஒரு அதிமந்தன். அவனுக்கு மூளையின் சக்தி வெகு குறைவு. அவனுடைய பிறவிக்கூறு அப்படி. அவனுக்குத் தாய் தந்தையர் யார் என்று ஒருவருக்கும் தெரியாது. அவனுக்கும் தெரியாது. எப்படியோ இருபத்தைந்து வருஷங்களுக்கு முன் ஒரு நாள் காட்டுப் பாளையத்துக்கு அவன் வந்து சேர்ந்தான். அப்பொழுது அவனுக்கு வயது பத்திருக்கலாம். வந்தவன் அங்கேயே தங்கிவிட்டான். காட்டுப் பாளையம் கொங்கு நாட்டிலே ஒரு சிறிய ஊர்.

சொக்கப்பனுக்கு மூளைத் திறமை இல்லையென்றாலும் நல்ல உடம்புக் கட்டு இருந்தது; பண்ணையிலே வேலை செய்வதற்குக் கொஞ்சமும் சளைக்க மாட்டான். அவனுக்கு வேண்டியதெல்லாம் வயிறார உணவுதான்.

சோற்றுக்கு வேலை செய்ய ஒரு ஆள் கிடைத்ததென்று மகிழ்ச்சியோடு காட்டுப் பாளையம் பெரிய பண்ணைக்காரர் அவனைத் தம் வசத்திலேயே வைத்துக் கொண்டார். மற்றவர்களுக்கு இதுபற்றிக் கொஞ்சம் பொறாமைகூட உண்டு.

இரவிலே வேலை யெல்லாம் தீர்ந்த பிறகு காட்டுப் பாளையத்து மக்கள் கிராமச் சாவடியில் உட்கார்ந்து பல விஷயங்களைப்பற்றிப் பேசிக் கொண்டிருப்பார்கள். சொக்கப்பன் சில சமயங்களில் அங்கே வந்து சேருவான். அப்பொழுது பேச்சும் கேலியும் எல்லாம் அவன் மேலே திரும்பி விடும். அவனுக்குப் பெண் தயார் செய்ய எல்லோரும் போட்டி போட்டுக் கொண்டு வருவார்கள். அவனுடைய கலியாணப் பேச்சில் தான் அரட்டை தொடங்கும். அது சலித்துப் போனபின்தான் வேறு பேச்சு.

ஒவ்வொரு சமயத்திலே அவனுடைய தாய் தகப்பன் யாரென்ற ஆராய்ச்சியும் கிளம்பும். ஒரே மூச்சில் பலபேர் அவனை, "உனக்கு அம்மா யாரடா?" என்று கேட்பார்கள். "அம்மா இருக்கட்டும், அப்பன் யாரு?" என்று இன்னும் சிலபேர் கேட்பார்கள். ஏதாவது ஒரு கேள்வியைப் புரிந்து கொண்டு அதற்குப் பதில் கொடுக்கவே சொக்கப்பனுக்கு ரொம்ப நேரம் பிடிக்கும். காதில் விழுந்த விஷயம் இருட்டு நேரத்திலே காட்டு வழியிலே அகப்பட்டது போல அது மூளைக்குப் போவதற்குத் திண்டாடுமோ என்னவோ! அப்படி இருக்க அத்தனை பேரும் ஒரே மூச்சில் கேட்ட கேள்விகளுக்கு அவன் எப்படிப் பதில் கொடுக்கப் போகிறன்!

ஒரு நாள் அவன் இப்படித் தத்தளித்துக் கொண்டிருக்கும் போது ஒருவன், "இல்லடா, சொக்கப்பனைச் சங்கம்புதரிலிருந்து எடுத்து வந்திருப்பார்கள்" என்று தானாகவே கண்டுபிடித்த பதிலைப் போட்டு வைத்தான். வெறும் கேலி என்ற நினைப்பில்தான் அவன் சொன்னான். ஆனால் அவன் கூறியது எல்லோருக்கும் பிடித்து விட்டது. சொக்கப்பனுக்கும் நாளடைவில் அது உண்மையாகவே எப்படியோ அவன் மனத்தில் பதிந்து போயிற்று.

கிராமங்களிலே எத்தனையோ வேண்டாத நாய்களும், பூனைகளும் யாருக்கும் தேவையில்லாத குட்டிகளைப் போட்டு விடும். அந்தக் குட்டிகளைத் தூக்கி முள் நிறைந்த சங்கம் புதரிலே போட்டு விடுவார்கள். பெரிய பண்ணைக்காரரின் ஏவலின்படி சொக்கப்பனே இப்படித் தூக்கி விசி யிருக்கிறுன். அந்தக் குட்டிகளைப் போலத் தானும் சங்கம் புதரிலிருந்து வந்ததாகச் சொல்லுவது அவன் மூளைக்குச் சரியென்று தோன்றியது.

அதுமுதல் அவனை யாராவது, "நீ எப்படிப் பிறந்தாய்?" என்றால் மெதுவாக நினைத்துப் பார்த்து, "சங்கம்புதரில் பிறந்தேன்" என்பான். காட்டுப்பாளையத்து மக்களுக்கு இந்தப் பதிலும் மாருத சிரிப்பைக் கொடுக்கும்.

சொக்கப்பன் பார்ப்பதற்கு மனித வடிவத்திலே இருந்தாலும் எருமை மூளை படைத்தவன் என்பது காட்டுப்பாளையத்திலே பொதுவான அபிப்பிராயம்.

ஆனால் இப்பொழுது அது மாறிவிட்டது. சொக்கப்பனிடத்திலே எல்லோரும் மரியாதை காட்டத் தொடங்கி விட்டார்கள். யாரும் அவனை இப்பொழுது கேலி செய்வதில்லை.

இத்தகைய மாறுதல் ஏற்பட்டதற்கு ஒரு காரணமுண்டு.

ஆப்பக்காரி ராமாத்தாள் என்றால் அந்த வட்டாரத்தில் எல்லோருக்கும் தெரியும். அவள் தயாரிக்கிற ஆப்பம் அத்தனை பெருமை வாய்ந்தது. அதை ஒரு தடவை வாங்கியுண்டவன் அவளை மறப்பதில்லை.

ராமாத்தாள் அரைத்த அரிசி மாவைக் கொண்ட சட்டியும் கூடையுமாகக் காலை ஏழு மணிக்கெல்லாம் சந்தைப்பேட்டை முக்கிற்குப் புறப்பட்டு விடுவாள். காட்டுப் பாளையத்திலிருந்து அந்த இடம் சுமார் அரை மைல் இருக்கும். அங்குதான் அவள் வியாபாரமெல்லாம். சுமார் பத்து மணி வரையிலும் அந்த வழியிலே வருகிறவர்களில் பலர் அவள் உட்கார்ந்திருக்கிற வேப்ப மரத்தடியில் ஆப்பம் வாங்கிச் சாப்பிடுவதற்காகத் தங்குவார்கள். சுறுசுறுப்பாக வியாபாரம் நடக்கும்.

ராமாத்தாளுக்குப் பகலெல்லாம் வேலையிருக்கும். பத்து மணிக்கு ஆப்பக் கடையை முடித்துவிட்டு வீட்டுக்கு வந்ததும் சமையல் செய்யத் தொடங்குவாள். சமைத்தும் சாப்பிட்டதும் வெற்றிலை போட்டுக் கொண்டு கொஞ்ச நேரம் உட்-

காத்திருப்பாள். பிறகு அடுத்தநாள் வியாபாரத்துக்காக மாவரைக்கத் தொடங்கி விடுவாள். வீட்டிலே அவளுக்கு உதவி செய்ய யாரும் கிடையாது. கலியாணம் ஆகி இரண்டு வருஷங்களுக்குள்ளே அவள் விதவையானாள். குழந்தைகளும் இல்லை. அவளைக் கவனிப்பதற்கு வேறு சுற்றத்தாரும் இல்லை.

இப்படி நாள் முழுதும் வேலை செய்தாலும் அவளுக்குச் சலிப்புக் கிடையாது. அவளுடைய இருண்ட வாழ்வை மறக்க வேலைதான் ஒரே வழியாக இருந்தது.

வருஷக் கணக்காக அவள் இப்படி வாழ்க்கை நடத்தி வந்தாள். தள்ளாத வயது வந்த காலத்திலும் அவள் ஆப்பக்



கடையை நிறுத்தவில்லை. ஆனால் காட்டுப் பாதையிலிருந்து சந்தைப்பேட்டைக்கு அரிசி மாச் சட்டி, அடுப்பு முதலிய சாமான்களை எடுத்துக் கொண்டு போவது தான் பெரிய பிரச்னையாகி விட்டது.

ஒருநாள் காலையில் ராமாத்தாள் சட்டியிலுள்ள அரிசி மாவைக் கூடையில் வைத்துத் தூக்கிக் கொண்டு தடுமாறித் தடுமாறிச் சந்தைப் பேட்டைக்குப் போவதைச் சொங்கப்பன் தற்செயலாகப் பார்த்து விட்டான். அவள் கொஞ்ச தூரம் சென்று பாதை வளைவிலே மறையும் வரையில் அவளைப் பார்த்துக் கொண்டு அவன் மௌனமாக நின்று கொண்டிருந்தான். அவன் மனத்திலே என்ன சிந்தனை உதயமாயிற்றோ தெரியாது. திடீரென்று அவளை நோக்கி வேகமாக நடக்கலானான்.

“சொங்கப்பா- ஆப்ப குறி இழுக்குதா!” என்று யாரோ கேட்டார்கள். அது அவன் காதில் விழவில்லை. ஆனால் ஆப்ப குறி அவனை இழுக்கவில்லை என்பது மட்டும் நிச்சயம். ஏனென்றால் அவன் அந்த ஆப்பத்தை ஒருநாள்கூடத் தின்றதில்லை.

சொங்கப்பன் வேகமாக நடந்து ராமாத்தாளுக்கு முன்னாலே சென்று நின்றான். அவள் தலையிலே வைத்திருந்த கூடையை எடுத்துத் தன் தலையிலே வைத்துக் கொண்டான். “நான் கொண்டு வாரேன்” என்று சொல்லி விட்டுச் சந்தைப்பேட்டையை நோக்கி நடக்கலானான்.

ராமாத்தாளுக்கு ஒரே மலைப்பாகப் போய் விட்டது. அவளுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. பேசாமல் கூட நடந்தாள். “எதற்காக இந்த அரைப் பயித்தியம் இப்படித் தூக்கிக் கொண்டு வருகிறது! ஆக்கின கூலிக்கு ஆப்பம் கேட்குமோ! இவன் வயிற்றுக்கு ஆப்பம் கொடுத்தால் ஒரு சட்டி மாவும் காணுதே” என்று இப்படி என்னென்னவோ கேள்விகள் அவள் உள்ளத்தில் எழுந்து குழம்பிக் கொண்டிருந்தன.

சொங்கப்பன் அவளுக்கு உதவி புரிய வந்த காரணத்தை அவளால் அன்று கண்டுபிடிக்க முடியவில்லை. அடுத்த இரண்டு வருஷங்களிலும் கண்டுபிடிக்க முடியவில்லை.

அன்று அவன் சந்தைப்பேட்டை முக்கில் கூடையை இறக்கி வைத்து விட்டு ஒரு க்ஷணங்கூட அங்கு நிற்காமல் குடு குடு வென்று ஓடிப் போய் விட்டான். அன்று தொடங்கியவன் அடுத்த இரண்டு வருஷங்களுக்கும் அதாவது ராமாத்தாள் உயிரோடிருந்தவரை அவன் தினந்தோறும் இந்த உதவியை அவளுக்குச் செய்து வந்தான். ராமாத்தாள் சந்தைப் பேட்டைக்குப் புறப்படுகிற நேரம் பார்த்து அவன் வீட்டுத் திண்ணையிலே வந்து நிற்பான். அவளிடம் ஒன்றும் பேச அவன் விரும்புவதில்லை. கூடையைத் தூக்கித் தலைமேல் வைத்துக் கொண்டு சந்தைப் பேட்டைக்குப் புறப்படுவான். அப்படிச் செய்வதிலே அவனுக்கு ஒரு தனி இன்பம் உண்டாயிற்றென்று தோன்றியது.

ராமாத்தாளுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. அவன் மூளையைப் போலவே அவன் செய்கையும் புதிராக இருந்தது. ஒன்றிரண்டு ஆப்பமாவது தின்றுவிட்டுப் போ என்று சொங்கப்பனிடம் அவள் பல நாட்கள் சொல்லிப் பார்த்தாள். அவன் ஆப்பத்தைக் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை. ஆப்பத்தை விட வேறென்னவோ அவனுக்குத் திருப்தி கொடுத்தது.

“சொங்கப்பா, தினமும் இப்படி எனக்காக வேலை செய்யறியே, இந்தா ஆப்பம்—இன்றைக்காவது ஒன்று சாப்பிடு” என்பாள் ராமாத்தாள்.

சொங்கப்பன் முகத்திலே ஒரு அசட்டுச் சிரிப்பு வழியும். அவ்வளவுதான். அடுத்த நிமிஷம் அவனைக் காண முடியாது.

“டேய், நீ ஆப்பம் வாங்கிக்காவிட்டால் இனிமேல் என் கூடையைத் தொடப்படாது” என்றுகூடக் கிழவி மிரட்டிப் பார்த்தாள். பலிக்கவில்லை. ஆப்பத்துக்காக அவன் வேலை செய்யவில்லை என்று தெளிவாகத் தெரிந்து போய்விட்டது.

கிழவி காசு கொடுத்துப் பார்த்தாள். “வெற்றிலை பாக்காவது போட்டுக்கோ” என்று சொல்லிப் பார்த்தாள். ஒன்றையும் அவன் ஏற்றுக்கொள்ளவில்லை. அவள் பொக்கை வாயிலிருந்து இப்படி வரும் வார்த்தைகளே அவனுக்கு எல்லா இன்பத்தையும் கொடுத்து விட்டனவோ என்னவோ! அந்த வார்த்தைகளை மட்டும் கேட்டுக்கொண்டு வழக்கம்போல் பொருளில்லாத ஒரு அசட்டுச் சிரிப்பைச் சிரித்துவிட்டு அவன் போய் விடுவான்.

அந்தச் சிரிப்பு நாளாக நாளாக ராமாத்தாளுக்கு ஒரு தனி இன்பத்தைக் கொடுக்கத் தொடங்கியது. அவளுடைய உள்ளத்துக்குள்ளே எங்கோ ஒரு மூலையில் மங்கிக்கிடந்த தாய்மை உணர்ச்சியைக் கிளுகிளுக்கச் செய்தது.

ஒன்றிரண்டு நாட்களில் இது ஏற்படவில்லை. இரண்டு வருஷங்களாக நாள் தவறினாலும் சொங்கப்பன் தவறாது செய்து வந்த காரியம் அந்த உணர்ச்சியை உறக்கத்திலிருந்தும் தட்டி எழுப்பியது.

ராமாத்தாள் சொங்கப்பனை ஆப்பம் தின்னும்படி கூப்பிடுவதைக் கூட மறந்து விட்டாள். அப்படி அழைப்பது வீண் என்றும் அவளுக்குத் தெரிந்து விட்டது. ஆனால் அவன் அவளுடைய உள்ளத்திலே ஒட்டிக்கொண்டு விட்டான். சங்கம் புதரிலே பிறந்தவன் என்று அவனை யாராவது கேலியாகப் பேசுவதைக் கேட்டால் அவள் நெஞ்சம் சங்கம்புதர் முள்ளாகக் குத்தத் தொடங்கியது.

“நாய்க் குட்டியைச் சங்கம்புதரிலே போடுறவன் மனிதனா! அவன் மிருகத்துக்கும் கீழானவன்” என்று அவள் அடிக்கடி முணுமுணுப்பாள். அதைக் கேட்டவர்கள் அவள் ஏன் இப்படிப் பிதற்றுகிறாள் என்று ஆச்சரியப்படுவார்கள்.

முன்பெல்லாம் ராமாத்தாள் யந்திரம் போலக் காரியம் செய்து வந்தாள். ஆப்பம் சுடுவதையும் வேறு வேலை செய்வதையும் அவளால் நிறுத்த முடியாது. நிறுத்தினால் உயிர் பாரமாக இருந்தது. ஆனால் இந்தப் புதிய உணர்ச்சி எழுந்த பிறகு அவளுடைய வேலைகளுக்கு ஒரு புதிய பொருளும், அவசியமும் ஏற்பட்டுவிட்டன; அதனால் அவள் வாழ்க்கையிலே இன்பம் காணத் தொடங்கினாள்.

ஆனால் அந்த இன்பம் வெகுநாள் நீடிக்கவில்லை. ராமாத்தாள் திடீரென்று ஒரு நாளிரவு காய்ச்சல் போட்டுப் படுத்து விட்டாள். மறுநாட் காலையில் வழக்கம் போலச் சொக்கப்பன் வாசலில் வந்து வெகுநேரம் காத்திருந்தான். அவன் வீட்டுக்குள் போகிற பழக்கம் இல்லை.

“வீட்டுக்குள்ளே வா” என்று ராமாத்தாள் பலமுறை அழைத்ததுண்டு.

“இங்கேயே நிக்கிறேன். வீட்டுக்குள்ளே இருட்டா இருக்கு” என்பான்.

இருண்ட அறையைக் கண்டால் அவனுக்குப் பயம். ஊர் பேர் அறியாத ஒரு கருப்பைக்குள்ளே அவன் பட்ட துன்பத்தின் விளைவோ என்னவோ இந்த பயம் அவனுக்கு எப்பொழுதும் உண்டு.

சொக்கப்பன் காத்திருந்தான். கிழவி கட்டிலைவிட்டு எழுந்திருக்கவே யில்லை. அவன் போய் விட்டான்.

நான்கு நாட்கள் ராமாத்தாள் எழுந்திருக்கவில்லை. படுத்த படுக்கையாகக் கிடந்தாள். பக்கத்து வீட்டுப் பெண் ஒருத்தி கஞ்சி வைத்துக் கொடுத்தாள். அதைக்கூட அவள் சாப்பிடவில்லை.

நான்கு நாட்களும் காலையிலே சொக்கப்பன் அவள் வீட்டுத் திண்ணைக்கு வருவதிலே தவறவில்லை. நான்காவது நாள் தான் அவளுக்கு உடம்பு சரியில்லை என்று அவனுக்குப் பட்டிருக்கிறது.

ஐந்தாம் நாட்காலையிலே ராமாத்தாள் அடிக்கடி, “சொக்கப்பா, சொக்கப்பா” என்று கூப்பிட்டுக் கொண்டிருந்தாள். அவன் திண்ணைக்கு வந்ததை அறிந்ததும் மெதுவாகக் கட்டிலை விட்டு இறங்கி வெளியே வந்தாள். கஞ்சி கூடக் குடிக்காமல் கிடந்ததால் கால்கள் தள்ளாடின; தலை சுற்றியது. அவள் அப்படியே மயக்கம் போட்டுக் கதவின் மேல் சாய்ந்தாள்.

சொக்கப்பன் அவளைத் தூக்கிக் கொண்டு போய்க் கட்டிலில் படுக்க வைத்தான். கொதிக்கும் அவளுடைய உடம்பின் பரிசம் அவனுக்குச் சொல்ல முடியாத ஏதோ ஒரு உணர்ச்சியைக் கொடுத்தது. தான் அவளைத் தூக்கிச் செல்வதாக அவன் உணரவில்லை. எட்டு மாதக் குழந்தையாகத் தன்னை அவள் தூக்கிப் போவதாக அவனுடைய அதிமந்த மூளையில் பட்டது.

அன்று அவன் ராமாத்தாளை விட்டுப் பிரியவில்லை. பெரிய பண்ணைக்காரரையும் தனது வயிற்றையும் மறந்தான்.

ராமாத்தாள் கண் விழித்துப் பார்க்கிற போது, அவன் அவளுடைய காலருகே உட்கார்ந்து கொண்டிருந்தான்.

“சொக்கப்பா, அதோ அந்தப் பானையிலே அரிசி இருக்குது. ஒரு படி எடுத்துத் தண்ணியிலே ஊறப் போடு” என்று மெதுவாகச் சொன்னாள் ராமாத்தாள்.

மறு நாள் கூடை சுமக்கலாம் என்ற நினைப்போடு சொக்கப்பன் அரிசியை ஊற வைத்தான். மாலையிலே அதை ஆட்டுக் கல்லில் போட்டு ராமாத்தாள் சொல்லியவாறு பக்குவமாக அரைத்தான். அரிசி மாவின் பக்குவத்தைப் பற்றி அன்று ராமாத்தாள் தனிக் கவனம் செலுத்தினாள். ஐந்து முறை ஆட்டுக் கல்லிலிருந்து கொஞ்சம் மாவை எடுத்து வரச் சொல்லி விரல்களிலே தொட்டுப் பார்த்துக் கொண்டாள்.

மறுநாட் காலையில் ஐந்து மணிக்கே ராமாத்தாள் சொக்கப்பனை எழுப்பினாள்.

“அந்த அடுப்பையும் சட்டியையும் இப்படிக் கட்டிலுக்குப் பக்கத்திலே கொண்டு வா—என்னால் அங்கே நடக்க முடியாது” என்றாள் அவள்.

சொக்கப்பன் கட்டிலுக்குப் பக்கத்தில் அடுப்பு மூட்டினான். அவள் சொல்லுகிற படியெல்லாம் சிறு குழந்தையைப் போல உற்சாகமாக ஓடியாடி வேலை செய்தான். “நானே ஆப்பம் சுடட்டுமா!” என்று அவன் கேட்டான்.

“வேண்டாம், சொக்கப்பா, இன்று ஒரு நாளைக்காவது என் கையாலே சுட்ட ஆப்பத்தை நீ சாப்பிடணும். அது ஒன்று



தான் எனக்கு இப்போ ஆசை” என்று அவள் கொஞ்சிய குரலிலே சொன்னாள்.

“சரியம்மா” என்றான் சொக்கப்பன்.

அம்மா என்று எதிர்பாராது வந்த அந்தச் சொல் இரண்டு பேரையும் அமிழ்தக் கடலிலே மூழ்கி விட்டது.

சொக்கப்பன் ஆப்பத்தைத் தனது இயல்பான பசிக்கேற்றவாறு சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது ராமாத்தாள் அவன் முகத்தையும் தலையையும் கையாலே தடவிக் கொண்டிருந்தாள்.

சொக்கப்பன் சாப்பிட்டு முடித்ததும் அவனைத் தன் அருகிலே கட்டிலின் மேலேயே உட்காரும்படி ராமாத்தாள் சொன்னாள். அவனும் உட்கார்ந்தான்.

“சொக்கப்பா, அதோ அந்த மூலையிலே பெரிய பிடா இருக்குது பார்த்தாயா? அதுக்குக் கீழே இரண்டாயிரம் ரூபாய் புதைச்சு வெச்சிருக்கிறேன். நீ அதை எடுத்துக்கோ. யாருக்கும் கொடுத்துவிடாதே!” என்றாள் அவள்.

“ரண்டாயிரமா!” என்று சொக்கப்பன் ஒன்றும் புரியாமல் கேட்டான்.

“ஆமாம், இந்த நாப்பது வருஷமா ஆப்பஞ் சுட்டுச் சம்பாதிச்ச மிச்சம்—எல்லாம் உனக்குத்தான். அதை வைத்து ஒரு கலியாணம் பண்ணிக்கிட்டு நீ சேமமா பிள்ளை குட்டிகளோடு வாழ வேணும்” என்றாள்.

சொக்கப்பனுக்கு விஷயம் நன்றாக விளங்கவில்லை. இருந்தாலும் தன் நன்மைக்காக ஏதேதோ சொல்லுகிறாள் என்று உணர்ந்து கொண்டிருந்தான்.

“அம்மா, எனக்கு என்னத்துக்கு இப்போ ஆப்பம் சுட்டுப் போட்டாய்!” என்று சொக்கப்பன் குழந்தையைப் போலக் கேட்டான்.

“என் கையாலே உனக்கு ஒரு நாள்கூட சாப்பாடு போடாது போனால் எனக்கு மோட்சம் கிடைக்குமா? நீதானே எனக்கு மோட்சம் கொடுக்க வந்திருக்கிறாய்!” என்று அவள் பூரிப்போடு கூறினாள். அவள் முகத்திலே என்றுமில்லாத ஆனந்தம் தாண்டவமாடியது.

சொக்கப்பன் அவள் முகத்தை ஆச்சரியத்தோடு பார்த்துக் கொண்டே இருந்தான். ராமாத்தாள் அப்படியே உறங்கி விட்டாள். நிறைவும் அமைதியும் அவள் முகத்திலே தோன்றின.

அவள் மறுபடியும் எழுந்திருக்கவே இல்லை. சொக்கப்பன் அன்றுதான் துக்கம் என்பதை நன்றாக உணர்ந்து கொண்டான். சங்கம் புதரிலே கிடக்கும் தந்தை தாயற்ற பூனைக் குட்டியைப் போல அம்மா, அப்பா என்று அலறினான்.

ராமாத்தாள் விரும்பியவாறு சொக்கப்பன் அந்த வீட்டிலேயே ரொம்ப நாள் வசிக்கவில்லை. அவள் இறந்த ஒரு வாரம் வரையிலும்தான் அவன் அங்கிருந்தான். அதற்குள் ராமாத்தாள் அவனுக்கு நிறைய பணம் சேர்த்து வைத்து விட்டுப் போயிருக்கிறாள் என்கிற விஷயம் ஊரெல்லாம் எப்படியோ பரவி விட்டது.

அந்த விஷயம் வெளியானதற்குச் சொக்கப்பனேதான் காரணம். அவன் தனக்கு ஆறுதல் கூற வந்தவர்களில் ஒன்றிரண்டு பேரிடம் அந்தப் பணத்தைக் கொண்டு ராமாத்தாளுக்கு மோட்சம் கிடைப்பதற்கு என்ன செய்யலாம் என்று மெதுவாகக் கேட்டுக் கொண்டிருந்தான். அதிலிருந்து விஷயம் வெளியாகி விட்டது.

அவனிடம் இப்பொழுது பணம் நிறைய இருப்பதாக எங்கும் பேச்சு. சில பேர் உண்மையாகவே பெண் கொடுக்கவும் இப்பொழுது முன் வந்தார்கள். “சொக்கப்பா, என் பெண்ணைக் கட்டிக் கொள். நீயே தனியாக இருந்தால் உனக்கு யார் சமையல் செய்து போடுவார்கள்!” என்று கூறினார்கள்.

சொக்கப்பனுக்குத் தன்னைப் பற்றிய நினைப்பே இல்லை. கிராமத்திலே யாராவது இறந்து போனால் அந்த வீட்டில் பல நாட்களுக்குச் சமையல் நடக்காது. அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் அந்த வீட்டாருக்கு உணவு தயாரித்துக் கொண்டு வந்து கொடுப்பார்கள். அந்தமாதிரி யாராவது கொண்டுவரும் உணவை ஒரு வேளை உண்டும் உண்ணாமலும் சொக்கப்பன் ஆழ்ந்த யோசனையிலிருந்தான். ராமாத்தாளுக்கும் புண்ணியம் சம்பாதிக்க வேண்டும் என்ற ஒரே ஆசை அவனைப் பிடித்துக் கொண்டது.

மோட்சம் எப்படிக் கிடைக்கும் என்று பல பேரிடம் கேட்டுப் பார்த்தான். ஒருவருக்கும் அதற்குப் பதில் கூறத் தெரிய

## பெரிய மனிதரைப் பார்த்துத் திரும்பினர்!














யில்லை. யாரோ ஒருவர், "மோட்சம் எப்படிக் கிடைக்கும்! சாமி கொடுத்தாத்தான் கிடைக்கும். சாமி மனசு வெச்சா நடக்கும்" என்று சொன்னார். அவரிடம் திருப்பித் திருப்பி அவன் என்னென்னவோ கேட்டான். அதற்கு மேலே சொல்ல அவருக்குத் தெரியவில்லை.

ஆனால் சொங்கப்பனுக்கு அறுவடையில் தோன்றாத ஒரு உபாயம் கிடைத்தது. ராமாத்தாள் இறந்த ஏழாவது நாள் மாலை அவன் சந்தைப்பேட்டைக்குச் சற்றுத் தள்ளியிருந்த கோயிலுக்குப் போனான்.

கோயில் அர்ச்சகரிடம், "பணம் கொடுத்தா சாமி மோட்சம் கொடுப்பாரா!" என்று கேட்டான்.

"கோயிலுக்குத் தர்மம் பண்ணினால் புண்ணியமுண்டு" என்றார் அர்ச்சகர்.

"மோட்சம் கிடைக்குமா சொல்லுங்கோ!" என்று அந்தக் கேள்வியையே திருப்பித் திருப்பிக் கேட்டான்.

சொங்கப்பனைப் பற்றி முன்பே அர்ச்சகர் கேள்விப்பட்டிருக்கிறார். அவனிடத்திலே அவருக்கு அனுதாபம் பிறந்தது. மெதுவாக அவனைப் பல கேள்விகள் கேட்டு அவனுடைய ஆசையை அறிந்து கொண்டார்.

"சொங்கப்பா, இந்த சிவன் கோயிலிலே அம்பாள் சந்நிதியிலே திருப்பணி செய்ய வேண்டியிருக்கிறது. அதற்குத்தான் அதோ அந்த உண்டி வைத்திருக்கிறார்கள். அது நல்ல காரியம். அதற்குத் தருமம் பண்ணினால் மோட்சமுண்டு" என்று விளக்கிச் சொன்னார்.

"யாருக்கு மோட்சம் வரும்! பணத்தைச் சம்பாதிச்சவளுக்கா! அல்லது எனக்கா!" என்று சந்தேகத்துடன் கேட்டான் சொங்கப்பன்.

"கஷ்டப்பட்டுச் சம்பாதிக்கிறவர்களுக்குப் புண்ணியம் உண்டு. உனக்கும் புண்ணியந்தான்" என்றார் அர்ச்சகர்.

"எனக்கு வேண்டாம்; எல்லாத்தையும் அம்மாளுக்கே சாமி கொடுக்கட்டும்" என்று சொல்லிக் கொண்டே அவன் வேகமாக வீட்டை நோக்கி நடந்தான். தனக்கென்று ராமாத்தாள் கொடுத்த இரண்டாயிரம் ரூபாயையும் கொண்டு வந்து கோயில் உண்டியில் போட்டுவிட்டு நிம்மதியாக வீடு திரும்பினான்.

அன்றிரவு பன்னிரண்டு மணிக்கு ஒரு எதிர்பாராத சம்பவம் நடந்தது. யாரோ நான்கு தடியர்கள் சொங்கப்பனிருந்த வீட்டுக்குள் நுழைந்தார்கள். வீட்டைச் சோதனை போட்டார்கள். "பணம் எங்கே!" என்று அவனை அதட்டிக் கேட்டார்கள்.

"பணம் சாமிக்குப் போயிட்டுது" என்றான் சொங்கப்பன்.

"டேய் பொய்யா பேசறே! பேசாமல் எல்லாத்தையும் கொடுத்துவிடு—இல்லாவிட்டால் பாத்துக்கோ" என்று கைத் தடியை ஓங்கினார்கள்.

"ராமாத்தாளுக்கு மோட்சம் வாண்டாமா! எனக்கு எதுக்குப் பணம்!" என்று அவன் அதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்தான்.

திருடர்களுக்குக் கோபம் வந்து விட்டது. அவனைக் கட்டிலோடு சேர்த்துக் கட்டி வைத்து அடியடி யென்று அடித்து நொறுக்கி விட்டார்கள்.

மறுநாள் காலையில் உயிருக்கு மன்றாடிக் கொண்டிருக்கும் நிலையில் சொங்கப்பனை ஊரார் கண்டார்கள். அவன் விலா வெலும்பு இரண்டு முறிந்திருந்தன. மேலெல்லாம் வீங்கி விருந்தது. பெரிய பண்ணைக்காரர் அவனுக்கு வேண்டிய சிகிச்சைகளையெல்லாம் செய்ய ஏற்பாடு செய்ததோடு அவனைப் பாதுகாக்கவும் முன் வந்தார்.

சொங்கப்பன் குணமாகி எழுந்தான். ஆனால் அவனால் நிமிர்ந்து நடக்க முடியவில்லை. முதுகு எலும்பில் ஏதோ பழுது ஏற்பட்டு அவன் ஒரு மாதிரி கூனலும் விட்டான். ஓடியாடி வேலை செய்யும் சக்தியும் போய் விட்டது. ஆனால் அதற்காக அவன் கவலைப் பட்டதாகத் தெரியவில்லை. அவனிடத்திலே ஏதோ ஒரு புது மாறுதல் காணப்பட்டது. அவன் வாழ்வின் வேலைகளையெல்லாம் முடித்து விட்டவனாகத் தோன்றினான். அமானுஷ்யமான ஒரு அமைதி அவனிடம் குடிகொண்டிருந்தது. மாலை வேளையிலே அம்பாள் சந்நிதியில் பூஜை மணி ஓசை கேட்கும்போது அவன் கண்களிலே ஒரு பரவச ஒளி நிறைந்திருக்கும்.

அதைக் கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். கொஞ்சம் கொஞ்சமாக அவனிடமிருந்து நடந்த விஷயத்தைத் தெரிந்து கொண்டார்கள். மாலை வேளையில் அவன் கண்களைப் பார்ப்பதற்கென்றே பலபேர் அவனுடன் பேசக்கொடுக்க வருவார்கள்.

---

தீபாவளி  வாழ்த்துகள்

| | | | |
|---|---|---|---|
| அதிகாரம் பெற்ற மூலதனம் | ... | ரூ. | 1,00,00,000 |
| வாக்களிக்கப்பட்ட மூலதனம் | ... | ரூ. | 72,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | ... | ரூ. | 57,80,000 |
| ரிசர்வ் மற்றும் இதர நிதிகள் | ... | ரூ. | 76,50,000 |
| டிபாசிட்டுகள் (31-12-54ல் உள்ளபடி) | ... | ரூ. | 24·85 கோடி |

என். கோபால அய்யர்  காரியதரிசி

# இந்தியன் பாங்க் லிமிடெட்

*தலைமை ஆபீஸ் ............... மதராஸ்.*



**INDIA'S**  **BEST**

*Printing Inks for all processes*



## GANGES PRINTING INK FACTORY LTD.

FACTORIES AT

CALCUTTA :: BOMBAY :: MADRAS

# சாந்தலிங்கம்



ஸோமாஸ்

ஆறுமுகத்தின் வீடு ஒரே குதூகலத்தில் ஆழ்ந்திருந்தது. குழந்தைகளெல்லோரும் ஒரே உற்சாகமாக விளையாடிக் கொண்டிருந்தார்கள். இந்த வருஷம் தீபாவளிக்கு அவன் வீட்டில் எல்லோருக்கும் புது ஆடை எடுத்திருந்தார்கள். ஒரு பெரிய பெட்டி நிறையப் பட்டாசு, வாணம், மத்தாப்பு எல்லாம் சிவகாசியிலிருந்து நேரே வந்து இறங்கியிருந்தன. இதற்குமுன் எந்த வருஷமும் அவன் வீட்டில் தீபாவளி இவ்வளவு அமர்க்களமாயிருந்ததில்லை.

ஆறுமுகம் வீட்டு வாசலில் அவன் தோழர்கள் குழுமியிருந்தனர். எல்லோரும் ஆறுமுகத்தின் தகப்பன் சாந்தலிங்கத்தைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தனர். அவன் இறந்து இப்பொழுது ஒரு வருஷமாகி விட்டது.

“சாந்தலிங்கம் எவ்வளவு நல்லவன் பார்த்தாயா! தள்ளாத வயசிலே ஓட்டமாக ஓடித் திருடனைக் கையும் களவுமாகப் பிடித்துச் சண்டை போட்டுத் துரத்தியடித்திருக்கிறானே, என்ன சாமர்த்தியம்!”

“ஆமாம் அந்தச் சண்டையில் அவன் பிழைக்காமற் போனதுதான் ரொம்பவும் வருத்தமாயிருக்கிறது. பாவம்!”

“ஆமாம். ஆனால் வயசானவன். எஜமானவிசுவாசம் காரணமாகச் சாவுக்கும் அஞ்சாது அந்த நடு நிசியில் திருடனை எதிர்த்துப் போராடி அல்லவா உயிரை விட்டிருக்கிறான்! அதுவும் அவன் இறந்து கிடந்ததைப் பார்த்தவர்கள் ரொம்பவும் உருக்கமாய்ப் பேசுகிறார்கள்.”

“ஆமாம். நான் என் கண்களால் அதை நேரில் பார்த்தேன். பக்கத்தில் அரிக்கேன் ராந்தல். ரஸ்தாவில் சாந்தலிங்கம் குப்புறக் கீழே விழுந்து கிடந்தான். மண்டையில் பலத்த அடி. திருடன் கொண்டு போன நகை மூட்டையை அவன் தன் உயிர் பிரிந்த தருவாயிலும் கூடக் கை சோரவிடவில்லை. உயிரைக் கொடுத்து எஜமானனின் சொத்தைக் காப்பாற்றியிருக்கிறான். அதைப் பாராட்டவேண்டியதுதானே!”

“சாந்தலிங்கத்தின் தீரத்தையும் எஜமான விசுவாசத்தையும் பாராட்டும் முறையில்தான் அவன் எஜமானர் அவன் குடும்பத்துக்கு இரண்டாயிரம் ரூபாய் வெகுமதியளித்திருக்கிறாரே! அது பெரிய உதவியில்லையா!”

மேற்படி பேச்சுக்களைக் கேட்க, கேட்க ஆறுமுகத்துக்கு இருதயமே வெடித்து விடும் போலாகி விட்டது. கண்களிலிருந்து கண்ணீர் ஆறாகப் பெருக்கெடுத்தோடியது. “அப்பாவைப் பற்றி இத்தனை தூரம் என் தோழர்கள் புகழ்கிறார்களே! அந்த அளவுக்கு நான் நல்ல பெயர் எடுக்க முடியுமா! நாற்பது வருஷங்களாக உண்மையுடனும் எஜமான விசுவாசத்துடனும் உழைத்துக் கடைசியில் அந்த எஜமானனுடைய சொத்தைத் திருடனிடமிருந்து மீட்பதற்காக அவனுடன் தைரியமாக நள்ளிரவில் சண்டையிட்டு உயிர் துறந்த உத்தமரல்லவா அப்பா! அவர் எங்கே! நான் எங்கே!”

இந்த மாதிரி அபூர்வமான எண்ணங்களின் சுழற்சியில் சிக்கித்தான் அவன் தன்னையே மறந்திருந்தான்.

ஆறுமுகத்தின் தகப்பன் சாந்தலிங்கம் தன் மகன் படிக்கவேண்டும், படித்து முன்னுக்கு வந்து அறிவாளியாகி நல்ல கௌரவமான உத்தியோகம் வகிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டான். அதனால், தன் சிரமத்தைத் துளியும் பொருட்படுத்தாமல் அவனை மிகவும் சிரத்தையோடு படிக்க வைத்தான்.

சாந்தலிங்கம், அவன் தாய், மனைவி, மூத்தமகன் ஆறுமுகம், அடுத்தவன் சுந்தரம், மகள் பொன்னி ஆகியவர்கள் அடங்கிய பெரிய குடும்பத்தை அவனுக்குக் கிடைத்த சொற்ப சம்பளத்தில் கௌரவமாக நடத்தியாக வேண்டும்.

சாந்தலிங்கம், அடிக்கடி தன் மனைவியிடம், “ஆறுமுகம் படிச்சு முன்னுக்கு வந்து ஒருநல்ல வேலைக்குப் போய் விட்டானால் நமக்கு அப்புறம் ஏது கஷ்டம்! அதுவரையில் நாமெல்லோரும் கஷ்டத்தைப் பகிர்ந்து கொள்ள வேண்டியது தான்!” என்று கூறுவான்.

தகப்பன் சொன்னதை நினைத்துப் பார்ப்பதே இப்பொழுது ஆறுமுகத்துக்குக் கஷ்டமாயிருந்தது. துக்கம் தொண்டையை அடைத்தது. தகப்பனை இழந்த துக்கத்திலும் ஆறுமுகம் தங்களை யெல்லாம் விட்டுப் பிரிந்து தனியே யிருந்து கண்ணீர் வடிப்பதைக் கண்டு அவன் தோழர்கள் மிகவும் மனம் வருந்தினர்.

“தீபாவளிப் பண்டிகையும் அதுவுமாக நீ ஏன் அப்பா கண்ணீர் விடுகிறாய்! உன்



தகப்பனார் இறந்த நல்ல குணத்துக்கும் நேர்மையான நடத்தைக்கும் ஊர் முழுவதும் பாராட்டும்படியான கீர்த்தியைப் பெற்று விட்டார். எல்லோரையும்போல நோயால் வருந்திப் பாயும் படுக்கையுமாகக் கிடக்காமல், தன் கடமையைச் செய்து முடித்து உயிர் துறந்திருக்கிறார். ஆகவே நீ அவரை நினைத்து வருந்த வேண்டிய அவசியமே இல்லை. அவருடைய எஜமான விசுவாசமும் தன்னலமற்ற சேவையும் உன் குடும்பத்தையே காப்பாற்றும். நீ அவர் பெயருக்கு இழுக்கு வராமல் எதிலும் நேர்மையாக நடந்துகொள்" என்று ஊருக்கு நாட்டாண்மைக்காரர் ஆறுமுகத்துக்கு மிகவும் பரிவோடு தேறுதல் சொன்னார்.

ஆறுமுகத்துக்கு அவர் சொன்னதைக் கேட்கத் துக்கம் பொங்கியது.

அவன் தகப்பன் அவனைப் பற்றிச் சொல்லி வருத்தப்பட்டுக் கொண்டிருந்தது அவன் நினைவுக்கு வந்தது.

"ஆறுமுகத்தின் போக்குத்தான் எனக்குப் பிடிபடவே மாட்டேன் என்கிறது. காலிப் பயல்களோடெல்லாம் சகவாசம் வைத்துக் கொண்டிருக்கிறான். சொன்ன பேச்சைக் கேட்பதில்லை. மனசுக்கு ரொம்ப வேதனையாயிருக்கிறது. இவன் தலையெடுத்து இந்தக் குடும்பத்தை எப்படிக் காப்பாற்றப் போகிறானோ! இவன் நாலு எழுத்துப் படிக்கக் கௌரவமாக நாலு பேர்களுக்கு எதிரே காலந் தள்ளினாலும் அது போதும் எனக்கு..." என்று சொல்லிக்கொண்டே இருப்பான் அவன் தகப்பன் சாந்தலிங்கம்.

அவன் சொன்னது அவ்வளவும் உண்மை. ஆறுமுகத்தைப் போல் பொறுப்பற்றவன் எவனுமே இருக்க மாட்டான். பள்ளிக்கூடத்துக்கு ஒழுங்காகப் போக மாட்டான். வீட்டிலும் புத்தகத்தைத் தொட மாட்டான். முரட்டுப் பயல்களுடன் சேர்ந்து கொண்டு சதா ஊர் சுற்றுவதும் உடம்பை வளர்ப்பதுமாக இருந்தான்.

ஆறுமுகம் சாந்தலிங்கத்தின் பேச்சைக் கேட்பதேயில்லை. தகப்பன் எது சொன்னாலும் அவனுக்கு லட்சியமே கிடையாது. மகனது இந்த அலட்சிய புத்தி காரணமாகச் சாந்தலிங்கம் அவனோடு முகம் கொடுத்துப் பேசுவதே கிடையாது. ஆறுமுகம் கூடிய வரையில் தந்தையின் கண்ணில் படாமல் இருந்து வந்தான்.

இதுவரையில் அவன் வீணே செலவிட்ட காலத்தை எண்ணிப் பார்க்கவே ஆறுமுகத்துக்கு அச்சமாயிருந்தது. அவன் மனச்சாட்சி அவனை இடித்துரைத்தது.

அவன் அப்படியே இடிந்து போய் உட்கார்ந்து கண்ணீர் விடுவதைப் பார்த்த அவன் தோழர்களே அசந்து போய் விட்டனர். "வீர எண்ணமும் நெஞ்சுரமும் கொண்ட ஆறுமுகமா இப்படிக் கோழையாகிக் கண்ணீர் வடிக்கிறான்! தந்தையின் மறைவு எத்தகைய புரட்சிகரமான மாறுதலை அவனிடம் புகுத்தி விட்டது!" என்றெல்லாம் பேசிக்கொண்டு வியப்படைந்தனர்.

* * *

சாந்தலிங்கம் நாற்பது வருஷங்களுக்குக் குறையாமல் அந்தப் பிரபல நகை வியாபாரியின் வீட்டில் காவற்காரனாக வேலை பார்த்து வந்தான். சாந்தலிங்கத்தைப் போன்ற உண்மை ஊழியன் கிடைப்பது அரிது என்னும் நல்ல பெயர் முதலிலேயே அவனுக்குக் கிடைத்து விட்டது. நகை வியாபாரி, சாந்தலிங்கத்தைப் பெரிதும் நம்பியிருந்தார்.

இத்தகைய உத்தமனுக்கு எப்படியோ, ஆறுமுகம் மகனாகப் பிறந்தான். போகப் போகத் திருந்தி விடுவான் தன் மகன் என்ற ஒரு நம்பிக்கையில் சாந்தலிங்கம் பொறுமையோடு தன் வேலையைக் கவனித்து வந்தான்.

அன்று இரவு சாந்தலிங்கத்தின் எஜமானர் ஊரில் இல்லை. வீட்டில் உள்ளவர்களை ஜாக்கிரதையாயிருக்கும்படி சொல்லி விட்டு, சாந்தலிங்கத்துக்கும் மற்ற வேலைக்காரர்களுக்கும் ஒரு தடவைக்குப் பத்துத் தடவையாக எச்சரிக்கை செய்துவிட்டு ஊருக்குப் போனார் அந்த வியாபாரி.

சாந்தலிங்கம் எப்பொழுதும் லக்ஷ்மணன் வம்சத்தைச் சேர்ந்தவன். கண் இமைக்காமல் சர்வ ஜாக்கிரதையாயிருப்பான். இப்பொழுது எஜமான் ஊரில் இல்லாத சமயம். ஆகவே சர்வ ஜாக்கிரதையுடன் வாசல் 'கேட்'டண்டை காவலிருந்தான். இரவு மூன்று மணி இருக்கும். வீட்டுக்குள் ஏதோ அரவம் கேட்டது. சாந்தலிங்கம் சந்தேகத்துடன் உள்ளே ஓடினான். அந்தச் சமயம் எதிரே ஒருவன் ஓடி வந்து சாந்தலிங்கத்தைத் தள்ளிக் கொண்டு ஓட்டம் பிடித்தான். அவனைத் தொடர்ந்து சாந்தலிங்கமும் ஓடினான். வாசல் கேட்டைத் தாண்டிக் குதித்துத் திருடன் ஓடுவதைக் கண்ட சாந்தலிங்கம், தானும் தாண்டிக் குதித்து அவனைத் தொடர்ந்தான். திருடனைச் சாந்தலிங்கம் நெருங்கிப் பிடித்த சமயத்தில், சற்றும் எதிர்பாராத விதமாக அந்த முரடன், சாந்தலிங்கத்தின் முகத்தில் ஒரு குத்து விட்டு அவனை அப்பால் தள்ளிவிட்டு ஓட்டம் பிடித்தான். சாந்தலிங்கம் அரிக்கேன் லாந்தலைப் போட்டுக் கொண்டு கீழே 'மடேர்' என்று விழுந்து விட்டான்.

"அம்மா!" என்று முனகிக் கொண்டு விழுந்த சாந்தலிங்கத்தின் குரல் திருடனைத் திகைத்து நிற்கச் செய்தது. உடனே பின் வாங்கி ஓடி, உருண்டு கிடந்த அரிக்கேன் விளக்கை எடுத்து அதன் புகையுண்ட மங்கிய வெளிச்சத்தில் சாந்தலிங்கத்தின் முகத்தைப் பார்த்தான்.

அவ்வளவுதான்! அவன் இப்படி நிகழுமென்று கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. ஒரு நிமிஷம் அவன் உடம்பு முழுவதும் நடுங்கிக் 'குப்'பென்று வியர்த்துக் கொட்டியது. போயும் போயும் அப்பாவிக் கிழவனிடம் தன் கை வரிசையைக் காட்ட நேருமென்று அவன் கொஞ்சமும் நினைக்கவில்லை. மேலும் திருடன் கையில் நகை மூட்டையுடன் பங்களாவை விட்டு வெளிப்பட்டு ஓடியபோது, அவனது வேகத்துக்குச் சிறிதும் சளைக்காமல் பின்னாலேயே துரத்திக் கொண்டு வந்தவன், கிழக் காவலாளி சாந்தலிங்கம் என்று அவன் சிறிதும் எதிர்பார்க்கவேயில்லை. தனக்குச் சமமான திடகாத்திரமுள்ள ஒருவன் என்றுதான் நினைத்தான். சாந்தலிங்கம் அத்தனை தூரம் நேர்மையான கடமை புணர்ச்சி உள்ளவனாக இருப்பான் என்று அவன் எதிர்பார்க்கவில்லை.

இப்பொழுது அவனுக்கெதிரில் [illegible] சாந்தலிங்கம் அடிபட்டுக் கிடப்பதைக் கண்ட அவன் மனம் ரொம்பவும் நெகிழ்ந்து விட்டது. தான் பேரபாயம் செய்துவிட்ட ஒரு கோழைத்தனமான காரியத்துக்குத் தகுந்த முறையில் பிராயச் சித்தம் செய்ய வேண்டும் என்று அவன் மனம் துடிதுடித்தது.

“இந்தத் தள்ளாத வயதிலும் தன் கடமையை மறக்காமல், தைரியமாகச் செய்ய முன் வந்தவருக்கு ஏமாற்றத்தைக் கொடுப்பது பாவம். ஆம், அப்படித்தான் செய்ய வேண்டும்” என்று தனக்குச் சொல்லிக் கொண்டு கீழே விழுந்துகிடந்த சாந்தலிங்கத்தின் கையை மெதுவாகத் தூக்கி அதில் தான் திருடிக்கொண்டு வந்த நகை மூட்டையை மூட்டிக் கொடுத்தான். இனியும் தான் அங்கே இருப்பது எத்தனை விபரீதத்துக்கு ஏதுவாகும் என்பது திருடனுக்குத் தெரிந்ததுதான். மௌனமாக அவர் அருகில் அமர்ந்து அவரைத் தொட்டுப் பார்த்தான். இலேசாக மூச்சு ஓடிக் கொண்டிருந்தது. சரி, தெய்வம் விட்ட வழியாகிறது என்று பரபரப்புடன் எழுந்தான். சூரிய உதயத்துக்குள், போலீஸ் தோன்றுவதற்குள் திருடன் அங்கிருந்து மறைந்துவிட வேண்டுமல்லவா!

அடுத்த கணம் திருடன் அங்கிருந்து ஓடி மறைந்து விட்டான்.

சற்று நேரத்துக்கெல்லாம், சாந்தலிங்கம் வேலை பார்த்த நகை வியாபாரியின் வீட்டில் அல்லோல கல்லோலப் பட்டது. பீரோ திறக்கப்பட்டு நகைகள் களவாடப்பட்டிருப்பதும், எல்லாம் தாறுமாறாகக் கிடப்பதும் முதலில் சமையற்காரன் பார்த்துக் கூக்குரலிட, பிறகு எல்லோரும் பிரஸ்தாபிக்கலாயினர். பிறகு எல்லோரும் சாந்தலிங்கத்தைத் தேடினார்கள்.

பொழுது புலர்ந்தது. சாந்தலிங்கம் விழுந்து கிடந்த இடத்தில் ஜனங்கள் பெருந் திரளாகக் கூடி விட்டனர். பிறகு இந்த விவரமெல்லாம் நகை வியாபாரியின் பங்களாவுக்கு எட்டியது. அப்பொழுது தான் வெளியிலிருந்து திரும்பிய நகை வியாபாரிக்குத் தன் வீட்டில் நடந்த கொள்ளையைப் பற்றிக் கேள்வியுற்றதும் உடம்பெல்லாம் பதற ஆரம்பித்தது.

பெரிய கூட்டமாக ஜனங்கள் புடைசூழ நகை வியாபாரி, சாந்தலிங்கம் கிடந்த இடத்துக்கு வந்து சேர்ந்தார். அதற்குள் போலீஸாருக்குத் தகவல் எட்டி, அங்கு ‘பாரா’ போட ஆரம்பித்தனர்.

சாந்தலிங்கத்தின் கையில் இருந்த பெரிய மூட்டையைப் போலீஸ் ஸப்-இன்ஸ்பெக்டர் [illegible] அவிழ்த்துப் பார்த்ததில், [illegible] போன அவ்வளவு நகைகளும் அப்படியே இருந்தன. நகை வியாபாரிக்குப் ‘போன உயிர் மீண்டும்’ [illegible] இருந்தது.

சாந்தலிங்கத்தின் உயிர் எப்போதோ பிரிந்து [illegible] விட்டது. [illegible] கடமையில் கண்ணுயிருந்த சாந்தலிங்கத்தின் அருமை [illegible] இல்லை. பணக்காரரான நகை வியாபாரியின் கண்களில் கூடக் கண்ணீர் வழிந்தது. தமது பொருள் ஒரு அரும்பு கூடப் போகாமல் அப்படியே திரும்பக் கிடைத்ததில் அவருக்கு அபரிமிதமான சந்தோஷம்.

பிறகு விஷயம் சாந்தலிங்கத்தின் குடும்பத்தாருக்கு அறிவிக்கப்பட்டது. ஒரு பெரிய மனிதருக்குரிய சகல மரியாதைகளுடனும் சாந்தலிங்கத்தின் சடலம் அடக்கம் செய்யப்பட்டது.

* * *

ஆறுமுகத்துக்குத் தன் தகப்பனைக் கண்டால் பிடிக்கிறதேயில்லை. அவரும் அவருடைய தர்மோபதேசங்களும் யாருக்கு வேண்டும்!

சாந்தலிங்கம் நேரில் தன் மகனைக் கண்டித்துக் கன்னத்தில் பளீர் என்று காது அறைதல் கொடுத்திருந்தாலுங்கூட அவன் பொறுத்துக் கொண்டிருந்திருப்பான்.

ஆறுமுகத்தின் நண்பர்களிடமும், தன் நண்பர்களிடமும் அவனைப்பற்றிக் குற்றங் குறை ஏதாவது சொல்லிக் கொண்டே யிருப்பார், சாந்தலிங்கம்.

அதைக் கண்டால்தான் ஆறுமுகத்துக்கு எரிச்சல் பற்றிக்கொள்ளும். ‘இந்தக் கிழம் ஏன் இப்படிப் பழி வாங்குகிறது என்னை!’ என்று பொங்கிவரும் சினத்தோடு அறுத்துக் கொள்ளுவான். ‘எப்படியாவது இந்த உபத்திரவத்திலிருந்து தப்ப வேண்டும்’ என்று தன் தோழர்களிடம் சொல்லிக் கொண்டிருப்பான்.

கடைசியில், ஒரு நாள் ஆறுமுகம் துணிந்து தாய், தந்தை, உடன் பிறந்தவர்கள் எல்லோரையும் விட்டு விட்டு, வெளியேறி விட்டான்.

மனம் கேட்காமல் தந்தை இறந்து சுமார் ஒரு வருஷத்துக்குப் பிறகு, ஆறுமுகம் தன்னுடைய சொந்த ஊருக்குத் திரும்பினான். அருமைத் தந்தை இறந்துபோன செய்தி அவனைத் திடுக்கிடச் செய்தது. திடகாத்திரரான அவர் இத்தனை சீக்கிரம் இறந்து விடுவார் என்று அவன் எதிர்பார்க்கவேயில்லை.

மனம்போன போக்கில் அலைந்து திரிந்த ஆறுமுகம் சொல்லொணாக் கஷ்டங்களுக்கு உள்ளாக நேர்ந்தது. பல நாட்கள் உண்ண உணவு இன்றிப் பட்டினி கிடந்தான். அவனுக்காக அனுதாபம் காட்டுவார் யாரும் இல்லாத அந்த நிலையில் தூங்கிக் கிடந்த ஆறுமுகத்தின் விவேகம் விழித்துக் கொண்டது. அப்படி விழித்துக் கொண்ட விவேகம் என்ன செய்வதென்று தெரியாமல் விழித்துக் கொண்டே யிருந்து விடவில்லை; அது அவனுள்ளத்தில் மங்கிக் கிடந்த பொறுப்பு உணர்ச்சியைத் தட்டி யெழுப்பியது.

அதன் பயனாக ஆறுமுகம், அலைந்து வேலை தேடலானான். அவன் முயற்சி வீண் போகவில்லை. ஒரு பெரிய மனிதரின் வீட்டில் வேலை கிடைத்தது. ஆறுமுகம் [illegible] அந்த வேலையைக் கவனித்து வந்தான்.

வீட்டில் அவன் தாய், தந்தை, தம்பி முதலிய யாவரும் அவனைக் கண்டதும் கண்ணீர் விட்டுக் [illegible] அன்போடு வரவேற்றனர். ஆறுமுகம் இப்பொழுது அடியோடு மாறிப் போயிருந்தான். பெருந்தன்மையும், பொறுமையும், பொறுப்பு உணர்ச்சியும் அவனிடம் குடிகொண்டிருந்தன; தகப்பனிடம் அளவு கடந்த மரியாதை ஏற்பட்டிருந்தது.

* * *

டப், டப் டப் டபார்! டபர் டபர் டப டப! என்று பட்டாசுக் கட்டுக்களின் வெடிச் சத்தம் ஆறுமுகத்துக்குத் தன் சுய உணர்வைத் தந்தது.

“ஆறுமுகம், நீ என்ன அப்படியே உட்கார்ந்திட்டியே! எல்லாரு வருத்தப்பட்டால்தான் என்ன! அப்பா திரும்பியா வரப்போகிறார்! மனசைத் திடம் பண்ணிக் கொள்ளு. நம்ம எஜமானர் வீட்டிலிருந்து பட்டாசுக் கட்டுகளும் வாணங்களும் நிறைய வந்தன. தீபாவளிக்கு வேண்டிய புது ஆடைகளும் வாங்கிவைத்திருக்கிறாராம். உன்னை அவசியம் பார்த்து ஒரு முக்கிய விஷயமாகப் பேசணும் என்கிறாராம். வேலைக்காரன் வந்து சொல்லி விட்டுப்போனான்” என்றாள் அவன் தாயார்.

ஆறுமுகம் எழுந்து எஜமானர் வீட்டுக்கு விரைந்தான்.

நகை வியாபாரி ஆறுமுகத்தைக் கண்டதும் அன்போடு வரவேற்றார்.

“வா அப்பா, ஆறுமுகம்! நேற்றைக்குத் தான் வெளியிலிருந்து வந்தாயென்று கேள்விப்பட்டேன். உன் அப்பா சாந்தலிங்கம் காலமானது நமக்கெல்லாம் ரொம்ப வருத்தமாய்த்தான் இருக்கிறது. அதுவும் நீ பாவம், அப்பா இறந்த போது இங்கே இல்லை. உன் மனசு படுகிற வேதனை எனக்கு நன்றாய்த் தெரிகிறது. வருத்தப்படாதே. உன் குடும்பத்தை நான் பார்த்துக் கொள்கிறேன். உன் தகப்பனார் அன்று காட்டிய நேர்மைக்கு நான் ஏது செய்தாலும் போதாது. நான் ஒன்று உத்தேசித்திருக்கிறேன். இந்த பங்களாவையும் தோட்டத்தையும் உன் மேற்பார்வையில் ஒப்புவித்துவிடப் போகிறேன். பின் பக்கத்திலிருக்கும் சின்ன வீட்டில் நீ இருந்துகொள். என்ன உனக்குச் சம்மதந்தானே! இந்தா, உன் அப்பா சாந்தலிங்கம் வைத்துக் கொண்டிருந்த தடியும் விளக்கும்!” என்று கூறி அவனிடம் அவற்றைக் கொடுத்தார்.

ஆறுமுகத்தின் கண்களில் கண்ணீர் ஆறாய்ப் பிரவாக மெடுத்தது. அவனால் ஒன்றும் பேச முடியவில்லை. கையும் காலும் நடுங்கின. பணிவோடு அவற்றை வாங்கிக் கொண்டு அவரை வணங்கி எழுந்தான். எஜமானர் அவனுக்காக வாங்கி வைத்திருந்த புது ஆடைகளை அவனிடம் கொடுத்தார். ஆறுமுகத்தைப் பார்க்க அவர் மனம் கனிவும் கசிவும் கொண்டு கரைந்து உருகியது. ‘உத்தமன் சாந்தலிங்கத்தின் மகனல்லவா! [illegible]!’ என்று நினைந்தார்.

ஆம், அந்த சமயத்தில் ஆறுமுகத்தின் நினைவு எந்த இடத்தில் இருந்தது என்பது ஆறுமுகத்தைத் தவிர இன்னும் ஒருவருக்குத்தான் தெரியும். அவர்தான் சர்வ சாட்சியாக விளங்கும் இறைவன்!

சாந்தலிங்கத்தோடு அன்று இரவு [illegible] முகத்தில் [illegible] ஆறுமுகமேதான் [illegible] அந்த சம்பவத்தை மறந்துவிட முடியுமா! அதை நினைக்கும்போதெல்லாம் கண்ணீர் பெருக்காமல்தான் இருக்க முடியுமா!




அன்று கிருஷ்ண பக்ஷத்துச் சதுர்த்தி. தொட்டுத் திலகம் வைத்துக் கொள்ளலாம் என்று சொல்லும்படி அடர்த்தியாகப் படர்ந்திருந்தது மையிருட்டு. அந்தக் கரியிருளைப் பிளந்து கொண்டு, பழக்கத்தின் காரணமாகத் திகைப்படையாமல் வழி தெரிந்து ஓடிவந்த குதிரைகள் இரண்டும் ஒரு சிறிய குன்றத்தின் அடிவாரத்துக்கு வந்ததும் 'சட்'டென்று நின்றன. நின்ற குதிரைகள் சொல்லி வைத்தாற் போல ஒருமித்து நெடுங் குரலெடுத்துக் கனைக்கவும், கொஞ்ச நேரம் கழித்துக் குன்றின் மேலிருந்து ஒருவன் கையில் தீப்பந்தத்துடன் வேகமாகக் கீழே இறங்கி வருவது தெரிந்தது.

சற்று நேரத்துக் கெல்லாம் தீவர்த்தியின் ஒளி அங்கு நிகழ்ந்த காட்சியைத் துலாம்பரமாகக் காட்டியது. பின்னால் நின்று கொண்டிருந்த குதிரையில் யாரோ ஒரு வாலிபனைச் சங்கிலியால் பிணைத்துக் கட்டியிருந்தனர். நெடுந்தூரம் பிரயாணம் செய்ததினால் ஏற்பட்ட களைப்போ, அல்லது படை வீரர்களின் இம்சையினால் ஏற்பட்ட மயக்கமோ அவன் சோர்வடைந்தவனாகத் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டிருந்தான். வீரர்களில் ஒருவன் அவன் உடலைப் பிணைத்திருந்த சங்கிலியை அவிழ்த்துக் கீழே இறங்கும்படி பணித்தான். குதிரையின் மேலிருந்து கீழே குதித்த வாலிபன் பக்கத்துக் கொருவர் காவலாக வரத் தீவர்த்தியின் ஒளியைப் பின் தொடர்ந்து சென்றான். கொஞ்ச நேரத்துக் கெல்லாம் அவனைச் சிறையில் இட்டு விட்டு மீண்டும் அடிவாரத்துக்கு வந்தார்கள் வீரர்கள். தீவர்த்தியின் ஒளி மலையுச்சியிலேயே நின்றது. மறுபடியும் நிர்மலமான அந்தப் பிராந்தியத்தின் அமைதியை மீண்டும் கலைத்துக்கொண்டு எழுந்த குதிரைக் குளம்பொலி இருளோடு கலந்து மறைந்து விட்டது.

* * *

மூன்றாம் சாமத்தின் வருகையை அறிவித்துத் தூரத்தில் எங்கோ கோயில் ஆராய்ச்சி மணி முழங்கிக் கொண்டிருந்தது. சிறைக்கூடத்தில் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த வாலிபக் கைதி ஏதோ பயங்கரமான சொப்பனத்திலிருந்து விழித்து எழுபவனைப் போலத் திடுக்கிட்டு எழுந்தான். இரண்டு முறை கண்களைத் துடைத்துக் கொண்டு சிறைச்சாலையை ஒரு நோட்டம் விட்டான். சுற்றிச் சூழக் கருங்கல் சுவர் நிமிர்ந்து நின்றது. எதிரே இரும்புக் கம்பிகளின் பயங்கர அணிவகுப்பு! அதைப் பார்த்தபொழுது அவனும் கொஞ்சம் மலைக்கத்தான் செய்தான். சோழ மண்டலமே அயர்ந்து தூங்கும் அந்த நேரத்தில் அந்தக் கைதி மட்டும் கூண்டில் அடைபட்ட பெண் வேங்கையைப் போல் சிறைக்குள்ளேயே வளைய வளைய வந்தவன், சட்டென்று ஏதோ நினைவுக்கு வந்தவனைப் போல மேலே அண்ணாந்து பார்த்தான். அவன் நெஞ்சிலே நிமிர்ந்தெழுந்த ஆவல் கண்களிலும் கனன்று சுடர்விட்டது. "தப்பித்து விடலாம்" என்ற நம்பிக்கையின் ஒளியும் அந்தச் சுடர் ஒளியின் ஊடே மின்னியது.

தெற்கே பார்த்த சிறை அது. உட்பக்கத்தின் வடசுவரில் தலைக்கு மேலே ஒரு ஆள் உயரத்தில் ஒரு சாளரம் விட்டிருந்தார்கள். சிறிது கஷ்டப்பட்டு நுழைந்தால் ஒரு ஆள் அதன் வழியாகத் தப்பித்து விட முடியும். ஆனால் ஏறிப் பார்த்த பொழுது கைதியின் தலை கிறங்கியது.

கீழே அதல பாதாளம்! அதில் சுழித்துப் புரளும் காட்டாற்று வெள்ளம். மதயானையையே உருட்டி இழுத்துக் கொண்டு போய் விடும் போல் இருந்தது, அதன் பிரவாக இரைச்சல். சாதாரண மனிதன் எம்மாத்திரம் அதற்கு!

சாளரத் தொண்டியிருந்து தலையை எடுக்க மனமில்லாமல் அப்படியே கொஞ்ச நேரம் இமைகளைப் பொருத்தி ஏதோ தியானம் செய்பவனைப் போலக் காட்சியளித்தான் அவன். மறுபடியும் கண்களை விரித்த பொழுது இருளின் கலக்கத்தில் கொஞ்சம் விடிவு வைப்பதைப் போலத் தோன்றியது. எங்கிருந்து தான் அவ்வளவு துணிச்சல் அவனுக்கு வந்ததோ!—சாளரத்தை விட்டு அவன் உடல் பூராவும் வெளியே நழுவிப் பாய்ந்தது. தூரத்தில் கருநீல வானத்தின் நடுவே 'பளீர்' என்று மின்னிக் கொண்டிருந்த வெள்ளியொன்று அடிவானத்தை நோக்கிச் சரேலென்று பாய்ந்து விழுவதைப் போல.

2

"குழந்தாய்! சோழ வம்சத்துப் பெண் திலகங்கள் அழகுக்கு மட்டுமல்ல, வீரத்துக்கும் பெயர் போனவர்கள்தான்! நேற்று சபா மண்டபத்திலே அந்த ஒற்றனிடம் என்னென்ன குறுக்குக் கேள்வியெல்லாம் கேட்டு விட்டாய். நான் மட்டும் நீயாக இருந்திருந்தால் அந்த வாலிபனை நேருக்கு நேர் கண்டதும் அப்படியே நிலைதடுமாறி விழுந்திருப்பேன்! எத்தகைய காம்பீர்யம் அவன் தோற்றத்தில்! அந்தக் கண்களைத்தான் எளிதில் மறக்க முடியுமா! அப்பேர்ப்பட்ட சாந்த சக்திக்கு முன்னும் நிலைகலங்காமல் நின்றதோடு மட்டுமல்லாமல் வாதிட்டு அவனைச் சிறைக் கோட்டத்திற்கும் வேறு அனுப்பி விட்டாயே! அந்த வீரம் இருக்கிறதே, அதுவல்லவா உண்மையான வீரம்!"

குந்தவையின் இதழ்க் கோணத்தில் பூத்த செவ்வரி முக மண்டலம் பூராவும் பரவி வியாபித்தது. உள்ளத்துக்குள் பெருகும் உணர்ச்சி பாவங்கள் முகத்தில் பிரதிபலித்துவிடா வண்ணம் எவ்வளவோ முயன்று பார்த்தாள். மனோவேகத்தையும் விஞ்சிப் பெருகும் உணர்ச்சி வெள்ளம் இறுதியில் அவளை மூழ்க அடித்தே விட்டது. அப்படியே மெய்மறந்து போய் விட்டாள். அந்தப்புரத்தின் அலங்கார மண்டபம், அருகில் நின்று கொண்டிருக்கும் அன்புத் தந்தை—எல்லா நினைவுகளும் ஒரு கணத்துக்கு அவள் நினைவை விட்டு மறைந்தன. எங்கோ பாழ்வெளியில் தனித்து நிற்கும் கொடிய சிறைக்கூடத்தைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டது அவள் எண்ணம், சிந்தை எல்லாமே!

"என்ன குழந்தாய்! ஒரே மௌனமாகி விட்டாயே! ஏதாவது இசைவுகேடாகச் சொல்லி விட்டேனா!" என்ற வண்ணம் மிகுந்த வாத்ஸல்யத்துடன் தன் அருமைக் குமாரியைத் தன் அருகே அழைத்து உட்கார வைத்தான் ராஜராஜன்.

இளவரசியோ தந்தையை ஏறிட்டுப்பார்க்கவும் கூசியவளாய்த் தலையைக் கவிழ்ந்து கொண்டாள். "அப்பாவுக்கு எவ்வளவு கூர்மையான கண்கள்! இதயத்தைக் கூட ஊடுருவிப் பார்க்கும் சக்தி அவைகளுக்கு எப்படித்தான் ஏற்பட்டதோ!" என்று மனத்துக்குள் வியந்த குந்தவை, "அப்படியானால் நான் நேற்று அரசவையில் அந்த ஒற்றனிடம் நடந்து கொண்ட முறையும், காட்டிய கோபமும் வெறும் பாசாங்கு என்று கூடத் தெரிந்திருக்குமோ! அப்படி இல்லாமலா அப்பா இப்படிப் பேசுகிறார்..." என்றெல்லாம் எண்ணிச் சங்கோசப்பட்டாள். அவமானம் ஒரு பக்கம் முகத்தை வெளிறச் செய்து விட்டது. என்ன பேசுவது என்றே தெரியாமல், "அப்பா! நீங்கள்..." என்று ஏதோ பேச ஆரம்பித்தாள்.

"ம்......சொல்!"

"ஒரு விசித்திரமான மனிதர்தான்!" என்று வாய் குளறி வார்த்தைகளைச் சொல்லி முடித்தாள் குந்தவை.

ராஜராஜன் 'கட கட'வென்று அவள் பேச்சைக் கேட்டதும் சிரித்து விட்டான். அதைப் பார்த்ததும் குந்தவைக்கு அளவு கடந்த கோபம் பொத்துக் கொண்டு வந்து விட்டது.

"ஏன் அப்பா சிரிக்கிறீர்கள்! உங்களால் முடியாத காரியத்தை நான் சாதித்து விட்டேன் என்றா? நீங்கள் மட்டும் இடையில் குறுக்கிட்டிருக்கா விட்டால் அவனுக்கு ஜென்ம தண்டனையே கொடுத்திருப்பேன்" என்று மிகுந்த ஆத்திரத்துடன் பொரிந்து தள்ளினாள்.



அவ்வளவுதான். பாட்டை நிறுத்தி விட்டுத் 'தடால்' என்று பிரவாகத்தில் வாளை மீனைப் போல் துள்ளிப் பாய்ந்தாள் வஞ்சி. சேடியர்களுக்கு ஒன்றும் புரிய வில்லை. ஆனால் மறுகணமே நீரிலே மூழ்கி வந்து கொண்டிருந்த வாலிபன் ஒருவனை இழுத்துக் கொண்டு வஞ்சி கரையேறியதைக் கண்டதும் ஒரே ஆரவாரத்துடன் ஓடி வந்து வஞ்சியைச் சூழ்ந்து கொண்டனர். வாலிபன் மயக்கமுற்றுப் பேச்சில்லாமல் கிடந்தான். ஆனால் அவன் பரந்த மார்பு மட்டும் விம்மி விம்மித் தாழ்ந்து கொண்டிருந்தது. வஞ்சி மெதுவாகத் தன் தளிர்க் கையால் அவன் நெஞ்சிலிருந்த தண்ணீரை எல்லாம் துடைத்து விட்டு மெல்ல மூக்கின் நுனியில் விரலை வைத்துப் பார்த்தாள். இலேசாக மூச்சு வந்துகொண்டிருந்தது. வஞ்சியின் முகத்தில் புன்னகைக் கீற்று வெளிக்கோடியது.

"இந்தா, குழலி! பார்க்கிற பார்வையைப் பார்த்தால் நீயே விழுங்கி விடுவாய் போலிருக்கிறதே! போய் அப்பாவைக் கூட்டிக் கொண்டு வாடி!" என்று சொன்னாள். அந்தப் பெண் சேலை சரத்தைப் பிடித்து விட்டபடியே அவசரமாக ஓட ஆரம்பித்தாள்.

* * *

**வா**லிபன் பிரக்ஞை வந்து மெல்லக் கண்களை விழித்துப் பார்த்த பொழுது தன்னைச் சுற்றி விதவிதமான பட்டாம் பூச்சிகள் சிறகடித்து மொய்ப்பதைப் போல வர்ண உடைகள் தரித்த வனிதையர் கூட்டம் சூழ்ந்திருப்பதைக் கண்டான். ஆனால் அத்தனை மகளிர்க்கும் நடுவே மாசற்ற பூரண சந்திரனைப் போன்ற ஒளி முகத்தோடு ஒரு பெண் கனிவு ததும்ப தன்னையே உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டதும், "வானத்து நிலவு இந்த வையகத்தில் எப்படி இறங்கி வந்தது! இல்லை என்றால் ஒருவேளை நாம் தேவலோகத்தில் கந்தருவப் பெண்களுக்கு மத்தியில் இருக்கிறேனோ!" என்றெல்லாம் எண்ணங்களை ஓடவிட்டான் அவன். அவன் விழி மலர்ச்சியைக் கண்டபொழுது அந்தப் பெண்ணுக்கு — வஞ்சிக்குத்தான் — எல்லையற்ற மகிழ்ச்சி பிறந்திருக்க வேண்டும்! அதற்கறிகுறியாக அவள் குமுத இதழின் ஓரத்திலே மின்னலைப் போல ஒரு புன்னகை பூத்தது!

அன்றிலிருந்து கொல்லிமலையில் ஒரே குதூகலம் தாண்டவமாடியது. வஞ்சியின் வாழ்விலும் ஒரு புதிய மகிழ்ச்சி ஏற்பட்டது. தன் பெயர் 'விமலன்' என்று சொன்னான் அந்த வாலிபன். தமிழ் அவன் வாயிலே தாள்கடை போட்டது. பாலி பாஷையைப் போன்றதொரு பாஷைதான் அவனுக்குத் தெரிந்திருந்தது. ஆனால் வந்த சில நாளைக் கெல்லாம் வஞ்சியின் உதவியால் அழகாகப் பேசக் கற்றுக் கொண்டான் விமலன். வஞ்சிக்குத் தெரியாத வித்தையே கிடையாது! கிளிகளையும் மைனாவையும் தன் இஷ்டப்படிப் பேசப் பழக்கியவளுக்கு, மனிதனைத் தானா பழக்க முடியாது!

4

**மீ**லச் சிறை சூன்யமானதிலிருந்து குந்தவையின் இதயத்திலும் இருள் கவ்வ ஆரம்பித்தது. விமலனைச் சந்தித்த அன்றே ஒற்றன் என்று அவள் கருதி இருந்தால் போகட்டும் என்று மன்னித்து விட்டிருப்பாள். ஆனால் அவள் சிந்தையையே திருடிவிட்ட அவனை மன்னித்து விட்டால்— சோழ மண்டலத்தை விட்டே அல்லவா அவன் போய் விடுவான் என்ற காரணத்தால்தான் அவனை மலைச் சிறைக்கு அனுப்பி வைத்தாள். ஆனால் யார் கண்டார்கள், அவள் எண்ணம் இப்படிக் கைநழுவிப் போகும் என்று!

ராஜ ராஜனோ தன் செல்வக் குமாரியிடம் அளவற்ற வாஞ்சை வைத்திருந்தான். அவள் இதயம் அவன்! அவள் விருப்பத்துக்கு மாறாக இதுவரையும் நடந்தறியாதவன் ஏனோ குந்தவையின் இதய தாபத்தை அறிந்திருந்தும் அறியாதவனைப் போல நடந்து கொண்டான். அந்தப் பராமுகத்தைத்தான் பசுங்கொடி குந்தவையால் தாங்க முடியவில்லை. புகைபுண்ட ஓவியத்தைப் போல அந்த அரண்மனைக்குள்ளே நடமாடி வந்தாள் அவள்.

ஒருநாள் அவளை மிக்க அன்புடன் அழைத்துச் சொல்லுவான் ராஜ ராஜன்:

"குழந்தாய்! வேங்கியிலிருந்து சாளுக்ய மன்னன் சக்திவர்மன் ஓலை அனுப்பி இருக்கிறான். பேராண்மைக்கும் பேரழகுக்கும் இலக்கியமாக அவனுக்கு ஒரு மகனாம். சோழகுல திலகத்தை அவனுக்குத் தாரமாக என்று கேட்டிருக்கிறான். இந்தத் திருமணம் நடந்து விட்டால் சோழர் பேரரசும் சாளுக்ய வம்சமும் ஒன்றி ஒரு புதிய சகாப்தத்துக்கு வழி வகுத்ததைப் போலாகும். குழந்தாய்! உனக்கு விருப்ப மிருக்குமாயின் என்னிடம் ஒளியாமல் சொல்லி விடலாம்!"

குந்தவையின் கண்கள் நீரைக் கொட்டின. தந்தையின் பரந்த மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டு தேம்ப ஆரம்பித்தாள்.

ராஜ ராஜனோ அவள் இதயத்தின் கீழ் பிறழாத நேர்த்தியைக் கண்டு ஒருகணம் வியப்பிலும் வாயடைத்துப் போய் நின்றான்.

* * *

**அ**ன்று முழு நிலவு தோன்றும் நாள். "இளவரசி குந்தவை தேவியார் கொல்லி மலைச் சாரலில் காட்டாற்றங்கரையிலுள்ள வசந்த மாளிகைக்கு வந்திருக்கிறார்; காவலில் ஒரு 'கண்' இருக்கட்டும்" என்று வேளிர் தலைவன் பாண பத்திரனுக்குச் சோழ மண்டலாதிபதியிடமிருந்து ஓலை கதுக்கொன்று வந்தது. அந்தச் செய்தி கொல்லிமலையிலே ஒரு பரபரப்பையும் குதூகலத்தையும் தூண்டி விட்டது. சோர்ந்து போயிருந்த வஞ்சி கூட அதைக் கேட்டதும் உள்ளம் பூரித்தாள். அதற்கு வேறு ஒரு காரணமும் இருக்கத்தான் செய்தது. வெகு நாளைக்குப் பிறகு விமலனின் முகத்தில் அன்றுதான் மகிழ்ச்சியைக் கண்டாள் வஞ்சி!

மாலை வருவதற்குள் மலைபடு பொருள்கள் அத்தனையும் கொண்டு வரப்பட்டன. தேவியாருக்குக் காணிக்கைப் பொருளாகக் கொடுப்பதற்கு விதவிதமான புஷ்பங்கள், மலைத் தேனடை, அகில், கஸ்தூரி போன்ற வாசனைத் திரவியங்கள், புலிக்குட்டி—இவைகளையும் கொண்டு வந்து கொடுத்தான் பாண பத்திரன். தோழியர்கள் எல்லோரும் காட்டாற்றங்கரையில் மொய்த்தனர். மெல்லிய மான் தோல் உடையால் விமலனைப் பலவாறு அலங்கரித்து அழைத்துக் கொண்டு வஞ்சியும் அந்த இடத்துக்கு வந்தாள். அவர்கள் இருவரையும் ஒருசேரக் கண்ட பொழுது முருகனும் வள்ளியம்மையும் மலையிலிருந்து இறங்கி வருவதைப் போல் இருந்தது.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அவர்களை ஏற்றிக் கொண்டு சலசலப்புடன் நீரைக் கிழித்துக் கொண்டு சென்றது பரிசல். எதிர்க்கரையில் தூரத்தே தெரியும் வசந்த மண்டபத்தைப் பார்த்ததும் விமலனின் உடல் முழுவதும் ஒரு பரவசம் பிறந்து பரவியது. தரையில் கால் வைத்தபோது, அவன் தன்னையே மறந்து விட்டான்.



வசந்த மண்டபத்துக்குள் நுழைந்தது கொல்லிமலைப் பாவையர் கூட்டம். மனநிம்மதி இன்றிக் குழம்பிக் கொண்டிருந்த குந்தவைக்கு அவர்களைப் பார்த்ததும் இனந்தெரியாத ஒரு ஆறுதல் பிறந்தது. இதயம் கனிய அவர்களை வரவேற்றாள். வஞ்சியும் இளவரசியின் பாத கமலங்களைப் பணிந்து விட்டுத் தான் கொண்டு வந்த காணிக்கைப் பொருள்களை ஒவ்வொன்றாக எடுத்து இன்னின்ன இடத்திலிருந்து தேவியாருக் கென்று பெறப் பட்டது என்று தன்னுடைய குல முறைப்படி சொல்லிக் கொடுத்துக் கொண்டே வந்தவள் சட்டென்று தலைநிமிர்ந்து பார்த்தாள்.

வஞ்சியின் கண்கள் ஆச்சரியத்தால் கயல் மீன்களைப் போல் பிறழ்ந்தன. குந்தவை தேவியாரும் விமலனும் ஒருவரை ஒருவர் பார்த்த பார்வையிலேயே நேரம், செயல், சுற்றுப் புறம், சூழ்நிலை எல்லாம் மறந்து — ஒன்றிப் போய் நின்று கொண்டிருந்தனர். குறப் பெண்களோ அச்சத்தினாலும் வியப்பினாலும் வாயடைத்துப் போய் இன்னது செய்வதென்று தெரியாமல் விழித்தபடியே நின்று கொண்டிருந்தனர். வஞ்சியோ கண் பனித்து அசையாச் சிலையாக ஆகி விட்டாள்.

அந்த நேரத்திலே வசந்த மாளிகைக்கு வெளியிலிருந்து மன்னர் வருகையை அறிவித்து துந்துபியின் மங்கல ஒலி முழங்கியது. அந்த ஒலியிலே மெய்ம் மறந்து நின்று கொண்டிருந்த எல்லோருடைய உள்ளங்களும் கலைந்தன, குந்தவை விமலன் இருவர் ஒருமித்த பார்வையைத் தவிர.

"ஜயவிஜயீபவ: மன்னர் ராஜராஜன்!"

"வாழ்க! வாழ்க!"

என்ற வாழ்த்தொலி விண்ணை முட்டித் திரும்பியது. கொஞ்ச நேரத்தில் மண்டபத்தின் உள்ளே சோழ மண்டலாதிபதியும் வேளிர் தலைவன் பாண பத்திரனும் நுழைந்தனர்.

"அப்பா!" என்று ஓடிவந்து தந்தையின் காலடிகளில் சுருண்டு விழுந்தாள் குந்தவை. விழுந்தவளை அன்புடன் வாரி யெடுத்து நிறுத்தினான் ராஜராஜன். அவள் மருண்ட கண்களின் இமை நுனியில் துளித்து நின்ற கண்ணீரைத் துடைத்த படியே கேட்டான்:





"குழந்தாய்! வஞ்சியிடம் காணிக்கைப் பொருள் எல்லாவற்றையும் பெற்றுக் கொண்டாயல்லவா! — இல்லை — இன்னும் ஏதாவது பாக்கி இருக்கிறதா!"

வஞ்சிக்கு எல்லாம் கண நேரத்தில் புரிந்து விட்டது. குந்தவையின் மனநோய்க்குக் கொல்லி மலையில்தான் மருந்து இருக்கிறதென்று அவள் தந்தை அடிக்கடி சொன்னது அவள் ஞாபகத்துக்கு இப்போது வந்தது.

"விமலனா அந்த ஒப்பற்ற மூலிகை! அப்படியானால் தேவியின் வாழ்வுக்கு நானும் ஒரு காரணமா!" என்று நினைத்த பொழுது அவளுக்கும் கண்களில் நீர் ததும்பியது.

"விமலாதித்யா! உன் தந்தை நாளை நின்று மறுநாள் சோழ மண்டலத்துக்கு விஜயம் செய்வதாகச் செய்தி அனுப்பி இருக்கிறார். வேடத்தைக் கலைத்து விட்டுத் தயாராக இரு!" என்றான் ராஜ ராஜன்.

விமலன் அன்பு ததும்ப மன்னரை ஒருமுறை பார்த்தான். வேளிர் கூட்டத்தில் இருந்தவன் வேங்கிபுர சாளுக்ய இளவரசன் தான் என்று அவருக்கு எப்படித் தெரிந்தது என்ற ஆச்சரியம் அவனுக்கு!

அடுத்த கணமே எல்லோருடைய பார்வையும் வஞ்சியின் மேல் ஏககாலத்தில் பாய்ந்தன. சோழ சாம்ராஜ்யத்தின் விதியை நிர்ணயிப்பதில் அவள் முடிவுதான் முக்கியம் என்று அறிவித்து விட்டான் மன்னர். அந்தக் கணத்திலேயே வஞ்சியின் நெஞ்சில் பெருக்கெடுத்துப் பொங்கிய அன்பு வெள்ளம் அருள் வெள்ளமாகப் பாய்ந்து வந்தது. 'விறு விறு' என்று விமலனின் கையைப் பற்றி இழுத்துக் கொண்டு வந்து குந்தவையின் மென் கரத்தோடு இணைத்து வைத்து, தான் கொண்டு வந்த கரபுன்னை மலர்களை ஒரு குத்து அவர்கள் மேல் தூவி "நீடூழிகாலம் வாழ்க!" என்று ஆனந்தத்துடன் வாழ்த்தி விட்டுத் தன் தகப்பனுடனும் சேடியர்களுடனும் வசந்த மண்டபத்தை விட்டு வெளியே வந்தாள்.

கொஞ்ச நேரத்தில் காட்டாற்று வெள்ளத்தில் மீண்டும் பரிசல் சலசலத்தது. பரிசலில் கம்பீரமாக நின்று கொண்டிருந்த வஞ்சி எதிர்க்கரையில் தன்னை விட்டு விலகும் வசந்த மண்டபத்தையே கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள். எந்த வெள்ளத்திலிருந்து விமலனைக் கண்டெடுத்துக் காப்பாற்றினாளோ அந்த வெள்ளத்திலேயே இன்று அவள் உகுத்த கண்ணீர் முத்துக்கள் கலந்து சென்றன.

வஞ்சியின் தலை மறைந்ததும் மன்னன் ராஜராஜன் தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான்: "வஞ்சி, உன் தியாகம் மகத்தானது! நீ உகுத்த அருள் வெள்ளம் பாய்ந்து சோழ ராஜ்யத்தின் புலிக் கொடியைத் தழைய வைக்கப் போகிறது. அந்தக் கொடிப் பந்தர் நிழலிலே இனி சோழ-சாளுக்ய வம்சம் மங்காப் புகழுடன் நிலைத்து வாழும்!"



## செஞ்சிக் காட்சிகள் ①

திண்டிவனத்திலிருந்து திருவண்ணா மலை செல்லும் பாதையில் சரித்திரப் பிரசித்தி பெற்ற செஞ்சிக்கோட்டை இருக்கிறது. இந்தக் கோட்டையி னுள் பாழடைந்த வேங்கடரமணர் ஆலயம் ஒன்று காணப்படுகிறது. அந்தக் கோவிலின் ஒவ்வொரு தூணும் சிற்பக் களஞ்சியமாக விளங்குகிறது. அங்குள்ள சில சிற்பங் களை ஓவியர் மணியம் நேரில் பார்த்து வர்ணச் சித்திரங்களாகத் தருகிறோம்.



மணியம்.

கோட்டை வாசலில் கருங் கல் மேடை மீது ஒரு வீரன் கம்பீரமாக உட்கார்ந்திருக்கிறான். வலது காலை மடக்கிப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்திருக்கும் வீரத் திருக் கோலமும், கத்தியும் கேடயமும் வைத்திருக்கும் அழகும் அபூர்வமான சிற்பக் கலை நுணுக்கங்களுடன் திகழுகின்றன. மலைக் கோட்டைக்குச் செல்லும்வழியில் சிறு குன்றில் உள்ள ஆஞ்சனேயரின் விசுவரூபக் காட்சி மற்றொரு அதிசயம். சக்தியுள்ள மூர்த்தம் என்று பல்லாண்டுகளாக வழிபட்டு வரும் தெய்வம் இது.



செஞ்சிக் காட்சிகள்—4



செஞ்சிக் கோட்டைக்கு மூன்று மைல்களுக்கு அப்பால் உள்ள குன்றின்மீது பள்ளிகொண்டிருக்கும் மகாவிஷ்ணு. மகாபலிபுரத்தில் உள்ள சிற்பக்கலையை ஒட்டி அமைந்துள்ள இந்தச் சிலையைப்போல் பெரிய சிலை வேறு எங்குமே கிடையாது. சிலையின் நீளம் இருபதடி, உயரம் ஒன்பதடி. சிங்கவரத்தில் உள்ள இந்த ரங்கநாதரைத்தான் தேசிங்கு மன்னன் வழிபட்டு வந்தான். மிகப் பெரிய சிலை என்பதோடு உருவ அமைப்பிலும், தெய்விக அழகிலும் ஈடு இணையற்று விளங்குகிறது.







# எமது வெளியீடுகள்

★

## கல்கி

| | | | | |
|---|---|---|---|---|
| மாந்தருக்குள் ஒரு தெய்வம் | | | | |
| முதல் பாகம் | ரூ. | 6 | 0 | 0 |
| இரண்டாம் பாகம் | (வெளி வந்துவிட்டது) | | | |
| மயில்விழி மான் | | 2 | 0 | 0 |
| பொன்னியின் செல்வன் | (வெளி வந்துவிட்டது) | | | |
| சிவகாமியின் சபதம் | | 15 | 0 | 0 |

## டாகூர் (த. நா. குமாரஸ்வாமி மொழிபெயர்ப்பு)

| | | | |
|---|---|---|---|
| பூந்தோட்டம் | 2 | 0 | 0 |
| மஹாமாயா | 1 | 8 | 0 |
| ஜப்பான் பயணம் | 0 | 15 | 0 |
| சிதைந்த கூடு | 1 | 8 | 0 |
| சதுரங்கம் | 2 | 0 | 0 |
| முகுடம் | 0 | 12 | 0 |
| புயல் | (வெளி வந்துவிட்டது) | | |
| கோரா | (வெளி வந்துவிட்டது) | | |

## த. நா. குமாரஸ்வாமியின் சொந்த சிருஷ்டிகள்

| | | | |
|---|---|---|---|
| ஓட்டுச் செடி | 1 | 8 | 0 |
| அன்பின் எல்லை | (வெளி வந்துவிட்டது) | | |
| கற்பவல்லி | 1 | 8 | 0 |

## த. நா. குமாரஸ்வாமியின் மற்ற மொழிபெயர்ப்பு

| | | | |
|---|---|---|---|
| கொஞ்ச நேரம் | 1 | 8 | 0 |
| விளக்கும் விட்டிலும் | 1 | 8 | 0 |
| காகிதப் படகு (பாகங்கள் 1, 2, 3) | 1 | 8 | 0 |

## நாமக்கல் கவிஞர்

| | | | |
|---|---|---|---|
| திருவள்ளுவர் இன்பம் | 1 | 8 | 0 |
| தாயார் கொடுத்த தனம் | 0 | 14 | 0 |

* * *

| | | | |
|---|---|---|---|
| சரித்திர தீபம் | 2 | 0 | 0 |
| வீர சிவாஜி | 2 | 0 | 0 |
| அமிர்தம் | 3 | 0 | 0 |
| ஏடுகள் சொல்வதுண்டோ? | 2 | 0 | 0 |
| வானவில் | 1 | 8 | 0 |
| சங்கீத கலாமணிகள் | 2 | 0 | 0 |
| நீலகண்டன் | 2 | 0 | 0 |
| மங்கையர் மாண்பு | 2 | 4 | 0 |

மாந்தருக்குள் ஒரு தெய்வம்
கல்கி













சிறந்த நூல்கள் வெளியிடுபவர்கள் நுங்கம்பாக்கம் - சென்னை-6

# செங்கமலம்

அன்று பௌர்ணமி. வயல் வெளியில் வேலை முடிந்ததும் காவேரிக் கரைப் பக்கம் சென்றேன். என்னுடன் வேலைசெய்து வந்தவர்கள் எல்லாம் தங்கள் தங்கள் வீட்டுக்குச் சென்று விட்டனர். அடர்ந்து படர்ந்த தோப்புக்குள் புகுந்து சென்று கொண்டிருந்தேன். தாழ்ந்து படர்ந்திருந்த மாமரத்தின் கிளையில் சாய்ந்து இரு கால்களையும் மார்புக்கருகே மடித்து வைத்துக் கொண்டு சோகமே உருவாக அமுதன் உட்கார்ந்திருந்தார்.

அமுதன் பி. ஏ. பட்டம்பெற்ற பட்டதாரி. வயது என்னமோ நாற்பதுக்கு மேல் இருக்கும். இன்னும் கல்யாணம் செய்துகொள்ளாமல் கட்டை பிரம்மச்சாரியாக இருக்கிறார். எங்கள் ஊரின் முன்னேற்றத்துக்கு அவருடைய தொண்டுதான் முக்கிய காரணம். ஊரையே மாற்றி அமைத்து விட்டார். அனாதைப் பள்ளிக்கூடம் ஒன்று நடத்தி வருகிறார். எப்பொழுதும் உற்சாகமாக இருக்கக் கூடியவர். இன்று தன்னந்தனியாக ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருக்கும் அவரைப் பார்த்தவுடன் எனக்கு ஒருகணம் ஒன்றும் புரியவில்லை. மெதுவாகக் கனைத்தேன். என் கனைப்புச் சத்தத்தைக் கேட்டதும் அமுதன் திரும்பினார். என்னைப் பார்த்து மெதுவாகச் சிரித்துக் கொண்டே வந்தார்.

"எங்கே இப்படித் தனியாக உட்கார்ந்திருக்கிறீர்கள்!" என்றேன்.

"பழைய நினைவு வந்தது. அப்படியே உட்கார்ந்து விட்டேன். அது இருக்கட்டும், எங்கே இந்தப் பக்கம்! காவேரிக் கரைக்கா!" என்றார்.

"ஆமாம்" என்றேன்.

"நானும் வருகிறேன். மனசு என்னவோ இன்று சரியாக இல்லை" என்றார்.

காவேரிக் கரையின் வெண் மணலில் வந்து உட்கார்ந்தோம். சற்று தூரத்துக்கு அப்பால் கிராமத்துப் பெண்கள் பாடிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் மணலில் இருந்தார்கள். அவர்கள் முகம் வெண்கலம் போல் இருந்தது. கரு நீலக் கண்களையுடைய பெண்கள் மகிழ்வுடனும் அழகுடனும் விளங்கினர். கருத்த பட்டுப்போன்ற கேசம் அவர்கள் முதுகிலே புரண்டு விளையாடிக் கொண்டிருந்தது. ஜிலு ஜிலு என்று காற்று வீசிக் கொண்டிருந்தது. காற்றின் வேகத்தில் அவர்கள் ஆடைகள் ஆடிப் பற பறத்தன. அவர்கள் அங்கிருந்து கிளம்பிச் சென்று கொண்டிருந்தார்கள். அவர்கள் காவேரி மணலை விட்-







மணியம்

டுச் செல்லச் செல்ல, அவர்கள் அழகை அதிகமாக எண்ணும்படி இருந்தது.

ஒரு பெண் மெல்லிய குரலில் பாடிக் கொண்டிருந்தாள். வீணை தமிழ் இசை பாடுவது போலிருந்தது. மென்மெல் காதும் போல் ஒரு பெண் கல கல வென்று சிரிக்கும் சத்தம் கேட்டது.

மலர்களின் நறு மணத்தைத் தாங்கிக் கொண்டு காற்று வீசியது. மேகக் கூட்டங்கள் விசித்திரமான உருவங்களிலும், வேறு பல வர்ணங்களிலும் ஆகாயத்தில் ஊர்ந்து சென்றன. இவற்றிற்கு இடையே நீலமான ஆகாயம் தெரிந்தது. அங்கே நிலவிய எல்லாமே விசித்திரமான அழகுடனும் சோபையுடனும் காணப்பட்டன.

"அந்தப் பெண்ணின் சிரிப்பொலியைக் கேட்டீரா!" என்றார் அமுதன். அந்தப் பெண்கள் சென்ற திக்கை நோக்கி வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அமுதன் கம்பீரமாக நிமிர்ந்து உட்கார்ந்திருந்தார். கருத்துப் பள பளவென்றிருந்த அவர் கன்னங்கள் ஒளி வீசி ஜொலித்தன. அவரது குரல் அமுதம் போலிருந்தது.

"அந்தச் சிரிப்பொலியைக் கேட்டேன். இனிமையாக இருந்தது" என்றேன்.

"தமிழ் நாட்டுக் கிராமத்துப் பெண்களின் ரஸிகத் தன்மையும் போக்கும் விசித்திரமாக இருக்கும். மனம் விட்டுச் சிரிப்பார்கள். இந்தச் சிரிப்பை அனுபவிக்கத் தெரிந்திருக்க வேண்டும். உங்களால் அனுபவிக்க முடிகிறது" என்றார்.

வானத்தில் சந்திரன் தோன்றியது. ரத்தச் சிவப்பாக வட்டவடிவாகத் தோன்றியது. வானத்தின் மேலே எழும்பிக் கொண்டிருந்த சந்திரன் ஒளி பட்டு அந்த இடம் இதுவரையில் இல்லாத புது அழகுடன் விளங்கியது.

"அந்தப் பெண் சிரித்தாளே அப்படித் தான் அவளும் சிரிப்பாள். அடாடா! அந்தச் சிரிப்பொலி......" என்று வார்த்தையை முடிக்காமல் இழுத்தார் அமுதன்.

"அவள் என்றால் யார்!" என்றேன்.

"ஆமாம்! அவள் என் வாழ்க்கையில் இந்தச் சிரிப்பொலி போல் திடீர் என்று தோன்றி மறைந்து விட்டாள். இப்பொழுது அவள் வெறும் சிரிப்பின் ஒலியாகத்தான் இருக்கிறாள். மனத்துக்கு மகிழ்ச்சியை ஊட்டும் அவள் சிரிப்பு. உடலையும், எலும்பையும், ரத்தத்தையும் ஒரு புது வெறி கொள்ளச் செய்யும் அவள் சிரிப்பு. ஜ்வரம் பிடித்த மனிதனைக் கடவுள் என்ன என்னவோ செய்து விடுகிறார்" என்றார் அமுதன். பிறகு மாந்தோப்பை வெறிக்கப் பார்த்தார்.

மிகவும் அதிசயமான கதையை எதிர்பார்த்தவனாய் "அவள் யார் என்று சொல்ல மாட்டீர்களா!" என்று கெஞ்சினேன்.

அமுதன் ஒருதரம் வானத்தை அண்ணாந்து பார்த்தார். பிறகு தொண்டையைக் கனைத்துக் கொண்டார். தம் கதையைச் சொல்ல ஆரம்பித்து விட்டார்.

* * *

என்னுடைய வாழ்க்கையில் எவ்வளவோ விஷயங்களைக் கண்டிருக்கிறேன். அதையெல்லாம் எழுதினால் பெரிய நவீனமாக முடியும். நாம் எதற்காக வாழ்கிறோம் என்பதை யார்தான் சொல்ல முடியும்! யாராலும் முடியாது. உங்கள் காரியத்தைக் கவனித்துக் கொண்டே காலத்தை ஓட்டுங்கள். சுற்றிலும் நடப்பதையும் கவனமாகப் பார்த்துக் கொள்ளுங்கள். அப்பொழுது இதய தாபம் ஏற்படுவதற்கு வழியே கிடையாது.

சொந்தமாக நான் என் கையாலேயே உழைத்தேன். அதில் கிடைத்த வருமானத்தைக் கொண்டு கணவனை இழந்த என் தாயை அன்போடு காப்பாற்றினேன். பள்ளிக்கூடத்திலும் சேர்ந்து படித்தேன். எல்லாப் பாடங்களிலும் முதல் மார்க் வாங்கினேன். உபாத்தியாயர்களும் மாணவர்களும் ஊரிலுள்ளோரும் என்னைப் பிரமாதமாகப் புகழ்ந்தார்கள்.

யௌவனத்தின் எல்லையில், வறண்டு கிடக்கும் வாழ்க்கைப் பாலைவனத்தின் வானவெளியில், பெண்மையின் கவர்ச்சி வண்ண ஜால வேலை செய்து மயக்கியது. என் வாழ்க்கையைச் சோதனைப்படுத்த ஆரம்பித்து விட்டது. பெண்ணைப் பெற்றவர்கள் எல்லாம் தங்கள் பெண்ணை என் கழுத்தில் கட்டிவிட முயன்றார்கள். அவர்களிடமிருந்து தப்புவதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது. "பால சன்யாசி!" என்று பரிகாசம் செய்தார்கள்.

அந்தக் காலத்தில் நான் மிகுந்த அழகுள்ள வாலிபனாக இருந்தேன். இதை நான் சொல்லவில்லை. எத்தனையோ பெண்கள், என்னுடன் கல்லூரியில் படித்த பெண்கள் சொல்லி யிருக்கிறார்கள். வாய் திறந்து சொல்லவில்லை. கடிதத்திலும் எழுதிக் கொடுக்க வில்லை. சக்தி வாய்ந்த நயனமொழியில் கூறினார்கள்.

நானோ ரொமானி. பெண்களைக் கண்டால் வெட்கமடைந்து சங்கோசப்படுவது என் பிறவிக் குணம். கண்ட கண்ட பெண்களோடு காதல் கொண்டு பிறகு சமயத்துக் கேற்றாற் போல் அதை மறந்துவிட என்னால் முடியாது.

கல்லூரியில் படித்து வந்த எனக்குப் பட்டம் கிடைத்து விட்டது. மாகாணத்திலேயே முதல் மாணவனாகத் தேறினேன். அதற்கு ஏற்ற உத்தியோகமாகப் பார்க்கும்படி என் தாயார் எவ்வளவோ சொன்னார்கள். வெறும் அடிமை உத்தியோகம் பார்ப்பதுதான் மனத்துக்குப் பிடிக்கவில்லை. நம்முடைய கிராமத்தின் முன்னேற்றத்துக்கு என் படிப்பை, அறிவை உபயோகப்படுத்த வேண்டும் என்று தீர்மானித்துக் கிராமத்துக்கு வந்தேன்.

அன்னை பூமாதேவி தன்னிடம் எத்தனையோ உபயோகமான பொருள்களை மறைத்து வைத்திருக்கிறாள். சக்தியுள்ளவர்கள் பூமியில் பாடுபட்டால் கட்டாயம் பயன் அடையலாம். வறுமையில் அடிபட்டு வயிறொட்டி எலும்பும் தோலுமாகக் காட்சி தரும் ஏழைகளுக்கு அறிவுடன் கூடிய உழைப்பைக் கற்றுக் கொடுக்க வேண்டும் என்று தீர்மானித்தேன். அவர்கள் நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபடும் உழைப்பு வெறும் விழலுக்கு இறைத்த நீராகாமல் உழைப்புக்கு ஏற்ற பலன் கிடைக்க ஏற்பாடு செய்ய முயன்றேன்.

எனவே பட்டணத்தின் போலி நாகரிகத்துக்கு அடிமையாகாமல் கிராமத்துக்கு வந்து குடியேறினேன்.

நவீன முறையில் பூமியைத் திருத்திப் பயிரிடும் முறையை ஏழை எளிய உழவர்களுக்குக் கற்றுக்கொடுத்தேன். குளங்களை ஆழமாக வெட்டச் செய்தேன். கிராமத்தில் ஒரு பொட்டு நிலம்கூடத் தரிசாகக் கிடக்காமல் செய்தேன். பச்சைப் பசேல் என்று காட்சி அளித்த கிராமத்தில் அமர்ந்து மகிழ்ந்து கொண்டிருந்தேன்.

அன்று வானம் செக்கச் செவேல் என்று காட்சி அளித்தது. மாமரங்களின் சின்னஞ்சிறு கிளைகளில் தளிர்த்திருந்த மாந்தளிர்கள் மந்த மாருதத்தால் மெதுவாக ஆடி அசைந்து கொண்டிருந்தன.

பாட்டாளி மக்கள் வேலை செய்துவிட்டு வீட்டுக்குத் திரும்பிச் சென்று கொண்டிருந்தனர். சிலர் தெம்மாங்குப் பாட்டு பாடிக்கொண்டு சென்றனர். கிராமத்தின் குழுவிலேயே தனி. அவர்கள் சதா பாடுவார்கள். உணர்ச்சியுடன் பாடுவார்கள். அதில்தான் எத்தனை எத்தனை விதமான மெட்டுகள், பாவங்கள். இதை யெல்லாம் கல்லூரியில் படித்து வரும் இந்தக் காலத்து மாணவர்கள் உணர்வார்களா!

வெம்பொலியுடன் சிரித்துக் குதித்துக் கொண்டு காவேரி நாட்டிய ராணிபோல் ஓடிக் கொண்டிருந்தாள்.

சூரியனை மேகம் மறைத்துக் கொண்டிருந்தது. மேகக் கூட்டங்களின் இடுக்கு வழியாக சூரியனின் பொற் கதிர்கள் புகுந்து வந்து மாந்தோப்பில் வட்டம்





வட்டமாக வண்ணக் கோலமிட்டு விளையாடிக் கொண்டிருந்தன.

நான் சற்றுமுன் உட்கார்ந்திருந்தேனே அந்த மாமரத்தின் கிளையில் ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள். சிறந்த கலைஞனின் உயிர் ஓவியம்போல் திகழ்ந்தாள். மாமரத்தின் ஒரு கிளையில் உல்லாசமாகச் சாய்ந்து இன்னொரு கிளையை உதைத்துக் கொண்டு ஏதோ ஒரு புஸ்தகத்தை மடிமேல் வைத்துப் படித்துக் கொண்டிருந்தாள்.

இந்தக் காட்சியைக் காணும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது. மரத்தின் மறைவில் நின்றபடி நான் அவளை உற்று நோக்கினேன். என் இதயத்தின் அடியில் ஒரு புதிய ஒளி வீசுவதை உணர்ந்தேன். என் வாழ்க்கையில் புது இன்பம் ஆரம்பமாகி விட்டதாக எண்ணினேன். பிறவிப் பயன் பெற்று விட்டதாக மகிழ்ந்தேன். என்னைப் பற்றி நான் இதுவரையில் எண்ணி வந்த எண்ணம் எல்லாம் சிதைந்து கொண்டிருந்தது. என் திடசித்தம் உருக்குலைந்து போய் விட்டது. என் இதயத்தில் இருந்து ஏதோ ஒரு இனம் தெரியாத சபலம் வெளிப்பட்டு விட்டது. அதற்கு அடிமையாகி விட்டேன்.

அந்தத் தெய்வ மங்கையோடு ஏதாவது பேசவேண்டும் போலிருந்தது! 'அவளிடம் போய் என்ன பேசுவது!' என்று தெரியாமல் தவித்தேன்.

அந்தப் பெண், அவள் பெயரைப் பின்னும் தெரிந்து கொண்டேன். செங்கமலம், ஆகா! எவ்வளவு பெயர் பொருத்தம். உண்மையிலேயே செந்தாமரை மலர் பெண் உருவம் பெற்று வந்தது போலவே இருந்தாள்.

இக் காட்சியைப் பார்த்துக்கொண்டு எத்தனை நாழி நின்று கொண்டிருந்தேனோ தெரியவில்லை. பசுங் கன்று ஒன்று துள்ளிக் குதித்துக் கொண்டு அங்கே ஓடி வந்தது. அதைப் பிடிப்பதற்கு அந்தக் கன்றின் பின்னாலேயே ஒரு பெரிய அம்மாள் வந்தார்கள். அந்தப் பெண்ணைப் பார்த்ததும் "செங்கமலம்! நீ இங்கேயா உட்கார்ந்திருக்கிறாய்! வீட்டில் படிப்பதற்கு இடம் இல்லையா! உன் தாத்தா உன்னைக் காணாமல் தவிக்கிறார்" என்றாள்.

செங்கமலம் பதில் ஒன்றும் சொல்லாமல் பொற்பாவை போல் அந்த அம்மாளைப் பின் தொடர்ந்தாள். அடிக்கடி என்னைத் திரும்பிப் பார்த்தாள்.

மாந்தோப்புக்குள்ளிருந்து அந்த மாயமோகினி மறைந்து விட்டாள். மாந்தோப்பு வெறிச்சோடி விட்டது.

இதற்கு முன்பு எத்தனையோ கிராமத்துப் பெண்களைப் பார்த்திருக்கிறேன். ஆனால் எல்லாப் பெண்களையும் போல் இல்லாமல் தனியாக முழு சுதந்திரத்துடன் செங்கமலத்தைப் பார்க்கும் வாய்ப்பு கிடைத்தது. மாமரத்தில் அவள் கலைவாணி போல் உட்கார்ந்திருந்த போது அவள் பொன் வண்ண மேனியுடன் காட்டுமலர்களும் மாந்தளிர்களும் சேர்ந்து அவள் அழகுக்கு அழகு செய்தன.

நான் எத்தனையோ அழகிகளைப் பார்த்திருக்கிறேன். அவர்களில் மன்மதனையே வியப்பில் ஆழ்த்தும் அழகிகள்கூடச் சிலர் இருந்தார்கள். ஆனால் செங்கமலத்தைப் பார்த்த போதுதான் ஒரு பெண்ணை என் வாழ்க்கையில் முதல் முதலாகப் பார்ப்பது போன்ற பிரமை ஏற்பட்டது.

இவள் யார்! எங்கிருந்து இந்தக் கிராமத்துக்கு வந்தாள்! தாத்தா யார்!

நான் கல்லூரியில் படிக்கும் போது கவி பாரதியின் பாடலை என் நண்பன் ஒருவன் அடிக்கடி பாடக் கேட்டதுண்டு.

சுட்டும் விழிச்சுடர்தான்—கண்ணம்மா!
சூரிய சந்திரரோ?
வட்டக் கரியவிழி,—கண்ணம்மா!
வானக் கருமைகொல்லோ?

பட்டுக் கருநீலப்—புடவை
பதித்த நல்வயிரம்
நட்ட நடுநிசியில்—தெரியும்
நட்சத்திரங்களை!

சோலைமலர் ஒளியோ—உனது
சுந்தரப் புன்னகைதான்!

..............................

அந்தப் பாட்டு முழுதும் எனக்கு இப்பொழுது நினைவுக்கு வரவில்லை.

என்ன காரணமோ அவளைப் பார்த்ததும் அந்தப் பாட்டின் அதி தேவதையே



என் எதிரில் வந்து நிற்கிறதோ என்ற பிரமை உண்டாயிற்று. அந்த இசையில் உள்ள எல்லா இலட்சணங்களும் உருவெடுத்துக் கண்ணெதிரே வந்து நிற்பது போல் தோன்றியது.

ஒரு பெண்ணைப் பார்த்து இந்த அழுதன் இதயம் இப்படி உருகிவிடும் என்று கனவிலும் நான் எண்ணவில்லை.

அன்று முதல் என் வாழ்க்கையின் போக்கே மாறிவிட்டது. என் வேலைகளில் நான் இதுவரையில் காணாத இன்பத்தைக் கண்டேன். மனத்தில் சதா ஒருவிதமான இன்ப நினைவு இருந்து கொண்டே இருந்தது. அடிக்கடி என்னை மறந்து பாட ஆரம்பித்து விட்டேன்.

ஒவ்வொரு நாளும் சூரியன் எப்பொழுது மேற்குத் திக்குக்குச் செல்வான், பகல் பொழுது எப்பொழுது குறையும் என்று ஆவலுடன் எதிர்பார்த்தேன். மாலை வேளையில் என் வேலை முடிந்ததும் மாந்தோப்பு வழியாகச் சென்று அவளைப் பார்ப்பேன். அவளும் ஒரு புத்தகத்தை வைத்துக் கொண்டு எனக்குக் காட்சி தருவாள்.

எத்தனையோ பெண்களை, லட்சக் கணக்கான ரூபாய்களுடன் வந்த பெண்களை உதறித் தள்ளிய நான் செங்கமலத்தைப் பார்த்த மாத்திரத்திலேயே பித்துப் பிடித்தவன்போல் அலைந்தேன்.

இதற்குள் அவள் யார் என்ற விஷயத்தையும் தெரிந்து கொண்டேன். செங்கமலம் பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவள். படித்தவள். நன்றாகப் பாடுவாள். வீணை வாசிப்பாள். தாத்தாவுக்குச் செல்லப் பெண். தந்தை கிடையாது. தாத்தாவின் உடம்பு அசௌகரியம் காரணமாக அவள் தன் தாயாருடன், அதாவது கிழவரின் மகளுடன் இந்தக் கிராமத்தில் இரண்டு மாதம் தங்குவதற்கு வந்திருக்கிறாள்.

தாத்தாவிடம் எப்படியாவது பழக்கம் செய்து கொள்ள வேண்டும் என்று தீர்மானித்தேன். அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்வதற்கு முன் செங்கமலத்திடம் நேரில் ஒரு வார்த்தையாவது பேசி விடுவது என்றும் முடிவு செய்து விட்டேன்.

முதலில் கொஞ்ச நாள் அவளை நேருக்கு நேர் சந்திக்கத் துணியவில்லை. மரங்களின் மறைவில் நின்று பார்த்தேன். பிறகு மறைவில் நிற்காமல் கடைக் கண்ணால் மட்டுமே கவனித்து வந்தேன். அதாவது அந்தப் பக்கம் பார்க்காமல் போகிறவன் போல் அவளைக் கவனித்துவந்தேன். இதற்கிடையில் எங்கள் கண்கள் சந்தித்தன.

இருந்தாலும் அவளுடன் பேசுவதற்குத் தைரியம் வரவில்லை. தமிழ் நாட்டுப் பெண்மணியிடம் முன்பின் அறிமுகம் இல்லாத அந்நிய மனிதன் நெருங்கிப் பேச முடியாது என்பது தெரிந்த விஷயம். அப்படி ஒரு பெண்ணிடம் ஆண் வலுவில் சென்று பேசிவிட்டால் அந்தப் பெண்மணியின் புனிதமே கெட்டு விட்டதாக நமது சமூகம் அடித்துக் கொள்ளாதா? இந்த வழக்கம் இன்னும் கிராமங்களில் உயிருடன் வாழ்ந்து வருகிறது.

செங்கமலத்துடன் நெருங்கிப் பழகுவதற்கு முன்பே அவள் என்னுடைய சாதியை விடத் தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவள் என்று தெரிந்தது.

ஆனாலும் அவளைச் சாதி என்னும் சிறிய சிமிழுக்குள் போட்டு அடைக்கக் கூடாது. இந்தக் காலத்துப் பெண்கள் போல அல்ல. அப்பழுக்கு அற்றவள். பால்வண்ணம் மாறாத பாலிகை அவள். செங்கமலம் என்றும் செங்கமலமேதான்!

நான் அவளைப் பார்ப்பதும் அவள் என்னைப் பார்ப்பதுமாக நாட்கள் கழிந்தன.

ஒரு நாள் மாலை. செங்கமலமும் அவள் தாத்தாவும் மாந்தோப்பில் உலாவிக் கொண்டிருந்தார்கள். எங்கிருந்தோ தும்பை அறுத்துக் கொண்டு ஓடிவந்த முரட்டுப் பசு ஒன்று அவர்களை நோக்கிப் பாய்ந்து வந்தது. தாத்தாவின் கையைப் பிடித்துக் கொண்டிருந்த செங்கமலம் பயந்து நகர்ந்து விட்டாள். பசு தாத்தா இருக்கும் திக்கை நோக்கி ஓடியது. தாத்தா திடுக்கிட்டு ஓடினார். மாடு அவரைத் துரத்தியது. செங்கமலம், "ஐயா, காப்பாற்றுங்களேன்!" என்று அலறினாள்.

அவ்வளவுதான். அடுத்த கணம் நான் என்ன செய்தேன் என்பதே எனக்கு நினைவில்லை. என் உடம்பில் எங்கிருந்துதான் அவ்வளவு பலம் வந்ததோ தெரியவில்லை. அந்த முரட்டுப் பசுவின் கொம்பைப் பிடித்து நிறுத்தினேன். என் மேல் துண்டை எடுத்து அதன் கழுத்தில்போட்டுக் கட்டிப் பிடித்தேன்.

தாத்தா உடலெல்லாம் 'கிடு கிடு' வென்று நடுங்க நின்று கொண்டிருந்தார். செங்கமலம் என்னை அன்போடு பார்த்தாள். நான் வெற்றி வீரன்போல் செங்கமலத்தைப் பார்த்துச் சிரித்தேன்.

செங்கமலம் புடவைத் தலைப்பால் தன் சிறிய முத்துப் பற்களை மறைத்துக்



பண்டிகை நாட்களிலும்

மற்றும் எல்லா நாட்களிலும்

# துஷார்

வனஸ்பதி




துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிட்.,
கர்னூல், தென் இந்தியா

டெல்லியில் நடைபெறும் இந்தியன் இண்டஸ்ட்ரீஸ் பொருட்காட்சியில் உள்ள பிர்லா தொழிற்காட்சிப் பகுதியில் எமது ஸ்டால் நெ. B-71க்கு விஜயம் செய்யுங்கள்

கொண்டு கலகலவென்று சிரித்தாள். "நல்ல சமயத்தில் உதவி செய்தீர்கள், வணக்கம்!" என்றாள்.

செங்கமலத்தின் கண்களில் கள்ளங் கபடமற்ற பேதைப் பெண்ணின் குறுகுறுப்பையும், உலகமனைத்தையும் அடிமை கொள்ளும் அழகையும், உள்ளத்தைப் பிரதிபலிக்கும் உற்சாகத்தையும் கண்டேன். 'அவள் இனிய குரல் மூலம் இன்னும் இரண்டு வார்த்தைகள் பேசமாட்டாளா!' என்ற ஆசை என் இதயத்தில் தோன்றிக் கொண்டிருந்தது.

தாத்தாவைப் பார்த்து வணங்கினேன். நானே என்னை அவர்களுக்கு அறிமுகம் செய்து கொண்டேன்.

கிழவரின் முகம் மலர்ந்தது. "என்ன, தாங்கள்தானா அமுதன்! உங்கள் உதவியை மறக்க மாட்டேன். நானே உங்களைப் பார்க்க வேண்டுமென்றிருந்தேன். உங்களைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். வாருங்கள், எங்கள் வீட்டுக்கு வந்து விட்டுப் போகலாம்!" என்றார்.

அந்தப் பசுவை அடித்து விரட்டி விட்டு அவர்களோடு சென்றேன்.

வழியில் செங்கமலம் "தாத்தாவுக்கு உயிரே போய் விட்டது! பயந்துபோய் விட்டார்கள்!" என்று சிரித்தாள்.

இந்தத் தடவை அவள் சிரிப்பு என் இதய வீணையை மீட்டி இன்ப நாதத்தைக் கிளப்பி விட்டது.

கிழவருக்கு உற்சாகம் ஏற்பட்டு விட்டது. "நானா பயந்து போனேன்! நீதான் உயிரே போய் விட்டது போல் அலறினாய்! உன் அலறலினால்தான் அமுதன் அப்படிப் பாய்ந்து வந்து அந்த மாட்டைப் பிடித்தார்" என்றார்.

"ஏதோ இந்த உதவி செய்யச் சந்தர்ப்பம் கிடைத்ததே என்று நான் சந்தோஷப்படுகிறேன்" என்றேன்.

"இந்தமாதிரி அபாய சமயத்தில் தெய்வம்தான் உங்களை அனுப்பி வைத்திருக்கிறது" என்றார் கிழவர்.

இப்படி நாங்கள் பேசிக் கொண்டே மெள்ள அவர்கள் வீட்டை நோக்கிப் போய்க் கொண்டிருந்தோம். அப்போது எதிர்பாராத விதமாக எனக்கு ஒரு யோசனை தோன்றியது. 'இப்பொழுது அவர்களுடன் அவர்கள் வீட்டுக்குச் செல்லக் கூடாது. நாளைக்குப் போகலாம்' என்று தீர்மானித்தேன்.

"எனக்கு வீட்டில் கொஞ்சம் அவசரமான வேலை இருக்கிறது. உங்களைத் தான் தெரிந்து கொண்டேனே, நாளை வருகிறேன்" என்று சொல்லி அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டேன்.

மறுநாள். செங்கமலத்தின் வீடு தேடிச் சென்றேன். கிழவர் வாசல் திண்ணையில் உட்கார்ந்திருந்தார். "வாருங்கள்! வாருங்கள்!" என்று முகம் மலர வரவேற்றார்.

முதுமையில் எவ்வளவு அமைதியான அழகு! எவ்வளவு சாந்த உருவம்! கிழவரின் இரு கண்களும் அருள் வடிவமாக ஆசீர்வாதம் செய்பவைபோல் இருந்தன! வெள்ளை வெளேர் என்று மல்லிகைப் பூ போன்ற கதர் வேஷ்டி உடுத்தியிருந்தார். அவர் ஆடை உடுத்தியிருந்த நேர்த்தி அவரைச் சிறந்த ரசிகர் என்று நிரூபித்துக் கொண்டிருந்தது. மேலே ஒரு அங்கவஸ்திரத்தைக் கழுத்து வரை போர்த்தியிருந்தார். வெளுத்த தலைமயிர். ஆனால் அதையும் சீவி விட்டிருந்தார்.

"உங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறேன். நீங்கள் வராவிட்டாலும் நானும் செங்கமலமும் உங்கள் வீட்டுக்கு வருவதாக இருந்தோம்" என்றார் கிழவர். பேசும்போது ஒரு கையால் சுருக்கம் நிறைந்த தம் தாடையைத் தடவிக் கொண்டு பேசினார்.

நான் செங்கமலத்தைப் பார்ப்பதற்குத் துடித்தேன். மெதுவாக அவள் இருக்கும் பக்கம் திரும்பினேன். அவள் தனது சிறிய பற்களைக் காட்டிக் குபீர் என்று சிரித்தபடியே தாத்தாவைப் பார்த்தாள்.

"ஏன் அம்மா அப்படிச் சிரிக்கிறாய்!" என்று கேட்டுக் கிழவர் என்னையும் செங்கமலத்தையும் மாறி மாறிப் பார்த்துப் புன்னகை புரிந்தார்.

அன்றைய தினம் அவர் வீட்டிலேயே சாப்பிட்டேன். சாப்பிடும் போது பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டே சாப்பிட்டோம். கிழவர் மிகப் பெரிய மேதை என்பது அவருடைய பேச்சில் நன்றாகத் தெரிந்தது. செங்கமலத்தை அவர் இஷ்டப்பட்ட வாலிபனுக்கே கட்டிக் கொடுக்க விரும்புகிறார் என்பதையும் தெரிந்து கொண்டேன். அவளை மணந்து கொள்ளுவதற்காகவே கிழவர் ஒரு பையனைத் தன்னுடைய செலவில் படிக்கவைத்து வருகிறார் என்பதும் தெரியவந்தது. விரைவில் செல்லப்பனுக்கும், — அவன்தான் செங்கமலத்துக்காகக் காத்திருப்பவன் — செங்கமலத்துக்கும் திருமணம் நடக்கப் போகிறது என்பதையும் தெரிந்து கொண்ட போது என் மனத்தை என்னவோ செய்தது!

செங்கமலம் அப்பொழுதெல்லாம் என்னை அர்த்த புஷ்டியுடன் பார்த்தாள்.

இந்தச் சந்திப்புக்குப் பிறகு நான் மாலை வேளையில் அவர்கள் வீட்டுக்குச் செல்ல ஆரம்பித்தேன். செங்கமலத்தைப் பார்க்



காமல் என்னால் ஒரு நாள்கூட இருக்க முடியாது என்பதை உணர்ந்தேன்.

ஒரு நாள் கிழவர், நான், செங்கமலம் மூவரும் உட்கார்ந்து பல விஷயங்களை மனம் விட்டுப் பேசிக் கொண்டிருந்தோம்.

"உங்களுக்குச் சமூக சீர்திருத்தத்தில் நம்பிக்கை உண்டா!" என்று வேடிக்கையாகக் கேட்டாள் செங்கமலம்.

"இந்தச் சமூகத்தைச் சீர்திருத்துவதற்காகவே பாடுபட்டு வருகிறேன். சாதிகள் ஒழிந்து எல்லாரும் சமமாக இருக்கும் பொற் காலத்தை எதிர்பார்த்து வேலை செய்து கொண்டிருக்கிறேன்" என்றேன்.

செங்கமலம் என்னைப் புன்முறுவலுடன் பார்த்தாள். பிறகு தன் அருமைத் தாத்தாவைப் பார்த்து இலேசாகச் சிரித்தாள்.

கிழவர் என்னைப் பார்த்தார். ஒரு தரம் தொண்டையைக் கனைத்துக் கொண்டு "அமுதன்! உங்களுக்குக் கல்யாணமாகி விட்டதா!" என்று கேட்டார்.

அவருடைய கேள்வியில் எவ்வளவோ பொருள் புதைந்து கிடந்ததை நான் அப்பொழுது உணரவில்லை.

ஏதோ அசட்டுக் கௌரவம் ஒன்று அப்பொழுது உண்டாயிற்று. வறட்டுக் கர்வத்துக்கு வசமானேன். "நான் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை. கல்யாணம் செய்து கொண்டு குடும்பத்துக்குள் கட்டுப்பட்டு என் வாழ்நாட்களை வீணாக்கப் போவதில்லை. இந்த நாட்டின் உயர்வுக்காகப் பாடுபடப் போகிறேன்" என்று உணர்ச்சியுடன் சொன்னேன்.

இதைக் கேட்ட செங்கமலம் ஒரு மாதிரி சிரித்தாள். "இந்த நாட்டில் ஆண்பிள்ளைகள் எல்லாம் மனத்தைத் திறந்து காட்டப் பயந்து கொண்டு வெறும் கோழைகளாக இருக்கிறார்கள். பெண் மணிகளோ சுதந்திர மில்லாமல் வாழ்கிறார்கள். இதற்கு மத்தியில் எங்கே சாதிகள் ஒழியப் போகின்றன! சமூகம் சீர்திருத்தப் போகிறது!" என்றாள். அவள் பேச்சிலே இருந்த அழுத்தம் என் இதயத்தைத் தெரிந்து கொண்டு என்னைப் பிடித்து அறைவது போல் இருந்தது.

எனக்கு உடனே என்னமோ போல் ஆகிவிட்டது. நான் உண்மையிலேயே வாழ்நாளெல்லாம் கல்யாணம் செய்து கொள்ளாமல் இருப்பது என்று முடிவு செய்து விடவில்லை. ஏதோ பேச்சுக்குத் தான் சொன்னேன். ஆனால் சொன்ன சொல்லை வெறும் கௌரவத்துக்காக, அதைக் காப்பாற்றிக் கொள்ள ஆசைப்பட்டு அதையே பிடிவாதமாகத் திரும்பத் திரும்பச் சாதிக்கத் தொடங்கினேன்.

"அப்படியானால் நீங்கள் கல்யாணமே செய்து கொள்ளப் போவதில்லையா!" என்றாள் செங்கமலம்.

உண்மையை ஒப்புக் கொண்டு என் மன உணர்ச்சிகளைச் சொல்லி விடலாமா என்று நினைத்தேன். ஆனால் செங்கமலத்தைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. ஒருகணம் மனத்தில் போராட்டம் நடந்தது. கிழவரைப் பார்த்தேன். அவர் வாய்பேசாமல் எங்கள் சம்பாஷணைகளைக் கேட்டு ரசித்துக் கொண்டிருந்தார்.

"இல்லை! இல்லை! நான் கல்யாணமே செய்து கொள்ளப் போவதில்லை" என்று அழுத்தம் திருத்தமாக அவளிடம் சொல்லி விட்டேன்.

"அப்படியானால் தங்கள் உள்ளத்தில் உண்மையாக இருக்கும் காதலை நிறைவேற்றுவது தங்கள் போன்ற இலட்சிய வாதிகளின் குறிக்கோள் இல்லை போலும்" என்றாள். பிறகு என்னைப் பார்த்துக் கலகலவென்று சிரித்தாள்.

என் எண்ணத்தை அவளுக்குப் புரியும்படி செய்து, மெள்ள மெள்ள என் வழிக்கு அவளை இழுத்து வெற்றியடைய வேண்டும் என்று காத்துக் கொண்டிருந்தேன். ஆனால் அந்தமாதிரி சந்தர்ப்பமும் சூழ்நிலையும் ஏற்பட்ட சமயம் என் வாய் அடைத்துப் போய் விட்டது.

இதற்குப்பிறகு எத்தனையோ தடவை அவள் வீட்டுக்குச் சென்று சாப்பிட்டிருக்கிறேன். செங்கமலமும் நானும் தன்னைக்

தனியே இருந்து பேசிக் கொண்டிருக்கிறோம். என் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அவளிடம் விஷயத்தை வெளியிட முடியவில்லை.

இரண்டு மூன்று தினங்களாகச் செங்கமலத்தையும் கிழவரையும் பார்க்க முடியவில்லை. அவர்கள் வீட்டுக்குப் போகவும் முடியவில்லை. வயல் வெளியில் நடவு வேலை ரொம்பவும் அதிகமாயிருந்தது.

அன்று காலையில் இருந்து சாப்பாட்டுக்குக் கூட செல்லாமல் வயல்வெளியில் வேலைத் தலையில் இருந்தேன். ஏராளமான ஆட்கள் நடவு நட்டுக் கொண்டிருந்தார்கள். அந்தச் சமயத்தில் தாத்தாவிடமிருந்து ஒரு ஆள் வந்தான். "தாத்தா அழைத்து வரச் சொல்கிறார்" என்றான்.

அவசரம் அவசரமாகச் சென்றேன். தாத்தா, செங்கமலம், பெரிய அம்மாள் எல்லோரும் பிரயாணத்துக்குத் தயாராயிருந்தார்கள். வாசலில் பெரிய வில்வண்டி ஒன்று பூட்டி நின்றது. தாத்தா தம் கையிலிருந்த தந்தியை என்னிடம் கொடுத்து விட்டு என்னைப் பார்த்தார்.

"உடனே புறப்பட்டு வரவும். எல்லாம் தயாராயிருக்கிறது. நானே ரயிலில் சந்திக்கிறேன்—செல்லப்பன்" என்று அந்தத் தந்தியில் இருந்தது.

நான் ஒரு கணம் அசைவற்று நின்றேன். பின்பு தாத்தாவையும் செங்கமலத்தையும் மாறி மாறிப் பார்த்தேன்.

செங்கமலம் எழுந்து வந்து என் காலைத் தொட்டு வணங்கினாள். நான் காலை இழுத்துக் கொண்டேன். "ஏன் இப்படிக் காலை இழுத்துக் கொள்ளுகிறீர்கள்! இன்று இது புதிராக இருந்தாலும் ஒரு நாள் வெளிப்படுத்தானே தீர வேண்டும்! மீண்டும் தங்களைப் பார்க்க முடிகிறதோ இல்லையோ!" என்றாள்.

கிழவர் பரபரப்போடு சொன்னார்: "ஆமாம், அமுதா! இனி நாம்பள் இங்கு வரச் சௌகர்யப்படுகிறதோ என்னவோ! செங்கமலத்தின் வாழ்க்கையில் பெரிய மாறுதலை எதிர்பார்த்தேன். செங்கமலமும் எதிர்பார்த்தாள். ஆனால் அவள் தமிழ் நாட்டுப் பெண். மனத்தைக் கல்லாக்கி, உணர்ச்சியை அடக்கிக் கொண்டாள். எப்படியும் அடுத்த மாதம் அவளுக்குக் கல்யாணம் நடந்துவிடும்."

கிழவரை வணங்கினேன். அவர் என்னை அன்புடன் அணைத்துக் கொண்டார்.

** ** **

வருஷங்கள் மூன்று எப்படியோ ஓடி மறைந்து விட்டன. நானும் செங்கமலத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள எவ்வளவோ முயன்றேன். ஒன்றும் தெரிந்து கொள்ள முடியவில்லை.

பகவான் மனிதனுக்கு அளித்த எத்தனையோ செல்வங்களில் மறதி ஒரு பெரிய செல்வம். காலப்போக்கில் செங்கமலத்தை மறந்து விட்டேன். ஆனால் கல்யாணம் செய்து கொள்ளும் விருப்பத்தையும் தியாகம் செய்து விட்டேன். என் இதயத்தில் செங்கமலத்தைத் தவிர வேறு யாருக்கு இடம் கொடுக்க முடியும்!

ஒரு நாள் தபால்காரர் சிலோன் தபால் ஒன்றைக் கொடுத்து விட்டுப் போனார். அவசரம் அவசரமாகப் பிரித்துப் பார்த்தேன். அப்படியே அயர்ந்து போய் விட்டேன். மாலை மாலையாகக் கண்ணீர் கொட்டியது. "ஐயோ, செங்கமலம் உன் நிலைமை இப்படியா ஆகவேண்டும்! என் வரட்டுக் கர்வத்தைக் கடவுள் சோதித்துவிட்டார்!" என்று கதறினேன்.

அன்று இரவே சென்னைப் பட்டணத்துக்கு ரயில் ஏறினேன். ஜெனரல் ஆஸ்பத்திரியில் செங்கமலம் ஸ்மரணை இல்லாமல் கிடந்தாள். கடுமையான ஜுரம் அடித்துக் கொண்டிருந்தது. அவளைப் பார்க்காத டாக்டர் இல்லை. செய்யாத சிகிச்சை ஒன்றும் கிடையாது.

அவளுடைய உடம்பு கொதித்துக் கொண்டிருந்தது போல் அவள் உள்ளமும் கொதித்துக்கொண்டிருந்தது. ஒரே நினைவு ஒரே ஞாபகம்தான். "என் உயிர் போவதற்குள் அமுதனை ஒரு தரம் பார்த்துவிட வேண்டும்" என்று ஓயாமல் சொல்லிக் கொண்டே இருந்தாள்.

"நான்தான் அமுதன் வந்திருக்கிறேன்" என்று கண்ணீருக்கிடையே கதறினேன்.

சட்டென்று படுக்கையில் இருந்து எழுந்தாள். தலையாட்டில் இருந்த கவர் ஒன்றை எடுத்து என்னிடம் கொடுத்தாள். பக்கத்தில் நின்று கொண்டிருந்த பச்சிளங் குழந்தையைப் பிடித்து என் கையில் ஒப்படைத்தாள். "எல்லா விவரமும் அந்தக் கவரில் இருக்கிறது" என்றாள். என் கைகளைப் பிடித்துத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள். மலர்ந்த முகத்துடன் படுக்கையில் படுத்தாள்.

சட்டென்று அமுதன் கதையை நிறுத்தி விட்டு நீண்ட பெருமூச்சு விட்டார். அவருடைய அமைதியைக் கெடுக்க விரும்பாமல் அவரைப் பார்த்துக் கொண்டிருந்தேன். செங்கமலத்தின் குடும்ப வாழ்க்கையைப் பற்றித் தெரிந்து கொள்ள விரும்பினேன். என் விருப்பத்தை எப்படியோ புரிந்து கொண்ட அமுதன் மேலே கதையைத் தொடர்ந்தார்:

செங்கமலத்துக்கு வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தது. திருமணம் நடந்த இரண்டாவது மாதம் தாத்தா காலமாகி விட்டார். ஏராளமான சொத்தையும், செல்லப்பனையும் செங்கமலத்துக்கு வைத்துவிட்டுத்தான் போனார்.

செங்கமலம் செல்லப்பன் குடும்ப வாழ்க்கை ஒரு குறையும் இன்றி நடைபெற்றது. ஒரு பெண் குழந்தைக்குச் செங்கமலம் தாயானாள். குழந்தை மழலை மொழியில் செல்லப்பனும் செங்கமலமும் மகிழ்ந்து போனார்கள்.

செல்லப்பன் பங்கு மார்க்கெட்டில் ஈடுபட்டு லட்சம் லட்சமாகப் பணத்தைச் சேர்த்தார். பம்பாய், கல்கத்தா, சிங்கப்பூர் என்று பறந்து கொண்டே இருந்தார். பணத்துடன் பணம் சேர்ந்தது. செங்கமலம் செல்வத்தில் மிதந்தாள். ஆனால் விதியின் விளையாட்டை என்னவென்று சொல்வது! விதி செங்கமலத்தைப் பார்த்துப் பயங்கரமாகச் சிரித்தது!

செல்லப்பன் ஏறிச் சென்ற சிங்கப்பூர் விமானம் விபத்துக்குள்ளாகியது. அந்த விபத்தில் செல்லப்பன் சிக்கி மறைந்தார்.

செல்லப்பன் மறைவைக் கேட்ட செங்கமலம் அப்படியே செயலற்றுப் போனாள். அன்று படுத்தவள்தான் பிறகு அவள் எழுந்திருக்கவே இல்லை. அவளுக்கு இந்த அமுதன் நினைவு மட்டும் இருந்து கொண்டே இருந்தது. எனக்குத் தன்னுடைய சொத்தை எல்லாம் எழுதி வைத்தாள். விவரமாக ஒரு கடிதம் எழுதித் தபாலில் சேர்த்தாள்.

நான் போய் அவள் இறுதிச் சடங்கைச் செய்து விட்டு, அவள் அருமைக் குழந்தையை அழைத்து வந்து விட்டேன். அந்தக் குழந்தையால் இன்றையதினம் நூற்றுக்கணக்கான அனாதைக் குழந்தைகள் தங்கள் தாய் தந்தையைப் பிரிந்து விட்டோம் என்ற ஏக்கம் இல்லாமல் இருக்கின்றனர். ஆதரிப்பவர் இல்லையே என்று ஏங்கி, உயிர் வாழ்வதற்காக மதம் மாறாமல் இருக்கின்றனர். செங்கமலம் தாயை இழந்த எண்ணற்ற குழந்தைகளுக்குத் தாயாக, தெய்வமாக இருக்கிறாள்.

இந்த இடத்தில் அமுதன் கதையை முடித்து விட்டு வானத்தில் மேலே வந்து விட்ட சந்திரனைப் பார்த்தார்.

நிகழ்ந்ததை எண்ணியதால் எழுந்த உணர்ச்சியினால் அமுதனின் முகத்தில் சோகம் படர்ந்திருந்தது. அடுத்த கணம் அவர் முகத்தில் தனிக் களை ஏற்பட்டது. அவர் நெருங்கி வந்து தம் மனிதத் தத்துவம் நிறைந்த ஆழ்ந்த கண்களால் தம் பேச்சைக்கேட்ட என்னைக் கூர்ந்துபார்த்து விட்டு ஆனந்தமான குரலில் பேசினார்:

"நாளை பதினைந்தாம் நாள் தீபாவளி. செங்கமலத்தின் செல்வத்தால் இன்றைய தினம் நூற்றுக் கணக்கான அனாதைக் குழந்தைகள் சந்தோஷமாகத் தீபாவளியைக் கொண்டாடப் போகின்றன.

செங்கமலத்தின் குழந்தைக்கு ஒரு குறையும் இல்லை. நூற்றுக்கணக்கான சகோதர குழந்தைகளுடன் ஆனந்தமாக இருக்கிறது. தாயும் தந்தையுமாக நான் இருக்கிறேன்" என்றார் அமுதன். அவர் கண்கள் மீண்டும் பிரகாசமாக ஒளி விட்டன. வற்றாத அன்பு அதில் ததும்பியது.

காற்று பலமாக வீசியது. அடர்ந்த மாந்தோப்பில் உள்ள மரங்கள் ஆடி அசைந்து ஏதோ முணு முணுத்துக் கொண்டே இருந்தன. இவைகளுக் கெல்லாம் மேலே அமுதனின் அனாதைப் பள்ளிக்கூடத்தின் மணி ஓசை 'கண கண' வென்று காற்றிலே மிதந்து வந்தது.



PHILIPS

இப்புனிதமான மகிழ்ச்சியூட்டும்
திருநாளில் எங்கள் மனமார்ந்த
நல் வாழ்த்துக்கள்

பிலிப்ஸ்

எலக்ட்ரிகல் கம்பெனி (இந்தியா) லிமிடெட்
35/4. மவுண்ட் ரோடு, சென்னை - 2.

# உர ராஜனுக்கு முடி சூட்டல்

அந்த நாளிலே, உரங்களெல்லாம் ஒன்று கூடி, தங்களுக்குள் ஒருவரை ராஜாவாகத் தேர்ந்தெடுக்க வேண்டுமெனத் தீர்மானித்தன. ஒவ்வொரு எருவிற்கும் தான் அரசனாக வேண்டும் என்று ஆசை எழுந்தது. தேர்தல் பிரசாரம் பலமாக நடந்தது. தத்தம் சின்னத்தைப் போற்றிச் சொற்பொழிவுகளும், ஊர்வலங்களும் நடைபெற்றன. சூரியன் மார்க்கு "நானே கண்கண்ட தெய்வம், நான் இல்லாவிடில் உலகமே அழிந்து விடும். ஆகையினாலே நானே மகுடத்திற்கு உரியவன்!" என்று சொல்லிற்று. அதற்குச் சந்திரன் மார்க்கு, "சிவபெருமான் என்னைத்தான் தம் திருமுடியில் அணிந்துள்ளார். அதனால் நானே மகுடத்திற்கு உரியவன்!" என்று கோஷித்தது. இப்படி ஒவ்வொரு எருவும் தன் பெருமையை விளக்கிப் பேசியது. "**கிரீட மார்க்கு**" தன் உரிமையைப் பற்றி அடக்கத்துடன் பின்வருமாறு சொல்லியது:

"நான் ஸ்ரீ கிருஷ்ண பகவானின் குலத்தில் பிறந்தேன். விவசாயத்திலும், முக்கியமாக எருவு விஷயங்களிலும் நீண்ட அனுபவமுள்ள குடும்பத்தாரால் வளர்க்கப் பட்டேன். ஸ்ரீ கிருஷ்ண பகவானின் கிரீடமே எனது சின்னம். என்னுடைய குணமும் ஸ்ரீ கிருஷ்ண பகவான் குணத்தை ஏறக்குறைய ஒத்திருக்கும். அதாவது குணம் சற்று சாவகாசமாகப் புலப்பட்டாலும் உறுதியும், நிரந்தரமான மேம்பாட்டையும் கொடுக்கும். அரைகுறையாக எதையும் செய்ய மாட்டோம். குசேலனுக்கு ஸ்ரீ கிருஷ்ண பகவான் அள்ளிக் கொடுத்தவாறு, எம்மை ஆதரிப்போருக்குச் செல்வத்தைக் குவிப்போம்!"

இந்தப் பேச்சைக் கேட்டு மற்ற உரங்கள் எல்லாம் வியப்படைந்து தம்மை அறியாமலே, "**கிரீட மார்க்கு** உரத்திற்கு ஜெய்! **கிரீட மார்க்கு** வாழ்க" என்று கோஷமிட்டன. அந்தக் கூட்டத்திலேயே **கிரீட மார்க்கு** உரத்திற்கு முடி சூட்டப்பட்டது. அன்று முதல் "**கிரீட மார்க்கு**" ஸ்ரீ கிருஷ்ண பகவானின் சின்னமாகவும், உர ராஜ சின்னமாகவும் விளங்குகின்றது.

உரங்களின் "ராஜா"—"**கிரீட மார்க்கு**" என்ற தீர்ப்பு உரங்களின் பண்டைக்கால தீர்ப்பு மட்டுமல்ல. விவசாயத்தில் தேர்ச்சி பெற்ற ஒவ்வொரு மிராசுதாரின் அனுபவமும் அதுவே!




'வினைப்பயன்களின் வேதனைகள் குறைக.' நோவு, தலை வலி, ஜலதோஷம் அல்லது ஜ்வரம் இவற்றினின்று "அனஸின்" நிச்சயமாக நிவாரண மளிக்கும் என்பதை நினைவிலிருத்துங்கள்.

# 'அனஸின்'

வில்லைகள்

## வேதனைகளிலிருந்து விடுதலைபெற

இந்தியாவில் தயாரிப்பவர்கள் :
ஜியாப்ரே, மானர்ஸ் & கோ. லிமிடெட். பம்பாய், கல்கத்தா, மதராஸ், டில்லி.
டிரேட் மார்க் உரிமையாளர்கள் : ஒயிட் ஹால் பார்மகல் கம்பெனி, நியூயார்க் யு.எஸ்.ஏ.

# நாளும் கிழமையும்




விளக்கு வைக்கும் நேரம். அந்தி பிரியவில்லை. ஆயினும் வானம் இருண்டு விட்டது. கண்மூடிக் கண் திறக்கும் நேரத்தில் கார்முகில்கள் குழுமிவிட்டன. மழை 'இதோ வந்து விட்டேன், இதோ வந்து விட்டேன்!' என்று முழங்கிக் கூறியது. இந்தத் தீபாவளிக்கும் மழைக்கும் என்னதான் கொண்டாட்டமோ! பண்டிகை கொண்டாடும் மகிழ்ச்சியில் மனிதர்களையே அல்லவா மூழ்கிக் கொள்ளுகிறது!

ஆடுதுறை ஸ்டேஷனுக்கு அருகில் உள்ள ஆலமரத்தடியில் ஐந்தாறு வண்டிகள் அவிழ்த்துப் போடப்பட்டிருந்தன. அந்த ஸ்டேஷனில் அத்தனை வண்டிகள் கிடப்பதற்குக் காரணம், அந்தப் பிராந்தியத்தில் பத்து மைல் சுற்றளவுக்கு மண் ரோட்டில் போய் வர அவற்றை விட வேறு சௌகரியமான சாதனங்கள் கிடையாது என்பதுதான். தெற்கே கோனேரிராஜபுரம், விஷ்ணுபுரம், திருவீழிமிழலை வரைகூட வண்டிகளுக்குச் சவாரி கிடைப்பது உண்டு. புதூர் அணைக்கரை பஸ் வந்து விட்ட பொழுதிலும் வண்டிகளுக்கு ஒரு கிராக்கி இருக்கத்தான் செய்தது.

ஆடுதுறை ஸ்டேஷன் மெயின் லைனில் உள்ள முக்கியமான புகை வண்டி நிலையங்களில் ஒன்று. மாயவரத்தில் இறங்கி வண்டி மாறிக் கிளைப்பாதை வழியாக ரெயில் பஸ் வசதியற்ற உள் அடங்கிய கிராமங்களுக்குச் செல்பவர்கள் கூடக் கனெக்ஷன் டிரெயினுக்காகக் காத்திராமல் ஆடுதுறையில் வந்து இறங்குவார்கள். காரணம், சீக்கிரமாக வீடு போய்ச் சேர்ந்து விடலாம் என்பதுதான். எனவே, அந்த ஸ்டேஷனில் அத்தனை வண்டிகள் நிற்பதில் ஆச்சரியம் என்ன!

பொதுவாகக் காலை வண்டி வரும் நேரத்துக்குத்தான் சவாரிகளுக்கு அதிகக் கிராக்கி இருக்கும். தீபாவளி, பொங்கல் விசேஷ தினங்களில் மட்டும் மாலை வேளைகளில் வருபவர்களும் உண்டு. மற்ற நாட்களில் மாலை நேரங்களில் வண்டிக்காரர்களுக்குச் சவாரி கிடைக்கும் என்று சர்வ நிச்சயமாகச் சொல்ல முடியாது. இருந்தாலும் ஒரு 'சான்ஸ்' பார்க்கலாமே என்று இரண்டொரு வண்டிகள் எப்பொழுதும் அங்கே நின்று கொண்டுதான் இருக்கும்.

அன்று இரவு தீபாவளி. அதனால் மாலை வண்டிகளில் வந்து இறங்குபவர்களும் இருக்கக்கூடும் அல்லவா! அதனால்தான் அன்று வண்டிகள் நித்தத்தைக் காட்டிலும் சற்று அதிகமாகவே நின்று கொண்டிருந்தன. ஆனால் பொல்லாத மழை வந்து வண்டிக்காரர்களின் மனத்திலே ஒரு பீதியை விளைவித்தது. படபடவென்று பெரிய தூற்றலாக இரண்டொன்று விழவும் செய்யவே, தன் வண்டியில் உட்கார்ந்து வெற்றிலை பாக்குப் போட்டுக் கொண்டிருந்த கோவிந்தன், "என்ன, அண்ணே! மழை வரும் போலிருக்கிறதே! என்ன செய்யலாம்?" என்று பக்கத்திலிருந்த தணிகாசலத்தைப் பார்த்துக் கேட்டான்.

"வீட்டுக்குப் புறப்பட்டுவிட வேண்டியது தான். மழையில் நனைந்து கொண்டிருக்க முடியுமா?" என்றான் தணிகாசலம். அன்று காலை அவனுக்கு நல்ல சவாரி கிடைத்து நாலு காசு கிடைத்திருந்தது. அந்தத் தைரியத்தில்தான் அவன் அப்படிப் பேசினான்.

"நல்ல சவாரி கிடைக்கக் கூடிய நாளாகப் பார்த்து இந்தப் பாழும் மழை இப்படி வந்து தொலைக்கிறதே!" என்றான் பனந்தோட்டத்தான். அன்று அவனுக்கும் கணிசமாகப் பத்து ரூபாய் கிடைத்திருந்தது. இருந்தாலும் பேராசை அவனை அப்படிப் பேச வைத்தது.

"இந்த மழையில் நனைந்து கொண்டிருக்க நம்மால் ஆகாது. மாலை நேரத்தில் மழை பிடித்தால் எப்பொழுது நிற்குமோ, சொல்ல முடியாது. அதனால் நான் வீட்டுக்குப் புறப்பட்டு விடலாம் என்றுதான் இருக்கிறேன்!" என்றான் ரங்கசாமி. அவ்வருஷம் தான் புதுமணம் புரிந்து கொண்டிருந்தான் அவன். பொழுதைப் புகை வண்டி நிலையத்தில் வீணாக்குவதைக் காட்டிலும் புது மனைவியிடம் சென்று விட வேண்டும் என்ற துடிப்பு அவனுக்கு.

அதே சமயத்தில் அவன் சொல்லை ஆமோதிப்பவனே போல் ஸ்டேஷனுக்குள் சென்றிருந்த பேச்சிமுத்து, "நாளும் கிழமையுமாக நாலு காசு சம்பாதிக்கலாம் என்று வந்தால் இரண்டு பக்கத்து வண்டியும் லேட்டாமில்லே! மழையைப் பார்க்கிறதா, வண்டியைப் பார்க்கிறதா!" என்று கேட்டுக் கொண்டே வந்தான்.

அடுத்த கணம் எல்லா வண்டிகளும் சொல்லி வைத்தாற் போல் பூட்டிப் புறப்படத் தயாராகி விட்டன. மருதமுத்துப் படையாட்சியின் வண்டி மட்டும் அவிழ்த்துப் போட்டபடியே கிடந்தது. வண்டி நுகத்தடியில் உட்கார்ந்த வண்ணம் அவன் ஆகாயத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தான். வான வெளியிலே மேகங்கள் கூட்டம் போட்டிருந்தது போலவே, அவனுடைய மன வெளியிலும் சிந்தனை முகில்கள் கூட்டம் போட்டிருந்தன.

அன்று காலை வண்டிக்கு அமோகமாக ஆடுதுறை வண்டிக்காரர்கள் அனைவருக்குமே நல்ல சவாரி கிடைத்திருந்தது. ஆனால் மருதமுத்துப் படையாட்சியின் துரதிர்ஷ்டத்தை என்னவென்று சொல்வது! அவன் வண்டி மட்டும் கேட்பாரற்றுக் கிடந்தது. அதுவும் என்றைக்கு! நாளும் கிழமையுமான தீபாவளியன்றைக்கு; நாலு ஜனங்கள் வந்து இறங்கும் பண்டிகை அன்றைக்கு!

இந்தக் காலத்தில் வாழ்க்கையில் வெற்றி காண விரும்புபவர்களுக்கு எந்தக் காரியத்திலும் முந்திக் கொள்ளத் தெரிந்திருக்க வேண்டும்; 'தடாலடித்தனம்' செய்து தன் காரியத்தைச் சாதித்துக் கொள்ளத் தெரிந்திருக்க வேண்டும். ஆனால் வாழ்க்கையில் பல விதங்களிலும் அடிபட்ட அந்தக் கிழவனுக்கு அந்தக் காரியம் மட்டும் ஏனோ வரவில்லை. தனக்கு வரவேண்டியது எங்கும் போய் விடாது என்ற நம்பிக்கை படைத்தவனாயிருந்தான் அவன். எத்தனையோ இன்னல்களுக்கு இலக்கானபோதும் கூட அவன் வாழ்க்கையை வெறுக்கவில்லை; நம்பிக்கையைச் சிறிதும் தளர விடவில்லை.

"ஏன், தாத்தா! நீங்கள் வரவில்லையா?" என்று கேட்டான் தம்புசாமி.

தாத்தா பதில் சொல்லவில்லை.

"அவர் இப்பொழுது வர மாட்டார், அப்பா! மீசை நரைச்சுப் போச்சே பொறுப்ப ஆசை நரைக்கவில்லே!" என்று குத்தலாகப் பேசினான் பனந்தோட்டத்தான், காலையில் நல்ல சவாரி கிடைத்து விட்ட கர்வத்தில்.

"ஆமாம், அப்பா! சாக வயசாச்சு. படுகிற பேராசைக்குக் கணக்கு வழக்கு இல்லே!" என்றான் பேச்சிமுத்து.

அன்று சவாரியே கிடைக்காத அந்தக் கிழவனுக்கு யாருமே ஆறுதல் சொல்ல முன் வரவில்லை; அனுதாபம் காட்ட முன் வரவில்லை. வெந்த புண்ணில் வேல் இடும் கதையாகத்தான் பேசினார்கள். அவரவர் கவலை அவரவருக்கு. பிறரைப் பற்றிக் கவலைப்பட்டால் இந்த உலகத்தில் கட்டி வருமா!

"தாத்தா! நல்ல சவாரியாகப் பார்த்துக்கிட்டு நீங்கள் மெதுவாக வாருங்கள். நாங்கள் போகிறோம்!" என்று சொல்லி மாட்டைத் தட்டி ஓட்டினான் பனந்

"இந்த நாட்களில் குழந்தைகளுக்கு க்ஷயம் வருகிறதாம். ஒருவேளை க்ஷயமாயிருக்குமோ!" என்று லேசான சந்தேகத்தைக் கிளப்பி விட்டனர்.

"க்ஷயமா! குறைவையே கண்டறியாத நம் நாட்டுக்கு க்ஷயம் வருவதாவது! புஷ்டிகரமான நல்லுணவு அளித்தால் இத்தகைய நோய்கள் எல்லாம் இருக்கும் இடம் தெரியாமல் பறந்துவிடும்" என்று ஓங்கி அடித்து விட்டான் மருதமுத்து.

அந்த ஏழைமை நிலையில் புஷ்டிகரமான உணவுக்கு அவன் எங்கே போவான்! மனம் உண்டானால் மார்க்கம் உண்டு. இம்மூதுரையை அறிந்த அவன் அல்லும் பகலும் வண்டி ஓட்டிப் பிழைக்கத் தயாராகி விட்டான். புஷ்டிகரமான உணவு கிடைக்கத் தொடங்கவே அவனது பேத்தியின் உடம்பும் தேறிவிட்டது.

## 3

வானத்தில் நிற்கும் மழையைக்கூடப் பொருட்படுத்தாமல் சிந்தனையில் ஆழ்ந்திருந்த அவனுக்குச் சிறு தூற்றலில் ஆரம்பித்துப் பெரும் தூற்றலாகி மாடுகள் நனைந்ததுகூடத் தெரியவில்லை.

அன்று காலையில் எழுந்ததும் வண்டியைப் பூட்டிக் கொண்டு புறப்பட்ட அவனைப் பார்த்து, "இன்று தீவளி தெரியுமா, தாத்தா!" என்றாள் அவன் பேத்தி சௌபாக்கியம்.

"தெரியும், கண்ணே!"

"என் உடம்புதான் நல்லாத் தேறிடுச்சே! பாட்டி எண்ணெய்க்குளி குளிக்கலாம் என்று சொல்லுறா. எனக்குப் பட்டுப் பாவாடையும் பட்டாசும் வாங்கித் தரியா, தாத்தா! குளிச்சிட்டுப் புது பாவாடை கட்டிக் கொண்டு பட்டாசு வெடிக்கிறேன்!" என்றாள் குழந்தை கொஞ்சலாக.

பட்டுப் பாவாடை வாங்க வக்கு இல்லை என்பது அவனுக்கு நன்றாகத் தெரியும். இருந்தாலும் குழந்தையின் மனத்தைக் கெடுக்கலாமா! கிடைக்கும் வாடகையைக் கொண்டு பட்டுத் துணி இல்லாவிட்டாலும் நூல் துணியாவது வாங்கித் தருவது என்று தீர்மானித்துக் கொண்டு, "ஆகட்டும், கண்ணே!" என்றான்.

அவன் ஆசை நிறைவேறவில்லை. சவாரிக்கு யாராவது அவன் வண்டியைத் தேடிக் கொண்டு வந்தால்தானே, கிடைக்கும் வாடகையைக் கொண்டு அவன் துணியும் மணியும் வாங்க!

கும்பகோணம் பக்கத்திலிருந்து வந்து நி[illegible] வண்டியின் கிராவி ஓசை அவன் சி[illegible]து அணைகோலியது. மழையில் [illegible] கொண்டிருந்த மாடுகளைப் பார்த்[illegible] [illegible]வாயில்லா ஜீவன்களை இப்படி மழையில் நனைய வைத்து விட்டோமே!' என்ற அங்கலாய்ப்புடன் அவற்றை நெருங்கினான். "என் கண்மணிகளா! மழையில் நனைய வைத்து விட்டேனே என்று என்னைத் திட்டாதீர்கள். குழந்தை சௌபாக்கியத்தைச் சந்தோஷப்படுத்த வேண்டும் என்ற சிந்தனையில் உங்களை மறந்து விட்டேன். என் குல விளக்கு அல்லவா அவள்!" என்று கண்களில் நீர் சோர அவற்றைத் தடவிக் கொடுத்தவாறே சொன்னான்.

உணர்ச்சி எல்லை மீறி விட்டால் மனிதன் உயிரற்ற ஜடப் பொருள்களுடன் கூடப் பேசத் தொடங்கி விடுகிறான். சீதா பிராட்டியைப் பறி கொடுத்த பரந்தாமனான ராமன் செடி கொடிகளையும், மரம் மட்டைகளையும் ஆறு மலைகளையும், கண்டு கதறவில்லையா! அப்படி இருக்கும் பொழுது பாமரனான மருதமுத்து மாடுகளுடன் பேசியதில் வியப்பு என்ன! அவனுடைய கர ஸ்பரிசம் பட்டதும் மாடுகள் மெய் சிலிர்த்து உற்சாகத்துடன் நின்றன. 'நீ எப்பொழுது வேண்டுமானாலும் வண்டியைப் பூட்டு. மழை காற்றைக் கூட லட்சியம் செய்யாமல் நாங்கள் போய் வரத் தயார். உன் ஆசை நிறைவேறினால் எங்களுக்குச் சந்தோஷம் தான்!' என்று சொல்வது போலிருந்தது அவை நின்ற தோரணை.

அந்தச் சமயம் பிளாட்பாரத்தைத் தாண்டி வெளியே வந்தவர் ஆடுதுறை பாங்கியின் மானேஜர் ஒருவர்தான். ஆடுதுறையிலேயே இருக்கும் அவர் எதற்காக வண்டி வைத்துக் கொண்டு வீட்டுக்குப் போகப் போகிறார்!

மருதமுத்து நம்பிக்கை இழந்து விட்டான். 'இன்று நமக்குச் சவாரியே கிடைக்காது போலிருக்கிறது. சக வண்டிக்காரர்களுடன் புறப்பட்டுப் போயிருந்தாலாவது அவர்களுடைய புகைச்சலுக்கு ஆளாகாமல் இருந்திருக்கலாம். சரி, மாயவரம் வண்டியையும் பார்த்து விட்டுப் புறப்படுவோம்!' என்று தீர்மானித்துக் கொண்டான். அதே சமயம், "மருதமுத்து!" என்ற குரல் வந்தது. குரல் வந்த திசையைத் திரும்பிப் பார்த்தான். பாங்கி மானேஜர்தான் அவனைக் கூப்பிட்டுக் கொண்டிருந்தார்.

"என்ன, எசமான்!"

"கோனேரி ராஜபுரம் வரை போக வேணும். வருகிறாயா!"

மானேஜருக்கு மாமனார் வீடு கோனேரி ராஜபுரத்தில்தான் இருந்தது. தன் குழந்தைகளுடன் அவருடைய மனைவி பிறந்தக வாசம் செய்து கொண்டிருந்தாள். அதனால் அவ்வருஷத்திய தீபாவளியைக் கொண்டாட அவர் அங்கே போவதாயிருந்தார்.

"வர்றேனுங்க, எசமான்!"

"என்ன சத்தம் கேட்கிறாய்!"

"உங்களுக்குத் தெரியாததா! நீங்களே பார்த்துக் கொடுங்கள்!" என்றான் மருதமுத்து. மற்ற வண்டிக்காரர்களாயிருந்தால், வேறு வண்டியே இல்லாத அந்தச் சமயத்தில் சரியாகக் கறந்து விட்டுத்தான் மறு காரியம் பார்த்திருப்பார்கள்.

"மூன்றுதானே வாடிக்கை!"

"அதுதான் சொல்லிவிட்டேனே, உங்கள் இஷ்டம் என்று! வண்டியைப் பூட்டட்டுங்களா!"

"பூட்டு. மழையாக இருப்பதனாலே நாலு தருகிறேன். சம்மதந்தானே!" என்றார் மானேஜர்.

மருதமுத்து பதில் பேசாமல் வண்டியைப் பூட்டலானான். வண்டியைப் பூட்டி விட்டு மருதமுத்து வந்து கூப்பிடட்டும் என்று மானேஜரும் ஸ்டேஷனுக்குள் சென்று உட்கார்ந்து விட்டார்.

அதற்குள்ளாக மாயவரம் வண்டி வந்து நின்றது. ரெயிலிலிருந்து இறங்கி அவசரம் அவசரமாக ஒரு போலீஸ்காரர் வெளியே வந்தார். மருதமுத்துப் படையாட்சியின் வண்டி பூட்டி நிற்பதையும்,



வேறு வண்டியே அங்கு இல்லாமல் இருப்பதையும் கண்டார். அவருக்குத் திக்கென்றது. உடனே மருதமுத்துவிடம் ஓடி, "இன்ஸ்பெக்டர் ஐயா வந்திருக்கிறாரு, வண்டி போகவேணும்!" என்றார்.

மருதமுத்துவுக்குச் சுருக்கென்றது, போலீஸ்காரரைப் பார்த்ததும். வெண்ணெய் திரண்டு வரும் நேரத்தில் தாழி உடைய வேண்டுமா! போலீஸ்கார ஐயா கூப்பிடும் பொழுது முடியாது என்று எப்படிச் சொல்வான்! பாங்கி மானேஜருக்கு வண்டி வருவதாக ஒப்புக் கொண்டானே, அது என்ன ஆவது! இருந்தாலும் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "எசமான்! பாங்கி மானேஜர் ஐயாவுக்கு ஏற்கனவே ஒப்புக் கொண்டு விட்டேனே!" என்றான்.

"சட்! ஒப்புக் கொண்டால் என்ன! தலையையா கிள்ளிவிடுவார்கள்! வர முடியாது என்று சொல்லி விடு. இன்ஸ்பெக்டர் ஐயாவை விட அவர் என்ன பெரியவரோ!" என்றார் போலீஸ்காரர்.

"எஜமான்......!" தயங்கினான் மருதமுத்து. கிடைக்கப் போகும் வாடகை போய் விடுமே என்ற கவலை அவனுக்கு. போலீஸ்காரர்கள் வண்டி வைத்துக் கொண்டு போய் எங்கேயாவது வாடகை கொடுத்ததுண்டா! இதுவரை கேள்விப்படாத சமாசாரம் ஆயிற்றே!

"பேசப்படாது. போய் இன்ஸ்பெக்டர் ஐயாவைக் கூட்டி வருகிறேன், இரு!" —பேச்சில் போலீஸ்காரத்தனம் தொனித்தது.

வெகுநேர வேளையில் கரடி நுழைந்த கதையாக இந்தப் போலீஸ்காரர் எதற்கு வரவேண்டும்! கையைப் பிசைந்த வண்ணம் போலீஸ்காரருக்குப் பின்னாலேயே சென்றான் மருதமுத்து. பாங்கி மானேஜர் போலீஸ்காரருக்குச் சம்மதிக்காமல் இருக்க வேண்டுமே என்று அவன் மனம் இல்லாத தெய்வங்களையெல்லாம் வேண்டிக் கொண்டது.

மருதமுத்து பின்தொடரப் போலீஸ்காரர் வருவதைப் பார்த்த இன்ஸ்பெக்டர், "என்ன! வண்டி ரெடியா!" என்று அதிகார மிடுக்குடன் கேட்டார்.

"வண்டியே இல்லீங்க. ஒரே ஒரு வண்டிதான் இருந்தது. அதையும் பாங்கி மானேஜர் வாடகைக்குப் பேசியிருக்கிறாராம். இருந்தாலும்...!"

அவர் வாக்கியத்தை முடிப்பதற்குள்ளாகவே, இன்ஸ்பெக்டர் குறுக்கிட்டு, "நான் பேசிக் கொள்கிறேன். மானேஜர் எங்கே யிருக்கிறார்!" என்று கேட்டார். அடுத்த கணம் கையிலிருந்த பிரம்பைச் சுழற்றியவாறே மானேஜரைத் தேடிக் கொண்டு புறப்பட்டார்.

அவர் அருகில் சென்று, "அட, நம் மானேஜர்தானா! எங்கே போகிறீர் போலேயே!" என்று அளவற்ற பரிவுடன் விசாரித்தார்.

"கோனேரி ராஜபுரம் வரை போகிறேன். இன்று இரவு தீபாவளியல்லவா! என் மாமனார் வீட்டுக்கு......"

"போக வேண்டியதுதான், போக வேண்டியதுதான். ஆனால் நீங்கள் எனக்கு ஒரு உதவி செய்ய வேணுமே!" என்று பீடிகை போட்டார் இன்ஸ்பெக்டர்.

"என்ன! சொல்லுங்கள்!"

"இன்றைக்கு என்னவோ வண்டியே கிடைக்கவில்லை!"

"ஆமாம். மருதமுத்து வண்டி ஒன்று தான் இருந்தது. அதைத்தான் நான் பேசிக் கொண்டிருக்கிறேன்."

"அதனால்தான் உங்களை நாடி வந்திருக்கிறேன். எனக்கு ரொம்ப அவசரமாகக் கொஞ்சம் கஞ்சனூர் வரை போகவேண்டியிருக்கிறது. பெரிய கேஸ் ஒன்று. உடனே போகாவிட்டால் காரியம் கெட்டுவிடும். நான் கஞ்சனூர் போய் இறங்கிக் கொண்டு உங்களுக்கு வண்டியை அனுப்பி வைக்கிறேன்! அதற்கு முன் வேறு ஏதாவது வண்டி வந்தாலும் நீங்கள் வைத்துக் கொண்டு போய் விடுங்கள்!" என்றார் இன்ஸ்பெக்டர்.

மருதமுத்து மிகவும் தைன்யமாக மானேஜரைப் பார்த்தான். 'சம்மதிக்காதீர்கள்' என்று சொல்வது போலிருந்தது அவன் பார்த்த அந்தப் பார்வை.

"இப்பொழுதே மணி ஏழாகி விட்டது. இங்கிருந்து நீங்கள் கஞ்சனூர் போய் அங்கிருந்து திருப்பி வண்டியை அனுப்புவதற்குள் நாழிகையாகி விடுமே, சார்!" என்றார் மானேஜர். அவரால் தைரியமாக மறுக்கவும் முடியவில்லை; சம்மதிக்கவும் முடியவில்லை.

"என்ன சார், இப்படிச் சொல்கிறீர்களே! அவசர ஜோலி இல்லையென்றால் உங்களுக்குச் சிரமம் தருவேனா! எப்படியும் தீபாவளிக்கு நீங்கள் ஊருக்குப் போய்ச் சேர்ந்து விடலாம். கொஞ்சம் தாமதமாகப் போகவேண்டியிருக்கும். அவ்வளவு தானே! ஒரு ஆபத்து சம்பத்துக்கு உதவுவதுதானே சார், மனிதத் தன்மை!" — வெகு சாதுரியமாக மடக்கினார் இன்ஸ்பெக்டர்.

"சரி. நீங்கள் போய் உடனே அனுப்பி வையுங்கள்—மருதமுத்து! நீ ஐயாவைக் கொண்டு போய் விட்டு விட்டுச் சீக்கிரமாக வா. நான் உனக்காகக் காத்திருக்கிறேன். வேறு வண்டி வந்தாலும் போகவில்லை!" என்றார் மானேஜர்.

கைக்கு எட்டிய கனி வாய்க்கு எட்டாததாக ஆகிவிட்டதே! மானேஜர் ஏதோ ஆறுதல் சொல்லும் முறையில் சொல்லியிருக்கிறாரே தவிர, வேறு வண்டி கிடைத்து விட்டால், வைத்துக் கொண்டு போகாமல் அவனுக்காகக் காத்துக் கொண்டா இருக்கப் போகிறார்! தன் தலைவிதியை நொந்து கொண்டு மருதமுத்து வண்டியண்டை சென்றான். மருதமுத்துவின் சோர்வைக் கண்ட மாடுகளும் சோர்வுற்று விட்டன. இன்ஸ்பெக்டரையும் போலீஸ்காரரையும் ஏற்றிக் கொண்டு முதலில் அவை செல்லவே மறுத்தன. மருதமுத்து இன்ஸ்பெக்டருக்குப் பயந்து அதட்டி ஓட்டவே, அடிமேல் அடி எடுத்து வைத்து அவை அசைந்தாடிச் சென்றன.

மிருகங்களை மிருகங்கள் என்று சொல்கிறோமே! அவற்றுக்கு இருக்கும் அறிவு மனிதனுக்குக் கூடச் சில சமயங்களில் இருப்பதில்லையே!

ஸ்ரீ ராமர் வனவாசம் சென்றபொழுது அவரைத் தேரில் ஏற்றிக் காட்டுக்குக் கொண்டு விடும் பொறுப்பு சுமந்திரன் மேல் சுமந்தது. வேண்டா வெறுப்புடன் ஒரு புறம் மனச்சுமை அழுத்த அவர் தேர் ஓட்டிச் சென்றார். அவர் மனக் கிலேசத்தை உணர்ந்த குதிரைகள் கரைந்து எல்லையைத் தாண்ட மறுத்தன. அவை அறிவுக் குறைவினாலா அப்படிச் செய்தன! எசமானரின் மனச் சுமையை அவை அறிந்து கொண்டதல்லவா காரணம்!

அதே போலத்தான் மருதமுத்துவின் மாடுகளும் மனத்தாங்கலுடன் நடந்தன. அவற்றின் எசமானனான அவன் மட்டும் அதட்டி ஓட்டாமல் இருந்தால், இன்ஸ்பெக்டருக்கு வெட்டி வேலை செய்ய முடியாது என்று அவை சத்தியாக்கிரகமே கூடச் செய்திருக்கும்.

சீடையில் தாரையாகக் கொட்டும் மழையில் எட்டரை மணி சுமாருக்கு அவை இன்ஸ்பெக்டரைக் கொண்டு போய்க் கஞ்சனூரில் இறக்கின.

வண்டியிலிருந்து இறங்கிய இன்ஸ்பெக்டர் மருதமுத்துவுக்கு விடைகூட அளிக்காமல் தம் அலுவல்களைக் கவனிக்க வீட்டுக்குள்ளே சென்று விட்டார்.

மருதமுத்துவுக்கு அவரிடமிருந்து கூலி கிடைப்பது என்பது குதிரைக் கொம்பு என்பது தெரிந்த விஷயம்தான். இருந்தாலும் விடைபெற்றுக் கொள்ளாமல் புறப்பட்டால் கோபித்துக் கொள்வாரே என்று காத்திருந்தான். ஐந்து நிமிஷத்துக்கு மேலாகியும் உள்ளே சென்றவர் வெளியே வரக் காணோம். தற்செயலாக வெளியே வந்த போலீஸ்காரரிடம் சொல்லி விட்டுப் புறப்பட்டான் மருதமுத்து.

அவன் தெரு முனை திரும்பி யிருக்கமாட்டான். போலீஸ்காரர் மூச்சு வாங்க ஓடி வந்தார். அதைக் கண்ட மருதமுத்துவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அதற்கேற்றாற்போல், "இன்ஸ்பெக்டர் ஐயா உன்னைக் கையோடு கூப்பிட்டு வரச்சொல்கிறார்!" என்று வெடிகுண்டையும் தூக்கிப் போட்டார் போலீஸ்காரர். 'இன்று இரவு முழுவதும் இங்கேயே கிடக்க வேண்டியது தான்!' என்று தீர்மானித்து விட்டான் மருதமுத்து. உரலில் தலையைக் கொடுத்து விட்டபின் உலக்கைக்குப் பயந்தால் கட்டி வருமா!

திரும்பி வந்த மருதமுத்துவைப் பார்த்த இன்ஸ்பெக்டர், "ஏன் அப்பா வண்டி! சொல்லிக் கொள்ளாமலே புறப்பட்டுவிட்டாயே!" என்றார் ஏகத்தாளமாக.

"இல்லீங்க!" என்று கையைப் பிசைந்தான் மருதமுத்து. என்ன சொல்வது என்றே தோன்றவில்லை அவனுக்கு.

"இந்தா, வண்டிச் சத்தம்!" என்று சொல்லி மருதமுத்துவின் கையில் மூன்று ரூபாயை வைத்தார் இன்ஸ்பெக்டர். மருதமுத்துவுக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை.

"எதற்குங்க இது!" என்று இழுத்தான் மருதமுத்து.

"எதற்கா! உன் வண்டியில் ஏறிவந்ததற்கு வாடகைக்காக. போலீஸ்காரர்கள் எல்லாம் பணம் கொடுக்காமல் வண்டியில் வந்து பிசுனாரித்தனம் செய்பவர்களாக இருப்பார்கள் என்று எண்ணினாயோ! அதெல்லாம் அந்தக்காலம். இன்றைக்கோ தீபாவளி, உனக்கு எத்தனை செலவோ! உன்னை வெறுங்கையோடு அனுப்புவேனா! யோசிக்காதே! எடுத்துக் கொள்!" என்றார் இன்ஸ்பெக்டர்.

"நீங்கள் நல்லா இருக்கணும்!" என்று மனமார வாழ்த்தினான் மருதமுத்து. அவனுக்கு அதற்கு மேல் என்ன சொல்வது என்றே புரியவில்லை. மகிழ்ச்சி பொங்க விடைபெற்றுக் கொண்டு வண்டியண்டை வந்தான். அவனுடைய அந்த மகிழ்ச்சி வண்டி மாடுகளுக்கு எப்படித்தான் தெரிந்ததோ! அவன் ஏறி உட்கார்ந்ததும் காற்றினும் கடுவேகமாக ஆடுதுறையை நோக்கிப் பறந்தன. ஆடுதுறை ஸ்டேஷனில் இருக்கும் பாங்கி மானேஜரைத் தீபாவளிக்குக் கோனேரி ராஜபுரத்தில் கொண்டு விட்டு, மருதமுத்துவையும் சௌபாக்கியத்தினிடம் கொண்டு சேர்த்துத் தீபாவளியைக் கனஜோராகக் கொண்டாடச் செய்யவேண்டும் என்பது அவற்றின் ஆத்திரமாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் எதற்காக அவை அவ்வளவு அவசரப்பட்டுப் போகின்றன!

அதற்கேற்றாற்போல், அத்தனை நேரமும் குமுறிக் கொப்புளித்துக் கொண்டிருந்த வானமும் வெளி வாங்கி விட்டது. சௌபாக்கியத்தின் ஆசையைப் பூர்த்தி செய்து இன்பத் தீபாவளி கொண்டாடும் பாக்கியம் நமக்குக் கிடைத்து விட்டதே என்ற மகிழ்ச்சியில் மருதமுத்துவின் மன வானமும் வெளிவாங்கி விட்டது. 'நிறைந்த மனத்துடன் இன்புறுவதற்குத் தானே இத்தனை நாளும் சிரமமும் ஏற்பட்டிருக்கின்றன!' என்ற நினைவில் மருதமுத்து மனம் பூரித்துப் போனான். இவ் வைபவத்தில் நாங்களும் சோர்ந்தவையில்லை என்பது போல் வண்டி மாடுகளும் மிகுந்த மிதப்புடன் நடந்தன.



நாற்காலி
மெத்தை



இருபுறமும் உபயோகிக்கக்கூடிய
வட்டமான சாய்வதற்குரிய
மெத்தை



மடிக்கக்கூடிய
கார் மெத்தை

# மகிழ்ச்சியூட்டும் பரிசு



எந்த சந்தர்ப்பத்திலும்
நிச்சயமாக மகிழ்ச்சியூட்டக்கூடிய
பரிசு டன்லபில்லோ. நயமான
விலையுள்ள இந்த ஒவ்வொரு
தயாரிப்பும் நீடித்த சுகத்
திற்கு உறுதியளிப்பதாகும்.





பிரயாணத்திற்
கேற்ற மெத்தை,
தலையணையுடன்
கூடிய கைப்பெட்டி.

# டன்லபில்லோ

லேடெக்ஸ் நுரை தயாரிப்பு
களுள் முதன்மையானது-
மிக நேர்த்தியானது.







உறையுடன்
கூடிய தலையணை.

DPX 79 Tr

# அமரநிலை

அகிலன்

வேட்டை நாய்களால் துரத்தப்படும் குழி முயலின் இருதயம் போல் என் இதயம் அடித்துக்கொண்டது.

நானும் அவ்வாறுதான் துரத்தப்பட்டேன், போலீஸ்காரர்களால். என்னைப் பிடித்து விட்டால் எத்தனை வருஷம் உள்ளே தள்ளுவார்களோ! பத்தோ, ஆயுள் தண்டனையோ, அல்லது தூக்குக் கயிறோ! இத்தனையும் நான் செய்யாத குற்றத்துக்கு!

1942-ல் நடந்த கதை இது:—

எவனோ எங்கோ ஒரு அதிகாரியைத் தீர்த்துக் கட்டி விட்டான். அதற்காக என்னைப் போய்த் தேடிக் கொண்டிருந்தார்கள். பொதுக் கூட்டத்தின் தொடக்கத்தில் நான் பாரதி பாட்டுப் பாடுவதோடு சரி. கொஞ்சம் இடம் கிடைத்தால் நாக்கில் நரம்பின்றி வெள்ளையனைத் திட்டுவேன். என்னுடைய தேசத் தொண்டு அவ்வளவுதான்.

என்னைப் போய் இந்தப் போலீஸ்காரர்கள் வீரனாகவும், தீரனாகவும், தியாகியாகவும் ஆக்கப் பார்த்தார்கள். வாய்ப் பேச்சைத் தவிர என்னிடம் வஞ்சகமில்லை.

இதை என்னிடம் உளவு கண்டு பிடித்துக் கூறியவள் என்னுடைய உயிரின் சொந்தக்காரி தேவகி. என்னைத் தேடிப் பிடிப்பதற்கு உத்தரவிட்டாரே, அந்த அதிகாரியின் செல்லக் குமாரி அவள். என்னைக் கைது செய்து வைத்திருந்தாள் அவள் உள்ளச் சிறையில்.

கண்ணீரும் கம்பலையுமாக அவள் என்னிடம் இந்த ரகசியத்தைக் கூறினாள். சென்னைக் கடற்கரையின் விளிம்பில் ஓர் தோணியின் மறைவில், நிலவு பூத்த முன்னிரவில் அவள் இதை என்னிடம் வெளியிட்டாள். அடுத்த ஒரு மணி நேரத்துக்கெல்லாம் நான் சென்னையை விட்டே கம்பி நீட்டினேன்.

இப்போது தலைமறைவில் வாசம். காடு, மலை, கிராமம், நகரம், வெயில், மழை, இரவு, பகல் எல்லாம் எனக்கு ஒன்றுதான். என்னுடைய ஒரே நோக்கம் இப்போது என் உயிர் ஒன்றுதான்!

இந்த உயிர் அவளுக்குச் சொந்தம். இதைக் காப்பாற்றி அவளிடம் பத்திரமாகக் கொடுக்க வேண்டும்.

இல்லாவிட்டால் நான் சிறை சென்று தியாகியாகவோ, தூக்குமேடை சென்று வீரனாகவோ மாறியிருப்பேன். வெளியில் வந்தால் மலர் மாலை; வராவிட்டால் புகழ் மாலை. உழைக்காமல் கிடைக்கும் பலன்!

இத்தனை பெருமைகளுக்கும் விடாமல் அவள் என்னைக் கோழையாக்கி விட்டாள். உயிருக்குஅஞ்சி ஓடச் செய்து விட்டாள். ஒரு பெண்ணிடம் மனத்தைக் கொடுப்பது கோழைத்தனம், முட்டாள்தனம், அடிமைத்தனம் என்பதைத் தெரிந்த பிறகும் என்னால் அதைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. அந்த ஆசையில் சுவர்க்கமல்லவோ இருக்கிறது!

என்னிடமுள்ள அவள் உயிருக்காக நான் காலைக்கொரு ஊராய், வேளைக்கொரு இடமாய் என் உடலைச் சுமந்து கொண்டு—ஏன், ஒளித்துக் கொண்டு—திரிந்தேன்.

இப்போது நான் இருப்பது ஓர் மலையின் அடிவயிற்றில். பெரு வயிற்றுக்காரன் பட்டினி கிடக்கும்போது வயிற்றில் மடிப்பு விழுந்திருக்குமே, அது போன்ற ஓர் மடிப்பில், ஓர் பிளவில் நான் படுத்துக் கிடந்தேன். அங்கே போன பிறகுதான் ஓர் அற்புதமான புது உலகை நான் காண முடிந்தது.

ஆம்; புத்தம் புதிய உலகம்!

அந்தப் பிளவுக்குள் வழ வழப்பான பஞ்சணை ஒன்றை யாரோ கல்லில் செதுக்கி இருந்தார்கள். தலை சாய்த்துக் கொள்ளத் திண்டுகள்! பஞ்சாகவே தோன்றும் கருங்கற்கள். நான் மெய்ம் மறந்து அத்திண்டில் சாய்ந்தேன். மறு பாதி காலியாகக் கிடந்தது. நான் நீண்ட பெருமூச்சு விட்டேன். எனக்குத் தேவகியின் நினைவு வந்து விட்டது.

நினைவு விரிந்து, விரிந்து, விரிந்து என் உள்ளக் கூட்டையே உடைத்துக்கொண்டு தெறித்துவிடும் போலிருந்தது. வழவழப்பான அந்தக் கருங்கல் திண்டிலேயே ஓங்கி ஓங்கித் தலையை மோதி உடைத்துக் கொண்டால் என்ன! காதல் கனிந்து முதிரும் இந்தக் கடைசிக் கணத்தில் இத்தகைய பிரிவுத் துன்பமா!

மன மயக்கம் இல்லை இது; உண்மை மீறும் உண்மை.

கல்லால் சமைந்த அந்த மிருதுவான மலர் மெத்தையில் எத்தனையோ சின்னஞ்சிறு சித்திரங்கள் உயிர் பெற்றுத் துடித்தன. ஒன்றில்கூட அழிவின் ஆரம்பத்தைக் காணோம். நான் வருவதற்கு அரை விநாடிக்கு முன்புதான் யாரோ இருவர் அதிலிருந்து எழுந்து போயிருக்க வேண்டும். காற்றில் கலந்து வரும் நறுமணம் அந்தப் படுக்கையினுடையதுதானா? அல்லது பக்கத்துச் செடிகளில் குலுங்கும் மலர்களுடையதா!

தேவகியின் கடைசிச் சிரிப்பு என்னை வாட்டியது.

கீழே புலி துரத்த ஒருவன் மரக்கிளைக்குத் தாவினானாம். அங்கே கிளையில் நாகப் பாம்பு படமெடுத்துச் சீறிற்றாம். கீழே புலி; மேலே பாம்பு. அந்தரத்தில் தொங்கும் அவன்; மரத்தின் உயரே தேன் கூட்டிலிருந்து தெறும் ஒரு துளித் தேனுக்காக வளைந்து கொடுத்து நாக்கை நீட்டினானாம்! என் கதையும் அப்படித்தான்.

நாலுபுறமும் பயம்; வேட்டை நாய்கள். நடுவில் ஆசை; தவிப்பு.

மேலே பாறை கவிழ்ந்து கொண்டிருந்ததால் உள்ளே ஒளி புகவில்லை. ஒரே கும்மிருட்டு. பகலா இரவா என்பது கூடச் சந்தேகம். மலைச் சரிவை ஒட்டினாற்போல் கீழே ஆழ்கடல் ஆர்ப்பரித்தது.

மலைக்கும் மேலே வானம்; கீழே கடல்; மத்தியில் நான்.

சுற்று முற்றும் பார்த்தேன். திடுக்கிட்டேன். எனக்கு நேர் எதிரில் உடைந்த பாறைகளின் வழியே இரண்டு உருவங்கள் எதிரும் புதிருமாய் உட்கார்ந்திருந்தன! ஒன்று ஆண்; மற்றொன்று பெண். கடலைப் பார்த்துக் கொண்டு மண்டியிட்டு உட்கார்ந்திருந்தாள் அவள். அவளை வைத்த விழி வாங்காமல் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான் அவன்.



ஜன சந்தடியற்ற, மனிதரின் மூச்சுக் காற்றும் படாத, தனிமையிலும் தனிமையான அந்த இடம் எனக்குத்தான் சொந்தமென்று நினைத்தேன். எனக்கு முன்பே அதைச் சொந்தமாக்கிக் கொண்டார்கள் அவர்கள். எனக்கு அங்கு இருப்புக் கொள்ள வில்லை; இதைவிட்டு அப்பால் வெளியில் போகவும் பயம்.

நல்ல பயம் இது! மனிதனை இந்தப் பக்கமும் போக விடுவதில்லை; அந்தப் பக்கமும் போக விடுவதில்லை. நான் கட்டுப்பட்டுக் கிடந்தேன். அந்தப் படுக்கையில் சாய்ந்து படுத்தேன். என் மூச்சு வெளிவருவதுகூட அவர்கள் காதில் சிறிதும் விழக்கூடாது.

பயம், பயம், பயம், ஒரே பயம்! ஆசை, ஆசை, ஆசை, ஒரே ஆசை!

இதற்கிடையில் அவர்கள் ரகசியப் பேச்சு என் செவிகளில் மெல்ல விழுந்தது. நான் உற்றுக் கேட்டேன்.

"இளவரசி!"

"சிற்பியாரே! என்னைப் பெயர் சொல்லி அழைக்க மாட்டீர்களா!"

"உத்தரவு, இளவரசி! இல்லை மேகலா! உனக்கு நம்முடைய முதற் சந்திப்பு நினைவிருக்கிறதா!"

"நல்ல கேள்வி இது! எதைத்தான் நான் மறந்தேன்! மறப்பேன்!"

எனக்குத் தலை சுற்றியது. இது என்ன கனவா! இளவரசியும் இந்தக் காலத்தில் இல்லை; சிற்பிகளும் செத்து விட்டார்கள்.

ஆனாலும் குரல்கள் ஒலித்தன.

"சிற்பியாரே! என் தந்தை தங்களைச் சிலை வடிக்க அழைத்ததையும், அப்போது நீங்கள் என்னைப் பார்த்த பார்வையையும் என்ன வென்பது! சிலை வடிக்கும் எந்தக் கலைஞரும் தன் சிலைக்குரிய பொருளை அப்படித்தான் பார்ப்பது வழக்கமா!"

"எப்படிப் பார்த்தேனென்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் அது என்னுடைய முதல் சந்திப்பு இல்லவே இல்லை. காலம் காலமாய்ப் பிரிந்த என் இன்னுயிரை, காலங்காலமாய்த் தேடிக் களைத்த என் கற்பனையை நான் மீண்டும் கண்டு கொண்டேன். கண் இமைத்தால் உன்னுடைய எழில் உருவம் எங்கே மறைந்து விடுமோ என்ற பயம்!"

"நீங்கள் அந்த முதற் பார்வையிலே என் உயிரைக் குடித்து விட்டீர்கள்."

"அது உன் உயிரல்ல; என்னுடையது."

எனக்கும் புல்லரித்தது. என்னுடைய தேவியும் இதையேதான் கூறினாள். என் உயிர் அவளுடையதாம்! இங்கு இதை அவன் சொல்கிறான்:

"மேகலா! உன்னை எதிரில் உட்கார வைத்து உன் திருவுருவைக் கல்லில் வடித்தபோது, நீ எதையோ நினைத்துச் சேலையில் வரைந்து கொண்டிருந்தாய். அதை நீ என்னிடமிருந்து வேண்டுமென்றே மறைத்தாய். ஆனால் மறைத்ததெல்லாம் என்ன ஆயிற்று! மறைக்க முடியாத ஒன்றை மறைக்கவே முடியாது மேகலா!"

"சித்திரத்தை நான் முடித்து உங்களிடம் கொடுத்தபோது, உங்கள் உருவத்தையே நீங்கள் அதில் கண்டபோது, ஏன் அப்படிப் பதறிப் போனீர்கள்!"

"உன்னைத் தெரிந்து கொண்டேன், மேகலா! கல்லால் சிலை வடிப்பவன் சில சமயம் கல்லுக்குள்ளே தன் நெஞ்சை வைத்து விடுவதும் உண்டு. தூரிகையால் ஓவியம் வரைபவன் சில சமயம் அந்த ஓவியத்துக்கே தன் உயிரை வழங்கி விடுவதும் உண்டு. நீ வரைந்த என் உருவத்தில் நீயே ஒளிந்து கொண்டிருந்தாய். மேகலா! நான் உன்னைக் கண்டு கொண்டேன். நான் கலைஞன்; என்னை நீ ஏமாற்றி இருக்க முடியாது."

"உங்களுடைய அந்தக் கண்ணீர்!"

"உன் கண்ணீரிலிருந்து பிறந்தது. நீ எழுதி முடித்த சித்திரத்தை என்னிடம் கொடுக்கும்போது உன் மென் கரங்கள் ஏன் அப்படிக் கலங்கின! 'தங்கள் கண்ணீரைத் துடைக்கும் பாக்கியம் இந்த ஏழைச் சிற்பிக்குக் கிடைக்குமா, இளவரசி!' என்று நான் தடுமாறியபோது, 'நெஞ்சில் நெருப்பிருந்தால் செய்யுங்கள்!' என்று ஏன் நீ பதிலளித்தாய்! பிறகு ஏன் என்னுடைய கரங்களைப் பற்றிக் கொண்டு கண்ணீரால் கழுவினாய்!"

"கண்ணீரைத் துடைத்த மறுகணமே அந்தக் கரத்தைக் கழுவிக் கொள்ள முடியும் என்று தானே நினைத்தீர்! சிற்பியாரே! நீர் என்னைத் தெரிந்து கொள்ளவே இல்லை."

"தெரிந்து கொள்ளவும் இல்லை; தெரிந்து கொள்ள விரும்பவும் இல்லை. உன் தந்தையை எனக்குத் தெரியும். உன்னை மணக்க இருந்த அந்த இளவரசனையும் தெரியும். நீ திருமணத்துக்குப் பிறகு உன் கணவனோடு சென்றால், உன்னைப் பார்க்க முடியாதென்றுதானே தமது அரண்மனைக்கு உன் தந்தை சிலையை வடிக்கச் செய்தார்! இத்தனை பாசமுள்ள தந்தைக்கு முன், ஆசையுள்ள இளவரசனுக்கு முன், நான் எதை எப்படித் தெரிந்து கொள்வது, மேகலா!"

"பெண் மனம் மட்டும் தெரியவில்லை; அதிலும் பின்னும் தெரியவில்லை!"

"மேகலா! ஒரே சமயத்தில் நான் இரண்டு சிலைகள் வடித்தேன். ஒன்றை அரண்மனையிலும், மற்றொன்றை இந்த மலைக் குகையிலும் வடித்தேன். ஒன்று உன் தந்தைக்கு; மற்றொன்று எனக்கு!"

"கலைஞரே! உங்களுக்குக் கல் இருந்தால் போதும்; நெஞ்சு வேண்டாம். உருவம் இருந்தால் போதும்; உள்ளம் வேண்டாம். அப்படித்தானே!"

"உன் தந்தையின் பாசத்துக்கு எதிராக, அந்த இளவரசனின் ஆசைக் கெதிராக,

உன் அரச குல வழக்கத்துக்கெதிராக நீ இப்படி முடிவு செய்வாய் என்றே நான் நம்பவில்லை, மேகலா! இப்படி என்னுடன் உன் வாழ்வு சிதையுமெனத் தெரிந்திருந்தால், அன்றே என் கரம் நீட்டி உன் கண்ணீரைத் துடைத்திருக்க மாட்டேன். ஒரு கணத்தின் பலவீனம் ஒரு வாழ்வையே பற்றிக் கொண்டு விட்டதே!"

"கோழைத்தனம் போதும். சிறுத் துங்கன்! பெண் தன் வாழ்வில் எதை விரும்புகிறாள், எதை வெறுக்கிறாள் என்று ஆண்களுக்கென்ன கவலை!"

"மேகலா! நீ எழுதிய சித்திரத்தை வைத்துக் கொண்டே, இந்த மலைக் குகைக்குள் உன் சிலைக்கு எதிராக என் சிலையையும் செதுக்கினேன். இந்தச் சிலை உருவிலேயே நாம் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டிருந்தால் போதாதா! மேகலா! நாம் இனி ஒன்றும் வாழவே முடியாது. இப்போது நம்மை வேட்டையாடத் தொடங்கி விடுவார்கள். அகப்பட்டால் சிறைச்சாலையோ, சித்திரவதையோ, இன்னும் என்ன துன்பமோ! நான் சொல்வதைக் கேள்."

"சிற்பியாரே! ஏன் இந்த வீண் பேச்சு! ஒரு கணமாவது நாம் ஒன்றாய் வாழ்ந்தால் போதும். மலைக் குகையில் நமது சிலைகளின் முன்னிலேயே நாம் மணம் செய்து கொண்டு அங்கேயே மறைந்து வாழ்வோம். குதிரைக் குளம்புகளின் ஓசை தூரத்திலே கேட்டாலோ, காவல் கூட்டத்தினரின் வேல் கம்புகள் கண்களில் பட்டாலோ பிறகு நமது முடிவை நிச்சயம் செய்வோம். மலையின் உச்சியும், கடலின் ஆழமும் நமக்கு வெகு அருகில்தானே இருக்கின்றன! நம்மைத் தேடி வருகிற வீரர்கள் நமது சிலைகளைப் பார்த்துத் திரும்பட்டும்."

அப்புறம் ஒரே அமைதி, இருள், மௌனம்.

திடீரென்று கடல் அலைகளின் சீற்றம். புயல் உறுமிச் சுழன்றது. மலை உச்சியிலிருந்து பெரிய பாறை ஒன்று பயங்கரமான சத்தத்துடன் உருண்டு விழுவதைக் கேட்டேன்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

பிறகு பயம் அடங்கிய வேளையில் அந்த மலைப் பிளவினூடே தலை தூக்கிப் பார்த்தேன். அந்த இருவரும் அப்படியே எதிரும் புதிருமாய் — நானும் தேவியும் கடற்கரையில் உட்கார்ந்திருந்தது போல—உட்கார்ந்து கொண்டுதானிருந்தார்கள். அவர்கள் ஆடவில்லை; அசையவில்லை; பேசவில்லை. இரண்டும் இரண்டு சிலைகள்!

எழுந்து அருகில் சென்றேன். அந்த இரு உருவங்களையும் மாறி மாறிப் பார்த்தேன். ஒரு முறை அவர்கள் இளவரசியும் சிற்பியுமாகவும், மறுமுறை நானும் தேவியாகவும் காட்சி அளித்தார்கள். அந்த இளவரசி சிற்பியைப் பார்த்துக் கொண்டிருந்த அந்தப் பார்வையில், தேவி கடைசியாக என்னைப் பார்த்தாளே அதே ஏக்கம், அதே சோகம், அதே தாபம் தெரிந்தன.

உலகம் தோன்றிய நாள்முதல் உலகம் அழியும் நாள்வரை காதலின் போக்கெல்லாம் ஒரே விதந்தானு! காதலர்களின் எண்ணங்களும், பேச்சுக்களும், செயல்களும் ஒரே மாதிரியானவைதானு! காதலின் வெற்றி அவர்களது பிரிவிலோ, அல்லது மரணத்திலோதான் மறைந்து கிடக்கிறதா!

என்னுடைய இருதயம் மலையைச் சுமப்பது போல் கனத்தது.

அறிவை அழித்துவிட்ட அந்தச் சிலைகள் என்னுடைய—எங்களுடைய—அழியாத நேரத்தை நினைவூட்டின. இந்தக் கடைசிச் சந்திப்பு நிரந்தரமான ஒன்றுதான். ஊற்றுப் பெருக்காய் அவள் எனக்காகக் கண்ணீர் வடித்ததும், நீண்ட நெருப்பாய் அவள் எனக்காக நெட்டுயிர்த்ததும், என் முன்னிலையில் அவள் துடித்த துடிப்பும், தவித்த தவிப்பும் பொய்யானதா!"

வாழ்வில் அந்தக் கணம் ஒன்றுதான் நிரந்தரம்; அது ஒன்றுமட்டும் போதும். வானத்தின் உச்சி விளிம்பை உணர்ச்சிப் பெருக்கால் தொட்டாயிற்று. உடனே அதற்கும் மேலே பறந்து எரிந்துவிட வேண்டும். அல்லது ஆழப் படுகுழியில் வீழ்ந்து அழிந்துவிட வேண்டும். வேறு எப்படி அந்தத் தூய அன்பை அமர நிலைக்கேற்றுவது!

களில் ஏதாயினும் ஒன்று எனக்கும் ஏற்படலாம்.

இந்த வீண் துன்பமெல்லாம் இனி எதற்கு! கடற்கரைக் கடைசிச் சந்திப்பே நிரந்தரமானது. நானும் அவளும் அப்போது உண்மையின் ஒளிச் சிதர்களாக இருந்தோம். அந்த ஒரு நாழிகைப் பொழுதில் எங்களிடம் கபடமில்லை, வஞ்சகமில்லை, பொய்யில்லை. நாங்கள் அப்போது அழியாத சத்தியத்தின் அணுத் துகள்கள். நாங்கள் அப்போது அமரர்கள்!

அமரநிலையை நிலை நாட்டுவதற்காக நான் இறக்கத் துணிந்து விட்டேன்.

எந்த உயிரை அவளுக்காகக் காப்பாற்றத் துடித்தேனோ, அதே உயிரை அவளுக்காக அழிக்க முடிவு செய்து விட்டேன். காதல் வாழ வேண்டுமானால் காதலர்கள் வாழக் கூடாது!

தேவியின் விலாசத்துக்கு ஓர் கடிதம் எழுதினேன். என் முடிவைச் சொல்லி, எனக்காகக் கடற்கரையின் அந்த இடத்துக்கு மீண்டும் ஒரு முறை போய், ஒரே ஒரு சொட்டுக் கண்ணீர் மட்டும் விடச் சொல்லி யிருந்தேன்.

பிரிவுதான் அழியாதது; துன்பந்தான் இன்பமூட்டுவது; சோகந்தான் நிலைத்து நிற்பது. மரணத்தைவிட நிச்சயமானது வேறென்ன உள்ளது! மரணத்திலேயே தான் எந்த உணர்ச்சியும் அமரநிலை பெற முடியும். காதலும் அப்படித்தான்!

ரோமியோ - ஜூலியத், லைலா - மஜ்னு, அமராவதி-அம்பிகாபதி, இளவரசி-இளஞ் சிற்பி, தேவி-நான்......

வேட்டையாடப்படும் என் உயிரைப் பற்றி நினைத்தேன். தகப்பனுர் சட்டத்தின் பெயரால் அதை வேட்டையாடுகிறார். மகள் காதலின் பெயரால் அதையே செய்கிறாள். இந்த உயிர் எனக்கா, அவளுக்கா, அவனுக்கா! யாருக்குச் சொந்தம்!

சரி!

நாளைக்கோ, அடுத்த வருஷமோ, பத்து வருஷம் கழித்தோ, அவளிடம் என் உயிரைப் பத்திரமாகக் கொண்டு போய்ச் சேர்ப்பிக்கிறேன். அதற்குள் அவள் நிலை மாறி விட்டால்! இன்னொருவனை மணந்து கொள்ளலாம்; காதலிக்கலாம்; அல்லது அவளே இறந்து விடலாம். அதே நிலை

தேவிக்காக அந்தச் சிலையிடம் விடை பெற்றுக் கொண்டு கடலில் இறங்கினேன். கடிதமும் என்மேல் சட்டையும் கடற்கரை மணலில் ஒரு பாறையின் இடுக்கில் தெரியும்படி இருந்தன. கடலுக்குள் நான் போய்க்கொண்டே இருந்தேன். இடுப்பளவுத் தண்ணீரில் எதிர்ப்பட்ட பேரலைகள் என்னைப் பின்னுக்குத் தள்ளின. என் முகத்தில் அறைந்து தள்ளின. கோபமாய்த் தள்ளின.

ஊது குழல் சத்தம் விட்டு விட்டு விட்டு ஒலித்தது. என்ன இது! காதைச் செவிடாக்கும் போலீஸ் 'விசி'லா!

தடதட வென்ற சத்தம். பிடி பிடி என்ற குரல்கள். பின்புறம் ஒரே கூச்சல்; குழப்பம்.

இரண்டு போலீஸ்காரர்கள் தாவி வந்து என் இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்டார்கள்.

அப்புறம்!

அப்புறமென்ன!

இப்போது நான் வாழ்கிறேன்; நாங்கள் வாழ்கிறோம்; எங்கள் காதலுக்கு இன்னும் அமர நிலை கிட்டவில்லை.

# தந்தையும் மகளும்



குகப்ரியை

அன்று வஸந்த பஞ்சமி. நகரம் முழுவதும் ஒரே கோலாஹலம். அஹமத் நகரின் தலைவரான லூக்ஜியின் அரண்மனை அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. லூக்ஜி யாதவராவ் என்ற அந்த மஹாராஷ்டிர வீரன் "ஹோலி" பண்டிகை கொண்டாடும் பொருட்டுத் தன் கீழுள்ள எல்லா அதிகாரிகளையும் அழைத்திருந்தான். மாலோஜி பான்ஸ்லே என்ற வீரனும் அவர்களுள் ஒருவன். அவன் தன் மகன் ஷாஜியையும் அழைத்து வந்திருந்தான். இம்மாதிரி நடைபெறும் விருந்துகளுக்கும் கொண்டாட்டங்களுக்கும் குழந்தைகளும் வருவதுண்டு.

ஷாஜிக்கு வயது பதினென்று. அங்கு வந்திருந்த குழந்தைகளுள் அவனே வயதில் மூத்தவன். ஆகவே, அந்தக் குழந்தைகளின் கூட்டத்தில் அவனே தலைவன். லூக்ஜி யாதவராவின் மகள் ஜீஜா, ராதையைப் போல் உடையுடுத்து வந்து கொண்டிருந்தாள். குழந்தைகள் எல்லோரும் அவனைச் சூழ்ந்து கொண்டனர்.

அடுத்திருந்த மேடையிலே அவர்கள் ஓடி விளையாடத் தொடங்கினர். இந்த விளையாட்டு முடிந்ததும் மேடையிலே சூழ்ந்து உட்கார்ந்து தங்களுள் கதைகள் பேசத் தொடங்கினர். அவன் மிகவும் உற்சாகத்துடன் எதையோ விவரித்துக் கொண்டிருந்தான். ஆச்சரியத்தினுல் மலர்ந்த கண்களுடன் அவன் அருகே அமர்ந்து திறந்த வாயுடன் அவன் சொல்வதை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தாள் ஜீஜா. இந்தக் காட்சி அங்கிருந்த மூத்த மந்திரி தேவாஜிராவின் கண்களைக் கவர்ந்தது. தற்செயலாய் இவர்களைக் கண்ட லூக்ஜியின் கண்களும் அதைக் கடந்து செல்லாமல் அங்கேயே நின்றது. தேவாஜிராவின் முகத்திலே இளமுறுவல் அரும்பிற்று. "நல்ல பொருத்தம்தான்" என்ற சொற்கள் அவர் வாயினின்றும் எழுந்தன.

இந்த வார்த்தைகள் லூக்ஜியின் செவிகளிலும் விழுந்தன. அவன் அவரை ஏறிட்டுப் பார்த்தான். அவ்வளவோடு நின்றிருக்கலாம். உற்சாக மிகுதியினுல் இதயம் கும்மாளமிட்டுக் கொண்டிருந்த சமயம். வேடிக்கையாய்க் கண்களைச் சிமிட்டியவனுய், "என்ன ஜீஜா! இந்தப் பையனைக் கல்யாணம் செய்து கொள்கிறாயா?" என்று கேட்டான்.

சின்னஞ்சிறு குழந்தை. வயது ஏழுதான். ஆனாலும் தந்தையின் கேள்விக்கு விடை சொல்ல வேண்டுமென்று தோன்றியதோ என்னவோ! "ஆகா! செய்து கொள்ளுகிறேன்" என்ற மழலை மொழிகள் சொல்லின் ஒலி சபை முழுவதும் கேட்டது. 'கொல்'லென்ற சிரிப்பின் அலை மண்டபம் முழுவதும் பரவிற்று. நாணத்தால் முகம் சிவக்க அவள் தந்தையின் உத்தரீயத்தினுல் முகத்தை நன்றாக மூடிக் கொண்டாள்.

சிரிப்பின் அலை ஓய்ந்ததோ இல்லையோ, மாலோஜி எழுந்து நின்றான். தொண்டையைக் கனைத்துக் கொண்டு நாடக மேடையில் நடிப்பவன் போல், "சபையோர்களே, லூக்ஜி யாதவராவ் அவர்கள் என் புதல்வனை மாப்பிள்ளையாய் வரித்து விட்டார். இதற்கு நீங்கள் எல்லாரும் சாட்சி" என்று சொல்லி விட்டு உட்கார்ந்தான்.

லூக்ஜி இதை ஒரு பொருட்டாய் எண்ணவில்லை. மாலோஜி எழுந்ததும், அவன் பேசிய விதமும் ஏதோ வேடிக்கை செய்கிறுனென்றே நினைக்கச் செய்தன. ஆகவே எல்லோரும் நகைத்த பொழுது தானும் நகைத்தான்.

* * *

ஆரண்யத்தில் விருந்து. எல்லோரும் வந்து குழுமி விட்டனர். ஜீஜாவின் குழந்தை உள்ளமும் கண்களும் தன் தோழன் வந்திருக்கிறுனென்று நாற்புறமும் துருவித் தேடின. "என்ன! மாலோஜி இன்னும் வரவில்லையா!" என்றுன் லூக்ஜி.

ஏன் வரவில்லை என்று தெரிந்து வர ஓடினுன் ஒருவன். "காரணமின்றி வராமலிருக்க மாட்டான். வரவில்லை என்றால் அரசனை அவமதித்த குற்றமல்லவா!" என்றுன் இன்னெருவன். மாலோஜியின் வருகைக்காகக் காத்துக் கொண்டிருந்தது விருந்தினர் கூட்டம்.

ஆயிற்று; நெடு நேரமாயிற்று. அவன் வரவில்லை. ஆனல் செய்தி மட்டும் வந்தது. விஷயம் வேறென்றுமில்லை. "ராஜப் பிரதிநிதி லூக்ஜி யாதவராவ் தன் மகளை என் மகனுக்கு அளிப்பதாய் நேற்று வாக்களித்து விட்டார். இனி சம்பந்தம் செய்யும் வரையில் நான் மணமகளின் வீட்டில் சாப்பிடுவது வழக்கமில்லை. ஆகவே நான் விருந்திலே கலந்து கொள்ள இயலாதது பற்றி வருந்துகிறேன்" என்று சொல்லியனுப்பி யிருந்தான்.

லூக்ஜியின் கண்கள் கனலைக் கக்கின. 'என் கீழ் பணி செய்யும் இவன் என் மகளைக் கொள்ள நினைப்பதா!' என்று சீறினுன்.

மாலோஜி சிறந்த வீரன். லூக்ஜி தன் கீழ் வேலை செய்யும் பணிமகன் என்று இகழ்ந்த செய்தி அவனை வெகுவாகச் சுட்டது. "ஓகோ! இன்று இவன் கீழ் வந்து விட்டேன் என்றல்லவா ஏசுகிறான். கையுண்டு, வாளுண்டு. எங்கே இருந்தால் என்ன! இருந்தாலும் ஒரு நாளில்லா விட்டாலும் ஒரு நாள் இவன் கர்வத்தை யெல்லாம் ஒடுக்கி இவன் மகளை நான் மருமகளாக்கிக் கொள்ளாவிடில் நான் மகாராஷ்டிரன் அல்ல" என்று பகிரங்கச் சபதம் செய்தான்.

* * *

வருடங்கள் ஓடி மறைந்தன. ஜீஜாபாய் அப்பொழுதே யௌவனம் என்ற பூஞ்சோலையிலே அடி எடுத்து வைத்திருந்தாள். மாலோஜி சுதந்திர வீரனுகத் தானே ஒரு படையைத் திரட்டி அதற்குத் தலைவனாக இருக்கிறான் என்பதையும் பெரும் புதையல் ஒன்று கிடைத்து அதன் பயனுக அஹமத் நகர் சுல்தானிடம் தன் தந்தையைப் போன்ற ஒரு பெரிய பதவிக்கு வந்து விட்டான் என்பதையும் யாராவது வந்து சொல்லுவார்கள். இவர்களைப் பற்றிய செய்திகளைக் கேட்கும் பொழுதெல்லாம் அவளை அறியாமலேயே அவள் மனம் அழகிய இளைஞன் ஷாஜியை நினைக்கும். அவன் இப்பொழுது எப்படி இருப்பான்! எத்தகைய பேராற்றல் வாய்ந்த வீரனுயிருப்பான் என்பதை நினைக்கும்தோறும் அவள் இதழ்க் கடையிலே இளநகை அரும்பும். இனிய நினைவுகளினுல் அவள் முகம் மலரும்.

* * *

பங்குனி மாதம், வஸந்த காலம். வஸந்த விழாக் கொண்டாடும் பொருட்டு ஊரே மூண்டிருந்தது. அந்தச் சமயத்திலே திடீரென்று செய்தி கொணர்ந்தான் ஒற்றன். அவன் கொணர்ந்த செய்தி அவனை மட்டுமல்ல, ஊரையே திடுக்கிடச் செய்தது. மாலோஜி, ஐயாயிரம் என்ப வீரைத் துணை கொண்டு லூக்ஜியை எதிர்க்கப் போகிறுன் என்ற செய்திதான் அது. லூக்ஜி நடுநடுங்கினுன்.

"பாதைப் பயல், நமக்குச் சமதையாய் வந்ததோடு நில்லாமல் நம்மையே எதிர்க்கவும் துணிந்து விட்டானே! சேனைகளையும் ஏராளமாய்ச் சேர்த்து விட்டானும்! இவனுடன் சண்டையிடுவதைவிட சுல்தானிடம் முறையிடுவதே நல்லது" என்று நினைத்தான்.

அஹமத் நகர் சுல்தான் புத்தி வன்மை மிகுந்தவன். பிரித்து ஆளும் தந்திரத்தில் பிரிட்டிஷ் அரசியல் வாதிகள் கூட அவனிடம் பிச்சை வாங்க வேண்டும். இத்தகைய அரியதொரு வாய்ப்பை விட்டு விடுவானு! மிகுந்த மூள் யோசனையுடன் இருவரையும் அழைத்து உடன்படிக்கை செய்வித்து ஜீஜாபாயை ஷாஜிக்கு மணம் முடிக்கும்படி ஏற்பாடும் செய்து விட்டான். வேறு வழியின்றி லூக்ஜி அதற்கு ஒப்புக் கொள்ளும்படி நேர்ந்தது. ஷாஜிக்கும் ஜீஜாவுக்கும் திருமணம் நடந்தேறியது. ஆனல் லூக்ஜியின் மனம் மட்டும் குமுறிக் கொண்டிருந்தது.

செல்வக் குழந்தை ஜீஜா தன் கணவனைக் குறித்துப் பெருமையாய்ப் பேசும் பொழுதெல்லாம் லூக்ஜியின் நெஞ்சிலே கனல் மூண்டு எழும். முகம் சிவக்கும். தந்தையின் இந்த மன நிலையைக் கண்டு மனத்துள் சிரித்துக் கொள்வாள் அவள்.

பெறுவதற்கரிய பெரும் செல்வமாகவே அவளைக் கருதினுன் ஷாஜி. கண்ணின் கருமணி போல் காத்தான். வாழ்க்கை இன்ப மயமாகத்தான் இருந்தது. ஆனல் ஜீஜாபாயின் மனம் இத்தகைய இன்ப வாழ்வினுல் மட்டுமே திருப்தி அடையவில்லை. அவள் மற்ற சாமானியப் பெண்களைப் போல வெறும் இன்பமயமான வாழ்வை மட்டும் விரும்பினுளா! இல்லை. நாட்கள் செல்லச் செல்ல, தன் கணவன் தான் நினைத்தது போல் மிகச் சிறந்த வீரன் அன்று; லட்சியத்தின் பொருட்டு உயிரையே பணயம் வைக்கக் கூடிய மன உறுதி உள்ளவனில்லை என்பது அவளுக்கு விளங்கி விட்டது. ஏன்!

ஷாஜி, ஷாஜஹான் பாதுஷாவின் கீழ் ஒரு தளகர்த்தனுக இருக்க உடன்பட்டு விட்டான். இந்தச் செய்தி அவளது காதி

நீர் தாகமுள்ள இதயத்தைப் பெரிதும் புண்ணாக்கி விட்டது.

தன் கணவன் ஒரு சுதந்திர வீரனாக, ஒரு புதிய மஹாராஷ்டிர சாம்ராஜ்யத்தையே ஸ்தாபிக்க வல்லவனாகிப் பிறர் மெச்ச வாழ வேண்டும் என்ற ஆவல் அவள் நெஞ்சகத்தே ஊறிக் கிடந்தது. பிறரது படையெடுப்பினால் நாட்டிலே ஏற்படும் துன்பங்களைப் பற்றியும், அவர்களை அடியோடு நசுக்கிப் பாரத நாடு முழுமையுமே சுதந்திர நாடாக ஆக்கிவிட வேணுமென்பது பற்றியும், தன் தந்தை அஹமத் நகர் சுல்தானிடம் கை கட்டிச் சேவகம் செய்வதன் இழிவைப் பற்றியும் அடிக்கடி எடுத்துச் சொல்லுவாள்.

இயற்கையிலேயே ஷாஜி சுகமான, இன்ப வாழ்க்கையை விரும்புபவன். அரண்மனை வாசம், ஆனந்தமான சாப்பாடு, இதர சுக போகங்கள், இவைகளையே விரும்பின அவன் உள்ளம். ஆகவே ஜீஜாவின் சொல்லையும் பொருட்படுத்தாமல் அவன் ஷாஜஹான் பாதுஷாவிடம் சென்றதில் ஆச்சரியமென்ன!

* * *

அன்று பூர்ணிமை. தன்னந் தனியனாய் மேன்மாடத்தில் உட்கார்ந்திருந்தான். லூக்ஜியின் சிந்தனைகள் நெடுந்தூரம் சென்று கொண்டிருந்தன. ஷாஜியின் புகழுக்குரிய செயல்களை அவன் கேட்டு மகிழ்வதற்கு மாறாக அவன் பகைமை மேலும் பொங்கி எழுந்தது. ஷாஜஹானின் பணியாளனாக ஷாஜி சென்றதும், அதை விட்டு விட்டு அஹமத் நகர் சுல்தானின் மனைவியிடம் பெரிய பதவி பெற்றுத் திரும்பி வந்ததும் ஒன்றன் பின் ஒன்றாய்த் தனது மனக் கண்ணின் முன்பு தோன்ற லூக்ஜியின் நெஞ்சு குமுறலாயிற்று.

'என் எதிரிலேயே பிறந்து வளர்ந்த சிறு பயல், இன்று அரசியின் தயவு பெற்று என்னைவிட மேற்பதவி பெறுகிறானும்! இருக்கட்டும். இவனையும் பார்க்கிறேன். முள்ளை முள்ளாலேதான் எடுக்கவேண்டும். மாப்பிள்ளையானால் என்ன! மச்சானானால் என்ன! பகதூர் ஷாவின் தலை எப்பொழுது சாயுமென்று காத்திருந்தது போலல்லவா ஓடி வந்திருக்கிறான். கெட்டிக்காரன் தான்! ஷாஜஹான் பாதுஷா டெல்லியிலேயே நிறுத்திக் கொள்ளாமல் ஏன் விட்டு விட்டாரோ! அதை விட்டுவிட்டு இங்கே வந்திருப்பானே! இருக்கட்டும், பாதுஷா ஷாஜஹானின் உதவியைக் கொண்டே இவனை மடக்குகிறேன்' என்று மனத்துக்குள் கருவிக் கொண்டான் அவன்.

இந்தச் சமயத்தில் வந்து நின்றாள் அவன் மனைவி ஜுவஹர் பாயி. அவள் கொணர்ந்த செய்தி அவனை சந்தோஷத்தில் ஆழ்த்தியது. விஷயம் வேறொன்றுமில்லை. மீர்ஜும்லாவின் தலைமையில் வீரர் அறுபதினாயிரவர் வந்திருப்பதாகவும், நர்மதை நதிக்கரையோரம் இறங்கியிருப்பதாகவும் வெகு இரகசியமாக வந்திருந்தது ஒற்றர்கள் செய்தி.

உதவி வந்து விட்டது! லூக்ஜியின் அகமும் முகமும் ஒருங்கே மலர்ந்தன. கண்களில் வெற்றியின் பெருமிதம்! இத்தகைய துரோகி ஒருவன் கிளம்ப வேண்டுமென்று தானே ஷாஜஹான் பாதுஷா காத்திருந்தான். உடனே லூக்ஜிக்குப் படை அனுப்பி வைத்ததில் ஆச்சரியமென்ன!

மிகவும் கடுமையான போர். ஷாஜிக்குத் தன் மாமனின் பலமும் அவனுக்கு உதவி வந்திருப்பதும் தெரியும். இருந்தாலும் படையெடுத்து வந்த பிறகு எதிர்த்தே தீர வேணுமல்லவா! குடி மக்களைக் "கல்யாண கட்" என்ற கோட்டையிலே தகுந்த பாதுகாப்புடன் இருக்கச் செய்து, தான் மட்டும் சேனைகளோடு "மண்டலி கட்" என்ற கோட்டையிலிருந்து போர் புரியலானான்.

ஜீஜாபாய் போர்க்கோலம் பூண்டு அவனுடன் நின்று "அன்பே! இன்று அஹமத் நகர் பேகத்தின் உப்பைத் தின்றிருப்பதால்லவா வாளேந்தி நிற்கிறீர்கள்! ஷாஜஹான் பாதுஷாவின் பலத்தால் அவரும், பேகத்தின் பலத்தால் நீங்களும் போரிடுகிறீர்கள். இதென்ன அர்த்தமற்ற போர்! ஆயினும் உங்களுக்காக, அடிமைத் தனமென்று எண்ணாமல் நீங்கள் தொடங்கிவிட்ட போருக்காக, என் தந்தையை எதிர்க்க நானே வந்து விட்டேன். ஆனால்



இந்தப் போர் முடிந்தபிறகாவது பிறரிடம் கைகட்டிப் பணி புரிவதில்லை; சுதந்திர மகாராஷ்டிர சாம்ராஜ்யத்துக்காக மட்டுமே வாளை எடுப்பது; மற்ற எவர் பொருட்டும் வாளேந்துவதில்லை என்று உறுதி சொல்லுங்கள்" என்று உற்சாக மூட்டுவாள்.

அவளது வீரமொழிகள் கோழையான அவன் மனத்திலும் உறைத்தன. இதே நிலையில் போர் ஆறு மாதங்கள் நடந்தன.

நடுநிசி. அடர்ந்த காடு. அந்த இருளில் குதிரையின் மேல் இருவர் வருகிறார்கள். இவர்கள் யார்? வேறு யாருமல்ல. ஷாஜியும் ஜீஜாபாயும்தான். கருவுற்றிருந்ததால் மெலிந்திருந்த அவள், குதிரையின் மேல் சாய்ந்திருந்தாள்.

ஆயிற்று. இன்னும் சில குரோசங்கள் தாண்டிவிட்டால் பிஜப்பூர் எல்லை. கிழக்கு வெளுக்கவில்லை. ஆனால் எங்கேயோ குதிரையின் குளம்பொலி கேட்டது. ஜீஜாபாயின் முகத்தில் கவலைக் குறி தோன்றிற்று. "அன்பே! பகைவர்கள் நெருங்கி விட்டார்கள். இந்த நிலையில் குதிரையின் மேல் வருவது இயலாது. நீங்கள் மட்டும் ஓடித் தப்பி விடுங்கள். நானே என்னைக் காப்பாற்றிக் கொள்ளுகிறேன். ஓடுங்கள்! ஓடுங்கள்! விரைவாய் ஓடுங்கள். தாமதிக்க வேண்டாம்" என்று அவனைத் துரிதப் படுத்தினாள் அவள்.

ஷாஜிக்கு இதுவும் நல்லதென்றே தோன்றிற்று. 'வந்தது வரட்டும் ஒரு கை பார்க்கிறேன்' என்று சொல்வதற்குரிய மன நிலை அவனுக்கு இல்லை. தலை தப்பியது தம்பிரான் செயல் என்று குதிரையைத் தட்டி விட்டான் ஷாஜி.

கணவன் இவ்வளவு சுலபமாக ஒப்புக் கொண்டது அவள் மனத்தைப் பெரிதும் புண்படுத்திற்று. இரண்டொரு வார்த்தைகள்வளர்த்துப் பிறகு வற்புறுத்தலிலே போவான் என்றெண்ணினாள். மாரி காலத்து மலையிருந்து காற்றடிக்கும் போது தெறும் நீர்த்துளிகள்போல் அவள் கண்களிலிருந்து கண்ணீர் பெருகிற்று. இதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. இன்னும் இரண்டொரு மாதங்களில் தான் தாய் என்ற பெரும் பதவியைப் பெறும் நிலையிலிருப்பதையும் கூட அவர் சிந்திக்க வில்லையே! இதை நினைக்க நினைக்க அவள் நெஞ்சு குமுறியது.

படபட வென்று குதிரைகளின் குளம்பொலி வெகு சமீபத்தில் கேட்டது. கோப வெறி கொண்ட கண்களுடன் அவள் எதிரில் குதிரையினின்று கீழே குதித்தான் லூக்ஜீ. அந்த மங்கிய ஒளியிலேயும் தன் தந்தைதான் என்பதைக் கண்டு கொண்டாள் அவள்.

"எங்கே! அவன் எங்கே! எங்கே அந்தப் பதர்!" என்று அவன் அதட்டிய குரல் அந்தக் காடு முழுவதும் எதிரொலித்தது.

அவளோ இன்னும் குனிந்த தலையை நிமிரவே யில்லை.

"சொல்லுகிறாயா, இல்லையா?"

பதிலில்லை.

"நீ ஒரு பெண்ணு! பெண்ணல்ல பேய். பெற்றவனிடமே கற்ற வித்தையைக் காட்டுகிறாயா! எங்கே போனான்! உண்மையைச் சொல்."

அதற்கும் அவள் அசைய வில்லை. "போர் செய்வதானால் வாளை எடுங்கள்" என்றாள் ஆவேசக் குரலில்.

லூக்ஜியின் கோபம் பொங்கி எழுந்தது. "மகாராஷ்டிர வீரன் பெண்களுடன் போர் செய்வதில்லை" என்றான்.

"ஓகோ! அப்படியா!"

இவளது அலட்சியத்துடன் கூடிய வார்த்தைகள் எரிகின்ற தீயை ஏறத் தள்ளின. இருந்தாலும் மீண்டும் அதே இடி குரலில் "சொல்லுகிறாயா இல்லையா! பிறகு நீ என்ன சொன்னாலும் பயனில்லை. கடுந் தண்டனைக்கு ஆளாக நேரிடும்" என்றான். கோப மிகுதியினால் அவன் உடல் பதறிக் கொண்டிருந்தது.

அவள் மிகவும் அமைதியான குரலில், "எங்கே போயிருப்பார் என்று எனக்குத் தெரியாது" என்றாள்.

"ஓகோ! 'நீ போய் விடு. என் தகப்பன் தானே! நான் ஏதாவது சாகசங்கள் செய்து வந்து விடுகிறேன்' என்று சொல்லி அனுப்பினாயோ! அந்த ஏமாற்று வித்தைகளுக் கெல்லாம் அசைகிறவன் இந்த லூக்ஜீ யல்ல" என்று சீறினான். மறு விநாடி அடுத்து வந்த வீரனுக்கு உத்தர விட அவன் கைகளிலிருந்த பெரிய இரும்பு விலங்கு அவளது மலர்க் கைகளில் பூட்டப் பெற்றது. பொன் வளையல்களால் அழகு செய்ய வேண்டிய அந்த மலர்க் கரம் விலங்கையும் தாங்கிற்று.

இருள் சூழ்ந்த சிறை. கரடுமுரடான கருங்கல் சுவர்கள். வௌவால்களின் நாற்றம். அதன் நடுவில் வைக்கோல் படுக்கை. ஒரு மூலையிலே ஒரு மண் மடக்கு, மண் கூஜாவிலே தண்ணீர். மூலையிலுள்ள சிறு மாடத்திலே "முணுக் முணுக்" என்று எரியும் அகல் விளக்கு. இவைகளுக்கிடையே வைக்கோற் படுக்கையிலே படுத்திருந்தாள் அந்த வீர மகள். மாதம் நான்கும் முடிந்தது. நான்கு பூர்ணிமைகள் வந்து போயின. ஆனால் லூக்ஜியின் மனத்துள் மட்டும் கன்னங்கரிய இருள் தான் சூழ்ந்திருந்தது. தன் தந்தையின் மன நிலையை எண்ண எண்ண அவள் இதயம் ஆயிரம் துளையாய்ச் சிதறுவது போல் தோன்றிற்று. இறந்த கால நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றும் இறகு முளைத்து எதிரே வந்தன. சின்னஞ் சிறு பருவத்தில் தாயின் முன்றானையைப் பற்றியவளாய்த் தான் கோயிலுக்குள் சென்றதும், வந்திருந்த பெரியார் ஒருவர் இவள் ஒரு சிறந்த வீரனைப் பெறுவாள் என்று சொன்னதும் அவள் நினைவுக்குவர அவளையும் மீறிக் கண்களில் கண்ணீர் துளித்தது.

"வீரன் ஒருவனே கண்ணபிரான் பிறந்தது போலச் சிறையிலேதான் பிறப்பானோ! எங்கே பிறந்தாலென்ன! அவன் சுதந்திர வீரனாக, தெய்வத்துக்கன்றி வேறு ஒருவருக்கும் வணங்காத வீரனாக வாழ வேண்டும். தந்தையைப் போலும், பாட்டனைப் போலும், அடிமை வாழ்க்கையையும் அதனால் ஏற்படும் போலிக் கௌரவங்களையும் விரும்பாத உத்தமனாக இருக்க வேண்டும்......உலகத்தில் கல்நெஞ்சர்கள் என்று கேட்டதுண்டு. ஆனால் பெற்ற பெண்ணையே சிறை வைத்த தந்தையைக்கண்டதுமில்லை. கேட்டதுமில்லை. என்ன பிடிவாதம்! இவருக்கு இவ்வளவு பிடிவாதமிருந்தால் இவர் பெற்ற மகளாகிய எனக்கு அதில் ஒரளவேனும் இராதா!......சிவபெருமானே! சந்திர சேகரா! குழந்தை ஆண் குழந்தையாகவே பிறக்க வேணும். தங்களது திருநாமத்தையே சூட்டுகிறேன். இந்தக் கோழைகளெல்லாம் கண்டு வியக்கும்படி ஒரு வீர மைந்தனை எனக்கு அளிக்க வேணும். என் மகன் ஒரு சுதந்திர ராஜ்யத்தை அமைக்க வேணும்" என்று மனத்துள் வேண்டியவளாய்ப் புரண்டு படுத்தாள்.

அதுவரையில் மங்கி எரிந்து கொண்டிருந்த அகல் விளக்கினின்றும் பொறிகள் பொல பொல வென்று உதிர்ந்தன. ஆனந்த மிகுதியினால் அவள் முகம் சற்றே மலர்ந்தது. அதே சமயத்தில் "ஜீஜா" என்று யாரோ அழைப்பது கேட்டுத் திடுக்கிட்டாள் அவள். ஏன்! கேட்ட குரல் வேறு யாருமல்ல. லூக்ஜீ. "கண்ணன் என்று எண்ணினேனே! கம்சன் தான் என்று வந்துவிட்டானோ!" என்று சிந்தித்தது அவள் மனம்.

'டக்' என்று கதவுகள் திறக்கப்படும் ஓசை. மறு விநாடி லூக்ஜீ பின் தொடர உள்ளே நுழைந்தாள் அவள் தாய். அம்மா என்று அலறிய வண்ணம் தாயும் மகளும் கட்டித் தழுவிக் கொண்டனர்.

* * *

சித்திரை மாதம் வளர்பிறை பஞ்சமி. அன்று காலை முதல் நல் நிமித்தங்கள் தோன்றிக் கொண்டேயிருந்தன. விடுதலை யடைந்தது முதல் ஒவ்வொரு கணமும் ஷாஜியின் வருகையை எதிர்பார்த்தது அவள் மனம். இடையிடையே, "நான் நினைத்தது போலக் கணவர் சிறந்த வீரராகவும் உயர்ந்த நோக்கமும் பரந்த கொள்கையும் சுதந்திர தாகமும் அற்றவராயினும், 'ஆறு மாத கர்ப்பிணியான மனைவியை நடுக்காட்டில் தனியாக விட்டு வந்தோமே. என்னதான் ஆனாள்! எப்படித்தான் இருக்கிறாளோ!' என்று பார்க்க வேண்டும் என்று கூடவா அவருக்குத் தோன்றாது! மனைவி என்ற பாசம் இல்லாவிட்டாலும் ஒரு பேதைப் பெண்; பகைவனிடம் விட்டு வந்தோமே என்று கூடவா தோன்றாமற் போய் விடும்!" என்றெல்லாம் நெடுந் தூரம் ஓடும் அவள் சிந்தனைகள். நிலா என்ற ஒரு தாதிப் பெண் சொன்ன செய்தியைக் கேட்டுத் திகைத்தாள் அவள். ஏன்! ஷாஜி வேறொரு பெண்ணை மணந்து புனாவில் இருக்கிறார் என்ற செய்திதான் அது.

"சீ! சீ! ஆண் பிள்ளைகளுக்கு மனம், உணர்ச்சி, அன்பு என்பன வெல்லாம் கிடையவே கிடையாது. கேவலம் தங்கள் சுகம் ஒன்றையே பெரிதாய் நினைக்கிறார்கள். அடடா! இப்படியா செய்து விட்டார். சரி, அவர் எங்கேயாவது சௌக்கியமாய் இருக்கட்டும். என் மகன், எனக்குப் பிறக்கப் போகும் குழந்தை ஆணாயினும் சரி, பெண்ணாயினும் சரி ஒழுக்கத்திலே உயர்ந்தவனாக, வீரத்திலே சிறந்தவனாக, சூரிய சந்திரர்கள் உள்ள வரையில் புகழ் மங்காதவனாக, பாரதத் தாயின் உத்தமப் புதல்வனாக, சேவகனாக விளங்க வேண்டும். தனக்கென வாழாமல் பிறர்க் குரியனாகும் அவன் வாழ வேண்டும். அவனுடைய வீர வாழ்க்கை பிறருக்கு வழிகாட்டியாக இருக்க வேணும்" என்று எண்ணியவளாய் மஞ்சத்திலே சாய்ந்தாள் அவள்.

அந்த பவித்திரமான நாளிலே அவளுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அவனுக்கு எத்தகைய வீரக் கல்வி அளித்தாள் அவன் தாய் என்பதைச் சரித்திரம் சொல்லுகிறது. நாம் கண்டோறும் கேட்கிறோம். அந்தப் புத்திரன்தான் சிவாஜி.



# பிரிட்டன் பல்கலைக் கழகங்கள்



டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார்

பிரிட்டன் பல்கலைக் கழகங்கள் பூகோள அமைப்புப்படி பார்த்தால் இங்கிலாந்து, ஸ்காத்லாந்து, அயர்லாந்து, வேல்ஸ் என நான்கு வகைப்படும். எனினும், கல்வி அமைப்பு முறைப்படி பார்த்தால் வேறு நான்கு வகைகளாக அவற்றைப் பிரிக்கலாம். கேம்பிரிட்ஜ், ஆக்ஸ்போர்டு, இரேடிங், டர்ஹம் முதலிய பல்கலைக் கழகங்கள் ஒரு வகையினைச் சாரும். அப்பல்கலைக் கழகங்களில் மாணவர்கள் ஆசிரியரோடு உடனுறைகிறார்கள். அவற்றில் ஆசிரியரும் மாணவரும் அடிக்கடி ஒருவரை ஒருவர் கண்டு அளவு அளாவுவது குறித்தும், மாணவர்கள் ஆசிரியர் மாட்டு உசாவி ஐயங்களைக் களைந்து கொள்வது குறித்தும், உலகத்துப் பல செய்திகளைப் பற்றி மாணவர் ஒருவர் மற்ற மாணவரோடு உரையாடுவது குறித்தும் சிறப்பான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. ஆக்ஸ்போர்டிலும் கேம்பிரிட்ஜிலும் ஆசிரியர், மாணவர்களைத் தனித் தனியாகக் கண்டு பேசி உறவு கொள்வதற்கு வேண்டிய அரிய பெரிய வசதிகள் அமைத்துத் தரப்பட்டிருக்கின்றன. அவற்றின் சிறந்த நோக்கம் தனிப்பட்ட மேற்பார்வையும், உடனுறைவும் என்று கூறுதல் பொருந்தும்.



மேலே: பிரிட்டிஷ் கவுன்ஸில் அதிகாரியும், பல்கலைக் கழக அதிகாரியும் திரு செட்டியாரை வரவேற்கின்றனர்.
கீழே: கிளாஸ்கோ பல்கலைக்கழகமும் பர்மிங்காம் பல்கலைக் கழகமும்.

கேம்பிரிட்ஜ், ஆக்ஸ்போர்டு ஆகிய பல்கலைக் கழகங்கள் நாட்டுப்புறப் பல்கலைக் கழகங்கள் என ஆங்கிலேயர்களால் சில வேளைகளில் சொல்லப்படுவது உண்டு. ஆயினும் நம் பக்கத்து நாட்டுப்புறங்களைப் போல் அவை சிறுகு மென்று கருதுதல் கூடாது. ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் ஆகிய ஊர்களும் நம் பக்கத்திலுள்ள சில பட்டணங்களைப் போலிருக்கும். பல்கலைக் கழகம் இல்லையென்றால் கேம்பிரிட்ஜ் ஒரு பெரிய ஊராக இருக்க முடியாது. ஆக்ஸ்போர்டு, பல்கலைக் கழகமும் மாரிஸ் மோட்டார்த் தொழிற்சாலையும் இல்லையென்றால் அதுவும் ஒரு சிறிய கிராமமாகவே இருக்கும். இரண்டு பல்கலைக் கழகங்களிலும் மாணவர்களும் ஆசிரியர்களும் ஒன்றாகக் கூடி வசித்தல் என்பது இக் காரணத்தால் எளிதாகின்றது. பர்மிங்காம் முதலிய பட்டணங்களில் அவ் வகையான வாழ்க்கை இயலாததாகின்றது.

ஸ்காத்லாந்து பல்கலைக் கழகங்கள் நான்காவது வகையில் அமையும். அபர்டீன், எடின்பரோ, கிளாஸ்கோ, செயின்ட் ஆண்ட்ரூஸ் ஆகிய ஸ்காத்லாந்துப் பல்கலைக் கழகங்களைப் பொறுத்தவரை, தனித்தனிக் கல்லூரிகள் என்று பிரிப்பதும், கல்லூரிகளைப் பல்கலைக் கழகத்தோடு இணைத்துக் கொள்ளுதல் என்பதும் இல்லை. சிறப்பாக, எடின்பரோ, கிளாஸ்கோ ஆகிய பல்கலைக் கழகங்களும் லிவர்பூல், மான்செஸ்டர் போல் அவ்வவ்வூரில் வாழும் மக்களுடைய தொழில் துறைகளுக்குத் தக்க வகையில் பாட அமைப்புக்கள் செய்துள்ளன.

பிரிட்டன் பல்கலைக் கழகங்களில் மிகப் பழமை வாய்ந்தவை யெனக் கேம்பிரிட்ஜ், ஆக்ஸ்போர்டு ஆகியவற்றையே குறிப்பிட வேண்டும். அவை பன்னிரண்டு, பதின்மூன்றும் நூற்றாண்டுகளில் தோன்றியவை. சமயத்தின் அடிப்படையில் எழுந்த கல்லூரிகளாகவும் மடங்களாகவும் இருந்த பல்வேறு நிலையங்களை ஒன்று கூட்டிப் பதினாலாவது நூற்றாண்டில் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகம் என்றும், கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகம் என்றும் பெயரிட்டு சிறப்பித்தார்கள். அவற்றிற்கு அடுத்தபடியான பழமை வாய்ந்த பல்கலைக் கழகங்கள் ஸ்காத்லாந்து தேசத்தவை. அவை பதினைந்து, பதினாறும் நூற்றாண்டுகளில் தோன்றியவை. லண்டன் பல்கலைக் கழகம் நூற்றிருபது ஆண்டுகளுக்கு முன்னர்த்

தான் நிறுவப்பட்டது. ஒரு நூற்றாண்டுக்குள் இவ்வுலகத்தில் பல்கலைக் கழகங்கள் ஒன்றன்மேல் ஒன்றாய்க் கிளைத்துப் பல்கி விட்டன. இந்தியாவிலும் பத்தொன்பதாம் நூற்றாண்டு முடிய சென்னை, பம்பாய், கல்கத்தா, அலகாபாத் ஆகிய நான்கு பல்கலைக் கழகங்களே இருந்தன. காசி, மைசூர், டில்லி, ஆந்திரா, அண்ணாமலை முதலிய பல்கலைக் கழகங்கள் 1916-க்கும் 1929-க்கும் இடைப்பட்ட காலத்தில் தோன்றியவை. இவற்றிற்குப் பின் மேலும் பதினைந்து பல்கலைக் கழகங்கள் தோன்றியுள்ளன.

இப்பொழுது பிரிட்டன் பல்கலைக் கழகங்களில் படிப்பவர்கள் ஏறத்தாழத் தொண்ணூறாயிரம் பேர். இவர்களில் நூற்றுக்கு ஐம்பத்தைந்து பேர் ஞானகலை (Science) பயிலுகிறார்கள்; நாற்பத்தைந்து பேர் (Arts) கலை என்ற வகையில் பயிலுகிறார்கள். இந்த மொத்த எண்ணிக்கை 1943 போர்க் காலத்திற்கு முன் இருந்த எண்ணிக்கையைவிட இரண்டு பங்கு பெரியது. இவர்களில் ஆடவர்கள் முக்கால் பங்கும், மகளிர்கள் கால் பங்குமாக இருக்கிறார்கள். ஆயினும், ஒரு விந்தை என்னவென்றால், பெண்கள் படித்தாலும் அவர்கள் பிரிட்டன் தேசத்தில் பட்டம் பெறுவதற்கு உரியவரான காலம் அண்மையில்தான் கிட்டிற்று என்பது. 1880-க்கு முன்னும் பிரிட்டன் பல்கலைக் கழகங்களில் பெண்களுக்குப் பட்டம் தந்ததில்லை. இலண்டன் பல்கலைக் கழகமே பிறவற்றிற்கு இவ்வகையில் 1878 முதல் வழி காட்டிற்று. ஆயினும், இந்தியாவில் புனாவில் இருக்கிற பெண்கள் பல்கலைக் கழகத்தைப் போல மகளிருக்கு எனப் பிரிட்டனில் தனியாக ஒரு பல்கலைக் கழகம் இல்லை.

பல்கலைக் கழகங்களின் வேலை மாணவர்களுக்குக் கல்வி கற்பிப்பதோடு முடிந்து விடுவதாக நினைத்து வந்த கருத்தை இப்பொழுது மக்கள் மாற்றிக் கொண்டு வருகிறார்கள். ஆராய்ச்சி வேலையும் பல்கலைக் கழகங்கள் செய்ய வேண்டியது ஒன்று என்ற கருத்து அடிக்கடி வற்புறுத்தப் படுகிறது. ஆதலால், பல பிரிட்டன் பல்கலைக் கழகங்களில் ஆராய்ச்சியில் ஈடுபடும் மாணவர்களும், ஆராய்ச்சி மாத்திரம் செய்கிற பேராசிரியர்களும் பலர் காணப்படுகிறார்கள். மாணவர் இல்லாத கல்லூரி என்றாலே வியப்பாக இருக்கும் அல்லவா! ஆயினும் அது போன்ற கல்லூரிகள் சில உள. உதாரணமாக, ஆக்ஸ்போர்டில் உள்ள ஆல்சோல்ஸ் காலேஜ் என்பதில் உள்ள ஆசிரியர்கள், மாணவர்கள் எவரும் இல்லாமலே வெறும் ஆராய்ச்சித் துறையில் ஈடுபட்டுள்ளார்கள்.

ஒவ்வொரு பல்கலைக் கழகத்திலும் "யூனிவர்சிடி யூனியன்" என்ற பொதுப் பேரவை சிறந்த இடம் பெற்றுள்ளது. ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் யூனியன்களில் மாணவர் பெறும் சொற்போர்ப் பயிற்சி குறிப்பிடத் தக்கது. இந்த நிலையங்களில் முன்னர்ப் பயிற்சி பெற்றவர்களிற் பலர் பிரிட்டன் பிரதமராகவும், இந்திய வைஸ்ராயாகவும் பின்னர் அலுவல் ஆற்றும் பேறு பெற்றனர். யூனியன்கள் என்பவை வெறும் வாத சபைகள் அல்ல. அவற்றின் ஆதரவில் அமைக்கப் பட்டிருக்கும் நூல் நிலையங்கள், வாசக சாலைகள், தேக் கடைகள், உண்டிச் சாலைகள், காட்டிய நிலையங்கள் ஆகியவை காணத்தக்கவை. லீட்ஸ், மேஞ்சஸ்டர், அபர்டீன் போன்ற இடங்களில் ஹாஸ்டல் இல்லாத குறையை ஒருவாறு யூனிவர்சிடி யூனியன்களே நிறைத்து வருகின்றன. லீட்ஸ் பல்கலைக் கழகத்தில் ஒரு மண்டபத்தில் ஒரே நேரத்தில் சுமார் 800 மாணவர்கள் பகலுணவு கொள்ளும் காட்சி காணத்தக்க தொன்று. ஸ்டோக்-ஆன்-டிரண்ட் என்ற இடத்திலும் பகல் 12-30 மணிக்கு மாணவரும் ஆசிரியரும் கலந்து கொண்டு ஒரே மண்டபத்தில் உண்டு அளவளாவி மகிழ்கின்றனர்.

மாணவர்க்குப் பொதுவாகக் கொடுக்கப்படும் சுயேச்சை அதிகம். எனினும் மாணவர் தவறு செய்தால் அவர் பெறும் தண்டனையும் அதிகம். இது முக்கியமாக, கேம்பிரிட்ஜ், ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகங்களிற் காணப்படுகின்றது. தவறு என்பது நிறுவப்பட்டால் கூசாது ஐந்து பவுன், பத்து பவுன் அபராதம் என விதித்து விடுவர். மாணவர் கொடுத்தே ஆகவேண்டும். இப் பல்கலைக் கழகங்களில் மாணவர்கள் வகுப்பிற்கு வாராது ஒன்று திரண்டு நிற்றல் என்பதோ, அதிகாரிகளுக்கு எதிராக ஒன்றுகூடுதல் என்பதோ கனவிலும் எதிர்பாராத செய்திகள். மாணவர்கட்குப் பெரும்பாலும் குறைகள் இல்லை. அவர்கட்கு உண்ணவும், உறங்கவும் நல்ல வசதிகள் செய்து தரப்பட்டுள்ளன. குறை ஏதேனும் ஏற்பட்டால் அதிகாரிகளிடம் நேரே தெரிவித்தால் போதும். நன்றாகக் கவனிக்கிறார்கள். ஆதலால், ஒன்றுகூடி எதிர்த்து நிற்றல் என்பதற்கு இடமில்லை. ஆசிரியரிடத்தில் பல்கலைக் கழகங்கள் பெருமதிப்பு வைத்துள்ளன. அம் மதிப்பிற்குக் குறைவாராது ஆசிரியரும் நடந்து வருகின்றனர்.








பிள்ளைகள்
யோசிப்பது...



பட்சணம்,
பட்டாசு

பெண்கள்
நினைப்பது...



பட்டுப்புடவை

# தீபாவளி என்ற உடனே...

தகப்பனர்
உணர்வது...



பணச்சிலவு

மாப்பிள்ளை
விரும்புவது...



வைரமோதிரம்

'பொடி' என்ற உடனே
எல்லோருக்கும் தோன்றுவது

# T·A·S·ரத்தினம்
## பட்டணம் பொடி

உயர்ந்த புகையிலைகளால் உன்னத முறையில் உருவாக்கப்பெற்றது



தயாரிப்பாளர்: T.A.S. ரத்தினம் பிரதர்ஸ் தபால்பெட்டி...1151, சென்னை-21

 'S.R. ஞானம் பட்டணம் பொடியும் எமது தயாரிப்பே' 




# லிப்டன் டீ கெர்ல் டஸ்ட் டீ

## சிறந்த ஸ்டிராங் டீ தருகிறது

LTGX 27 TM

---

வெள்ளித் திரையில் இன்று
விண்மீனெனத் திகழும்
பிரபல நக்ஷத்திரம் ஸ்ரீமதி
சு லோ ச ன
ரா ஜ
கூறுகிறார்:

"நான் என் வதன சௌந்தரியத்திற்கு 'ரெமி' தயாரிப்புகளையே உபயோகிக்கின்றேன். அவைகள் மிக்க உயர்தரமானவை."

P.R. சுலோசனா

Remy SNOW

Remy BORATED TALCUM POWDER




## தாயும் தந்தையும்

சூரிய கோளத்திலிருந்து தெறித்து விழுந்த ஒரு துண்டுதான் பூமி என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள்.

இந்த அண்ட கோளங்கள் அனைத்துக்குமே மூலமான சக்தி ஒன்றே என்றும், இந்த அண்டங்கள் அனைத்தையுமே ஒரு காந்த சக்தியானது ஈர்த்து இழுத்து, இயக்கிக் கொண்டு வருகிறது என்றும் நமது பெரியோர்கள் கண்டு சொல்லியிருக்கிறார்கள்.

இதையெல்லாம் நினைவிற் கொண்டு, பூமியையும் சூரியனையும் பார்த்தோமானால், ஏதோ ஆதியான தாயும் தந்தையும் என்றே சொல்லத் தோன்றும்.

நிலமகள் என்ற ஆதி அன்னையினிடத்தில், சூரிய தேவனுடைய ஆதித் தந்தைக்குத்தான் எத்தனை காதல்! சூரியனுடைய வரவிலே பூமாதேவிக்குத்தான் எத்தனை களிப்பு! மலர்ந்த தாமரைப் பூவைக் கையிலே கொண்டு, மகிழும் இதயத்தோடு ஆதவனை வரவேற்கிறாள் நிலமகள். ஆதவனோ நிறைந்த கண்ணை இமைக்காமல் அன்போடு அவளை நோக்கியவாறு பவனி வருகிறான்!

பாரதியார் கண்ட இந்த தெய்விகக் காதலை வர்ண ஓவியமாகத் தருகிறார் 'வர்மா'.

"ஆதித் தாய்தந்தை நீவிர் — உமக்கே
ஆயிரந்தரம் அஞ்சலி செய்வேன்"

என்று ஒளியையும் நிலத்தையும் வாழ்த்தி 'வளம் பெருக!' என்று பிரார்த்தனை செய்வோமாக!

## கூட்டுப் பிரார்த்தனை



தனது அக்கையார் குந்தவைப் பிராட்டியின் திருவுளக் குறிப்புப் படியே தஞ்சையில் ராச ராசேச்சரம் என்னும் கோயிலை எழுப்பி, சைவ சமயமும் தமிழ் நாட்டின் கலைகளும் நாளும் வளர வகை செய்தான் ராஜ ராஜ சோழன்.

கல்லிலே வளரும் பக்தி தத்துவம், மக்களுடைய உள்ளத்திலே நிலையும் வளர்வதற்கு மற்றொரு அருமையான ஏற்பாடும் செய்தான் ராஜ ராஜன். நம்பியாண்டார் நம்பிகளைக் கொண்டு சைவத் திருமுறைகளைக் கட்டளைப் படுத்தி, பண்ணோடு இசைபாடும் 'கூட்டுப் பிரார்த்தனை' முறைக்கு வழி வகுத்தான் இந்தத் தமிழ்ப் பேரரசன்.

தஞ்சாவூர்ப் பெருவுடையான் கோயிலின் வடபுறச் சுவரில் உள்ள கல்வெட்டில் திருப்பதியம் விண்ணப்பம் செய்வோருக்கும், பக்க வாத்தியங்கள் வாசிப்பவருக்கும் நாள்தோறும் மூன்று குறுணி நெல் நிவந்தமாகக் கொடுத்துச் சாஸனம் பொறித்தான் ராஜராஜன். இந்தப் பணியாளருக்குப் பிறகு அவர்களின் வாரிசுகளாக வருவதற்கு யார் தகுதியுடையவர் என்று கூட முன் யோசனையோடு வரம்பு செய்தான் இந்த மன்னன்.

பக்தியைக் கோயிலிலும் மக்களின் உள்ளத்திலும் பொறித்து வைத்த தமிழ் மன்னனையும் அவனுடைய தமக்கையையும் அவர்கள் உருவாக்கிய தஞ்சைப் பெரிய கோயிலையும் படத்திலே காணலாம்.



## பொன் வேய்ந்த பூபதி

யுத்தத்திலே வென்று சேகரித்த பொன்னையும் பொருளையும் எந்த வகையிலே பயன்படுத்துவது? இதற்கும் புனிதமான ஒரு வழி கண்டான் சுந்தர பாண்டியன்!

வீரத்தினால் வென்ற பொருளை பக்தியினால் காணிக்கை செலுத்தினான் சடா வர்மன் சுந்தர பாண்டியன்.

பொன்னையும் பொருளையும் போரிலே வென்றான். கோயிலிலே கொண்டு நிறை செலுத்தினான், இந்தத் தமிழ் மன்னன்.

சிதம்பரம் கோயிலுக்கு அவன் பொன் வேய்ந்த கீர்த்தியைச் சாஸனப் பாடல்கள் போற்றிப் புகழும்:

வாழ்க கோயில்பொன்
வேய்ந்த மகிபதி
வாழ்க செந்தமிழ்
மாலை தெரிந்தவன்
வாழ்க மண்டலம்
யாவையும் கொண்டவன்
வாழ்க சுந்தர
மன்னவன் தென்னனே!








## உறு துணைவன்

ஆண்டவன் மனுஷருக்கு அனுப்பிய திருக் குமாரரான ஏசுநாதருடைய அருள் வாக்கிலே 'உறு துணைவன்' என்று சிறப்புப் பெயர் பெற்றவன் ஸமாரிடன் என்ற உத்தமன்.

வழிப்பறித் திருடர்களால் அடித்து இம்சிக்கப்பட்டுக் குற்றுயிராய்க் கிடந்த ஒருவனுக்கு வேறு யாரும் உதவவில்லை. பயனற்ற வெறும் ஆசீர்வாதத்தை வழங்கிவிட்டு வழி நடந்த புண்ணியவான்களும் உண்டு! ஆனால் ஸமாரிடன் என்னும் தொழிலாளி என்ன செய்தான்? காயங்களுக்கு மருந்திட்டான். தாகத்தையும் நோயின் வேகத்தையும் தணித்து உதவினான். அவனல்லவோ உற்ற சமயத்தில் உதவிய நண்பன்!

கஷ்டத்தில் இருப்பவனுக்கு வெறும் அனுதாப வார்த்தைகளினால் என்ன பிரயோஜனம்? — இந்த உண்மையைச் சித்திரிக்கிறது ஏசுநாதரின் புனிதமான உபதேச மொழிகளில் அடங்கிய ஸமாரிடன் வரலாறு.

கருணை, அருள், அன்பு என்று பல சொற்களிலே குறிக்கப்படும் உத்தம குணத்தையும் அந்த குணத்தைப் பாராட்டிய திருக் குமாரரையும் சித்திரிக்கிறது மேலே கண்ட ஓவியம்.

# குழந்தைகள் வளர்ந்து கொண்டிருக்கிறார்கள்!



இனி அவர்களுக்கு மேல் படிப்பு-கலியாணம் முதலிய பிரச்னைகள் இருக்கின்றன. வரப்போகும் இத்தகைய செலவுகளை, இப்பொழுதே வகுக்கும் திட்டங்களால் சுலபமாய் சமாளிக்கலாம்.

இன்ஷ்யூரன்ஸ்தான் இதற்கு சிறந்த வழி.

உங்களுக்கேற்ற திட்டங்களை அளிக்க சித்தமாயிருக்கிறோம்.

○●○

விவரங்களுக்கு எழுதவும்:



## ஸௌத் இந்தியா கோ-ஆபரேடிவ் இன்ஷ்யூரன்ஸ் ஸொஸைடி லிமிடெட்

5 & 6, மௌண்ட் ரோடு, மதராஸ்-2.



G R

---

## பீஹைவ் பவுண்டரி

ஸ்டரக்சரல் வேலைகள், மின்சார லயன்களுக்கு வேண்டிய சாதனங்கள், டாங்குகள், இரும்பு மற்ற இதர உலோகங்களின் வார்ப்புகள், ரோடு ரோலர்கள், யந்திர ரிப்பேர்கள், கிரில்கள், கேட்டுகள், மோட்டார் கார், டிராக்டர் இவைகளின் உறுப்புக்கள் ஆகியவைகளுக்கு பீஹைவ் பவுண்டரியை விசாரிக்கவும்.

உரிமையாளர்கள்

### இந்தியன் காமர்ஸ் & இண்டஸ்ட்ரீஸ் கோ., லிட்.

போன்: 2020 — 95, பிராட்வே, சென்னை-1 — தந்தி: "LUCKY

எஃகு உருக்கு வேலைகளுக்கான தொழிற்சாலை

கௌதா ஸ்டீல் ப்ராடக்ட்ஸ், ராமவரப்பாடு - கிருஷ்ணா ஜில்லா

போன்: 327

# சங்கீத மும்மூர்த்திகள்



தீபாவளி என்றால் நமக்குப் பல நினைவுகள் ஏற்படுகின்றன. அதில் ஒன்று நம்முடைய கர்னாடக சங்கீதத்தைப் பொறுத்தது. மன்மத ஆண்டு தீபாவளித் திருநாளின் போதுதான் கர்னாடக சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான ஸ்ரீ முத்துசாமி தீட்சிதர் பரகதி அடைந்தார்கள். அந்தச் சரித்திரம் எல்லாருக்கும் தெரியும்.

அன்று காலை அவருக்கு காசி க்ஷேத்திரத்தின் அன்ன பூரணேச்வரி பிரத்யட்சமானாள். அவர் இளமையில் சிதம்பரநாத யோகியுடன் காசியில் வாசம் செய்தார். அப்போது யோகிகள் "அன்னபூரணேச்வரி பிரத்யட்சமானால் அன்று உனக்கு அம்பாள் முக்தி கொடுப்பாள்" என்று சொன்னது நினைவுக்கு வந்தது.

தினம் காலையில் தேவி பூஜை செய்வதுபோல் அன்றையதினமும் தேவி பூஜை செய்துவிட்டு சங்கீதம் பாடுவதற்கு உட்கார்ந்தார். அந்தச் சமயம் எட்டையபுரம் மகாராஜாவின் பட்டத்து யானை மதம் கொண்டு மயானத்துக்கு ஓடியது. இதைக் கேள்விப்பட்ட மகாராஜா திகில் அடைந்து போனார். உடனே தீட்சிதரிடம் சென்று வணங்கினார். "எனக்கு ஏதோ பயமாக இருக்கிறதே" என்றார். இதைக் கேட்ட தீட்சிதர் சற்று நேரம் தியானம் செய்து விட்டு "உமக்கு யாதொரு பயமும் இல்லை" என்று அவரை அனுப்பி வைத்தார்.

பிறகு அவருடைய சீடர்கள் சங்கீதம் பாடத் தொடங்கினார்கள். அவர்கள் "மீனாக்ஷிமே முதம் தேஹி" என்ற கீர்த்தனத்தில் "மீனலோசனி" என்று பாடும் போது அம்பாளுடன் தீட்சிதர் ஐக்கியமானார். ஆகவே இந்த மன்மத ஆண்டு தீபாவளி சங்கீத உலகத்துக்கு ஒரு புனிதமான தினமாகும்.



சங்கீதத்தினால் பரத்தை அறிந்த மகான்கள் தென்னாட்டில் பலர் உண்டு. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் சைவசமயத்துக்குத் தேசிகர்களான தேவாரம் இயற்றிய மூவரும் இசையினால் ஆண்டவனை அறிந்தார்கள். அம் மாதிரியே வைஷ்ணவ சமயாச்சாரியர்களான ஆழ்வார்களும் தம் தம் திவ்விய அநுபவங்களை, திவ்வியப் பிரபந்தம் என்ற இசைப்பிரபந்தங்களில் வெளியிட்டிருக்கிறார்கள்.

நூறு ஆண்டுகளுக்கு முன் திருவாரூரில் நாயன்மார், ஆழ்வார் போன்ற மகான்கள் மூன்று பேர் தோன்றினார்கள். அவர்கள் தான் ஸ்ரீ தியாகராஜர், ஸ்ரீ முத்துசாமி தீட்சிதர், ஸ்ரீ சியாம சாஸ்திரிகள். அவர்கள் மூவரும் இசையினால் ஈச்வரனை சாட்சாத்காரம் செய்தனர். ஆகவே இந்த மகான்கள் தோன்றிய ஸ்தலமான திருவாரூர் நம் தென்னாட்டுக்கே ஒரு முக்கிய புண்ய ஸ்தலம் என்று சொல்ல வேண்டும். பரமசிவன் இங்கு தியாகேசன் என்ற திருநாமத்துடனும், பார்வதி கமலாம்பாள் என்ற திருநாமத்துடனும் விளங்குகிறார்கள்.

திருவாரூர் மூவராலும் பாடப்பெற்ற புண்ய க்ஷேத்திரங்களில் ஒன்று. சுந்தரமூர்த்தி நாயனாரின் அருமையான லீலைகள் நடந்தது திருவாரூரில். 'கமலையில் பிறந்தார்க்கு முக்தி' என்பது சான்றோர் வாக்கு. அத்தகைய புண்ணிய க்ஷேத்திரத்தில் கர்னாடக சங்கீதத்துக்கு மும்மூர்த்திகளாக விளங்கும் தியாகராஜர், தீட்சிதர், சாஸ்திரிகள் பிறந்தார்கள் என்பது ஒரு விசேஷமல்லவா? அதிலும் ஸ்ரீ முத்துசாமி தீட்சிதர் தியாகேசன் பேரிலும், கமலாம்பாள் பேரிலும், நீலோத்பலாம்பாள் பேரிலும் அநேக அற்புதமான கீர்த்தனைகள் இயற்றியிருக்கிறார்கள்.

பாடல் பெற்ற க்ஷேத்திரம் என்றால் நாயன்மார் மூவராலும், தீட்சிதர் அவர்களாலும் பாடப் பெற்ற க்ஷேத்திரம் என்பது உசிதமாகும்.

ஆண்டவனை மாத்திரம் அல்ல, அவர்களின் தொண்டர்களையும் போற்றுவது நம்முடைய சமயம். ஆகவே திருவாரூர் தியாகேசப் பெருமானைத் தொழுது வணங்கும் நாம், அவர் க்ஷேத்திரத்தில் தோன்றி, அவரைப் பல இசைகளால் பாடிய மும்மூர்த்திகளையும் போற்றுதல் நம்முடைய கடமை.

சுப்ரீம் கோர்ட் நீதிபதி
டி. எல். வெங்கடராமய்யர்





# எனது அனுபவத்திலே




வைத்தியத் தொழிலில் எனக்கு ஏற்பட்டுள்ள அனுபவத்தை எடுத்துக் கொண்டால் 'மிகச் சொற்பமான அனுபவம்' என்று யாரும் சொல்ல மாட்டார்கள் என்றே நினைக்கிறேன். போதிய அளவு நீண்ட அனுபவம்தான். இந்த அனுபவத்தை வைத்துக் கொண்டு சற்று என் வாழ்க்கையைப் பின்னோக்கிப் பார்க்கும்போது, 'அடேயப்பா! அந்நாட்களுக்கும் இந் நாட்களுக்கும் எவ்வளவு வித்தியாசம்!'' என்ற மலைப்புத்தான் தோன்றுகிறது.

அந்நாட்களில் டாக்டர்களின் அந்தஸ்து மக்கள் சமுதாயத்தில் மிக உயர்வாக இருந்தது என்பது மட்டுமல்ல; நெருங்கியதாகவும் இருந்தது. அந்த நாட்களில் ஊருக்கு ஒரு டாக்டர் இருப்பார். அந்த டாக்டர் அந்த ஊரிலுள்ளவர்கள் அத்தனை பேருடைய நெருங்கிய நண்பராகவும் கருதப்பட்டு வந்தார். ஒவ்வொரு விஷயத்திலும் ஊரார் டாக்டரை, டாக்டராக மட்டும் மதிக்காமல் உற்ற குடும்பத் தோழராக மதித்து நடத்தி வந்தார்கள். வீட்டில் கல்யாணம் வந்தால் பெண்ணைப் பெற்றவர் டாக்டரிடம் வந்து, ''டாக்டர் ஸார், என் பெண்ணுக்கு இந்த வருஷம் கல்யாணம் பண்ணலாம் என்றிருக்கிறேன்'' என்று ஆரம்பித்து அவர் ஆலோசனையைக் கேட்பார். டாக்டர் பெண்ணையும் வரனையும் பற்றி எல்லா விவரங்களையும் கேட்டுத் தெரிந்து கொண்டு ஆலோசனை சொல்லுவார். ஆம், ஜாதகப்பொருத்தம் பார்ப்பதற்குச் சோதிடரிடம் போவதற்கு முன்னால் ஊர் டாக்டரிடம் கலந்து ஆலோசிப்பார்கள்.

இப்பொழுது யார் அப்படி டாக்டரைக் கலந்தாலோசிக்கிறார்கள்! அப்படிக் கலந்து ஆலோசிக்க வந்தால்தான் எந்த டாக்டர் பொறுமையாக இருந்து பதில் சொல்ல இன்று தயாராக இருக்கிறார்!

* • *

ஆம்; இந் நாட்களில் டாக்டர்களுக்கும் பொதுவாகப் பொறுமை இருப்பதில்லை; நோயாளிகளுக்கும் பொறுமை இருப்பதில்லை.

''அடாடா! இதென்ன வேடிக்கையாக இருக்கிறதே! நோயாளி எங்கேயாவது பொறுமையாக நோயை வைத்துக்கொண்டிருக்க முடியுமா? அவனவன் தன் நோயை எவ்வளவு சீக்கிரம் விட்டுத் தொலைக்க முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் விட்டுத் தொலைக்கத்தானே பார்ப்பான்!'' என்று நீங்கள் சொல்வீர்கள்.

உண்மைதான். ஆயினும் ஓரளவு பொறுமை வேண்டியதுதான். ஒருவனுக்கு ஒரு நோய் வந்து டாக்டரிடம் வந்தால், 'அது என்ன நோய்?' என்று டாக்டர் புரிந்து கொள்வதற்கு முன்பே வேறு பத்து டாக்டர்களிடம் உடம்பைக் காண்பித்து அவரவர்கள் எழுதிக் கொடுக்கும் மருந்தைச் சாப்பிட்டு உடம்பையும் நோயையும் அப்படியே வைத்துக்கொண்டு விடுகிறார்கள். போதாக்குறைக்குப் பத்திரிகைகளில் வெளியாகும் 'பேடன்ட்' மருந்துகளை வேறு டாக்டர்களுக்குச் சொல்லாமல் உபயோகிக்கும் கெட்ட குணம் நம் நாட்டு மக்களிடம் இருக்கிறது. இதற்கெல்லாம் காரணம் நம் மக்களிடையேயுள்ள அவசர புத்திதான்.

ஆம்; நம் வாழ்க்கையில் இப்பொழுது ஏற்பட்டுள்ள 'அவசரம்' குறைந்தாலே பாதி வியாதி நம்மை விட்டு ஓடிவிடும். காலையில் படுக்கையை விட்டு எழுந்திருக்கும்போதே, ''அடாடா! ஆறு மணியாகி விட்டதே!'' என்று அவசரப்பட்டு அலறிப் புடைத்துக் கொண்டு எழுகிறோம். அவசர அவசரமாகப் பல் தேய்க்கிறோம்; அவசர அவசரமாகக் காப்பி குடிக்கிறோம். அவசர அவசரமாக க்ஷவரம் செய்து கொள்ளுகிறோம். அவசர அவசரமாகக் கடக் கடக் சாப்பிடுகிறோம். அவசர அவசரமாக பஸ் நிலையத்துக்குப் போகிறோம். பஸ் வரத் தாமதமானால் 'வரவில்லையே வரவில்லையே' என்று துடிக்கிறோம். பஸ் வந்தவுடன் அவசர அவசரமாகத் தொத்திக் கொள்ளுகிறோம். அவசர அவசரமாக ஆபீஸில் போய் உட்கார்ந்து அவசர அவசரமாக வேலை பார்க்கிறோம். காரியாலயத்தில் ''சீக்கிரம் செய்; வேகமாக வேலையை முடி.'' என்றெல்லாம் உத்தரவுகள் வருகின்றன. மொத்தத்தில் 'அவசர வேகம்' இன்றைய மக்களை அழுத்துகிறது. இதனாலேயே, மூளை நரம்புகள், ஜீரண சக்தி ஆகிய எல்லாம் கெட்டுப் போய், மக்கள் பல நோய்களுக்கு உள்ளாகிறார்கள். ஆயினும் காலம் போகிற போக்கைப் பார்க்கும் போது 'அவசர வாழ்க்கை அன்றாட வாழ்க்கை நியதியாகி விட்டது' என்றுதான் சொல்லத் தோன்றுகிறது. இந்த நியதியின் சுழற்சியில் சர்வ கலாசாலைகளும் அகப்பட்டுக் கொள்ளுகின்றன! அதன் விளைவாக சர்வகலாசாலைகள் ஏராளமான டாக்டர்களை அவசர அவசரமாகச் சிருஷ்டித்து வெளியே அனுப்ப வேண்டியிருக்கிறது.

''இன்றைய டாக்டர்கள் முன்னாட்களில் இருந்த டாக்டர்களைப் போல் இல்லை. இவர்கள் தரம் அவ்வளவு உயர்வாக இல்லை; இவர்கள் படிப்பு போதாது'' என்றெல்லாம் இன்றைய டாக்டர்களைப் பற்றிக் குறைப்படுவது காதில் விழுகிறது.

ஆயினும் ஒன்று நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். டாக்டர்கள் என்று கல்லூரியைவிட்டு வெளியில் வரும் அவர்களுடைய படிப்பு, வைத்திய ஞானம் எப்படியிருந்தாலும் பொது மக்களுடன் தொடர்பு வைத்துக் கொள்ளத் தொடங்கியவுடன் அவர்கள் ஏராளமாகப் படித்துத் தங்கள் வைத்திய அறிவை விசாலப்படுத்திக் கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது. அதனால் எந்த டாக்டரையுமே 'அப்படி ஒன்றும் படித்தவரல்ல' என்று அவர் கல்லூரித் தரத்தை வைத்துக் கொண்டு சொல்லி விடக் கூடாது.

* * *

எனது அனுபவத்தில் நமது நாட்டில் பொது மக்கள் கூறும் இன்னொரு வாதத்தைக் கேட்கும் போது எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது!

டாக்டர்கள் மலிய மலிய மருந்துகளும் புதிது புதிதாகத் தோன்றுகின்றனவாம்! மருந்துகள் புதிது புதிதாக வர நோய்களும் புதிது புதிதாகத் தோன்றுகின்றனவாம்!

இதில் உண்மையும் இருக்கிறது; வேடிக்கையும் இருக்கிறது.

'நெய்க்குத் தொன்னை ஆதாரமா! தொன்னைக்கு நெய் ஆதாரமா!' என்பது போன்ற குழப்பம் விளைவிக்கும் வாதம் இதில் கொஞ்சங்கூட இல்லை.

அதனும் டாக்டர்களும் மருந்தும் தோன்றிய பிறகுதான் நோய் ஏற்பட்டது என்று நினைப்பது தவறு. நோய் ஏற்பட்ட பிறகுதான் மருந்தும் டாக்டரும் ஏற்பட்டார்கள்!

பொதுவாக நோய், கிருமிகளால் ஏற்படுகிறது. கிருமிகளை நாசம் செய்தால் நோய் நீங்கிக் குணம் ஏற்படுகிறது. கிருமிகளை ஒழிக்கும் காரியத்தை மருந்து மேற்கொள்ளுகிறது.

ஆனால் ஆண்டவன் படைப்பில் ஒவ்வொரு ஜீவராசியுமே எவ்வளவு கஷ்டமான சூழ்நிலை ஏற்பட்டாலும், அதை எதிர்த்து நின்று வெற்றி கொண்டு வாழவே முற்படுகிறது. அதனால் முதலில் கிருமி நாசினியாகக் கருதப்பட்ட மருந்தை, நோய்க் கிருமிகள் எப்படியோ எதிர்த்து, நாளடைவில் பலம் பெற்று, மருந்தைச் சமாளித்து வாழ்ந்து விடுகின்றன! இப்படி மருந்துக்கும் கிருமிகளுக்கும் ஓயாத போராட்டம் இருந்து வருகிறது. இது இயற்கையின் நியதி.

சமீப காலத்தில் நடந்த விஷயத்தைச் சொல்லுகிறேன்.

பெனிஸிலின் மருந்து அற்புத மருந்து என்று பிரமாதமாக வரவேற்கப்பட்டது. லட்சம் லட்சமாக டாக்டர்களும் குத்தி

ளர்கள்; நோயாளிகளும் டாக்டரைப் போடச் சொல்லி உடலில் குத்திக் கொண்டார்கள்!

இப்பொழுது என்ன ஆயிற்று! 'ஊசி, பெனிஸிலின் போட்டால் பிரயோசனமே இல்லை. உடம்பில் வேலை செய்ய மாட்டேன் என்கிறது!' என்று நோயாளிகளே சொல்லுகிறார்கள். ஆம், நோய்க் கிருமிகள் புது உருவங்களும், வீர்யமும் பெற்றுப் புது நோய்களுக்கும்கூடக் காரணமாகி விடுகின்றன! இது இப்பொழுது 'ஸ்டேப் டோஸைஸிஸ்' என்று சொல்லப்படும் மருந்துக்கும் உண்மையாகி வருகிறது. இப்படியிருக்க மருந்துதான் நோய்க்குக் காரணம் என்று சொல்ல முடியுமா!

நோய்கள் பொதுவாக இப்படித்தான் வளர்கின்றன! இருந்தாலும் வைத்திய நிபுணர்கள் இவைகளைக் கட்டுப்படுத்த ஓயாமல் ஆராய்ச்சி செய்து வருகிறார்கள்!




அமெரிக்கா போன்ற நாடுகளில் எத்தனையோ தனவந்தர்கள் கோடிக் கணக்கான ரூபாய்களை நோய்களைக் குணப் படுத்தும் மருந்துகளைக் கண்டு பிடிப்பவர்களுக்குப் பரிசாக வழங்குவதற்கென்றே ஒதுக்கி வைத்திருக்கிறார்கள்.

* * *

நம் நாட்டில் பெரும்பாலோருக்கு ஏற்படும் நோய்களை வெகு சுலபமாகத் தடுக்கலாம். காலரா, சீதபேதி முதலிய வயிற்று நோய்கள்தாம் அதிகமாக இங்கே காண்கிறோம். இவை குடி தண்ணீர் மூலமாகத்தான் பரவுகின்றன. குடி தண்ணீரைச் சுத்தப்படுத்திக் குடிப்பதற்கு மக்களைப் பழக்கப் படுத்தினாலே போதும். நம் நாட்டில் பல நோய்கள் வாரா. இது முக்கியமாக அரசாங்கத்தின் பொறுப்பு!

நமது நாட்டில் ஏற்படக் கூடிய நோய்களையும், நோய்களினால் மரணமடைபவர்களின் தொகையையும் பார்க்கும் போது நமது நாட்டிலுள்ள ஆஸ்பத்திரி வசதிகள் மிகச் சொற்பம் என்பது தெரிய வரும். காரணம் ஆஸ்பத்திரிகள் பெரும்பாலும் சர்க்கார் ஆஸ்பத்திரிகளாகவே இருக்கின்றன.

ஆனால் தர்மசிந்தையுள்ளவர்கள் நம் நாட்டில் இல்லாமலில்லை. அவர்கள் சிந்தனை ஆஸ்பத்திரி ஏற்படுத்துவதில் அவ்வளவு அதிகமாகச் செல்லவில்லை. ஊருக்கு ஒரு சின்ன ஆஸ்பத்திரியாவது ஏற்படுத்த நாட்டிலுள்ள தயாள சிந்தையுள்ள தனவந்தர்கள் முன் வரவேண்டும்.

"படித்த டாக்டர்கள் எல்லாம் நகர்ப்புறங்களிலேயே இருக்கிறார்கள். நமது நாட்டின் வளர்ச்சியோ கிராமங்களிலேதான். அந்தக் கிராமவாசிகளுக்கு நோய் நொடி வந்தால் கவனிப்பார் இல்லை" என்றெல்லாம் சொல்லப் படுகிறது. அதாவது டாக்டர்கள் கிராமத்துக்குப் போவதில்லை என்று சொல்லுகிறார்கள்.

டாக்டர்களைப் பற்றி இந்தக் குறை கூறுபவர்கள் 'ஏன் அவர்கள் போக மறுக்கிறார்கள்!' என்று சிந்தித்ததுண்டா? நவீன வைத்திய முறையை நகர்ப்புறத்திலிருந்து படித்தவர்களைப் பார்த்து, 'காட்டுப் புறத்துக்குப் போய் காட்டுப்புறத்தானைப் போல் வாழ்வாயாக' என்று ஆசீர்வதித்தால் அத்தகைய வாழ்க்கையை மேற்கொள்ளச் சங்கடப் படுகிறார்கள். இது மன இயல்பைப் பற்றிய காரணம்.

அப்படிக் குடியேறினாலும் அவரது மருந்துகள், ஆயுதங்கள் வைத்துக் கொள்ளத்தக்க வீடு வசதி முதலியவை செய்து தரப்படுகின்றனவா! அவர்கள் குழந்தைகள் படிப்பதற்கு நல்ல பள்ளிக்கூடங்கள் உண்டா!

ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்துக்குப் போக வர வாகன வசதியுண்டா! நல்ல சாலைகள்தான் உண்டா!

இவ்வளவு கஷ்டங்களையும் சகித்துக் கொண்டு ஒருவர் குடியேறினால் போதிய வருவாயாகிலும் உண்டா! கிடையாது.

இந் நிலையில் டாக்டர்கள் கிராமத்துக்குப் போகவில்லை என்று குறை கூறுவதில் பொருள் உண்டா!

தேசமக்களின் ஆரோக்கியம் வளர வேண்டுமானால் டாக்டர்கள் கிராமத்துக்குப் போய்த்தான் ஆகவேண்டும். அதற்குத் தக்க சூழ்நிலையை அரசாங்கத்தாரும் பொது மக்களும் ஏற்படுத்த வேண்டும்.

ருஷ்யாவில் நகர்ப்புறத்து டாக்டர்களை விட மூன்று மடங்கு அதிகமாகக் கிராமங்களுக்குச் செல்லும் டாக்டர்களுக்குச் சம்பளம் வழங்குகிறார்கள் என்று கேள்விப்பட்டேன். வங்கத்திலும் இம் முறையைக் கடைப் பிடிக்கிறார்கள். இப்படி ஏதாகிலும் ஒரு ஊக்கம் காட்டினால் நமது டாக்டர்கள் நிச்சயம் கிராமப் பகுதிகளுக்குப் போவார்கள்.

* * *

கடைசியாக ஒரு வார்த்தை. எல்லாரும் மனிதர்கள்தாம். ஒருவருக்கும் இன்னொருவருக்கும் எவ்வளவோ வித்தியாசமிருக்கிறது! அதேபோல் நோயும் ஒருவருக்கு வந்தாற்போல் இன்னொருவருக்கு வருவதில்லை. ஒரே நோயிலும் மாறுபாடுகளும் அதிகமாகவே இருக்கின்றன. ஒருவருக்கு ஒரு மருந்து குணமளித்திருக்கும். அதே நோய் கண்ட இன்னொருவருக்கு அதே மருந்தைக் கொடுப்பதால் பலன் ஏற்படும் என்று நிச்சயம் சொல்வதற்கில்லை. அதனால் வைத்தியர்களிடம் போகிறவர்கள் சற்றுப் பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டும்.

நம் நாட்டில் நம் முன்னோர்கள் எவ்வளவோ நல்ல பழக்கங்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். உள்ளத்துக்கும் உடலுக்கும் நன்மையைச் செய்யக்கூடிய பழக்கங்கள். அவைகளில் ஒன்று தீபாவளி யன்று எண்ணெய் தேய்த்துக் குளித்து, புத்தாடையுடுத்தி ஆண்டவனை வணங்குவது.

இந்த வருஷத் தீபாவளித் திருநாளிலும் எண்ணெய் தேய்த்துக் குளித்து விட்டு, ஆண்டவனின் அபார சிருஷ்டி—ஸ்திதி—லய—சக்தியை உணர்ந்து அவனைப் போற்றி வணங்கி, உள்ளத்தில் பேரானந்தம் பெறுவோமாக!




வாழ்த்துக்கள்!

# ஹிந்துஸ்தான் ஸ்டுடிபேக்கர்



**சாம்பியன்**
ஸ்பார்க் பிளக்குகள்

**ஸெனித்**
கார்பரேட்டர்கள் & பில்ட்டர்கள்

**போர்க் வார்னர்**
இண்டர்நேஷனல் பிராடக்டுகள்

**வான் நார்மன்**
ஆட்டோமோபைல் எக்யுப்மெண்ட்

**விற்பனையும் ஸெர்வீஸும்**

# ரானே (மதராஸ்) லிமிடெட்

பட்டுல்லோஸ் ரோடு
மதராஸ் - 2.

தபால் பெட்டி: 386
போன்: 85742 & 86848
தந்தி: AUTOWORKS

கிளைகள்:
கோயமுத்தூர் & பெங்களூர்

EP






ஒருவரது தோற்றத்திற்கு கவர்ச்சியும், காம்பீர்யமும் அளிப்பது நல்ல உடைதான். கவர்ச்சிகரமான, நாகரீகமான ஆடைகள் தயாரிக்க கிருஷ்ணா ஸூட்டிங், டஸூர் & ஷர்ட்டிங் துணி ரகங்கள் சிறந்தவை.

தயாரிப்பவர்கள்:

ஸ்ரீ கிருஷ்ணா

ஸ்பின்னிங் & வீவிங் மில்ஸ் லிமிடெட்.

தபால் பெட்டி 524 - பெங்களூர்

மானேஜிங் ஏஜண்டுகள்:

யாதாளம் சுப்பைய செட்டி & ஸன்ஸ்

பெங்களூர் - 2 EP



## Peace upon Earth and Goodwill to Men

அம்பிகை லக்ஷ்மியின் அருளை முன்னிட்டு விளக்குகள் ஏற்றிக் கோலாகலமாகக் கொண்டாடும் தீபாவளித் திருநாளில் உங்களுக்கு எங்கள் வாழ்த்துக்களை அளிப்பதோடு பிறக்கும் புத்தாண்டில் சீர் சிறப்புடன் சகலருமிருக்க மனப்பூர்வமான ஆசிகளை அளிக்க விரும்பும் இப் புனித சந்தர்ப்பத்தில்...... உங்களுக்கு ஆயுள் இன்ஷ்யூரன்ஸில் மட்டுமின்றி தீ விபத்து, கப்பல் விபத்து, மற்றும் இயந்திர இன்ஷ்யூரன்ஸ் திட்டங்களில் பரிபூரண பாதுகாப்பையும் லாபங்களில் பங்கு பெறும் வசதியையும் நாங்கள் அளிப்பதை நினைவூட்டுகிறோம்.

**ORIENTAL**

INDIA'S LEADING INSURANCE COMPANY

ஓரியண்டல் கவர்ன்மெண்ட் ஸெக்யூரிடி லைப் அஷ்யூரென்ஸ் கம்பெனி லிமிடெட்

ஓரியண்டல் பயர் அண்ட் ஜெனரல் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிட்

தலைமை ஆபீஸ்: ஓரியண்டல் பில்டிங்ஸ், பம்பாய்-1

கிளைகளும் ஏஜென்ஸிகளும் இந்தியாவிலும் அயல்நாடுகளிலும் உள்ளன

# "என்ன! அறு சுவை உணவு அரை மணி நேரத்திலா?"



ஆம், பிரஸ்டீஜ் பிரஷர் குக்கரினுல் செய்கிறேன். சாப்பாடு மிக ருசியாகவும் உணவுச் சத்துக்களடங்கியதாகவும் இருக்கிறது. விறகு கரி ஆகிய இவற்றின் செலவிலும் சிக்கனம் ஏற்படுகிறது.

அகலமான பாத்திரங்களில் சமைக்கும்பொழுது சகஜமாக வீணாகும் நீராவியை பிரஸ்டீஜ் குக்கர் தன்னுள்ளேயே நிறுத்தி அதிக சக்தியை உண்டாக்கி வெகு சீக்கிரமாக உணவுப் பண்டங்களை சமைத்து விடுவதுடன் உணவில் உள்ள விட்டமின் சத்துக்கள் சிறிதும் வீணாகாமல் செய்கிறது.

இந்த வித்தியாசத்தைக் கவனியுங்கள்!

அரிசி, பருப்பு, புலவு முதலியவைகள் 5 முதல் 12 நிமிஷத்திலும் காய்கறி பதார்த்தங்கள் 3 நிமிஷத்திலிருந்து 8 நிமிஷத்திலும் பக்குவமாகிறது.

இந்த குக்கருக்கு மின்சாரம், காஸ் அல்லது கரி உபயோகிக்கலாம்.

சில நிமிஷத்திலேயே ருசி மிகுந்த உணவு தயாராகி விடுகிறது

**Prestige**

PRESSURE COOKER

## பிரஸ்டீஜ் பிரஷர் குக்கர்

சோல் ஏஜண்டுகள்:

**டி. டி. கிருஷ்ணமாச்சாரி அண்டு கம்பெனி**

மதராஸ் • பம்பாய் • கல்கத்தா • புது டில்லி

த. பெ. 200 த. பெ 1008 த. பெ. 884 த. பெ. 161

# மன்மத மலர்

## முன்னுரை

ஆண்டவனுடைய சிருஷ்டியின் இரகசியங்களை எத்தனையோ பெரியோர்கள் எத்தனையோ விதமாக நமக்கு விளக்கிச் சொல்லியிருக்கிறார்கள். நடராஜ தாண்டவத்திலே உலகத்தின் படைப்பும் அதன் இயக்கமும் மறைவும் அடங்கி யிருக்கின்றன என்று கூறி, பண்டிதர்கள் பலர் அந்த நடனத்துக்குப் பலவிதமாகப் பொருள் கூறி யிருக்கிறார்கள். ஆனால் இந்த விளக்கங்கள் எல்லாம் பரிபாஷைச் சொற்களாக இருப்பதால், தத்துவத்தைப் புரிந்து கொள்வது பலருக்கும் கஷ்டமாகவே இருக்கிறது. இதைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்த போது அன்றொருநாள் ராஜாஜி மிக எளிய முறையில் இந்தத் தத்துவத்தை விளக்கியது நினைவுக்கு வருகிறது.

மன்மத வருஷத்தின் ஆரம்ப நாள், தமிழ்ப் புத்தாண்டு தினம். அந்தப்புனிதமான தினத்தில் ராஜாஜி மன்மதனைப் பற்றியும், மன்மதனை எரித்த சிவபெருமானைப் பற்றியும், ஆனந்த தாண்டவ மூர்த்தியான நடராஜனைப் பற்றியும்

சோமு

மணியம்.

ரசமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். அத்தனை பெரிய தாண்டவ மூர்த்தி ஏன் ஒரு சின்னஞ் சிறு குழந்தை போன்ற முயலகனைத் தனது காலால் இப்படி மிதிக்க வேண்டும்? மிதித்துக் கொண்டு ஏன் இந்த மாதிரிக் கூத்தாட வேண்டும்?—என்பது கேள்வி.

ராஜாஜி சொன்னார்கள்:

"பாதம் பூமியிலே பாவாதவாறு ஆடுகிற ஈசனுடைய நிராலம்ப நடனம் அது. பாதம் கீழே படுவதில்லை என் பதைக் காட்டுவதற்காகவே மென்மையான ஒரு குழந்தையைப் பாதத்தின் அடியிலே வைத்தான் சிற்பி. அந்தக் குழந்தையின் முகத்தில் எவ்வித நோவின் குறியும் இல்லாமல் அமைத்தான். பிற்காலத்தில் இந்தக் குழந்தையே சிற்பியின் கற்பனையில் இவ்விதம் முயலகனாக உருவெடுத்திருக்கிறது:

முயலகன் என்பது பாபத்தின் சின்னம். பாபம் என்பதும் இறைவனுடைய படைப்பே. இருள் இன்றி ஒளியில்லை. நன்மையின் நிழல் தீமை. படைப்பு ஆரம்பித்தபோதே பாபமும் படைத்தாகி விட்டது. அந்தப் பாபத்தை மிதித்துக்கொண்டு அதன்மேல் நின்று கூத்தாடுகிறான் நடராஜ மூர்த்தி. அவனுடைய பாத ஸ்பரிசத்தினால் பாபம் எல்லாம் மென்மையான பசும் குழந்தையாகப் போகிறது!"

ராஜாஜியின் இந்த விளக்கம் என்னுடைய சிந்தனையைக் கிளறிக் கொண்டேயிருந்தது. இரவு முழுதும் உறக்கம் வரவில்லை. மன அலைகள் எழுந்தன.

1

"குறியொன்றும் இல்லாத
கூத்தன்தன் கூத்தை எனக்(கு)
அறியும் வண்ணம் அருளியவா(று)
ஆர் பெறுவார் அச்சோவே!"

என்று பாடியவண்ணம் நடராஜமூர்த்திக்கு எதிரே, தாளம் தட்டிக்கொண்டு மெய்ம்மறந்து நின்றான் சிவ குமாரன். பூஜையின் போது கோவிலிலே தினந் தோறும் தேவாரம் பாடுகிற ஸ்தானிகன் அவன். சிவ சைல ஓதுவா மூர்த்திகளின் குமாரன். மாணிக்கவாசகரின் அந்தப் பாடலிலே இருந்த களிப்பும், களியாட்டமும் அவனுடைய உள்ளத்திலும் உடலிலும் கைத் தாளத்திலுமாகத் துள்ளிக் குதித்துக் கொண் டிருந்தன.

பாட்டு முடிந்ததும் தீபாராதனை ஆயிற்று. குருக்கள் கப்பரையிலே திருநீறு கொண்டு வந்து கொடுத்தார். அதை வாங்கி நெற்றியிலே பூசும்போது சிவகுமாரனுக்கு மெய்யெல்லாம் புல்லரித்தது.

"தம்பி! உன்னை அவசரமாகக் கூப்பிடுகிறார் வித்தியாபதி. நீ வந்த பிறகுதான் இன்று சித்திரங்களுக்கு வர்ணம் குழைக்கப் போகிறாராம்!" என்றார் கோயில் தர்மகர்த்தா. சிவகுமாரனுக்கு அருகில் வந்து கொண்டே. பரவச நிலையிலிருந்து கலைந்து திரும்பினான் சிவகுமாரன்.

"வித்தியாபதியா? அவர் ஏன் என்னைக் கூப்பிடுகிறார்?" என்று மிக்க திகைப்போடு கேட்டான். அவனுக்கு அதன் காரணம் ஒன்றும் புரிய வில்லை.

"ஏன் கூப்பிடுகிறார் என்று எனக்குமே தெரியாது தான். ஆனால் அவசரமாகக் கூப்பிடுகிறார். நீ வரா விட்டால் அவருக்கு இன்று ஒரு வேலையும் ஓடாதாம்!" என்றார் தர்மகர்த்தா. அவருடைய முகக் குறிப்பைப் பார்த்தால், சிவகுமாரன் இனிமேல் ஒரு கணங்கூட அங்கே நிற்பதற்கு அவர் விட மாட்டார் போலத் தோன்றியது. ஏதோ ஓர் ஆர்வம் அவருடைய முகத்தில் தாண்டவம் ஆடிக்கொண்டிருந்தது.

"அப்படியானால் சரி. இதோ வந்து விட்டேன்!" என்று சொல்லியவாறு சிவகுமாரன் நடராஜமூர்த்தியை மூன்று முறை வலம்வந்து வணங்கி விட்டு,





தர்மகர்த்தாவோடு வெளிப் பிராகாரத்தை நோக்கி ஒரே பய பக்தியில் நடந்தான்.

2

தென்பாண்டி நாட்டில் 'பாண்டியர் திரடு' என்று அழைக்கப்படும் சிற்றூரிலே, புதை பொருள் ஆராய்ச்சியாளர்கள் நடத்திய சரித்திர ஆராய்ச்சியின் பயனாகப் பலருடைய கவனிப்புக்கும் உள்ளாயிற்று அந்தக் கோயில். அந்த ஊரிலே மரமும் செடியும் அடர்ந்த வனத்துக்குள்ளே இருந்த உமாபதி கோயில் அது. அதிலிருந்த சிலைகளையும் சித்திரங்களையும் புதுப்பிக்கும் திருப்பணி மும்முரமாக நடக்க ஆரம்பித்தது. இதற்கு முன்போ அங்கே வௌவால்கள் பகல் இரவு என்ற வித்தியாசமே இன்றி நிம்மதியாக வாழ்ந்து வந்தன. சமதர்ம முறையிலே, எத்தகைய ஏற்றத் தாழ்வும் இல்லாமல் நரஜாதி பக்தர்களைப் போலவே இந்த வௌவால்களும் சரிநிகர் சமானமாக இறைவனுடைய சந்நிதியில் புனித வாசம் செய்து புண்ணியத்தைக் கட்டிக் கொண்டன. இப்பொழுது அந்தத் திருக் கோயிலிலே, முதலாவது திருப்பணியாக மின்சார விளக்குகள் பளிச்சிட்டதும், இருள் ஓடியது. அதைத் தொடர்ந்து வௌவால்களும் ஓட்டம் எடுத்தன. சுவர்களில் இருந்த சித்திரங்கள் மின்சார வெளிச்சத்தில் சரித்திர நிபுணர்களின் கண்ணுக்கு முன்னும் மின்ன ஆரம்பித்தன. ஆராய்ச்சியாளர்கள் அவற்றை ஆராயத் தொடங்கினார்கள்.

"இது பல்லவரின் ஓவியங்கள்!" என்றார் ஒரு நிபுணர்.

"இல்லை! பாண்டியருடைய பாணி இவற்றில் அப்படியே பளிச்சிடுகிறது!" என்றார் இன்னொருவர்.

"இல்லை இல்லை. இவை சோழர்களின் கை வரிசை. அந்த வர்ணங்களின் சேர்க்கையிலேயே சோழ மரபு துலாம்பரமாகத் தெரிகிறதே!" என்றார் மூன்றாவது ஆராய்ச்சியாளர், மின்சார வெளிச்சத்தில் கண்களை மூடி மூடி விழித்தவாறு.

"அதெல்லாம் சரி. யாருடைய காலமாகவும் இருந்து விட்டுப் போகட்டும். இப்பொழுது சித்திரங்களே சரியாகக் கண்ணுக்குத் தெரியவில்லையே. சித்திர மண்டபத்தைப் பாதுகாக்கிறோம் என்று நினைத்துக் கொண்டு வாசலையும் திறப்புகளையும் மூடி அடைத்துச் சுவர்களை எழுப்பிச் சித்திரங்கள் எல்லாம் மங்கி மங்கி விடும்படி செய்துவிட்டார்களே!" என்றார் தர்மகர்த்தா. தமக்கு முந்திய காலத்தில் அந்தக் கோயிலை நிர்வாகம் செய்தவர்கள் அதைப் பாழ்படுத்தி விட்டார்கள் என்பதை அந்த மாதிரியாக நினைவுறுத்துவதில் அவருக்கு எப்பொழுதுமே ஒரு திருப்தி!

சுவரின்மேல் இருந்த பொருக்குகளைக் கரண்டியினால் மெதுவாகக் கொத்த ஆரம்பித்தார்கள். பாளம் பாளமாகப் பெயர்த்து எடுத்ததும் உள்ளே மறைந்து கிடந்த சித்திரங்கள் வெளிக்காட்ட ஆரம்பித்தன.

"இந்தச் சித்திரங்கள் எந்தக் காலத்தைச் சேர்ந்தவை, எந்த அரசர்களின் ஆட்சியில் வரையப் பட்டவை என்பதையெல்லாம் ஆராய்வது முக்கியந்தான். ஆனால் அதைவிட முக்கியம் இந்தச் சித்திரங்களைப் புதுப்

பிக்க வேண்டிய திருப்பணி. முதலில் அதைச் செய்வதற்கு என்ன வழி என்று யோசியுங்கள்!"

இவ்வாறு சொன்னார் தர்மகர்த்தா. தம்முடைய நிர்வாக காலத்திலும் தமது பெயர் மங்காமல் அந்தக் கோயில் சுவர்களிலேயே நிற்பதற்கான ஒரு காரியத்தைச் செய்து முடித்து விட வேண்டும் என்பதில், தர்மகர்த்தாவுக்குத் தீவிரமான ஓர் ஆசை. இதன் பயனாகத் தஞ்சை சரபோஜி மன்னருடைய கலைக்கூடத்திலிருந்து வித்தியாபதி என்ற ஓவிய நிபுணர் வரவழைக்கப்பட்டார். அவருடைய முயற்சியில் சித்திரங்களைப் புதுப்பிக்கும் பணி தொடங்கியது.

கோயிலின் சுவர்கள் எல்லாம் சரத்துணியினால் நன்றாக மெழுக்குச் செய்யப்பட்டன. மங்கிப் போய்க் கிடந்த அந்தச் சித்திரங்களையெல்லாம் வித்தியாபதி வகைப்படுத்தி அவற்றின் நுட்பங்களை ஆராய்ந்தார். இனி அவற்றின்மேல் புதிய வர்ணங்களைப் பூசி மங்கிய கோலங்களுக்குப் புத்துயிர் அளிக்க வேண்டும். சில சித்திரங்களில் வெறும் கோடுகள் மட்டுமே அங்கொன்றும் இங்கொன்றுமாகத் தெரிந்தன. அவற்றை முழுதுமே புதிதாகத்தான் வரைய வேண்டும். ஆனால் பாணி அதே பாணியாக இருக்க வேண்டும். இதையெல்லாம் யோசித்து யோசித்துத்தான் அந்த முடிவுக்கு வந்தார் வித்தியாபதி. அதன் பயனாகவே ஆனந்தவல்லி என்ற அந்த அதிசய நங்கையை அவர் தேர்ந்தெடுத்தார். இப்படித் தேர்ந்தெடுத்துச் சில நாட்கள் திருப்பணி நடந்துகொண்டிருந்த போதுதான், இப்பொழுது அவசரமாக சிவகுமாரனைக் கூப்பிட்டுவிட்டிருக்கிறார் அவர். ஆனால் ஆனந்தவல்லியை முதலில் எப்படிக் கண்டுபிடித்தார்?






### 3

மாதவர்மபுரம் என்ற கிராமம் பாண்டியர் திரட்டுக்கு அருகிலே உள்ள ஒரு சிற்றூர். அந்தச் சிற்றூரில் ஆளுடைய நாயகி என்ற அம்மன் கோவிலில், அழகான நந்தவனமும் ஒரு பெரிய கிணறும் உண்டு. அந்த நந்தவனத்தைக் கண்ணும் கருத்துமாகப் பேணிப் பாதுகாத்து, தினந்தோறும் அம்மன் பூஜைக்கு வேண்டிய அலரி மாலையும், மலர்க் கதம்பமும் தொடுத்துப் புண்ணிய சேவை செய்து வந்தாள் முத்தம்மை என்ற கிழவி. பாபமும் புண்ணியமும் பின்னிப் புரளும் இந்த உலகத்தில், தன்னுடைய ஒரே சேவை இந்தப் புண்ணிய கைங்கரியந்தான் என்று கருதி ஆளுடைய நாயகியின் திருக்கோவிலை மெழுகுவதும், அங்கங்கே அழகழகான கோலம் போடுவதும், அம்மனுக்குச் சாத்துவதற்காக வண்ண வண்ண மலர்களைக் கொண்டு மாலை தொடுப்பதுமாகப் புனித வாழ்க்கை நடத்தி வந்தாள் முத்தம்மை.

முத்தம்மை என்ற இந்தப் புண்ணியக் கிழவிக்கு மகள் ஆனந்தவல்லி. ஆளுடைய நாயகிக்கு மற்றொரு திருநாமமான ஆனந்தவல்லி என்ற திருப் பெயரைச் சூடி, கிழவியின் புண்ணிய சிந்தனையிலே மலர்ந்த வல்லிக்கொடியாக வளர்ந்தாள் அந்தப் பெண். அவளுடைய உடம்பிலே ஆனந்தம் என்ற புனிதமான களிப்பு, பொன்னிறமாகவும், குமுதச் சிரிப்பாகவும், நுடங்கும் இடையாகவும், தாமரைக் கரங்களாகவும், நிலவு முகமாகவும் வடிவெடுத்திருந்தன. பூக்களோடு பூக்களாகவும், கோவிலின் சிற்பச் சிலைகளோடு ஒரு உயிர்ச் சிலையாகவும், அந்த ஆளுடைய நாயகி கோயிலிலே ஆனந்தவல்லி வளைய வந்தாள்.

முத்தம்மைக்கு வயதாக வயதாக அவளுடைய புண்ணியத் திருப்பணிக்கு மகள் மிகவும் ஒத்தாசை செய்தாள். பூக்கள் பறிப்பதிலும், மாலை தொடுப்பதிலும், கோவிலை மெழுகுவதிலும் அன்னைக்கு அவள் உதவி செய்தாள். சொல்லிலும் செயலிலும் ஒரு புண்ணியவதியின் மகள் என்பதற்குச் சான்றாகத் தானும் தெய்வ சிந்தனையிலும், ஆசார சீலங்களிலும் மனத்தைச் செலுத்திக் கன்னிப் பருவத்தின் சாதாரண சரீர இச்சைகளை அறியாத ஒரு புனிதத் திருமகளாக விளங்கினாள் ஆனந்த வல்லி. இது காரணமாக அவளுடைய முகத்தில் ஓர் அமானுஷ்யமான தேஜஸ் துலங்கியது. தெய்வ சக்தியின் காந்தம் அந்த மேனியிலே வீசி வீசி, கதிரவனுடைய வெளிச்சத்திலே நின்று நின்று தவம் செய்து சிவந்த ஒரு சூரியகாந்தி மலரைப் போல அவளுடைய வதனத்தின் சோபையும், மேனியின் பிரகாசமும் அமானுஷ்யமான அழகோடு சுடர்விட்டன. இப்படிப்பட்ட கன்னிதான் வித்தியாபதியின் சித்திர இலட்சியத்துக்கு ஓவிய நாயகியாக அமைந்தாள். அது ஒரு ரசமான சம்பவம்.

### 4

உமாபதி கோவிலின் சுவர்களிலே மங்கிய கோலத்தில் காட்சி தந்த சித்திரங்களில் மிகவும் முக்கியமானவை ரதி மன்மத சித்திரங்கள். இவற்றில் புதிய வர்ணங்கள் பூசிப் புத்துயிர் அளிக்க முனைந்தார் வித்தியாபதி. மன்மத

உத்திரவாதமுள்ள




உறுப்புகள்

CHEVROLET
VAUXHALL
BUICK
PONTIAC
OLDSMOBILE
CADILLAC
G. M. C.
BEDFORD
OPEL

AC PLUGS & PRODUCTS
DELCO-REMY
HYATT BEARINGS
MORAINE PRODUCTS
N.D. BEARINGS
TOLEDO PRODUCTS
DELCO BRAKE
DELCO SHOCK ABSORBERS

ஜெனரல் மோட்டார்ஸ் கார், பஸ், லாரி உறுப்புகளுக்கு

அகில இந்திய வினியோகஸ்தர்கள் :

இந்தியா மோட்டார் பார்ட்ஸ் & ஆக்ஸஸரீஸ் லிமிடெட்

1/155, மவுண்ட் ரோடு, மதராஸ் - 2

TVSZ-79

னுடைய சித்திரங்களில் வர்ணக் கலவை அதிகமாக இல்லை. அத்தனை மங்கலும் இல்லை அந்த உருவங்கள். ஆனால் ரதியின் உருவந்தான் தாறுமாறாகச் சிதைந்திருந்தது. இருட்டிலே காற்றில்லாத இடத்தில் இருந்து வர்ணங்கள் மங்கிப் போனதோடு, ரதியின் உருவத்தை வேறு யாரோ பிற்காலத்துச் சித்திரக்காரர் புதுப்பிப்பதாக நினைத்துக்கொண்டு கண்டபடி வர்ணங்களைச் சேர்த்து மெழுகி வைத்திருந்தார். இதைப் பார்த்ததும் வித்தியாபதிக்கு மனம் துன்பப்பட்டது. ரதியின் முக விலாசத்தையே கெடுத்து விட்டிருந்த அந்த ஓவியங்களைப் பார்க்கப் பார்க்க மன வேதனை அதிகரித்தது. அந்தச் சித்திர நங்கையின் உருவத்தை மீண்டும் சுவரிலே பதிப்பதற்கு என்ன செய்யலாம் என்று மூளையைக் குழப்பினார் வித்தியாபதி.

இயற்கையான அழகும், தெய்வ சிந்தனையோடு கூடிய மனப் பண்பும், மாசு படியாத முகமும், சிற்ப எழில் என்று சொல்லக்கூடிய அங்க அமைப்பும் கொண்ட ஒரு நங்கையை எங்காவது காண முடியுமா, முடிந்தால் அவளையே மனத்தில் நிறுத்தி அல்லது சுவருக்கு எதிரே மங்கிய சித்திரங்களின் முன்பு நிறுத்தி, அவளுடைய அங்கங்களைப் போல அந்தச் சுவரிலே வண்ணம் தீட்டிச் சித்திரங்களைப் புதுப்பித்து விடலாம் அல்லவா? — இவ்வாறு எண்ணினார் வித்தியாபதி. தஞ்சை சரபேந்திர மன்னருடைய முயற்சியினால் புத்துயிர் பெற்று வளர்ந்த சித்திரக் கலையிலே, இம்மாதிரி மனிதர்களை எதிரே நிறுத்தி வரையும் நுட்பமான கலையும் ஒன்று. அதில் நன்கு தேர்ந்திருந்தார் வித்தியாபதி.

'பாண்டியர் நிரடு' என்ற அந்தச் சிற்றூரிலும், அதைச் சுற்றியுள்ள கிராமப் பகுதிகளிலும் வித்தியாபதி இரவு பகலாக அலைந்தார். நாட்டிய சாலைகளிலும், குறுநில மன்னர்களின் அந்தப்புரங்களிலும் எத்தனையோ அழகிகள் இருந்தார்கள். பருவத்தின் எழில், அங்கங்களின் வடிவமைப்பு, மேனியின் ஒய்யாரம் எல்லாம் அபாரமாகத்தான் இருந்தன. ஆனால் வாழ்க்கை என்ற உலைக்களத்திலே உலக அநுபவம் என்ற நெருப்பின் புகை சூழாத ஒரு உருவம், இன்ப வெள்ளம் என்று நினைத்து இறங்கித் துன்பச் சேற்றிலே அழுந்திய கதை, — இப்படி மனித வாழ்வின் மாசு ஏதாவது படியாத ஒரு புனிதமான உருவத்தை எங்குமே காணுவது துர்லபமாக இருந்தது.

உண்மை; அது மனிதர்களின் பிசகு இல்லை. இறைவன் இந்த உலகைப் படைக்க ஆரம்பித்த போதே பாபமும் படைத்தாகி விட்டது அல்லவா? அந்தப் பாபம் யாரைத்தான் விட்டது? விசுவாமித்திரரும், வியாச முனிவரும், தப்பி ஓடமுடியாத பாபச் சேறு சாதாரண மனிதர்களை விடவா செய்யும்? வித்தியாபதிக்கு மனம் சோர்ந்தது. ரதி என்ற ஒப்பற்ற சௌந்தர்யத்தை, மனிதர்களின் புனிதமான காதலை—காமம் என்ற பாபத்தை அல்ல, காதல் என்ற புனிதத்தை — இயக்குகிற அந்த தெய்வ சௌந்தர்யத்தை, வர்ணங்களிலே தீட்டுவது அத்தனை கஷ்டமான ஒரு காரியமா என்று விசனப்பட்டார் அவர்.

தமிழ் நாட்டில் அந்தக் காலத்தில் வாழ்ந்து வந்த கலைஞர்கள் தங்களுடைய மன எழுச்சிக்கும், திருப்பணிக்கும் தெய்வத்தையே முழுதும் நம்பி வாழ்ந்தார்கள். வித்தியாபதியும் அந்த மரபையே சேர்ந்தவர். எனவே தம்முடைய கனவு நனவாகும் வாய்ப்புக்கு அல்லும் பகலும் உமாபதியின் திருவடிகளையே துதித்தார் அவர்.

வித்தியாபதியின் பிரார்த்தனை வீண் போகவில்லை. நாடக சாலைகளையும், அரசரின் அந்தப்புரங்களையும் விட்டு விட்டுத் தொழிலையே தெய்வமாகக் கருதி வழிபட்டு வரும் பாட்டாளிகளின் மத்தியிலே புனிதமான அழகைத் தேட ஆரம்பித்தார் அவர். வயல் வெளிகள், தென்னந் தோப்புகள், நந்தவனங்கள், இங்கெல்லாம் சென்றார். ஏற்றம் இறைக்கும் உழவர்கள், நடவு நடும் பெண்மணிகள், கரும்பாலையிலே வேலை செய்யும் கன்னியர்கள், நந்தவனத்திலே பூப் பறிக்கும் சிறுமிகள் — இங்கெல்லாம் தேடிச் சென்றார்.

வித்தியாபதியின் பிரார்த்தனை வீண் போகவில்லை. அவனுடைய நாயகியின் கோயில் நந்த வனத்திலே பூப்பறித்துக்கொண்டிருந்த ஆனந்த வல்லியைக் கண்டார் வித்தியாபதி. அப்படியே ஒரு கணம் ஆனந்த பரவசத்திலே மெய்ம் மறந்து நின்றார்.

நந்தவனத்தில் இயற்கையோடு இயற்கையாகப் பூத்துக் குலுங்கும் ஒரு பிச்சிச் செடி போலவும், மெல்லிய காற்றிலே அசைந்து ஆடும் மல்லிகைக் கொடி போலவும், அந்த நந்தவனத்தின் புனிதமான வாசனைக்கு மத்தியிலே நின்றுகொண்டிருந்த ஆனந்தவல்லியை நோக்கி நடந்தார் வித்தியாபதி.

“கண்மணி, நீ யாரம்மா?” என்று கேட்டார் அவர், வல்லிக் கொடியைப் பார்த்து.

“கண்மணி” என்ற அந்த அழைப்பு தூக்கி வாரிப்போட்டது ஆனந்தவல்லிக்கு. அப்படியே கையிலிருந்த பூங்குடலையைப் பதறிக் கீழே போட்டு விட்டுத் திரும்பிப் பார்த்தாள் அவள்.

ஐம்பது வயதுக்கு மேல் இருக்கும். நல்ல உயரமான மனிதர். ஒடிந்து விழுந்து விடுவது போல ஒல்லியான தேகம். நன்றாக அடர்ந்து வளர்ந்திருந்த வெண்மையான தாடி. கேசம் எல்லாம் நரைத்துப் போய், பின்னிக் கொண்டு கிடந்தது. உடம்பில் தரித்திருந்த நீண்ட அங்கி அவருடைய உயரத்தை அதிகப் படுத்திக் காட்டிற்று. முகத்திலே எல்லையற்ற சாந்தமும் கருணையும் தவழ்ந்தன. திகைத்துப் போய் நின்றாள் ஆனந்தவல்லி.

“கண்மணி! நீ யாரம்மா! இந்தப் பிராந்தியத்தில் ஒரு. ஒரு. அதிசயப் பிறவியாக இருக்கிறாயே!” என்று கேட்டார் வித்தியாபதி.

“நான் ஒரு பூக்காரி. முத்தம்மையின் மகள்!” என்றாள் ஆனந்தவல்லி. இப்படிச் சொல்லிவிட்டு, மலர்களின் வாசனைக்கு மத்தியிலே மனித வாடையை விரும்பாதவள்



போல, பெரியவருக்குக் கைகூப்பி வணங்கிய வண்ணம் ஆனந்தவல்லி அந்த நந்தவனத்திலிருந்து அகன்றாள். அவளுடைய கையிலிருந்து நழுவிய பூக்குடலை மட்டும் ஒரு முல்லைச் செடிக்கு அருகிலே அப்படியே கிடந்தது.

வித்தியாபதி இந்த அதிசய சம்பவத்தின் திகைப்பிலிருந்து இன்னும் மீளாதவராக, அந்த மலர்ச் செடிக்கு அருகிலே சென்று பூங்குடலையைக் கையில் எடுத்தார். வாசனை 'கம்' என்று வந்தது. இருவாட்சி, செவ்வந்தி, சம்பங்கி, சம்பகம், பிச்சி, பொன்னலரி, நாகலிங்கம், மல்லிகை, கடம்பு, முல்லை, பொன் கொன்றை என்று பல மலர்கள் அப்படியே அந்தக் குடலையில் குவிந்திருந்தன. பனித் திவலை இன்னும் சிதறாத புனித மலர்கள் அவை. அப்படியே அம்பிகைக்கு நிவேதனமாக வேண்டிய பரிசுத்தமும், புனிதமும் சேர்ந்து, மனோரம்யமான வாசனையாகக் கமழ்ந்து கொண்டிருந்தன அந்த மலர்களிலே! அவற்றில் ஒரு கொத்தைக் கையிலே எடுத்த வித்தியாபதி மறு கணம், அப்படியே கைகளை உதறினார், "அடாடா! நம்முடைய ஸ்பரிசம் பட்டு இந்த மலர்கள் மாசடைந்துவிட்டனவே!" என்று நினைத்தவராக.

"உண்மை. இந்தப் பெண்ணைப் பார்த்தால் இவளும் இப்படி ஒரு பனி மலர்தான். இவளுடைய மலர்க் கரங்கள் தான் இந்த மலர்களை ஸ்பரிசிக்க அருகதை உடையவை!" என்று வித்தியாபதி எண்ணிக் கொண்டிருக்கும்போதே, அங்கே வந்தாள் முத்தம்மை என்ற அந்தக் கிழவி.

"யாரையா அது தோட்டத்தில்?" என்று அதிகாரமாகக் கேட்டுக் கொண்டே வந்த முத்தம்மை, கிழவரைப் பார்த்ததும் துணுக்குற்றாள். குரலில் இருந்த அதிகாரம் பம்மி விட்டது. கைகூப்பி வணங்கிக் கொண்டே பெரியவருக்கு அருகில் வந்தாள்.

"அம்மா! என்னை உங்களுக்குத் தெரியாது. எனக்குத் தஞ்சாவூர். நான் ஒரு சித்திரக்காரன்!" என்றார் வித்தியாபதி. கிழவியினுடைய முகக் குறிப்பு மாறிற்று.

"ஓ! தஞ்சாவூரா உங்களுக்கு. நீங்கள்தான் உமாபதி கோவிலைப் புதுப்பிக்க வந்திருக்கிறீர்களோ?" என்று கேட்டாள் முத்தம்மை, திகைப்பை ஒரு வகையாகச் சமாளித்துக் கொண்டு.

"ஆமாம். இப்பொழுது உங்களிடம் ஒரு பெரிய உதவி கேட்கலாம் என்று நினைத்து நிற்கிறேன். நீங்கள் இங்கே வந்திராவிட்டால் நானே உங்களைத் தேடி வந்திருப்பேன்!" என்றார் அவர்.

"ஒன்றிலும் பற்றில்லாத இந்தக் கிழவியினால்கூட இப்பொழுது உங்களுக்கு உதவி செய்ய முடியுமா! ஆச்சரியமாக இருக்கிறதே!" என்றாள் முத்தம்மை.

"நிச்சயம் முடியும். உங்கள் ஒருவரால்தான் அந்த உதவியைச் செய்ய முடியும்!" என்றார் வித்தியாபதி.

"தெய்வ கைங்கரியத்தில் ஈடுபட்டிருக்கும் ஒரு கிழவி நான். அதே கைங்கரியத்தில் எனக்கு உதவி செய்கிற ஒரு பேதைப் பெண் என்னுடைய மகள். இந்த நிலையில் எங்களால் உங்கள் இலட்சியத்துக்கு உகந்த முறையில் ஒரு உதவி உங்களுக்குச் செய்ய முடியும் என்றால், அதைவிடப் பெரிய பாக்கியம் எனக்கு வேறு என்ன உண்டு?" என்று முத்தம்மை சொன்னாள். அவளுடைய முகத்தில் பரிசுத்தமான ஆனந்தம் மலர்ந்தது.

"அம்மா! உமாபதி கோவிலிலே நான் வரைகிற சித்திரங்களைப் பூர்த்தி செய்ய வேண்டும் என்றால், உங்களுடைய புதல்வியை எனக்குக் கொஞ்சம் உதவி செய்யும்படி நீங்கள் அனுப்ப வேண்டும். தெய்வ காரியம் இது. இந்தத் திருப்பணியில் நீங்கள் செய்கிற இந்தச் சேவை எனக்குப் பேருபகாரமாக இருக்கும்!" என்று மிக்க பரிவோடு சொன்னார் வித்தியாபதி.

"அப்படியானால் முதலில் எங்களுடைய குடிசைக்கு வாருங்கள். ஆனந்தவல்லிக்கு உங்களை அறிமுகம் செய்விக்கிறேன்!" என்று அன்போடு கூறினாள் முத்தம்மை.

"அறிமுகமா?" என்று திகைப்போடு கேட்டார் வித்தியாபதி.

"ஆமாம். நீங்கள் தஞ்சாவூர் ஓவியர் என்று அவளுக்குத் தெரியாதல்லவா?" என்று கூறிக் கொண்டே வித்தியாபதியைத் தனது நந்தவனக் குடிசைக்கு அழைத்துச் சென்றாள் முத்தம்மை.

## 5

முத்தம்மையினுடைய அன்பும் உதவியும் பெற்றுச் சித்திரங்களின் திருப்பணி தொடங்கியது. ஆனால் ஓரே ஒரு விஷயத்தில் மட்டும் மகளை மிக்க கண்டிப்போடு எச்சரிக்கை செய்தாள் முத்தம்மை.

"காட்டியம் என்ற ஒரு காரியம் மட்டும் உனக்கு வேண்டாம் அம்மா! எத்தனை நல்லதாக இருந்தாலும் என் மகளுக்கு வேண்டியதில்லை அது!" என்று சொன்னாள் முத்தம்மை. இப்படிச் சொல்லும்போது அவளுடைய கண் கலங்கிற்று. பெருமூச்சு விட்டுக் கொண்டாள்.

"ஐயா ஓவியர் அவர்களே! என்னுடைய மகளுக்குச் செய்த எச்சரிக்கையை மறந்து விடாமல் காப்பாற்ற வேண்டியது உங்களுடைய பொறுப்பும் கூடத்தான். இவள் உங்கள் மகள்! அவ்வளவுதான் சொல்லுவேன்!"

இப்படிச் சொல்லும்போது முத்தம்மைக்குக் கண் கலங்கியது போலவே வித்தியாபதிக்கும் கலங்கியது. மிக்க பரிவோடு அந்த அடைக்கலப் பொருளான மகளைக் கரம் பற்றி ஏற்று அழைத்துக் கொண்டார் அவர்.

## 6

பாற்கடலில் ரதி பிறந்தாள் என்ற கதையைச் சித்திரித்தது, முதலாவது ஓவியம். அதற்குக் கோலம் கொடுத்துக் கொண்டு இருந்தாள் ஆனந்தவல்லி. ஒரு வார காலத்தில் கோயிற் சுவரிலே சித்திர ரதி தோன்றினாள்.

கையிலே கிளி பிடித்து அன்ன வாகனத்திலே ரதிக் கன்னி நந்தவனத்திலும், மலர்க் காடுகளிலும், அருவிக் கரைகளிலுமாக உலா வந்தாள் அடுத்த சித்திரத்தில். அதற்குக் கோலம் தந்து பாவனை உலகிலே உலவினாள் ஆனந்தவல்லி. ஒருவார காலத்தில் கோயிலின் சுவரிலே சித்திர ரதியானவள் சித்திரம் சித்திரமாக வான வில்லின் எழில் வர்ணங்களிலே பச்சைக் கிளி பிடித்துப் பவனி வந்தாள்.

இளமையின் சோபையும், வாலிபத்தின் பொலிவும், அழகின் காந்தமுமாகத் தென்றல் காற்றிலே மிதந்தாள் ரதி, மூன்றாவது ஓவியத்திலே. ஆனந்தவல்லி இந்த வண்ணச் சித்திரத்துக்கு வடிவம் நல்கினாள். ஒரு வாரத்தில் கோயிற் சுவரின் ஓவியத்தில் ரதியின் வாலிபம் தென்றலிலே அசைந்து கண்ணின் முன்னே எழிலாடியது.

இப்படியாக ரதியின் வளர்ச்சி, அவளுடைய அழகின் கொஞ்சல், அவளுடைய இளமையின் துடிப்பு என்று வாரம் வாரமாக, படிப்படியாகச் சித்திரத்திலே ஓவிய ரதி உன்னதமாக வளர்ந்தாள். ஆனந்தவல்லியோ?...

பாண்டியர் திரட்டிலே பஞ்சோடு வறுமையைப் பின்னி நெய்த கைத்தறிப் புடவை உடுத்தியவளாய், பசியும்

எளிமையுமாக முத்தம்மையின் மகள் என்பதற்குச் சான்று கூறிய அந்தப் பழைய கோலம் மாறி, படிப்படியாகக் காஞ்சிமா நகரத்துப் பட்டுப் புடவைகளும் காவிரிப்பூம் பட்டினத்திலே செய்த சல்லாச் சேலைகளுமாக ஆனந்த வல்லியின் தோற்றத்திலும் உருவத்திலுமே வளர்ச்சி என்கிற வர்ணத்தில் பெரியதோர் மாற்றம் உண்டாயிற்று.

இப்படி யிருக்கும் போதுதான் அந்தக் கிழக்குச் சுவர்ச் சித்திரத்தைப் புதுப்பிக்க வேண்டிய கட்டம் வந்தது! அது ரதி மதனரின் சந்திப்பு! கஷ்டம் எதில் ஏற்பட்டது என்றால், இதுவரை புதுப்பித்த பூர்வீகச் சித்திரங்களில் எல்லாம் ரதியின் உருவம் மட்டும்தான் மங்கிப் போயிருந்தது. அதை ஆனந்தவல்லியின் கோலங்களைக் கொண்டு சரி செய்து விட்டார் வித்தியாபதி. ஆனால், இந்தச் சித்திரத்திலோ என்றால், ரதியின் உருவம் மட்டும் அல்ல, மன்மதன் சித்திரமும் மங்கியிருந்தது. மங்கிப் போனதோடு இல்லை. அந்த உருவமே உருவிலி என்ற பெயருக்கு ஏற்பக் காலம் என்ற கனலிலே எரிந்து சாம்பலாகிச் சுவரோடு சுவராக மறைந்து விட்டிருந்தது! வெறும் கண்ணும்புப் பொருக்குத் தான் பளிச்சென்று நின்று கொண்டிருந்தது!

வித்தியாபதிக்கு மூளை குழம்பியது. இத்தனை கஷ்டப் பட்டு ரதிக்குப் புத்துயிர் கொடுத்திருக்கிறார். பிரமாதமாக இருக்கிறது என்று அவருக்கே மனத்துக்குள் ஆனந்தம். ஆனால் இப்பொழுது இத்தனை பிரமாதமான ரதிக்கு ஏற்ற மன்மதனை எப்படிச் சிருஷ்டிப்பது, தம்முடைய இறகினால்?

இந்த யோசனையில் ஆழ்ந்தபோதுதான் சந்நிதியிலிருந்து திருவாசகம் கேட்டது. உடனே அவருடைய அறிவில் ஒரு உன்னதமான யோசனை பளிச்சிட்டது.

தர்மகர்த்தாவைக் கூப்பிட்டார். "ஐயா! உடனே சிவகுமாரனை இங்கே அழைத்து வாருங்கள். அவன் வந்தால்தான் இன்றைக்கு வேலை ஓடும்! இல்லை யென்றால் இந்தத் திருப்பணியே இத்தோடு நின்ற மாதிரித்தான்!"

இப்படிக் கண்டிப்போடு வித்தியாபதி சொன்னதன் காரணமாகத்தான் தர்மகர்த்தா அத்தனை ஆத்திரத்தோடு சென்று சிவகுமாரனை அழைத்து வந்தார்.

7

"தம்பி! இதுவும் சிவ காரியந்தான். இங்கே நீ தாளம் தட்டுவதற்குப் பதிலாகத் தாளமாகவே மாறிவிட வேண்டும்! அதுதான் வித்தியாசம்!" என்றார் வித்தியாபதி.

"அப்படி யென்றால்?" என்று கேட்டான் சிவகுமாரன்.

"தாளம் எப்படி உன்னுடைய கையில் ஒரு கருவியாக இயங்குகிறதோ அப்படி வர்ணங்களின் கையில் நீ தாளமாக இயங்க வேண்டும்!" என்றார் அவர். சிவகுமாரனுக்குப் புரியவில்லை. குழப்பத்தோடு நின்றான்.

"புரியவில்லை போலிருக்கிறது. நீ பேசாமல் நான் சொல்கிறபடி யெல்லாம் ஆடை அணிந்து கொண்டு நில். பிறகு புரியும்!" என்றார் ஓவியர்.

சிவகுமாரன் இதுவரை பழகியறியாத, தனக்குப் புரியாத வர்ண உலகுக்குள் தாளத்தைக் கீழே வைத்து விட்டுத் தயக்கத்தோடு புகுந்தான்.

8

வசந்த காலம் என்ற சித்திரத்தை வரையும் பணி தொடங்கிற்று. ரதியும் மன்மதனும் முதன் முதலாகச் சந்தித்து ஒருவரை யொருவர் காதலிக்கிற கட்டம். காதலின் அதிதேவதைகள் இருவரும் முதன்முதலாகச் சந்தித்து ஒருவரை ஒருவர் மோகிக்கிற ஆதிக் காதல் அது.

மன்மதனுக்கு அலங்காரங்கள் செய்தார் வித்தியாபதி.

மனோகரமான இளவேனிற் காலத்திலே மன்மதன் பவனி வருகிறான். தென்றலைத் தேராகக் கொண்டு ஏறுகிறான். சோலைப் பசுங்கிளிகள் அந்தத் தேரை இழுத்துச் செல்கின்றன. தேரின்மேல் மீனக் கொடி பறக்கிறது. இருளானது பானைகளின் உருவத்தில் ஒன்று இரண்டு தொலைவிலே செல்கிறது. 'மன்மதராஜன் வருகிறான்' என்று குயில் எக்காளமிடுகிறது. கடல் முரசு கொட்டுகிறது. பூரணசந்திரன் வெண்கொற்றக் குடை பிடிக்கிறான். மங்கையர்கள் காதற் சேனைபாகச் சுற்றி மொய்க்கிறார்கள். அந்த வீரத் திருக்குமாரனுக்கு இரு மருங்கிலும் தென்னம் பாளைகைக் கவரியாக வீசுகிறார்கள் கன்னிப் பெண்கள். காதல் என்ற போரிலே மனிதர்களை மட்டு



யின்றி இந்த அண்ட பிண்ட சராசரம் அனைத்தையுமே வெற்றி கொள்வதற்காக மன்மதன் ஆயுத சன்னத்தனாகப் புறப்படுகிறான். கையிலே கரும்பு வில். அந்த வில்லிலே பொன் வண்டு நாணாக ஒலிக்கிறது. அம்பறாத் தூணியிலே அரவிந்தம், அசோகு, மாம்பூ, முல்லை, நீலம் என்ற ஐந்து விதமான மலரம்புகள் நிரம்பி யிருக்கின்றன. மற்றொரு கையிலே தாமரைமடலை வாளாக ஏந்தியிருக்கிறான் மன்மதன்.

இன்பமயமான வசந்த காலத்தில், குளுமையான பௌர்ணமி இரவில் இந்த சுகாந்தமான பரிவாரங்களோடு மன்மத ராஜன் திக்விஜயம் புறப்படுகிறான்.

இதுவரை தேவார திருவாசகங்களைப் பாடித் தாளம் தட்டிக் கொண்டிருந்த சிவகுமாரன், இப்பொழுது இத்தனை மோகமய மதன உல்லாசத் திருக்கோலத்திலே சுவருக்கு முன்னால் நின்று வடிவம் கொடுத்தான். அவனுக்கு எதிரே எழில் வண்ணத் திருமகளாக உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் அலங்காரங்களுடன் சல்லாச் சேலையிலே மேனியைப் பொதிந்து கொண்டு நின்றாள் ஆனந்தவல்லி. வாலிபம் பொங்கிப் புரண்டு கொண்டிருந்தது அந்த மேனியின் எழில் ஓட்டத்திலே, அந்த விழிகளின் ஒளி வீச்சிலே!

வித்தியாபதி வசந்த காலத்து ரதி மன்மதரின் இன்பக் காட்சிகளையெல்லாம் படம் படமாகச் சித்திரித்தார், உமாபதி கோவிற் சுவர்களிலே. உண்மையில் இந்தச் சித்திரக் காட்சியின் வரிசை வாரக்கணக்காகத் தொடர்ந்து நடந்தது. காலையில் சூரியோதயத்திலே ஆரம்பிக்கும் பணி சூரியாஸ்தமனம் வரை தினந்தோறும் நடைபெற்றுங்கூட இந்த மகத்தான வசந்தக் காட்சி வரிசை ஐந்து வாரங்கள் ஆகியும் முற்றுப் பெறவில்லை. நாளுக்குநாள் புதிய கற்பனை, புதிய உத்சாகம், புதிய சாயல்கள் - இப்படியாக வித்தியாபதியின் இதமும் இரண்டு வாலிப உள்ளங்களின் ஒத்துழைப்புமாக ஒரே வர்ணானந்தமாக இருந்தது அது!

## 9

சித்திர வேலை மும்முரமாக மும்முரமாக, சிவகுமாரனுடைய கை தாளத்தை அறவே மறந்தது. ஆனந்தவல்லியின் கரங்களோ பூப் பறிப்பதையும், மாக் கரைத்து மெழுகுவதையும், கோலம் இடுவதையும் மறக்க ஆரம்பித்தன. சுருங்கச் சொன்னால், அந்த இருவர்களுடைய இதயத்திலும் தாளம் தவறிக் கோலம் மறைய ஆரம்பித்தது!

ஒரு நாள் மாலை சித்திரப் பணி முடிந்ததும் ஆனந்தவல்லி சிவகுமாரனைப் பார்த்துச் சொன்னாள்: "உங்களுக்குத்தான் இந்த மன்மத வேஷம் எத்தனை அழகாக, எத்தனை பொருத்தமாக இருக்கிறது!"

பளிச் என்று தாளம் தட்டியதுபோல் பதில் சொன்னான் சிவகுமாரன்: "உனக்குத்தான் இந்த ரதி வேஷம் எத்தனை பொருத்தம்! உண்மையில் நீ சித்திரத்தில் மட்டுந்தானா ரதி! இல்லவே இல்லை. வேஷம் தரித்தாலும் தரிக்காவிட்டாலும் நீ ரதிதான்!"

அன்றையப் பேச்சு அதோடு கலைந்தது.

இன்னொரு நாள் ஆனந்தவல்லி தடாகத்திலே தன் மேனியில் பூசியிருந்த வர்ணக் கலவையை அழித்துவிட்டு, சுவரின் முன்பு காலகடுக்க நின்ற களைப்புத் தீருவதற்காகத் தண்ணீரிலே மூழ்கிக் குளித்துக் கொண்டிருந்தாள். சொல்லி வைத்தாற்போல் தன்னுடைய களைப்புத் தீருவதற்காக அதே இடத்திற்கு வந்தான் சிவகுமாரன்.

"இந்தத் தடாகமும் இதன் மலர்களும் எத்தனை குளுமையாக, எத்தனை அழகாக இருக்கின்றன. இதில் நீராடினாலே உடம்பின் அலுப்பும் மனத்தின் களைப்பும் அப்படியே கரைந்து போய் விடுகின்றன!"

இவ்வாறு சொன்னான் சிவகுமாரன். முல்லை மொட்டு வெடிப்பதுபோல, ஒரு மோகனச் சிரிப்புச் சிரித்துக் கொண்டே ஆனந்தவல்லி கேட்டாள்: "வாஸ்தவமாகச் சொல்லுங்கள். நீராடுவதற்குத்தானா இந்தத் தடாகத்துக்கு இப்பொழுது வந்தீர்கள் நீங்கள்?"

ஐராவதம் இறங்கிக் குளிக்கும் தடாகத்தின் சலசலப்பைப் போல ஒரு சிரிப்புச் சிரித்தான் சிவகுமாரன். ஆனந்தவல்லியும் சிரித்தாள். அன்று அதோடு நின்றது பேச்சு!

மற்றொருநாள் மாலையில், பகல் எல்லாம் சித்திரத்துக்கு நின்று நின்று களைத்துப்போன ஆனந்தவல்லி ஏரிக்கரையிலே காற்று வாங்கிக் கொண்டு நின்றாள். அப்பொழுது அங்கே வந்து சேர்ந்தான் சிவகுமாரன்.

"காற்று வாங்குவதற்கு இத்தனை விசாலமான ஊரில் வேறு எந்த இடமும் இல்லை — இதைத் தவிர. எத்தனை சுகமாக இருக்கிறது! அப்படித்தானே?" என்று குறும்பும் அதில் ஒரு பரிவுமாகக் கேட்டாள் ஆனந்தவல்லி சிவகுமாரனிடம்.

"காற்று வாங்க வரவில்லை. இந்தமாதிரி ஏரியில் பௌர்ணமி இரவில் அன்னப்பேடு போன்ற ஒரு வண்ணப் படகில் யாரோ இருவர் ஆனந்த நிலவை அநுபவித்துக் கொண்டே மிதந்தார்களாம். அவர்கள் யார் என்று பார்க்கலாம் என்று வந்தேன்!"

இப்படிச் சிவகுமாரன் சொன்னதும் பளிச்சென்று பதில் சொன்னாள் ஆனந்தவல்லி.

"அவ்வளவு தானே? நான் என்ன நினைத்தேன் என்றால் அதுபோல் நீங்களும்......"

"என்ன? என்ன?" என்று கேட்டான் சிவகுமாரன்.

"இல்லை. அதுபோல நீங்களும் ஒரு சுந்தரியோடு செல்லும் நாள் விரைவில் வரவேண்டும் என்று தெய்வத்தைப் பிரார்த்தனை செய்கிறீர்களோ?"

"ஆமாம். என்னுடைய காதல் தெய்வத்துக்கு முன்னாலேயே அந்தப் பிரார்த்தனையைச் செய்கிறேன்!"

இருவரும் மௌனமாக நின்றார்கள். பிறகு ஒருவரை ஒருவர் பார்த்தார்கள். மறுபடியும் மௌனமாக நின்றார்கள்.

வானத்தில் நிலவு எழுந்தது. ஏரியிலே தவழ்ந்த இளங்காற்று, சோலை மலர்களின் வாசனையை ஏந்தி வந்து, மனத்திலே ஒரு கிறக்கத்தைக் கொடுத்தது.

"ஆனந்தவல்லி" என்றான் சிவகுமாரன். பிரகாசமான நிலவு ஏரியையே கண் கொட்டாமல் பார்த்துத் தன்னில் நிழல் விடுவதுபோல, அவள் சிவகுமாரனின் முகத்தையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

"நீதான் ரதி! சுவரிலே சொல்லவில்லை. என் உள்ளத் திரையிலே சொல்லுகிறேன்......!"

இப்படிச் சொல்லிக் கொண்டே அவளுக்கு அருகிலே நகர்ந்தான் சிவகுமாரன். அவள் வேகமாக நடந்து பளிங்கு மேடையைத் தாண்டிப் போய் அமர்ந்தாள். பளீர் என்று மறுபக்கம் பாய்ந்தோடி அவளுக்குப் பின்புறமாக வந்து நின்று கொண்டான் அவன். கழுத்தை மென்மையாக வளைத்து ஒரே மயிலையத்திலே பின்புறம் பார்த்தாள் ஆனந்தவல்லி. சிவகுமாரன் அவளுடைய கேசத்தைத் தொட்ட வண்ணம் அவளுடைய வண்டு போன்ற கருவிழிகளிலே மன்மத மலரை அள்ளிச் சொரிந்தான்!

## 10

வித்தியாபதியின் காதில் ஊர்ப் பேச்சு மெதுவாக விழ ஆரம்பித்தது. நம்பவில்லை அவர். அதற்குப் பாதிக் காரணம் நம்ப விரும்பவில்லை அவர். இளமையோடு கூடிய ஆடவனும் கன்னியும் மன்மதனாகவும் ரதியாகவும் நிற்பது ஒன்றே ஊரார் பேச்சுக்குப் போதுமான ஆதாரம் என்று, தம்மைத் தாமே சமாதானம் செய்து கொண்டார். ஆனால் ஒருநாள் முத்தம்மையே சித்திரக் கூடத்துக்கு ஓடோடியும் வந்தாள்.

"நான் சொன்ன கண்டிப்பின் காரணம் நினைவிருக்கிறதல்லவா? மறந்து விடாதீர்கள்!" என்றாள் அவள். "அம்மா, மீண்டும் சொல்கிறேன். இது தெய்வ காரியம். ஒரு தோஷமும் வராது!" என்றார் வித்தியாபதி. முத்தம்மை

# JOHN DEERE "40" TRACTOR

## INCREASED VERSATILITY WITH HEAVY DUTY No. 1 TOOL CARRIER



இரு கொழுவுள்ள கலப்பை



கடின வேலைக்கேற்ற கொத்தும் உழவு சாதனம்



பாத்தி கட்டும் உபகரணம்



கடின வேலைக்கான காயில் ஸ்பிரிங் உழவு சாதனம்



நிலத்தைச் சமப் படுத்தும் கருவி







**ஜான் டீர் "40" டிராக்டரை**

**தொழிற்படுபடி நெ. 1 டூல் காரியருடன் இணைத்துப் பல துறைகளில் பயன்படுத்திக் கொள்ளலாம்**

உங்கள் பண்ணை வேலைகளை குறைவான செலவில் செய்ய உங்களை ஜான் டீர் மாடல் "40" ஸ்டாண்டர்ட் டிராக்டருக்குரிய மிக மலிவான ஜான் டீர் நெ. 1 உபகரண இணைப்பு சாதனம் அவசியம்.

கொத்துவது, பாத்தி கட்டுவது, சமப்படுத்துவது, நடுவது, வாய்க்கால் வெட்டுவது போன்ற விவசாய சம்பந்தமான எல்லா உபகரணங்களையும் இணைக்க இந்த காரியர் பிரேம் மிக உறுதியாக அமைக்கப்பட்டுள்ளது. உண்மையில், 2½" டூல் பாரில் இணைக்கக் கூடிய எந்த உபகரணத்தையும் வெகு திறமையாகவும் சௌகரியமாகவும் டிராக்டரின் ஹைட்ராலிக் முறையால் கையாள முடியும்.

மாடல் "40" டிராக்டரில் மிக நவீன முறையில் அமைக்கப்பட்ட 3-பாயிண்ட் இணைப்புச் சாதனத்தின் மூலம் டூல் காரியரை சுலபமாகப் பூட்டவும் கழட்டவும் முடியும். மிக எளிய முறையில் அமைக்கப்பட்டுள்ள இந்த டிராக்டரை வருஷத்தில் பல நாட்களுக்கும் பல வேலைகளில் மிக ஜரூராக ஈடுபடுத்துவதின் மூலம் அதிகமான வருமானத்தைக் கொடுக்கும்.

IN SERVICE  LIES SUCCESS

**LARSEN & TOUBRO LIMITED**

Bombay P.O.B. 278 Calcutta P.O.B. 619 Madras P.O.B. 5247 Bangalore P.O.B. 90 Cochin P.O.B. 55 New Delhi P.O.B. 323

அதற்குமேல் ஒன்றும் பேசாதவளாக அங்கிருந்து சென்றாள். ஆனாலும் வித்தியாபதிக்குத் திகைப்பு அடங்கவில்லை. சிவகுமாரனோ அவரைவிட அதிகமாகத் திகைத்தான். ஆனந்த வல்லிக்கோ என்றால் அச்சத்தால் உடம்பு நடுங்கியது.

அன்று மாலை ஏரிக் கரையிலே சந்தித்த பொழுது சிவகுமாரன் ஆனந்த வல்லியிடம் கேட்டான். "உன் தாயார் நினைவு படுத்தினாளே கண்டிப்பு என்று, அது என்ன?"

ஆனந்தவல்லி சொன்னாள்: "ஒன்றும் இல்லை. நான் நாட்டியம் ஆடக்கூடாது என்று ஏற்கனவே சொல்லியிருக்கிறாள். அது அவளுக்குப் பிடிக்காது!"

"ஏன் அப்படி?" என்று கேட்டான் சிவகுமாரன்.

"அது ஏதோ அவளுடைய வாழ்க்கையின் ஒரு சோகக் கதையாம். யாருக்குமே தெரியாது அது. ஒன்று மட்டும் தெரிகிறது. கலை என்ற பெயரில் உள்ளங்கள் ஒன்று கூடுவது அவளுக்குப் பிடிக்கவில்லை. அது விபரீதம் என்று அஞ்சுகிறாள்!" — இப்படிச் சொல்லும்போது ஆனந்த வல்லியின் குரல் நடுங்கியது. கண் கலங்கிற்று.

"வல்லி! உன்னை நாட்டியம் ஆடக்கூடாது என்று தானே உன் தாயார் சொன்னாள். நீ நாட்டியம் ஆட வேண்டாம். அவ்வளவுதானே. எந்தச் சித்திரத்திலாவது ரதி நாட்டியம் ஆடுவதைப் பார்த்திருக்கிறாயா? அது போலத்தான் நீயும்!" என்று சொல்லிச் சிரித்தான் சிவகுமாரன். ஆனந்தவல்லியும் சிரித்து விட்டாள். ஆனால் மறுநாள்—

மறு நாள் சிவ சைல ஓதுவாமூர்த்தி வித்தியாபதியிடம் வந்தார். கையும் காலும் உணர்ச்சியினால் துடித்தன.

"ஐயா பெரியவரே! ஏதோ சிவ காரியம் என்று சொல்லி என் மகனை உம்மிடம் ஒப்படைத்தேன். பாழ் படுத்தித் தொலைத்து விட்டீரே, ஐயா! ஊரார் சொல்வது உம்முடைய காதில் விழுந்ததா?"

"ஓதுவாமூர்த்திகளே! கவலைப்படாமல் போய் வாருங்கள். சிவ காரியம் இது. தோஷம் ஒன்றும் வராது!" என்று சமாதானப்படுத்தி அனுப்பி வைத்தார் வித்தியாபதி.

## 11

மூத்தம்மை சொன்ன வார்த்தைகளும் ஓதுவாமூர்த்திகளின் கடு சொல்லும் வித்தியாபதியின் உள்ளத்தைச் சுட்டன. சிவ காரியம் என்று சமாதானம் சொல்லி அவர்களை அனுப்பிவிட்ட போதிலும், அவருடைய உள்ளத்துக்குள்ளே கவலை குமைந்து கொண்டுதான் இருந்தது. இரவு படுக்கப் போகும் முன் சிவ தியானம் செய்தார் அவர்.

மறுநாட் காலை எழுந்தபோது, வித்தியாபதியின் முகத்தில் ஒரு தெளிவு உண்டாகி யிருந்தது.

"ஆனந்த வல்லி! சிவ குமாரா! இனிமேல்தான் நமது சித்திரங்களிலே முக்கியமான கட்டம் வருகிறது!" என்று கூறினார் வித்தியாபதி.

இருவரும் சுவரைக் கூர்ந்து பார்த்தார்கள்.

"அதோ ஈசான்ய மூலையில் பார்த்தீர்களா? அதுதான் அடுத்தபடியாகப் புதுப்பிக்க வேண்டிய சித்திரம். மன்மத தகனம் அது" என்று சுட்டிக் காட்டினார்.

பணி தொடங்கியது. பார்வதியின் பணிவிடையில் மோனத்தவத்திலே ஆழ்ந்து நின்ற சிவபெருமானை, மன்மதன் மலர் அம்பு கொண்டு எய்கிறான். கோபாவேசம் கொண்ட முக்கண் மூர்த்தி நெற்றிக் கண்ணைத் திறக்கிறார். மதனன் சாம்பலாகிறான்.

இரவும் பகலுமாக இந்தச் சித்திரத்தின் திருப்பணி ஓய்வு ஒழிவின்றி நடந்தது. ரதிக்கு இப்பொழுது வேலை இல்லை. சிவகுமாரன் மட்டும் இரவும் பகலும் சுவருக்கு எதிரே இரண்டு வாரமாக நின்று நின்று காலிலே தவம் செய்து நெற்றிக் கண்ணுக்கு இரையானான்!

என்ன நேர்ந்தது?

இரண்டு வாரமாகச் சிவகுமாரனைச் சோலையிலே, ஏரிக் கரையிலே, மலர் வனத்திலே காணோம். வாலிப உள்ளங்களின் நித்திய உரையாடல் இரண்டு வாரமாகக் கலைந்தது. சிவ குமாரனைத் தனித்துச் சந்திக்க முடியாமல் உள்ளம் தவித்தாள் ஆனந்தவல்லி.

அன்றிரவு மூன்று ஜாமம் இருக்கும். உமாபதி கோயிலின் நிசப்தத்தைக் கலைத்துக் கொண்டு பொற்றாளத்தின் ஓசை கேட்டது. அதைத் தொடர்ந்து இன்பமான இனிய குரல் ஒலித்தது. சிவகுமாரன் உமாபதியின் சன்னிதியிலே தன்னை மறந்து பாடிக் கொண்டிருந்தான்.

"வேத முதல்வன நீ!
வெண்ணீறு அணிந்த நீ!
கண்டம் கறுத்த நீ!
கண்மூன்று படைத்த நீ!
காலனை உதைத்த நீ
காமனை எரித்த நீ!"

இப்படிப் பாடிக்கொண்டே வந்த சிவகுமாரனுடைய கையிலிருந்து தாளம் கீழே தவறி விழுந்தது. மறுகணம்,

"காலனை உதைத்த நீ!
காமனை எரித்த நீ!"

என்ற வரிகளை, ராகம் தாளம் இரண்டையும் கடந்த மந்திர உச்சரிப்புக் குரலிலே, 'மட மட' என்று உச்சாடனம் செய்ய ஆரம்பித்தான் சிவகுமாரன்.

"காலனை உதைத்த நீ!
காமனை எரித்த நீ!
காமனை எரித்த நீ!
காலனை உதைத்த நீ!
காலனை உதைத்த நீ!
காமனை எரித்த நீ!"

நிசப்தமான கோயிலின் உமாபதி சந்நிதியிலே, ஜன சந்தடியற்ற சூன்யத்திலே ஆவேச வெறியோடு கூடிய அந்த உச்சாடனம் பயங்கரமாக இருந்தது. மறுகணம் "சிவ குமாரா!" என்று பிரலாபித்துக் கொண்டே அங்கே ஓடோடியும் வந்தாள் ஆனந்தவல்லி.

"சிவ குமாரா! சிவ குமாரா!" என்று பல முறை கூப்பிட்டாள். பதில் இல்லை. அப்படியே வேகமாக அவனுடைய கையைப் பிடித்து அசைத்தாள். நெற்றிக் கண்ணையே திறப்பது போலக் கண்ணைத் திறந்து பார்த்தான் சிவகுமாரன்! "பெண்ணே! என்னைத் தொடாதே! பாபமே, என்னை அணுகாதே!" என்று சொல்லிவிட்டு மறுபக்கம் திரும்பி வேகமாக மறைந்து விட்டான் அவன்!

## 12

இரவு மூன்று ஜாமம் இருக்கும். அந்த நேரத்தில் வித்தியாபதியின் இல்லத்திலே யாரோ 'பட பட' என்று கதவைத் தட்டினார்கள். பதறி எழுந்து வெளியே வந்து பார்த்தார். என்ன ஆச்சரியம்! கையும் காலும் வெட வெடக்கக் கண்கள் அருவியாகக் கண்ணீரைக் கொட்ட, கூந்தல் கலைந்து சின்னா பின்னமான துன்ப நிலையிலே ஆனந்தவல்லி துடித்து நின்றாள்.

"ஐயரே! என் அருமைத் தந்தையே! புகலற்று நிற்கின்ற எனக்கு ஒரு வழி சொல்லுங்கள்!"

இப்படிச் சொல்லிக் கொண்டே புயற்காற்றிலே வேரோடு சாய்ந்து விழுகிற ஒரு மெல்லிய பூஞ்செடியைப் போல அடியற்று வீழ்ந்தாள் ஆனந்தவல்லி, வித்தியாபதியின் பாதங்களிலே.

"பாசம் என்றால் என்ன, காதல் என்றால் என்ன என்று தெரியாமல் வளர்ந்தேன். என் உள்ளத்திலே

புயல் வீசும்படி செய்தீர்கள். இப்பொழுது எங்கள் இதய அரங்கத்திலே காமனைத் தகனம் செய்து விட்டீர்கள். ஐயோ! இப்படியே என்னைக் கொன்று விடுங்கள்! அல்லது மன்மதனுக்கு உயிர்ப்பிச்சை கொடுங்கள். இரண்டில் ஒன்று செய்யுங்கள். இனி சிவகுமாரன் இல்லாமல் என்னால் வாழ முடியாது. எனக்கு வாழ்வு அளியுங்கள். நீங்கள் செய்கிற, நாங்கள் மெய் வருந்துகிற, அந்தச் சிவ காரியத்தின் மேல் ஆணையாகக் கேட்கிறேன். என்னைக் கைவிடாதீர்கள்!"

"கண்மணி! எழுந்திரம்மா!" என்றார் வித்தியாபதி. அப்படியே தமது இரண்டு கைகளாலும், வாடித் துவளும் அந்த வல்லிக் கொடியைத் தரையிலிருந்து வாரி எடுத்து கட்டமாக நிறுத்தித் தண்ணீர் தெளித்தார்.

"ஐயா! இன்றுதான் ஆண்களின் மன நிலையை மெய்யாக உணர்ந்தேன். இன்றுதான் என் அன்னையும் அதைச் சொன்னாள். நாட்டியம் பயின்று கொண்டிருக்கும் போதே, அந்தக் கலைச் சூழ்நிலையில் என் அன்னைக்கும் இப்படி ஒரு துன்பம் நேர்ந்ததாம். என்னையும் என் அன்னையையும் நிர்க்கதியாக விட்டு விட்டுத்தான் ஓடி விட்டாராம் அவருடைய காதலரும். தாயின் சோகம் இப்பொழுது மகளையும் பிடித்தது என்று துடிக்கிறாள். பரம்பரைத் துன்பம் என்று கதறுகிறாள். ஐயா! எனக்கு மூளை குழம்புகிறது. கண் இருள்கிறது! எனக்கு வழி காட்டுங்கள்."

"ஆனந்தவல்லி! இந்தா இந்தத் திருநீற்றைப் பூசிக்கொள் கண்மணி! நிம்மதியாக வீட்டுக்குப் போய் உறங்கம்மா. நாளைக் காலையில் எல்லாருக்குமே விடிவு காலம் ஏற்படும்! கவலைப்படாதே" என்று சொல்லித் திருநீற்றைக் கையில் எடுத்தார்.

"திருநீறு? மன்மதனை எரித்த சாம்பலா?" என்று ஆவேசமாகக் கேட்டாள் வல்லி.

"சிவப் பிரசாதத்துக்கு இழுக்குச் சொல்லாதே!" என்று கூறிய வண்ணம் தமது கையினாலேயே ஆனந்தவல்லியின் நெற்றியில் பரிவோடு திருநீறு பூசிக் குங்குமம் இட்டார் வித்தியாபதி.

13



மறுநாள் 'மன்மத தகன'த்தின் சித்திரப் பணி மீண்டும் தொடர்ந்த போது, சிவகுமாரன் திடுக்கிட்டான். ஏனென்றால் இன்று ரதியும் அங்கே தோன்றியிருந்தாள். ஆம்; ஆனந்தவல்லி அங்கே வந்து நின்றாள்!

"சிவகுமாரா! திகைக்காதே. மன்மத தகனம் முடிந்தது. இனி ரதியின் முறையீடு. அதற்கு இரங்கி நெற்றிக் கண் மூர்த்தி அவளுக்கு மாங்கல்யப் பிச்சை அளிக்கிறார். அதுதான் நான் வரைய வேண்டிய அடுத்த சித்திரம்!" என்று விளக்கம் சொன்னார் வித்தியாபதி.

மன்மதனுடைய புனர்ஜன்மம் வெகு விரைவில் உருவாகி முடிந்தது. ஒரு நாளில் அத்தனை பெரிய படத்தை அற்புதமாக வரைந்து முடித்து விட்டார் வித்தியாபதி. எரிந்து சாம்பலான மன்மதனுக்கு, ரதியின் முறையீடு கேட்டு மனம் இரங்கி, மீண்டும் உயிர்ப்பிச்சை அளித்து விட்டான் முக்கண் முதல்வன்.

"என்ன ஆச்சரியம்!" என்று சொல்லிக் கொண்டே அந்த இடத்துக்கு வந்தார் கோயில் தர்மகர்த்தா. "பிரமாதமான சித்திரம். உணர்ச்சிகள் அப்படியே தத்ரூபமாக இருக்கின்றன!" என்று சித்திரத்தைப் பார்த்துச் சொல்லிக் கொண்டே கோயில் பணியாளர்கள் அனைவரும் வந்தார்கள்.

"கோலம் இட்டுக் குத்து விளக்கு ஏற்றுங்கள்! சித்திரங்களுக்கெல்லாம் தீபாராதனை நடக்கட்டும்!" என்றார் தர்மகர்த்தா மிக்க உற்சாகத்துடன்.

முத்தம்மை வந்தாள், கையில் பூக்குடலையோடு.

"தீபாராதனைக்கு முன், மன்மதனுக்கும் ரதிக்கும் மணமாலையை அணிவித்து விடுவோம்!" என்றார் வித்தியாபதி, எல்லாரும் திகைக்கும்படியாக.

முத்தம்மை பதற்றத்தோடு பார்த்தாள். சிவ சைவ ஓதுவாமூர்த்தியோ தாளம் தட்ட ஓங்கிய கையை மேலே தூக்காமல் அதிர்ந்து போய் நின்றார்.

"கலையிலே பிறந்த காதல் கலையினாலேயே மறைந்தது என்று தாயார் மகளை எச்சரித்தாள். அந்தத் தவறு இப்பொழுது மீண்டும் நடவாது செய்ய வேண்டியது நமது கடமை. காமம் என்ற பாபமும் கடவுளின் படைப்புத்தான். ஆனால் தெய்வத்தின் பாதத்திலே கொண்டு அதைச் சமர்ப்பித்துவிட்டால், அந்தப் பாத ஸ்பரிசத்தினால் அதுவும் புனிதம் பெற்று விடுகிறது. இனிமேல் உமாபதியின் தொண்டிலே இந்த இருவரும் தங்களை அர்ப்பணித்துப் புனித வாழ்க்கை வாழ வேண்டும் என்று ஆசீர்வதிக்கிறேன்!"

ஆனந்தவல்லி ஆச்சரியத்தோடு அந்த அதிசய கலைஞர் வித்தியாபதியைப் பார்த்தாள்.

"கண்மணி! உன் தந்தை உன் அன்னையைக் காதலித்தான். ஆனால் கடவுளை மறந்து தனித்துப் போய், சித்திரம் என்றும் வர்ணம் என்றும் எங்கெங்கோ கெட்டு அலைந்து உன் அன்னையைக் கை விட்டான். ஆனால் சிவகுமாரன் அப்படிச் செய்ய மாட்டான். காமனுடைய பிறப்பும், இறப்பும், புனர் ஜன்மமும் மூன்றும், உணர்ந்தவன் ஆகிவிட்டான் அவன். அவன் மூலமாக உனக்கும் அந்த மூன்று அனுபவமும் தெரிந்து விட்டது. இனி உங்கள் வாழ்க்கை - அரங்கம் மெழுகிக் கோலம் இட்ட புனித பூமி. இனி உங்கள் இருவருடைய வாழ்க்கை கீதம் தாளம் தவறாத புனிதப் பாடலாகத் திகழும்!"

"முத்தம்மை! நீ ஏன் ஒன்றுமே பேசாமல் நிற்கிறாய்?" என்று கேட்டார் தர்மகர்த்தா, ஆனந்தவல்லியின் தாயாரைப் பார்த்து.

முத்தம்மையின் முகத்தில் ஒரு கலவரம் தோன்றியது. இதைக் கவனித்த வித்தியாபதி அவளுடைய கையிலிருந்த பூக்குடலையைத் தாம் வாங்கி அதிலிருந்த பூ மாலையை எடுத்தார். ஆனந்த வல்லியின் கரத்தில் அதைக் கொடுத்து சிவகுமாரனுக்கு மாலையிடச் சொன்னார். மறுகணம் உணர்ச்சி மேலிட்ட குரலில் பேசினார்:

"சுவரிலுள்ள சித்திர ரதிக்கு மட்டும் இல்லை. ஆனந்தவல்லி என்ற உயிர்ச் சித்திரத்துக்குமே தந்தை இந்த வித்தியாபதிதான்! அன்பையும் தெய்வத்தையும் மறந்து கெட்டுச் சென்றவனை இப்பொழுது அன்பும் தெய்வ காரியமுமே மீண்டும் அழைத்துக் கொண்டு வந்துவிட்டன! பாபம் எல்லாம் இந்த தெய்வ சந்நிதியிலே இப்பொழுது குழந்தையாகப் போய் விட்டது!"

இப்படிச் சொல்லிக் கொண்டே வித்தியாபதி பூங்கூடையில் எஞ்சியிருந்த மன்மத மலர்களை எடுத்து முத்தம்மையின் கையிலே கொடுத்து, மணமக்களை ஆசீர்வதிக்கும்படி சொன்னார். மத்தளம் கொட்ட, உமாபதி கோயில் நாகஸ்வரம் வாழ்த்தொலி இசைத்தது!

மங்களம்!

# குடும்பத்தின் கௌரவம்



ஆம், அவர்களுடைய காரைப்பற்றி அவர்கள் பெருமை அடைவதற்கு நியாய மான காரணம் இருக்கிறது. சாலையில் ஓடும்போதும் அல்லது எங்கு நிறுத்தப்பட்டாலும் அந்த லாண்ட் மாஸ்டரின் பளபளப்பான அழகிய தோற்றம் பார்ப்பவர்களின் மனதைக் கவர்கிறது. மேலும் அது குடும்பத்திற் கேற்ற ஒரு சிறந்த கார். மிக சௌகரியமாக 5 பேர் உட்கார முடியும். ஏன், 6 பேர் கூட உட்கார முடியும். காரிலிருந்து நாலாபக்கமும் மிகத் தெளி வாகப் பார்க்க முடியுமாதலால், குழந்தைகள் இக்காரை விசேஷமாக விரும்புகிறார்கள். ஆச்சரியமளிக்கும் அளவுக்கு சாமான்களை வைக்கக்கூடிய இடவசதி உண்டு. குறைந்த செலவில் இயங்கக் கூடிய 14HP என்ஜின். யாவரும் வாங்கும் சக்திக்கு உட்பட்டதாக உள்ளது.

## ஹிந்துஸ்தான் லாண்ட்மாஸ்டர்

**ஹிந்துஸ்தான் மோட்டார்ஸ் லிமிடெட், கல்கத்தா**

கீழ்க்கண்ட இடங்களில் எமது டீலர்கள் உள்ளனர்

ஆக்ரா, அமதாபாத், அலகாபாத், பரோடா, பெங்களூர், பம்பாய், பரேலி, பனாரஸ், கல்கத்தா, கட்டாக், கோயமுத்தூர், டிப்ருகர், டேராடூன், இந்தூர், ஜெய்பூர், ஜோத்பூர், ஜல்கான், ஜோர்ஹாட், ஜாம்ஷெட்பூர், ஜலந்தர் சிட்டி, ஜம்மு, கான்பூர், கோல்ஹாபூர், லக்னோ, சென்னை, மதுரை, மங்களூர், நாகபுரி, புது டில்லி, நேபாளம், பாட்னா, பூனா, ராஜ்கோட், சம்பல்பூர், செகந்திராபாத், ஸ்ரீநகர், தேஜ்பூர், திருவனந்தபுரம், விஜயவாடா, விஜயநகரம்

இந்திய கைத்தொழில் பொருட்காட்சியில் உள்ள எமது ஸ்டால் நெ. 8 25க்கு விஜயம் செய்து நமது நாட்டில் எவ்வளவு நல்ல முறையில் ஆட்டோமொபைல் உற்பத்தி முன்னேறி யிருக்கிறது என்பதை நீங்களே பார்த்து மகிழுங்கள்.




உங்கள் கூந்தலின் நீடிப்பும் அழகும் உங்களையே தான் பொருத்திருக்கின்றன. உண்மையில் நீண்டு, அடர்ந்து, பொலிவு பெற்ற கூந்தல் வேண்டுமானால், சரியான கவனிப்பு அவசியம். நல்ல கூந்தல் வளர்க்க சில முக்கிய நியதிகள் உண்டு.

தலையில் அழுக்கு, பொடுகு முதலியன இல்லாமல் பார்க்கவேண்டும். நிச்சயமாக இல்லை என்று ஏற்பட்டவுடன் தலையில் பத்து நிமிஷமாவது ஜபாகுஸுமம் போட்டு அழுந்தத் தேய்க்க வேண்டும். தடவினால் போதாது; ஜபாகுஸுமம் தவறாமல் தேய்க்கப்படவேண்டும், கோத்தியான, செழித்த கூந்தல் தேவையானால்.



# ஜபாகுஸுமம்

தலைமயிர்த் தைலம்

எல்லாக் காலங்களுக்கும் ஏற்றது

சி.கே.ஸேன் & கம்.லி., ஜபாகுஸுமம்ஹௌஸ், கல்கத்தா-12

117, ஆர்மீனியன்தெரு, சென்னை-1

CKJ 2 Tam

ஆந்திர டெப்போ:

மெஸர்ஸ் ஹனுமான் டிரக் ஸ்டோர்ஸ்

ரேப்பள்ளி, குண்டூர் ஜில்லா

# தீபாவளி வாழ்த்துக்கள்



தி டாடா
அயர்ன் & ஸ்டீல்
கம்பெனி லிமிடெட்

*Printed and Published by T. Sadasivam at the "Kalki" Press, 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10*
*Editor: Mi. Pa. Somasundaram*

# யாவும் வர்ண ஒளி வாய்ந்தது!



பசும்புல்...உயரமான மரங்கள்...பூத்துக் குலுங்கும் புஷ்பங்கள்...மிக சாந்தமான தோற்றம்...நீண்ட கரும் கூந்தல்...கரு விழிகள்—போன்ற அசாதாரணமானதும், வாழ்க்கையில் உண்மையாகத் தோன்றக் கூடியதுமான சம்பவங்களை "கேவாகலர்" பிலிம் கொண்டு படம் எடுங்கள். "கேவாகலர்" N5 பிலிமைக் கொண்டு படம் எடுக்க விசேஷ திறமை அவசியமில்லை. இயற்கையான கலர்களில் பிரிண்ட்களும் என்லார்ஜ்மெண்ட்களும் எடுக்கலாம்.

## கேவாகலர்

GEVACOLOR




'கேவாகலர்' டைப் N5 நெகடிவ் பிலிம் 120, மற்றும் 620 ரோல் பிலிமில் கிடைக்கும் (ரூ. 8) 35 mm. மினியேச்சர் பிலிம் (ரூ. 11/4)

**Allied Photographics Limited**

அலைட் போட்டோகிராபிக்ஸ் லிமிடெட்
கஸ்தூரி பில்டிங்ஸ், ஜாம்ஷெட்ஜி டாட்டா ரோடு, பம்பாய்-1

"குழந்தைகள்" என்ற போட்டோ கலைப் போட்டியில் ரூ. 1,000/- பரிசு பெறுங்கள்.

பிரதி வெள்ளிக்கிழமையும் இரவு 8 மணிக்கு ரேடியோ சிலோனில் ஏ. பி. எல். ஸ்தாபனத்தாரின் 'போட்டோ பெண்டனி' என்ற நிகழ்ச்சியைக் கேளுங்கள்

# Gift...

*for yourself*
*or somebody else!*

ஏதாவது ஒன்றை நீங்கள் பரிசாக அளிக்கவிரும்பினும் அதற்குச் சிறந்தது ஒரு வெஸ்ட் எண்ட் கடிகாரம். தாய், தந்தை, சகோதரி, சகோதரன் அல்லது யாருக்காயினும் சரி, பரிசுக்கு உகந்தது வெஸ்ட் எண்ட் தான் என்று எவரும் நன்கு சிபாரிசு செய்வார்கள்.

இந்தியாவிற்கென விசேஷமாக தயாரிக்கப்படும் வெஸ்ட் எண்ட் கடிகாரங்கள் சென்ற முக்கால் நூற்றாண்டுகளுக்கு மேலாக பிரசித்தி பெற்றுள்ளது. கால முன்னேற்றத்துக்கு ஏற்றபடி வெஸ்ட் எண்ட் ஒவ்வொரு புது மாடல்களிலும் புதுப்புது முறைகளை கையாண்டபோதிலும் முன்பு வெளியிடப்பட்ட மாடல்கள் பல இன்னும் உபயோகத்தில் உள்ளன.

ஒவ்வொருவருடைய வாங்கும் சக்திக்கு ஏற்றவாறு வெஸ்ட் எண்ட் கடிகாரத்தின் புது மாடல்களில் பல உள்ளன. நம்பகம், கவர்ச்சிகரமான தோற்றம் நீடித்த உழைப்பு இவைகளுடன் வெஸ்ட் எண்ட் கடிகாரங்கள் சிறந்து விளங்கக் காரணம், அவைகளின் வேலைத்திறனேயாகும்.

இலவச காட்லாகிற்கு எழுதவும்!









" உலகத்தார் உள்ளத்துள்
எல்லாம் உளன் " - குறள்

கல்கி தீபாவளி மலர் 1955



"அடக்கம் அமரருள்
உய்க்கும்"  - குறள்

கல்கி தீபாவளி மலர் 1955



"அருட் செல்வம்
செல்வத்துட் செல்வம்" - குறள்

கல்கி தீபாவளி மலர் 1955


தீபாவளி
வாழ்த்துக்கள்
நாஷனல் கார்பன் கம்பெனி (இந்தியா) லிட்.
EVEREADY
TRADE - MARK
"எவரெடி" டார்ச்லைட்டுகள்
& பாட்டரிகள் தயாரிப்பவர்கள்
NCC 620

# உலவும் கதவு

அரசர்கள் முக்கியமான தினங்களில், பவனி போவது பழைய காலத்திய வழக்கம். இந்தக் காலத்திலும் அது உண்டு.

சேரன் பவனி போவதற்காக அரண்மனை வாசலிலிருந்து புறப்பட்டு விட்டான். தேரின் மேல் அவன் வீற்றிருக்கிறான். மேளதாளங்களோடு நின்று நின்று வருகிறது பவனி.

ஒரு வீட்டில் தாயும் மகளுமாக வசிக்கிறார்கள். பவனி வரும் அரசனைப் பார்த்தால் மகளுக்குக் காதல் நோய் உண்டாய் விடும், ஆகாரம் ஏற்காது, தூக்கம் வராது என்பதை எல்லாம் தாயானவள் அறிந்து, வாசல்க் கதவை அடைத்து விட்டு உள்க் கட்டுக்குப் போய் விடுகிறாள். அவள் போனதுதான் தாமதம், உடனே, அடைத்த கதவைத் திறந்து, பவனி வருவதை எதிர்பார்க்கிறாள் மகள். சிறிது நேரங் கழித்துத் தாய் திரும்பி வந்து கதவை அடைக்கிறாள். உள்க்கட்டுக்குப் போகிறாள். மறுபடியும் மகள் கதவைத் திறந்து கொண்டே நிற்கிறாள். இந்த விதமாகக் கதவு அடைபட்டும், திறக்கப்பட்டும் ஆடி நிற்கிறது.

காதலுக்கு உள்ளான இளம் பெண் ஒருத்தியின் ஆத்திரம் எப்படிப் பட்டதென்று தெரிகிறதல்லவா!

தாயர் அடைப்ப
மகளிர் திறந்திட,
தேயத் திரிந்த
குடுமியவே! – ஆய்மலர்
வண்டுலாஅம் கண்ணி
வயமான்தேர்க் கோதையை
கண்டுலாஅம் வீதிக்
கதவு.

[குடுமி – கதவு ஆடுவதற்காக அடியிலே வைத்திருக்கும் இரும்புக் குமிழ். தேயத் திரிந்த குடுமியவே-வீதிக் கதவின் குடுமிகள் திரிந்து திரிந்து தேய்கின்றன. வண்டுலாஅம் கண்ணி - வண்டு மொய்த்துக் கொண்டிருக்கும் கண்ணி; கண்ணி - தலையில் சூடும் மாலை; வயமான் தேர் - பெரிய குதிரைகள் பூட்டிய தேரில் பவனி வருகிற; கோதை - சேர மன்னனது பல பெயர்களில் ஒன்று.]

இப்படி நேருவது ஒரு வீட்டில் அல்ல, பல வீட்டிலுமே. இது அதிசயிக்கத் தக்கதே என்பதை 'தேயத் திரிந்த குடுமியவே' என்று இரண்டாம் அடியில் வைத்துக் காட்டியிருக்கிறது. 'கண்டுலாஅம் வீதிக் கதவு' என்று கடைசி அடியில் வைத்திருக்கிற கட்டுக் கோப்பு வெகு அழகு. இதில் அதிசய பாவம் அப்படியே தெரிகிறது. கண்டுலாஅம் என்று நீட்டிப் பாடும்படி, அளபெடை (தாளம் நீட்டுவது) வைத்திருக்கிறது. அது சோக பாவத்தையும் காட்டுகிறது. பெண்ணினது நிலைமை அவ்வளவு பரிதாபமான நிலைமை!

* * * *

ரசிகமணி டி. கே. சி. அவர்கள் பதிப்பித்த 'முத்தொள்ளாயிரம்' நூலில் உள்ள இந்தக் கவிதை விளக்கத்துக்கு சுவர்ண ஓவிய விளக்கம் தருகிறார் 'மணியம்.'

# ரொம்ப சந்தோஷம்!




"'ஊருக்குப் போய் விட்டு வருகிறேன்' என்று மாப்பிள்ளை சொல்லிக் கொண்டாராம். நீங்கள் 'ரொம்ப சந்தோஷம்' என்றீர்களாம். அதற்கு மாப்பிள்ளை கோபித்துக் கொண்டு, 'ஊருக்குப் போகப் போகிறதில்லை' என்கிறார்!"

கல்கி தீபாவளி மலர் 1955



கருவியும் மனமும் லயமாகி நிற்கிற நிலையே, நாத உபாசனையின் ஜீவன். ஒலியிலே மனத்தை இழைந்து நாத வெள்ளத்திலே மிதக்கும் நிலையை மேலே சித்திரிக்கிறார் திரு கருணாகரன்.

கல்கி தீபாவளி மலர் 1955

# காதலின் கடவுள்

நிலவு உதயமாகி விட்டதென்றால், நீலக் கடல் கூத்தாடுகிறது. அலைகள் ஓங்கி ஓங்கி எழுந்து நிலவை அணைப்பதற்குக் கை நீட்டுகின்றன. இந்தப் பிரபஞ்சம் முழுதுமே பாலிலே குளித்து எழுவதுபோல மந்தஹாஸம் கொண்டு திகழ்கிறது. இப்படிப்பட்ட இன்ப மயமான பூரண நிலவு வெளியில், ஒருமித்த காதலருக்கு இரவு வெகு விரைவாகச் செல்வதுபோல் தோன்றுகிறது. இந்த நிலவு எத்தனை வேகமாக வானத்திலே ஓடி மறைந்து விடுகிறது என்று தோன்றுகிறது. இன்பத்தில் பொழுது அத்தனை வேகமாகப் பறந்து விடுகிறது. ஆனால் பிரிவிலே வருந்தும் காதலருக்கோ பொழுது நகர்வதாகவே தெரிவதில்லை. அந்த நிலவு அப்படியே வானத்தில் தொங்கிக் கொண்டே அசையாமல் நிற்பதுபோலத் தோன்றுகிறது பிரிவின் வேதனையிலே!

காதலர் நெஞ்சை வெதுப்புவை
நீயென்பர் வெண்ணிலாவே! – நினைக்
காதல் செய்வார் நெஞ்சிற்கு இன்னமு
தாகுவை—வெண்ணிலாவே!

காதலுக்கும் நிலவுக்கும் இப்படி ஒரு தொந்தம், இதயத்தோடு இதயமாக ஒட்டி நிற்கிறது. உலக மகா காவியங்கள் எல்லாம் காதலோடு பூர்ண நிலவையும் இணைத்தே கவி நிலவைப் பொழிகின்றன. உலக மகா கவிஞர்கள் எல்லாம் வட்ட மதியிலே காதலைக் கண்டு வண்ணக் கவிதைகளை நிலவாக வார்த்து வடித்திருக்கிறார்கள்.

இதையெல்லாம் பார்க்கும்போது, மன்மதனும் ரதியும் அன்னம் என்றும் தென்றற் காற்று என்றும் சொல்கிற வாகனங்களையும் படைகளையும் விட்டு விட்டு, பூரண நிலவிலேயே கரும்பு வில்லும் மலர்க்கையுமாக பவனி வருகிறார்களோ என்றே சொல்லத் தோன்றுகிறது.

நிலவும், மன்மதனும், ரதியும் காதலோடும் காதலர்களின் இதயத்தோடும், கவிதையோடும் ஒட்டி இயங்கும் நிரந்தரமான தத்துவங்கள். உலகில் நிலவு உதிக்கும் போதெல்லாம், வானப் பாதையிலே சந்திரன் பவனி வரும் போதெல்லாம், கடலைப் போலக் கவிஞனுடைய உள்ளமும் காதலின் கரங்களை நீட்டிக் காவிய அஞ்சலி செய்கிறது. இந்த அஞ்சலியைச் சித்திர நோக்கோடு கண்டு அற்புதமான வர்ண ஓவியமாகச் சித்திரித்தார் காலஞ் சென்ற 'சந்திரா'. காலத்தால் அழியாத காதலை, மங்காத வர்ணங்களிலே பொறித்தார் அவர். அறத்தோடு இயைந்த காதல் என்றென்றும் வளர்க என்று வாழ்த்தி வணங்குவோமாக!

கல்கி தீபாவளி மலர் 1955

# தாயன்பு



'தாயும் சேயும்' என்ற பாசம், தெய்வீகமானது. அநாதிகாலமாக ஜீவராசிகள் அனைத்தையுமே இயக்கி வருகிறது அந்த அன்பு. இதை ஒளியும் நிழலுமான இந்தச் சித்திரத்திலே உருவாக்குகிறார் திரு கனு தேசாய்.

கல்கி தீபாவளி மலர் 1955

# தீப மங்கள ஜோதி நம

வான கத்தைச்சென்று நீண்டுவன் இங்கென்று
மண்டி யெழுந்தழலைக் - கவி
வாணர்க்கு நல்லமுதைத் - தொழில்
வண்ணந் தெரிந்தவனை -

* * * *

—பெருந்திரன்

சேர்ந்து பணிந்திடுவோம் - வாரீர்

—பாரதியார்

இந்தப் பாடலுக்கு விளக்கமாகவே அமைந்து விட்டது ஓவியர் கனு தேஸாயின் சித்திரம்.

நம் முன்னோர்கள் மண், நீர், அழல், காற்று, ஆகாசம் ஆகிய ஐந்து பூதங்களிலும் இறைவனைக் கண்டார்கள்.

இறைவனின் பல்வேறு வடிவங்களில் அழலை ஓர் வடிவமாகக் கொண்டு ஜோதியை வணங்கிப் போற்றி வந்திருக்கிறார்கள்.

ஏன் தீபாவளித் திருநாளே ஜோதி வடிவான ஆண்டவனைத் துதித்து வணங்கும் புனிதநாள் அன்றோ!

இப்புனிதத் திருநாளில் ஓவியர் கனு தேஸாயின் சித்திரத்தில் காணும் மங்கையருடன் சேர்ந்து ஜோதி வடிவமான ஈசனுக்கு அகல் ஜோதி ஏற்றி பக்தியுடன் வணங்குவோமாக.

# தெய்விக நட்பு

அவ்வைப் பிராட்டி வறுமை கொடிது என்றார்.
திருவள்ளுவரோ வறுமையினாலும் பயன் உண்டு என்றார்.
இருவர் கூறுவதுமே உண்மைதான் !

* * *

குசேலரைப் பற்றி நமக்குத் தெரியும். இருபத்தேழு குழந்தைகளுக்குத் தந்தை. வறுமையினால் பட்ட துன்பம், சொல்லும் தரமன்று. அவ்வை கூறுவது உண்மைதான்; கொடிது கொடிது வறுமை கொடிதுதான் !

இந்த மனிதருக்குச் சிநேகிதர் துவாராகாபதி மன்னனாகிய கண்ண பெருமான். இவர்கள் இருவரும் பால்ய நண்பர்கள், குருகுலத் தோழர்கள். இந்த உறவைக் கொண்டாடிக் கண்ண னிடம் பொருள் பெற்று வரலாம் என்று சென்றார் குசேலர்.

அந்தஸ்திலுள்ளவர்களைப் பார்க்கப் போகும் போது வெறும் கையுடன் போகலாகாது என்று கொஞ்சம் அவலை மூட்டை கட்டிக் கொண்டு போனார் குசேலர். போகும் போதே 'நண்ப னிடம் எப்படி யாசிப்பது !' என்று தயங்கித் தயங்கிப் போய்ச் சேர்ந்தார். கண்ணன் தம்மைப் பொருட்படுத்துவானோ மாட் டானோ என்று வேறு கவலைப்பட்டுக் கொண்டே போனார்.

அங்கே நடந்தது என்ன ! குசேலரைக் கண்டு கண்ணன் அடைந்த குதூகலம் சொல்லி முடியாது. நீண்ட நாட்களுக்குப் பிறகு சந்தித்ததினால் ஏற்பட்ட எக்களிப்பின் காரணமாகக் கட் டித் தழுவிக் கொண்டான். முகமலர்ந்து தன் அருகில் உட்கார வைத்துக் குசலம் விசாரித்தான். குசேலர் யாசிப்பதற்கு முன் அவனே முந்திக் கொண்டான். "எனக்கு ஏதாகிலும் சாப் பிடக் கொண்டு வந்திருக்கிறாயா !" என்று ஆர்வத்துடன் கேட் டான் கண்ணன் ! அவ்வளவுதான், குசேலருக்குத் தாம் யாசிக்க வேண்டும் என்று நினைத்த எண்ணமே பறந்து போய் விட்டது. தாம் கொண்டு வந்திருந்த அவலைக் கண்ணனுக்குக் கொடுத்து விட்டுத் தாம் ஒன்றுமே கேட்காமல் திரும்பினார் !

வீட்டை அடைந்த குசேலர் ஒரே ஆச்சரியத்தில் மூழ் கினார். ஏழையின் குடிசை அரண்மனையாகத் திகழ்ந்தது. அஷ்ட ஐசுவரியங்களும் தாண்டவம் புரிந்தன. கண்ண பெரு மானின் சிநேக தர்மத்தை நினைந்து நினைந்து குசேலரின் கண்கள் ஆனந்தக் கண்ணீர் வடித்தன.

இப்படிப்பட்ட சிநேக தர்மத்தை உலகுக்கு எடுத்துக் காட்டியது குசேலரின் வறுமையல்லவா ! இதோ வள்ளுவர் கூறுவதைக் கேளுங்கள் :

கேட்டினும் உண்டோர் உறுதி ; கிளைஞரை
நீட்டி அளப்பதோர் கோல்.

[கேட்டினும் - வறுமை போன்ற துர்ப்பாக்கியத்துக் குள்ளும் ; உண்டோர் உறுதி - ஒரு பயனான காரியம் உண்டு ; அதாவது — கிளைஞரை - உற்றார் உறவினர்களை ; நீட்டி அளப்பதோர் கோல் - நன்றாகச் சந்தேகத்துக்கு இட மில்லாமல் தானே அளக்கக் கூடிய அளக்கோல் !]

தெய்விகமான குசேல கிருஷ்ண உறவை வண்ண ஓவிய மாக வழங்குகிறார் ஓவியர் எஸ். ராஜம்.



"பொன்னி நதியின் கரையினிலே
பூம்புனல் ஓடும் துறையினிலே
பன்னி எழும்பல பேச்சினிலே
பாரும் விண்ணும் அளந்திருந்தோம்"



போட்டோ : கே. அருணாசலம்



ராமகதையின் சாரத்தை உள்ளத்திலே உட்கொண்டு, சுவை மிகுந்த காவியமாக ஹிந்தி மொழியிலே வார்த்து வழங்கினார் துளஸிதாஸர். பக்திச் சுடர் பிரகாசிக்கும் அவருடைய தோற்றத்தை ஏடு தாங்கிய கோலத்தோடு சித்திரிக்கிறார் ஸ்ரீ கனுதேசாய்.

# நிலவு முகம்



"கயலெழுதி வில்லெழுதிக் காரெழுதிக் காமன்
செயலெழுதித் தீர்ந்த முகம் திங்களோ காணீர்!" —கானல் வரி

